بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

I. வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள்

II. வெளிப்படும் இரகசியங்கள்

III. காலத்தின் சுவடுகள்

IV. ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள்

புலன்களின் வாயிலாக பேசப்படுவது மனித மொழி

புலன்களுக்கு அப்பால் பேசப்படும் மொழி, மௌனம்

மனம் இழந்த நிலை தான் மௌனம். மௌனத்தில் இறைவன் உங்களுடன் பேசுவான் ஏனென்றால், மௌனம், இறைவனின் மொழி

இறைவனின் படைப்பில் அற்புதத்திலும் அற்புதம் ஒன்று உண்டென்றால், அது, மனிதன் என்னும் உயிரினம்.. கண்களுக்கு தெரியும் சரீர அமைப்பு. கண்ணுக்கே தெரியாத உள்ளமும் உணர்வுகளும் கொண்ட மனித மனம். இந்த இரண்டையும் சுமக்க சரீரம் என்னும் மனித கூடு.

இந்த பூலோகத்தில் பிறந்து, வாழ்ந்து, இறந்து, நொடிப்பொழுதில், தான் எங்கிருந்து வந்தானோ அதே இடத்திற்கு பயணப்பட்டு விடுகிறான் மனிதன். வாழ்ந்த வாழ்க்கையின் சுவடுகள் நொடிப்பொழுதில் அடியோடு மறைந்து விடுகிறது. செய்த பாவ புண்ணியங்களை மட்டும் எடுத்துக்கொண்டு , ஆத்மா, அடுத்த நிலைக்கு பயணப்பட்டு விடுகிறது.

இறைவன் மனிதனை படைத்ததோடு நின்று விடாமல், அவன் வாழ்வதற்கு மனம் என்ற ஒன்றையும் கொடுத்து, மனதின் சாம்ராஜ்யத்தில் அவனையே சக்ரவர்த்தியாக வாழ வைத்தான்.

ஒவ்வொரு மனிதனுக்கும், அவனுடைய மனதுடன் அவன் மட்டுமே பேசும் சக்தியையும் கொடுத்தான். மனமும் மனிதனும் பிரிக்கவே முடியாத இரு சக்திகளாக, நொடிப்பொழுதும் வாழ்க்கை என்ற பெயரில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

மனமும் மனிதனும் பேசிக்கொள்ள ஒரு மொழி வேண்டாமா?. நிச்சயம் வேண்டும். மனிதன் மனதுடன் பேசவும், மனம் மனிதனுடன் பேசவும், இறைவன் மனதுக்கும் மனிதனுக்கும் ஒரு மொழியை கொடுத்தான். அதுதான் மௌன மொழி.

மனிதன் படைத்த மொழிகளுக்கு இலக்கணம் உண்டு. எழுத்துக்களின் எண்ணிக்கை உண்டு. வரம்பு உண்டு. மனித உணர்வுகளை பிரதிபலிக்க மனிதன் எழுத்துக்களை கூட்டி, வார்த்தைகளை உருவாக்கினான். ஒவ்வொருவரின் புலமைக்கும் கற்பனைக்கும் ஏற்ப, மொழி ஆளுமையை வார்த்தை ஜாலங்களில் காட்டினான் மனிதன் .

ஆனால், இறைவன் படைத்த மௌன மொழிக்கு எல்லைகள் கிடையாது . வார்த்தைகள் கிடையாது. மனிதனின் உணர்வுகளை மட்டுமே அடிப்படையாக வைத்து, மனிதன் மனதுடனும், மனம் மனிதனிடமும் மட்டுமே பேசும்மொழி. அதுதான் “மனம் பேசும் மௌன மொழி”.

மனம், மௌன மொழியில் மனிதனுடன் பேசிக்கொண்டே இருக்கும். ஒவ்வொரு மனிதனின் சிந்தனையும் ஓய்வே இல்லாமல் உதயமாகிக்கொண்டே இருக்கும்.

உதாரணத்திற்கு சொல்ல வேண்டுமானால், ஒரு குளத்தில் கல் எறிந்தால், முதலில் ஒரு சிறு வட்டம் உருவாகும். அந்த ஒரு சிறு வட்டம், பெரிய பெரிய வட்டமாக வியாபிக்கும். பிறகு, அந்த வட்டம் குளத்தின் கரையை எட்டி விடும் .

இதே போல், ஒரு சிறு வட்டமாக உருவாகும் மனிதனின் சிந்தனை, பெரியதாக வியாபிக்கும் பொழுது, மனம் என்னும் குளத்தின் கரையை தொடும் பொழுது, மனம், மௌன மொழியில் அந்த மனிதனுடன் பேச ஆரம்பிக்கும். உங்கள் அனுபவத்தில் நீங்களும் மனம் உங்களுடன் பேசுவதை உணர்ந்திருக்கலாம்.

மௌன மொழி, தனிமையில் மட்டுமே பேசப்படும் மொழி. மனிதனும் மனமும் தங்களுக்கான தனிமையில் பேசிக்கொள்ளும் மொழி அது. இறைவன் உள்ளத்தையும் உணர்வையும் கொண்ட இந்த மனித சரீரத்தை பிறக்க வைத்தான்.

உடலும் உயிரும் கொண்ட சரீரம் பிறந்தவுடன், மனம் என்ற ஒன்று, பிறந்த சரீரத்துடன் ஒட்டிக்கொள்கிறது. இந்த மனம் எப்படி தோன்றியது?. எங்கிருந்து தோன்றியது.? எப்படி தன்னை சரீரத்துடன் இணைத்து கொள்கிறது. ? இறைவனின் அற்புத படைப்பில் விடை தெரியாத கேள்விகளில் இதுவும் ஒன்று.

அந்த எல்லையில்லாத பிரபஞ்சமே நொடிப்பொழுதில் படைக்கப்படும் பொழுது, மனிதன் என்ற படைப்பை உருவாக்க எவ்வளவு நேரம் ஆகி விடப்போகிறது இறைவனுக்கு?

"வானங்களையும் பூமியையும் படைத்தவன் (கேவலம்) அவர்களைப் போன்றவர்களைப் படைக்கச் சக்தியற்றவனா? நிச்சயமாக அவனே மிகப்பெரிய படைப்பாளனும் மிக நன்கறிந்தவனும் ஆவான் "

(குர்ஆன் : 36:81)

" (மனிதர்களே!) நீங்கள் பலமான படைப்பா? அல்லது வானமா? அவன்தான் அவ்வானத்தைப் படைத்தான்". (குர்ஆன் : 79:27)

இப்பொழுது, மனம் எப்படி சரீரத்துடன் ஐக்கியமாகிறது என்பதை கொஞ்சம் புரிந்து கொள்வோம்.

உங்களுக்கு ஒரு உதாரணம் வாயிலாக, இந்த மனம் என்னும் அற்புதத்தை புரிய வைக்க முயல்கிறேன். நமக்கெல்லாம் நன்றாக தெரிந்த வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு இந்த மூன்றையும் எடுத்து கொள்வோம்.

உங்களில் பல பேருக்கு வெற்றிலை போடும் பழக்கம் இருக்கலாம். வெற்றிலை, சுண்ணாம்பு, பாக்கு- இந்த மூன்றையும் கலந்து வாயில் போட்டு மெல்லும் பொழுது சிவப்பு நிறம் தோன்றுகிறதே .

இந்த சிவப்பு நிறம் எங்கிருந்து வந்தது? சுண்ணாம்பில் இருந்தா ? வெற்றிலையில் இருந்தா ? அல்லது பாக்கில் இருந்தா? உங்களால் சொல்ல முடியுமா? சொல்ல முடியாதல்லவா ? இந்த மூன்றின் கலவை ஏற்படும் பொழுது சிவப்பு நிறம் தோன்றிவிடுகிறது. இதே போல் தான், உடல், உயிர் தோன்றியவுடன், மனம் வந்து உடலுடன் ஐக்கியமாகி விடுகிறது.

மனம் பேசும் மொழி எவ்வளவு வீரியம் மிக்கதோ, அவ்வளவு வீரியம், மனம் பயணிக்கும் மனோ வேகத்திற்கும் உண்டு. ஒளி, ஒலியை காட்டிலும் அசாத்திய வேகத்தில் பயணிக்கக்கூடியது மனம். நினைத்த மாத்திரத்தில் பிரபஞ்சத்தின் எல்லையையே தொட்டு விடும் சக்தி படைத்தது. மனோ வேகம். இனி. மனம் பேசும் மௌன மொழியை பற்றி கொஞ்சம் சிந்திப்போம்.

மூன்று சந்தர்ப்பங்களில் மனம், மனிதனுடன் மௌன மொழயில் பேசும்.

முதலில், மனிதனின் சிந்தனை மனதை வியாபித்து விளிம்பில் நிற்கும் பொழுது , மனம், மௌன மொழியில் பேச ஆரம்பிக்கும் இந்த மௌன மொழியின் ஆழம் தான், சிந்தனையயை செயலாக்குகிறது.

இரண்டாவது சந்தர்ப்பம், மனிதன் ஒரு தவறை செய்யும் பொழுது, சமுதாயம் கொடுக்கும் தண்டனையை, “அந்த தண்டனை சரியே”, என்று மனம் ஏற்கும் பொழுது, மௌன மொழி பேசும். செய்த தவறை நினைத்து வருந்தும் பொழுது, மனம் பேசும் ஆறுதல் மொழிதான், அந்த மௌன மொழி.

மூன்றாவது சந்தர்ப்பம், சமுதாயம் தனக்கு அநீதி இழைக்கும் பொழுது , மனிதனுக்கு மனம் கூறும் சமாதானமும் ஆறுதலும் தான் அந்த மௌன மொழி.

வாழ்க்கை என்று சொல்லும் பொழுதே, அது பல மனிதர்களின் கட்டமைப்பில் உருவாக்கப்படும் சமுதாயம் என்பது நம் எல்லோருக்குமே தெரியும்.

சமுதாயத்திற்கு என்று வரையறை, கட்டுப்பாடுகள், வாழ்க்கை நெறிமுறைகள், சட்டதிட்டங்கள், எல்லாமே உண்டு. இந்த கட்டுப்பாடுகளுக்கு கட்டுப்பட்டு வாழ்பவன் தான் மனிதன். இது தான் சமுதாய வாழ்க்கை என்று ஆனது.

ஆனால், சமுதாய வாழ்க்கையில், எல்லா நேரங்களிலும் மனிதனுக்கு நியாயம் கிடைத்து விடுகிறதா ? இல்லையே! சமுதாய வாழ்க்கை, சட்டதிட்டங்களுக்கு உட்பட்டது, மனிதன் உருவாக்கிய மொழிகள் மட்டுமே இங்கு சமுதாயத்தை ஆளுகின்றன.

சமுதாய வாழ்க்கையில் போராடியும் கிடைக்காத நீதி, நியாயம், மனிதனின் மனம் என்னும் சாம்ராஜ்யத்தில், கற்பனையில் அவனுக்கு கிடைத்து விடுகிறது. ஒரு மனிதனின் ஏமாற்றங்களுக்கும் கோபங்களுக்கும் வடிகாலாக இருப்பது மனித மனம் மட்டுமே . மனிதன், அவனுடைய மனதுடன் கேட்டு பெறும் நீதி, நியாயம் எல்லாமே, தனி மனிதனை பொறுத்த வரை சரி. .

இங்கு, கற்பனைக்கும் எல்லையில்லை.தண்டனைக்கும் வரையறை இல்லை. தன் நியாயப்படி, தனக்கு அநீதி இழைத்த ஒவ்வொருவருக்கும், தனக்கும், நீதி கேட்டு போராடும் நீதி மன்றம் தான், மனித மனம்.

இங்கு. ஆளுமையில் இருப்பது மௌனத்தில் பேசப்படும் மௌன மொழி மட்டுமே. சமுதாய நீதி மன்றத்தில் நடக்கும் போராட்டத்தில், வாதியும் ஜெயிக்கலாம். பிரதிவாதியும் ஜெயிக்கலாம்.

ஆனால், மனம் என்னும் நீதி மன்றத்தில், வாதி மட்டுமே வெற்றி பெறுவான். பிரதிவாதி எப்பொழுதுமே தோற்றுத்தான் போவான். அப்படியானால், மனம் என்னும் நீதி மன்றத்தில், நீதியே கிடையாதா என்று நீங்கள் கேட்கலாம்.

ஒரு தனி மனிதன் நியாயம் என்று நினைப்பது, சமுதாயத்தை பொறுத்தவரை அநியாயமாக இருக்கலாம் . ஆனால், அவனை பொறுத்தவரை அது நியாயமே .

மனிதனுக்கு எதுவெல்லாம் சௌகரியமோ, அதையெல்லாம் மனம்சொல்லிக்கொண்டே இருக்கும். “நீ நல்லவன்”, என்று மனம் சொல்லுவதை மனிதன் அப்படியே நம்புவான். மனிதனும் அதைத்தானே சமுதாயத்திடம் இருந்து எதிர்பார்க்கிறான் ?

அவன் நல்லவன் என்பதற்கான காரணங்களையும் மனம் சொல்லிக்கொண்டே இருக்கும். இப்படி, சமுதாயத்தில் தனக்கு ஏற்படும் காயங்களுக்கு போடும் மருந்து தான், மனம் பேசும் மௌன மொழி.

இந்த புதிய தொடரை துவங்கும் நானும் இதற்கு விதி விலக்கல்ல. எவ்வளவோ சந்தர்ப்பங்களில், என் மனம், எனக்கு ஏற்பட்ட காயங்களுக்கு மருந்து போட்டிருக்கிறது. எனக்கு ஏற்பட்ட என் அனுபவம், உங்களில் பலருக்கும் ஏற்பட்டிருக்கலாம்.

ஒவ்வொரு நாளும் , வாழ்க்கையில் நாம் பேசும் வார்த்தை மொழிகளை எவ்வளவோ கேட்டுவிட்டோம். சிறிது காலத்திற்கு நம் மனம் பேசும் மௌன மொழியை கேட்போம்

**ரஹ்மத்** ராஜகுமாரன்

+919360181033 +919486909903



வாழ்க்கையில் நாம் கற்றுக் கொள்ள வேண்டிய முக்கியமான பாடம் என்ன?

சாதிக்க நினைப்பவர்களுக்கு எழுத்தாளர் சுஜாதா வழங்கிய அறிவுரைகள்!!

1. புத்தகங்களைத் துணை கொள், அதை விட சிறந்த நண்பனில்லை.

2. உடலுழைப்பை அதிகரி அது மட்டுமே உன்னை உயர்த்தும். ஆனந்தமும், ஆரோக்கியமும் அதில் மட்டுமே கிடைக்கும்.

3. குளிர்ந்த நீரில் குளி. உடல் சுறுசுறுப்பாகும்.

4. தியானம் கைக்கொள். உன்னை நீ உணர்ந்து கொள்ள அது மட்டுமே வழி காட்டும்.

5. இரவு உறங்கும் முன் நெடுந்தொலைவு நட, உன் தூக்கம் இன்பமாக இருக்கும்.

6. தாய் தந்தையைப் போற்றி வணங்கு. அது உன் கடமை.

7. உணவில் கீரை சேர்த்துக் கொள்.

8. எத்தனை வலித்தாலும் அழாதே, சிரி. வலிமைக்குக் மேல் வலிமை பெற்று வானம் தொடுவாய்.

9. ஆத்திரம் அகற்று எதற்கும் கோபப்படாதே. கோபம் உன்னை ஒரேயடியாக அழித்து விடும்.

10. கேலிக்கு புன்னகையை பரிசாக்கு.

11. கோபத்திற்கு மௌனத்தைக் கொடு. திருப்பித் தாக்கி விடாதே.

12. நட்புக்கு நட்பு செய். பகைவனைக் கூட நேசிக்கப் பழகு.

13. வேலை சொல்லித் தருபவரிடம் மிகப் பணிவாக இரு. மேலும் மேலும் உயர்வாய்.

14. அலட்சியப்படுத்தினால் விலகி நில். ஆத்திரப்பட்டுவிடாதே.

15. அன்பு செய்தால் நன்றி சொல். நன்றியுணர்வு உன்னைப் பெரியவனாக்கும்.

16. இதமாகப் பேசு. இனிமைகள் உன்னை அரவணைத்துக் கொள்ளும்.

17. நீயும் நானும் எதைச் செய்தாலும் இறைவன் மௌனமாகப் பார்த்துக் கொண்டே இருக்கிறார். அவருக்கு நாம் பதில் சொல்லியே ஆக வேண்டும், ஆகவே நல்லதைச் செய்.

நீ ஜெயிப்பாய்..நிச்சயமாக ஜெயிப்பாய்! வாழ்க்கையில் உன்னத நிலைக்கு வருவாய்!!

வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 1

(மலைகள் - நமக்கு ஏன் தேவை? )



“மலைகளில் ஏறிப் பார், அவை உனக்கு கதைகள் சொல்லும். மரக்கிளைகள் வழியே கதிரவனின் கதிர்கள் பாய்கையில் இயற்கையின் அமைதி உன் உள்ளத்தை ஊடுருவிச் செல்லும். தென்றல் உன்னைத் தாலாட்டும், பெருங்காற்று தன் சக்தியைக் காட்டும். இலையுதிர் காலத்தில் உதிரும் சருகுகளைப் போல் உன் கவலைகள் எல்லாம் மறைந்துவிடும்.”—ஜான் முயிர், அமெரிக்க எழுத்தாளர் மற்றும் இயற்கை அறிவியலாளர்.

ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்கு முன்பு ஜான் முயிர் கண்டுபிடித்த விதமாக, நம் மனதை கொள்ளைகொள்ளும் சக்தி மலைகளுக்கு இருக்கிறது. அவற்றின் கம்பீரம் நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது; அவற்றில் தஞ்சம் புகுந்துள்ள வனவிலங்குகள் நம்மை மகிழ்ச்சியில் திளைக்க வைக்கின்றன; அவற்றின் அமைதி நமக்கு இதமளிக்கிறது. இயற்கைக் காட்சிகளைக் கண்டு களிப்பதற்கும் புத்துணர்ச்சி பெறுவதற்கும் கோடிக்கணக்கானோர் வருடந்தோறும் மலைகளுக்குச் செல்கின்றனர்.

“ஆதிகாலம் முதற்கொண்டு மலைகள் மனிதரை ஆச்சரியத்தில் ஆழ்த்தியிருக்கின்றன, அவர்களுடைய உணர்ச்சிகளைத் தூண்டியிருக்கினறன” என்று ஐக்கிய நாடுகளின் சுற்றுச்சூழல் திட்டத்தின் (UNEP) செயற்குழு இயக்குநர் கிளாஸ் டோப்ஃபர் குறிப்பிடுகிறார்.

என்றாலும், மலைகள் அநேக பிரச்சினைகளையும் எதிர்ப்பட்டு வருகின்றன. தொலை தூரத்தில் அமைந்திருக்கும் காரணத்தால், அவை பல ஆண்டுகளாக மனிதரின் மிதமிஞ்சிய சுரண்டல்களிலிருந்து தப்பித்திருப்பது என்னவோ உண்மைதான். ஆனால் இன்று அவை அழிந்துவிடும் அபாயத்தில் இருக்கின்றன.

“விவசாயம், பொதுநல வசதிகளின் முன்னேற்றம், கால ஓட்டத்தில் அவ்வப்போது தாக்கத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கிற புதுப்புது காரியங்கள் ஆகியவற்றால், எஞ்சியுள்ள காட்டுப் பகுதிகளும் படுவேகமாக அழிந்து வருகின்றன” என்று ஐக்கிய நாடுகளின் சமீபத்திய செய்தி அறிக்கை ஒன்று விவரிக்கிறது.

பூமியின் நிலப்பரப்பில் பெருமளவை மலைப் பகுதிகள் ஆக்கிரமித்துள்ளன. உலக மக்களில் பாதிப் பேர் அதன் வளங்களை நம்பியிருக்கின்றனர். கோடிக்கணக்கான மக்களுக்கு மலைகளே வீடுகளாக இருக்கின்றன.

என்றாலும், ரம்மியமான பசும் புல்வெளிக்குப் பின்னால் காணப்படும் வெறும் பின்னணி காட்சியாக மட்டுமே மலைகள் இருப்பதில்லை. மனிதவர்க்கத்தின் நலனுக்காக அவை என்னவெல்லாம் அளிக்கின்றன என்பதை இப்போது சிந்திக்கலாம்.

மலைகள் ஏன் முக்கியமானவை?

தண்ணீர்த் தேக்கங்கள். நம்முடைய மிகப் பெரிய ஆறுகளுக்கும் நீர்த்தேக்கங்களுக்கும் மலைகளே ஊற்றுமூலமாக விளங்குகின்றன. வட அமெரிக்காவில் பாயும் பெரிய ஆறான கொலரடோ ஆறும் ரியோ கிரேன்டி ஆறும் ராக்கி மலைகளிலிருந்துதான் தண்ணீரைப் பெறுகின்றன.

உலக ஜனத்தொகையில் பாதிப் பேர் தெற்கு மற்றும் கிழக்கு ஆசியாவில் வசிக்கின்றனர். இவர்களில் பெரும்பாலோர் இமாலயம்-காரகோரம்-பாமீர்-திபெத் பகுதிகளில் இருக்கும் பெரிய மலைத் தொடர்களில் பெய்யும் மழையைச் சார்ந்தே வாழ்கின்றனர்.

“உலகத்தின் தண்ணீர்க் களஞ்சியங்கள் என்றழைக்கப்படும் மலைகள், இந்தப் பூமியில் வாழும் அனைத்து உயிரினங்களுக்கும் மக்களுக்கும் மிக அவசியமானவை” என்கிறார் டோப்ஃபர். அவர் மேலும் இவ்வாறு சொல்கிறார்: “மலை உச்சியில் நடக்கிற காரியங்கள் தாழ்ந்த நிலப்பகுதிகளிலும் நன்னீர் பகுதிகளிலும் கடலிலும் உள்ள உயிரினங்களைப் பாதிக்கின்றன.”

பல நாடுகளில் குளிர்காலப் பனியை மலைகள் தன்வசம் வைத்துக்கொள்கின்றன; பின்பு வசந்த காலத்தின்போதும் வெயில் காலத்தின்போதும் தேவைப்படும் ஈரப்பதத்தை மெதுவாக வெளிவிடுகின்றன. உலகிலுள்ள சில வறண்ட பகுதிகள், எங்கோ தூரத்தில் இருக்கும் மலைகளிலிருந்து பனிக்கட்டிகள் உருகுவதால் வரும் தண்ணீரையே நீர்ப்பாசனத்திற்குச் சார்ந்திருக்கின்றன.

அநேக மலைச் சரிவுகளைக் காடுகள் போர்த்தியுள்ளன. அவை மழை நீரை பஞ்சு போல் உறிஞ்சிக்கொள்கின்றன. இதனால், தண்ணீர் பெருக்கெடுத்துச் செல்வதற்குப் பதிலாக, பாறைகள் வழியாக மென்மையாய் ஓடி ஆறுகளைச் சென்றெட்டுகிறது.

வன உயிர் வாழ்விடங்களும் உயிரியல் பல்வகைமையும். மலைப் பகுதிகள் மிகத் தொலைவில் இருப்பதாலும், வேளாண்மைக்கு அதிகமாக கைகொடுக்காததாலும், மனித ஆக்கிரமிப்பிலிருந்து அவை பெருமளவு தப்பித்திருக்கின்றன.

விளைவு? அழிந்துவிடும் ஆபத்திலுள்ள தாழ் நிலப்பகுதி தாவரயினங்களுக்கும் விலங்கினங்களுக்கும் அவை சரணாலயங்களாக ஆகியிருக்கின்றன.

உதாரணத்திற்கு, நியு யார்க் நகரத்தைவிட சற்று சிறிதாக இருக்கும் மலேஷியாவிலுள்ள மலைப்பாங்கான கினாபாலு தேசிய பூங்காவில் 4,500 தாவரயினங்கள் உள்ளன. அவை ஐக்கிய மாகாணங்கள் முழுவதிலுமுள்ள தாவரயினங்களில் 25 சதவீதத்திற்கும் அதிகமாகும்.

சீனாவின் ஜயன்ட் பாண்டாக்களும், ஆண்டிஸ் மலைத் தொடர்களின் கான்டார் கழுகுகளும், மத்திய ஆசியாவின் பனிச் சிறுத்தைகளும் மலைப் பகுதிகளிலிருக்கும் வாழிடங்களையே சார்ந்திருக்கின்றன. அழியும் ஆபத்திலிருக்கும் வேறு பல எண்ணிலடங்கா உயிரினங்களும் மலைகளையே சார்ந்திருக்கின்றன.

“அறியப்பட்டிருக்கும் நிலவாழ் தாவரங்களிலும் முதுகெலும்புள்ள விலங்கினங்களிலும் மூன்றில் ஒரு பங்கிற்கும் அதிகமானவை இந்தக் கிரகத்தின் இரண்டு சதவீத பரப்பளவில் மட்டுமே காணப்படுகின்றன” என்று சூழியலாளர்கள் கணக்கிட்டுள்ளதாக நேஷனல் ஜியோக்ராபிக் பத்திரிகை சொல்கிறது.

பல இனங்கள் வளமிக்க நிலங்களில், எவற்றாலும் பாதிக்கப்படாத அருமையான சூழலில் கூட்டம் கூட்டமாக வாழ்கின்றன. அப்படிப்பட்ட இடங்களை அறிவியலாளர்கள் உயிரியல் ‘ஹாட் ஸ்பாட்’கள் என்று அழைக்கின்றனர்.

பெரும்பாலும் மலைப் பகுதிகளாகவே இருக்கும் இந்த ‘ஹாட் ஸ்பாட்’களில்தான் பல்வகை உயிரினங்கள் உள்ளன. அவற்றிலிருந்து நாம் அனைவருமே பயன் அடைந்திருக்கிறோம். உலகின் மிக முக்கியமான உணவுப் பொருட்களில் சில, மலைகளில் வளரும் காட்டுச் செடிகளின் மூலமாகவே கிடைக்கின்றன.

உதாரணமாக, மெக்சிகோவின் மேட்டுநிலப் பகுதிகளில் சோளமும், பெருவியன் ஆண்டிஸில் உருளைக் கிழங்கும் தக்காளியும், காகஸஸில் கோதுமையும் கிடைக்கின்றன.

பொழுதுபோக்கும் அழகும். மலைகள் இயற்கை அழகைப் பாதுகாக்கின்றன. அவை எழில்மிகு நீர்வீழ்ச்சிகளையும், அழகிய ஏரிகளையும், கண்கவர் இயற்கைக் காட்சிகளையும் தன்னகத்தே கொண்டுள்ளன. சொல்லப்போனால், பாதுகாக்கப்படுகிற இடங்களில் மூன்றில் ஒரு பங்கு மலைப் பிரதேசங்களிலேயே உள்ளன. எனவே, அவை சுற்றுலாப் பயணிகளுக்கு மிகவும் பிடித்தமான இடங்களாக திகழ்கின்றன.

வெகு தூரத்திலுள்ள தேசிய பூங்காக்களையும்கூட உலகெங்கிலும் வாழும் கோடிக்கணக்கானோர் சென்று பார்க்கின்றனர். வட அமெரிக்காவின் மிக உயர்ந்த மலையான மெக்கின்லி மலையைப் பார்ப்பதற்கு திரளான மக்கள் பல்வேறு இடங்களிலிருந்து அலாஸ்காவிலுள்ள டெனாலி தேசிய பூங்காவிற்குச் செல்கின்றனர்.

கண்ணைக் கவரும் கிளிமஞ்சாரோவையும் மெரு சிகரங்களையும் கண்டுகளிக்க அநேகர் மகா பிளவு பள்ளத்தாக்குகளுக்கு விஜயம் செய்கின்றனர்.

அல்லது கம்பீரமாக நிற்கும் இந்த இரு மலைகளின் நடுவே வசிக்கும் காட்டு மிருகங்கள் கூட்டம் கூட்டமாகச் செல்வதைப் பார்த்து ரசிக்கச் செல்கின்றனர். இந்தச் சுற்றுலாப் பயணிகளின் வரவால் அநேக மலைவாசிகள் பயனடைந்தாலும், இப்பயணிகளின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்தாவிட்டால் இந்த நுண்ணிய சூழியல் அமைப்புகள் அழிந்துவிடும் ஆபத்து உள்ளது.

மலைகளில் அறிவுக் களஞ்சியங்கள்

மோசமான சூழ்நிலைகள் மத்தியில்கூட எப்படிச் சிறப்பாக வாழலாம் என்பதை பல நூற்றாண்டுகளினூடே மலைவாழ் மக்கள் கற்றிருக்கின்றனர். அவர்கள் உருவாக்கிய மலைப் படிக்கட்டுகள் 2,000 ஆண்டுகளுக்குப் பிறகும் வேளாண்மைக்கு உறுதுணையாக இருந்து வருகின்றன.

அதோடு, அங்கு வாழும் லாமா, யாக் போன்ற மிருகங்களை அவர்கள் பழக்கப்படுத்தியிருக்கின்றனர்; அந்த மிருகங்கள் உயரமான பிரதேசங்களிலுள்ள எந்தச் சூழலையும் தாக்குப்பிடிக்க வல்லவை. எனவே, மலைகளைப் பாதுகாப்பதற்கு மலைவாசிகள் பெற்றிருக்கும் பாரம்பரிய அறிவு விலையேறப் பெற்றதாய் இருக்கிறது.

“ஒவ்வொரு கண்டத்திலுமுள்ள கண்காணாத பரந்த இடங்களை, அவ்வளவாகப் பாதிக்கப்பட்டிராத அத்தகைய உறைவிடங்களைப் பாதுகாப்பதில் வல்லவர்கள் பழங்குடியினர் மட்டுமே” என்று உவர்ல்ட்வாட்ச் இன்ஸ்டிட்யூட்டைச் சேர்ந்த ஆலன் தேண் டர்னிங் விவரிக்கிறார்.

மேலும், “சூழியல் அமைப்பு பற்றிய அவர்களுடைய நடைமுறை அறிவு, நவீன அறிவியலின் நூலகங்களில் புதைந்துள்ள அறிவுக்குச் சமம்” என்றும்கூட அவர் விவரிக்கிறார். மலைகளின் மற்ற வளங்கள் பாதுகாக்கப்படுவது போல் இந்த அறிவுக் களஞ்சியங்களும் பாதுகாக்கப்பட வேண்டும்.

இத்தனை சிறப்பு வாய்ந்த மலைகளில்தான் நம் ஆதி பிதா (அலை) அவர்களும் நம் அன்னை ஹவ்வாவும் மக்காவிலுள்ள ஜபல் ரஹ்மத் மலையில்தான் சந்தித்தார்கள். அதன் பின்தான் மனித வர்க்கமே உருவானது.

தமிழ்நாட்டுச் சித்தர்களில் பலரும் இறையோடு உரையாட மலைகளையே தேர்ந்தெடுத்தனர். அகத்தியர் பொதிகை மலையிலும், பாம்பாட்டிச் சித்தர் மருதமலையிலும், போகர் பழநிமலையிலும், மச்சமுனி திருப்பரங்குன்றத்திலும், ராமதேவர் அழகர்மலையிலும், குதம்பைச் சித்தர் திருக்கழுக்குன்றத்திலும், இடைக்காடர் திருவண்ணாமலையிலும் தவமியற்றியவர்கள் ஆவர்.

மலைகள், நிலமகளின் மார்புகள்; இறைத்தாகம் கொண்ட உயிர்களுக்கெல்லாம் அவை ஆற்றல் நிறைந்த அமுதத்தை ஊட்டும் என்பதை சித்தர்கள் நன்கறிந்தவர்கள்.

அந்த வகையில் பார்த்தால், மலையில் இருந்து தொடங்கும் பாதை வாழ்க்கையில் ஒருபோதும் கீழிறங்குவதில்லை; மேல் நோக்கியே செல்கிறது என்கிறார்கள் ஆன்மிகவாதிகள்

அதனால்தானோ என்னவோ மலைகளின் ஈர்க்கும் ஆற்றலையும், வெளிப்படுத்தும் ஆற்றலையும் கருத்தில் கொண்டுதான், இறைவன் அருளிய சபூர், தவ்ராத், இன்ஜில் , குர்ஆன் ஆகிய வேதங்கள் மலைகளில் இறக்கியருளப்பட்டது

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 2

ஒலிவ மலை (MOUNT OF OLIVES - ISRAEL)




யூதாசினால் ஏசுவைக் காட்டிக் கொடுக்கப்பட்ட மலை. மற்றும் சிறப்பு மிக்க மலைப் பிரசங்கம் நடைபெற்ற மலை. ஏசு கண்ணீர் விட்டு கதறியழுத மலை இந்த ஒலிவ மலை

இஸ்ரவேலில் அமைந்துள்ள ஒலிவமலையானது வடக்கு தெற்காக மலைகளிடையே பரந்துள்ள வரம்பு போன்ற ஒடுங்கிய மலைப்பகுதியாகும். இது எருசலேமின் பழைய நகரத்துக்கு சற்று வடகிழக்காக அமைந்துள்ளது. இந்த வரம்பு பகுதியானது மூன்று உச்சிகளை கொண்டுள்ளது.

வடக்கே உள்ள மலையுச்சியே மிக உயரமானதும் கடல் மட்டத்திலிருந்து 2676 அடி உயரத்திலுள்ளது. நடு உச்சியானது வேதாகமத்தில் ஏரோதினுடைய ஆலயம் கட்டப்பட்டிருந்ததாக குறிப்பிடப்பட்டுள்ள இடத்திற்கு நேர்கிழக்காக அமைந்துள்ளது. கீதரோன் ஆறானது மூன்றாவது மலைச்சிகரத்தினை நகரத்திலிருந்து பிரிக்கிறது.

இந்த பிரதேசமானது பெயருக்கேற்ப வேதாகம காலப்பகுதியில் ஒலிவ மரங்களால் சூழப்பட்டு காணப்பட்டது. கிறிஸ்தவ சரித்திரத்தில் முக்கியத்துவம் வாய்ந்த இந்த மலை தீர்க்க தரிசனமாகவும், புதிய ஏற்பாட்டில் பேசப்பட்டதும், எண்ணற்ற முக்கியத்துவம் வாய்ந்த சம்பவங்கள் நடந்தேறிய இடமாகும். சில உதாரணங்கள்...

வெற்றிப்பவனி சென்றமையும் இயேசு கண்ணீர் விட்ட இடமும்

நடு மலைச்சிகர அடிவாரத்தில் அமைந்துள்ள கெத்சமனே தோட்டம். இது சிலுவையில் அறையப்பட முதல் நாள் இரவு ஜெபிக்க இடமும், (இஸ்லாமிய வரலாற்றின்படி ஈஸா (அலை) அவர்களை வானுலகத்திற்கு உயர்த்தப்பட்ட மலை) யூதாசினால் காட்டிக் கொடுக்கப்பட்ட இடமுமாய் இருக்கிறது.

இயேசு இந்நடு மலைச் சிகரத்திலிருந்து பரலோகத்திற்கு ஏறிப்போனார்.

இயேசுவும் அவரது சீஷர்களும் அநேக தரம் இவ்வழியே பிரயாணப்பட்டு சென்றுள்ளனர். (மலைப்பிரசங்கம்)

ஒலிவமலை பற்றிய வேதாகம சரித்திரம்

பெத்தானியவிலிருந்து எருசலேமிற்கு செல்லும் பாதை ஒலிவமலையை கடந்து தான் செல்கிறது. ஆகவே இயேசு தமது ஊழியத்தில் இந்த ஒலிவ மலையை அநேக தரம் கடந்து செல்ல நேரிட்டிருக்கும்.

அவர் கெத்சமனே தோட்டத்தில் செய்த ஜெபம் திரித்துவத்தின் பூரண வெளிப்பாடு என கிறிஸ்தவர்கள் நம்புகின்றனர். இந்த ஒலிவமலையானது தற்போது கிறிஸ்தவர்களின் வணக்கஸ்தலமாக மாறியுள்ளது. அநேக தேவாலயங்கள் இவ்விடத்தில் கட்டப்பட்டு வருகிறது. கெத்சமனே தோட்டத்திலுள்ள Church of all Nationns, The Dominius Flevit (இயேசு கதறி அழுதமை) கண்ணீர் துளி வடிவிலான தேவாலயம் இயேசு கண்ணீர் விட்ட இடத்திலுள்ளது.

பைபிள் சொல்லப்பட்ட இம்மலையைப் பற்றிய சேதிகள்:

இயேசு மலையின் மீது நேரம் செலவழித்ததாகக் கூறப்படுகிறது, அவருடைய சீடர்களுக்கு கற்பித்தல் மற்றும் தீர்க்கதரிசனம் உரைத்தல் (மத்தேயு 24-25), ஒலிவெட் சொற்பொழிவு உட்பட , ஒவ்வொரு நாளும் ஓய்வெடுக்கத் திரும்பினார் ( லூக்கா 21:37,மற்றும் ஜான் 8:1 கூடுதல் பகுதியில் பெரிகோப் அடல்டேரே என்று அழைக்கப்படும் ஜானின் நற்செய்தியில் , மேலும் அவர் காட்டிக்கொடுக்கப்பட்ட இரவில் அங்கு வருகிறார்.

ஒலிவ மலையின் அடிவாரத்தில் கெத்செமனே தோட்டம் உள்ளது . இயேசுவும் அவருடைய சீடர்களும் எப்படி ஒன்றாகப் பாடினார்கள் என்பதை புதிய ஏற்பாடு சொல்கிறது - "அவர்கள் பாடலைப் பாடி, ஒலிவ மலைக்குச் சென்றார்கள்" மத்தேயு நற்செய்தி 26:30. அப்போஸ்தலர் 1:9-12ன் படி இயேசு ஒலிவ மலையிலிருந்து பரலோகத்திற்கு ஏறினார் .

இதைத்தவிர ஒலிவமலையின் தெற்கு முடிவிடத்தில் கீதரோன் ஆற்றிற்கு குறுக்கே பல கல்லறைகள் உள்ளன. காரணம் அநேகர் இது கடைசி நியாயத் தீர்ப்பின் இடம் என நம்புவதேயாகும். இவைகள் இன்று மிக பிரசித்தி பெற்ற சுற்றுலா தளங்களாக காணப்படுகின்றன.

வேதாகம அடிப்படையல்லாத ஒலிவ மலை பற்றிய வரலாறு:

இதனுடைய உயரத்தின் காரணமாக ஒலிவமலையானது படையினரின் அவதானிப்பு நிலையமாக தொன்று தொட்டு விளங்குகின்றது. எருசலேம் 70ce இல் கைப்பற்றப்பட்டு தேவாலயம் நிர்மூலமாக்கப்பட்ட போது ரோம இராணுவ தளபதியான தீத்து ஸ்கோபஸ் என்ற மலையில் முகமிட்டிருந்தான் (lookout hill).

இது ஒலிவமலையின் ஒரு பகுதியாக இல்லாவிட்டாலும் அதே மலைத்தொடரின் ஒரு பகுதியாக ஸ்கோபஸ் காணப்படுகின்றது. இப்பகுதியானது இராணுவத்தினர் தங்களது பாரிய ஆயுதங்களை பயன்படுத்தி எருசலேம் நகரத்தை கைப்பற்ற பெருந்துணை புரிந்துள்ளது என நிபுணர்கள் கருதுகின்றனர்.

வரலாற்று சிறப்பு மிக்க மலைகள் 3

(**சீயோன்** மலை)




சீயோன் மலை (Mount Zion) இது ஜெருசலேம் பழைய நகருக்கு வெளியில் அமைந்துள்ள ஓர் குன்று.

“சீயோன் மலை” என்பது ஜெருசலேமோடு இணைந்த ஒரு பர்வதம் ஆகும். ஒருகாலத்தில் அது எபூசியர் என்ற புறஜாதியாரின் வசம் இருந்தது. அந்த கோட்டை அரணிப்புள்ளதாகவும், பாதுகாப்புள்ளதாகவும் இருந்தது.

எபூசியர்களின் கோட்டை நகரமாகிய எபூசுவின் பெயர்தான் சீயோன். இது எருசலேமின் தென்கிழக்கு மலைமீது இருந்தது. தாவீது (தாவூது (அலை) அவர்கள்) இந்த நகரத்தைக் கைப்பற்றிய பின்பு, இங்கே தன் அரண்மனையைக் கட்டினார். இது “தாவீதின் நகரம்” என்று அழைக்கப்பட்டது. (2சா 5:7, 9) ஒப்பந்தப் பெட்டியை ( தாபூத்து சகீனா - மன அமைதிப் பேழை ) தாவீது சீயோனுக்குக் கொண்டுவந்த பின்பு, இந்த மலை யெகோவாவுக்குப் பரிசுத்தமான மலையாக ஆனது.

யோசுவாவோ, நியாயாதிபதிகளோ அல்லது இஸ்ரவேல் தேசத்தை நாற்பது ஆண்டுகள் அரசாண்ட சவுலோ அதைப் பிடிக்க முடியவில்லை. ஆனால் தாவீது வைராக்கியமாய் நின்று, எபூசியர் மேல் யுத்தம் செய்து, சீயோன் மலைக்கோட்டையைப் பிடித்தார். பிற்பாடு அது தாவீதின் நகரமாயிற்று (2 சாமு. 5:7,9).

தாவீது இராஜாவுக்கு அங்கே ஒரு அரண்மனை இருந்தது. அந்த சீயோன் மலை ஜெருசலேமுக்கு தென்மேற்கு பகுதியில் பழமையானதும், உயர்ந்ததுமாக இருக்கிறதைக் காணலாம்.

சாலொமோன் ( நபி சுலைமான் ) ஆலயத்தைக் ( ஜெருசலேம் நகரின் அல்-அக்ஸா மசூதி) கட்டினபோது, சீயோன், மோரியா, அக்ரா, பெர்செதா என்று அழைக்கப்படும் நான்கு மலைகளையும் இணைத்து ஆலயத்தைக் கட்டினார்.

விவிலியத்தில் இம்மலையும் மோரியா மலையும் ஒன்றாக, அன்னை சாராவின் குமாரரான ஈசாக்கை பலி கொடுக்க முனைந்த இடமாகவும் யூத ஆலய இடமாகவும் காட்டப்படுகின்றது.

( ஆனால் திருக்குர்ஆனில் அன்னை ஹாஜிரா அவர்களின் குமாரரான இஸ்மாயில் (அலை) அவர்களை மக்காவில் மினாவிலுள்ள மலையில் பலி கொடுக்க முனைந்ததாக கூறுகிறது)

“சீயோன் மலை” என்ற வார்த்தைக்கு “சூரியகாந்தி” என்பது அர்த்தம். சூரியகாந்தி செடியிலே ஒரு பெரிய இரகசியம் இருக்கிறது. அதின் மலர் எப்பொழுதும் சூரியனையே நோக்கிக்கொண்டிருக்கிறது. சூரியனைப்போன்ற ஒரு தோற்றம் அளிக்கிறது. சூரியன் செல்லும் திசையை நோக்கி அதுவும் திரும்பிக்கொண்டிருக்கிறது. இப்படித்தான் தேவனுடைய ஜனங்களும் நீதியின் சூரியனாகிய கர்த்தரையே நோக்கிக் கொண்டிருக்கவேண்டும் என்பதாக இம்மலையைப் பற்றி பைபிள் கூறுகிறது.

வரலாற்று சிறப்பு மிக்க மலைகள் 4

(**கஃப்சா** மலை)

கஃப்சா மலை என்பது, நசரேத்தின் தெற்கு எல்லைக்கு சற்று வெளியே, நவீன நகரத்தின் மையப் பகுதியில் இருந்து 2.0 கிமீ தொலைவில் அமைந்துள்ளது.

இயேசுவைப் புறக்கணித்ததாக லூக்கா 4:29-30ல் குறிப்பிட்டுள்ள நிகழ்வு இவ்விடத்திலேயே இடம்பெற்றதாகப் பலர் நம்புகிறார்கள்.

லூக்கா 4:29 : ( அம்மக்கள் எழுந்து இயேசுவை நகரத்தில் இருந்து வெளியேறும் படியாகக் கட்டாயப்படுத்தினர் ) எழுந்திருந்து, அவரை ஊருக்குப் புறம்பே தள்ளி, தங்கள் ஊர் கட்டப்பட்டிருந்த செங்குத்தான மலையின் உச்சியிலிருந்து அவரைத் தலைகீழாய்த் தள்ளிவிடும்படிக்கு அவ்விடத்திற்குக் கொண்டுபோனார்கள்.

லூக்கா 4: 30 : அவரோ அவர்கள் நடுவினின்று கடந்துபோய்விட்டார்.

நசரேத்தின் மக்கள், இயேசு ஒரு மீட்பர் என்பதை ஏற்றுக்கொள்ளாமல் அவரை மலையில் இருந்து தள்ளிவிட முயன்றனர். ஆனால் இயேசு அவர்களுக்கு இடையில் புகுந்து கடந்து சென்றுவிட்டார் என்று பைபிள் கூறுகிறது .

இம்மலையில் உள்ள குகையொன்றில் நடத்தப்பட்ட தொல்லியல் ஆய்வுகளில் 100,000 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த மனிதர்களின் மண்டையோடுகளும், எலும்புகளும் பிற எச்சங்களும் கண்டெடுக்கப்பட்டன. இங்கு காணப்பட்ட எலும்புக்கூடுகளுடன் மட்டும் சிவப்புக் காவிக்கற்கள் காணப்பட்டன.

இது, புதை குழிகள் குறியீட்டுத் தன்மை கொண்டவையாக இருப்பதைக் காட்டுவதாகக் கருதப்படுகிறது. இந்தக் கண்டுபிடிப்புக்கு முன்னர், மனிதனுடைய குறியீட்டுக் காரண அறிவு பிற்காலத்தில், ஏறத்தாழ, 50,000 ஆண்டுகளுக்கு முன்னரே வளர்ச்சியுற்றதாக அறிவியலாளர்கள் எண்ணினர்.

20ம் நூற்றாண்டில் இம்மலை கற்கள் அகழிடமாக இருந்து இப்போது கைவிடப்பட்ட நிலையில் உள்ளது. அஃபூலா, ஜெசுரீல் பள்ளத்தாக்கு ஆகிய இடங்களை நசரேத்துடன் இணைக்கும் நெடுஞ்சாலை 60, பழைய கல் அகழிடப் பகுதியில் அமைக்கப்பட்ட ஒரு சுரங்கப்பாதை ஊடாகச் செல்கிறது.

2009ல் இசுரேலுக்கு வந்த பாப்பரசர் 16ம் பெனடிக்ட், மே 14 ஆம் தேதி இந்த மலையில் ஒரு வழிபாடொன்றை நடத்தினார். 40,000 மக்கள் இதில் கலந்துகொண்டனர்.

வரலாற்று சிறப்பு மிக்க மலைகள் 5

(**கும்ரான்** மலை - Qumran 1 )




இஸ்ரேலின் மேற்குக் கரையில் அமைந்துள்ள ஓர் தொல்பொருளியற் களம். இது இசுரேலிய குடியிருப்புப் பகுதி, கிப்புட்சு ஆகியவற்றுக்கு அருகில், சாக்கடலின் வடமேற்கு கரையிலிருந்து ஒரு மைல் தொலைவில் வறண்ட பீடபூமி மீது அமைந்துள்ளது.

கெலேனிய கால குடியிருப்பு ஜோன் கைக்கானுசு ஆட்சிக்காலத்தில் கி.மு 134-104 க்கு இடைப்பட்ட அல்லது பிற்பட்ட காலத்தில் உருவாக்கப்பட்டு, கி.பி 68 அல்லது அதன் பின்னர் உரோமைப் பேரரசால் அழிக்கப்படும் வரை குடியிருப்பாக இருந்தது.

சாக்கடல் சுருள் ஏடுகள் மறைத்து வைக்கப்பட்ட, நேரான பாலைவன செங்குத்துப் பாறைகள், தாழ்வுப் பகுதிகள் சுண்ணாம்புக்கல் பாறை மேல் தளம் கொண்ட கும்ரான் குகைகளுக்கு அண்மித்த குடியிருப்புக்கள் நன்றாக அறியப்பட்டவை.

இது சவக் கடலின் வடமேற்குக் கரையிலுள்ள ஒரு காட்டாற்றுப் பள்ளத்தாக்கின், அதாவது ஒரு நீரோடையுடைய அடிப்பரப்பின், பெயர். இதற்குப் பக்கத்தில் இருக்கும் பழங்கால யூதக் குடியிருப்பின் இடிபாடுகளுடைய பெயர்தான் இதற்கும் வைக்கப்பட்டது. சவக் கடல் சுருள்கள் கண்டெடுக்கப்பட்ட பிறகு அந்த யூதக் குடியிருப்பு பிரபலமாகிவிட்டது.

இந்தப் பகுதி இப்போது கிர்பெத் கும்ரான் என்று அழைக்கப்படுகிறது. அது எரிகோவுக்குத் தெற்கே 13 கி.மீ. (8 மைல்) தூரத்தில் இருக்கிறது. 1947-ல், அந்தப் பகுதியிலுள்ள குகைகளில் முதன்முதலாக சவக் கடல் சுருள்கள் கண்டெடுக்கப்பட்டன.

அநேகமாக, முதல் நூற்றாண்டில் கும்ரானில் குடியிருந்த மக்கள் அவற்றைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். அந்த மக்கள் இஸ்ஸனஸ் என்ற யூதப் பிரிவைச் சேர்ந்தவர்கள் என்று பல அறிஞர்கள் சொல்கிறார்கள். கி.பி. 68-ல் ரோமர்கள் படையெடுத்து வந்தபோது அந்த மக்கள் தங்களுடைய முக்கியமான ஆவணங்களைக் குகைகளில் ஒளித்துவைத்துவிட்டுத் தப்பியோடினார்கள். ரோமர்கள் அந்தக் குடியிருப்பை அழித்துவிட்டார்கள். சுமார் கி.பி. 73 வரை அங்கே ஒரு காவல்படையை அவர்கள் நிறுத்தியதாகத் தெரிகிறது.

ஆன்மீக உலகை அதிரவைக்கும் சாவுக்கடல் சாசனச் சுருள்கள்..!

அல்குர்ஆன் (18.9) (அஸ்ஹாபுல் கஹ்ஃபு என்ற குகையிலிருந்தோரைப் பற்றி) அந்த குகையிலிருந்தோரும், சாஸனத்தையுடையோரும் நம்முடைய ஆச்சரியமான அத்தாட்சிகளில் நின்றும் உள்ளவர்கள் என எண்ணுகிறீரோ?'

இந்த வசனத்தில் (18:9) குகையில் தங்கியவர்களைப் பற்றி குறிப்பிடும் போது,குகைவாசிகள் என்று மட்டும் குறிப்பிட்டால் போதும், அத்துடன் குகைவாசிகள் மற்றும் ஏட்டுக்குரியவர்கள் (சுவடிக்கு உரியவர்கள்) என்றும் அல்லாஹ் கூறுகிறான்.

அப்படியானால் ஒரு சுவடி இவர்களது வரலாற்றுடன் முக்கியமான இடத்தைப் பிடித்திருக்கிறது என்பதை அறிந்து கொள்ளலாம்.ஏதோ ஓர் ஏட்டை அவர்கள் வைத்திருந்தார்கள் என்பதற்காக மட்டும் இவ்வாறு நிச்சயமாகக் கூறப்பட்டிருக்காது 'அந்த ஏடு' என்று குறிப்பிட்டுச் சொல்வதென்றால் அது ஒரு முக்கியமான ஏடாக இருக்க வேண்டும்.

அந்த ஏடு ஒரு காலத்தில் கண்டெடுக்கப்பட்டு மக்களுக்கு அதில் உள்ள உண்மைகள் தெரியவேண்டும் என்பதற்காகவே அந்த ஏட்டுக்குரியவர்கள்' என்று அல்லாஹ் கூறியிருக்க முடியும். அந்த

ஏடு யாருக்குமே கிடைக்காது என்றால் 'அந்த ஏடு' என்று முக்கியத்துவப்படுத்தி இறைவன் கூறியிருக்க முடியாது.

அது என்ன சுவடி? அது என்ன ஏடு என்பதெல்லாம் பல வருடங்களாக உலகத்திற்குத் தெரியவில்லை. ஆனால் அந்த ஏடுகளில் இருந்த செய்திகள் இப்போது அம்பலமாகியுள்ளன.

'சாவுக்கடல் சாசனச் சுருள்கள்' என்ற தலைப்பில் 1998ஆம் ஆண்டு ஒரு மாதத்தில் பல தடவை பி.பி.சி. தொலைக் காட்சியில் ஒரு மணி நேர நிகழ்ச்சி ஒன்று ஒளிபரப்பப்பட்டது. அதில் சொல்லப்பட்ட செய்திகள் கேட்போர் அனைவரையும் வியப்பில் ஆழ்த்துவதாக இருந்தது.இந்த நிகழ்ச்சியின் முதல் ஒளிபரப்பு 1993ஆம் ஆண்டிலேயே காட்டப்பட்டதாகவும் சொல்லப்பட்டது.

1947ஆம் ஆண்டு ஒரு நாள் ஆடு மேய்க்கும் ஓர் அரபுச் சிறுவன், காணாமல் போன தனது ஆட்டுக்குட்டி ஒன்றைத் தேடி சாவுக்கடலை ஒட்டிய ஜோர்டான் நாட்டு மலைப் பகுதிகளில் தேடி அலைந்தான்.

அந்த மலைப் பகுதி 'கும்ரான் மலைப் பகுதி' என்று அழைக்கப்படுகிறது ஆட்டுக் குட்டியைத் தேடிய சிறுவன் அங்கிருந்த குகைக்குள் பார்த்த போது, மண் பாண்டங்களில் சுருட்டி நிரப்பி வைக்கப்பட்ட தோல் ஆவணங்களைக் கண்டிருக்கின்றான்.அவைகளில் சிலவற்றை எடுத்து வந்து செருப்புத் தொழிலாளியான தன் தந்தையிடம் கொடுக்க, மறு நாள் தந்தையும், மகனும் சேர்ந்து குகைக்குள் இருந்த அனைத்துச் சுருள்களையும் வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தார்கள்.

அந்தப் பழைய தோல்களைத் தமது செருப்புத் தொழிலுக்குப்

பயன்படுத்த எண்ணிய அந்தச் சிறுவனின் தந்தை நோல்களில் ஹிப்ரு மொழியில் எழுதப்பட்டிருந்த வார்த்தைகளின் பொருள் புரியாமல், அதை அப்பொழுது ஜோர்டான் மன்னர் ஆட்சியின் கீழிருந்த கிழக்கு ஜெருஸலத்தைச் சேர்ந்த ஒரு பழைய புத்தக கடைக்காரரிடம் காண்பித்திருக்கிறார்.

ஓரளவு ஹிப்ரு மொழியறிந்த அந்தக் கடைக்காரர் அந்தச்

சுருள்கள் பழங்காலச் செய்திகளைக் கொண்டதாக இருக்க

அந்தச் சுருள்கள் பழங்காலச் செய்திகளைக் கொண்டதாக இருக்க வேண்டும் என்று கருதி, ஒரு சில நீனார்களுக்கு அத்தனை

சுருள்களையும் அந்த செருப்புத் தொழிலாளியிடமிருந்து வினைக்கு வாங்கிக் கொண்டார்

கிறிஸ்துவரான அந்தப் புத்தகக் கடைக்காரர் அந்தச் சுருள்களை அந்நகரில் இருந்த கிறித்தவ ஆலயத்தில் ஒப்படைத்து விட்டார் இந்தச் சந்தர்ப்பத்தில் சுருள்கள் கண்டெடுக்கப்பட்ட விஷயம் வெளிப்பட்டது. அதில் உள்ள செய்திகளைத் தெரிந்து கொள்வதற்கு யூதர்களும், முஸ்லிம்களும் ஆர்வம் காட்டினர்

அப்போது ஜோர்டானை ஆட்சி செய்த மன்னர் ஹுசைன், "அந்தச் சாசனச் சுருள்கள் முஸ்லிம், யூத, கிறித்தவர்கள் அடங்கிய ஒரு குழுவிடம் பொதுவாக ஒப்படைக்கப்பட்டு அவை ஆராயப்பட வேண்டும்" என்று விண்ணப்பித்தார்.

ஆனால் கிறித்தவப் பாதிரியார்கள், "அது தனியார் சொத்து' என்று வாதிட்டு அதைப் பொதுவில் வைக்க மறுத்து விட்டனர். கிறித்தவர்களில் பல அறிஞர்களுக்கும் கூட அவற்றைப் படிப்பதற்குச் சந்தர்ப்பம் அளிக்கப்படவில்லை.

இடைப்பட்ட ஐந்தாண்டு காலங்களில் ஜெருஸலத்தில் இருந்த பாதிரிமார்கள் சில குழுக்களை ஏற்படுத்தி கும்ரான் மலைப் பகுதிகளில் இருந்த குகைகளில் தேடியலைந்து அங்கிருந்த சாசனச் சுருள்கள் அனைத்தையும் தங்கள் கைவசம் கொண்டு வந்து விட்டனர்.

1952 ஆண்டு செப்டம்பர் மாதம் அனைத்து சுருள்களும் கிறித்தவப் பாதிரிமார்கள் கையில் போய்ச் சேர்ந்து விட்டன. பதினைந்தாயிரம் menuscripts கையெழுத்துப் பிரதிகள்) இவ்வகையில் இருப்பதாக தற்பொழுது கணக்கிட்டு உள்ளனர்.

கடந்த ஐம்பதாண்டுகளுக்கு மேல் அந்த சாசனச் சுருள்களில் அடங்கிய செய்திகளை, ஒரு குறிப்பிட்ட கிறித்தவப் பாதிரிகள் அடங்கிய குழு இருட்டடிப்பு செய்து வந்தது. பல கிறித்தவ அறிஞர்களும், ஆராய்ச்சியாளர்களும் அதைப் படிப்பதற்கு ஆர்வம் கொண்டு கேட்ட போதெல்லாம், அவர்களுக்கு அந்த வாய்ப்பு மறுக்கப்பட்டது.

சாசனச் சுருள்களைக் கைவசம் கொண்ட குழுவில் ஒருவர் இறக்க நேரிட்டால் அவருக்குப் பதில் அக்குழுவில் உள்ள மற்றவர்களால் வேறொரு பாதிரியார் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவருக்கு மட்டுமே அதைப் படிப்பதற்கு உரிமை வழங்கப் பட்டு வந்தது.

இவ்விதமாகவே இவ்வளவு காலமும் அந்தச் சாசனச் சுருள்களின் செய்திகள் ரகசியமாக வைக்கப்பட்டு வந்தன. இந்த இரகசியக் காப்பில் போப்பாண்டவரின் வாட்டிகன் சபை முன்னணியில் இருந்தது. நோலில் பதிந்த அந்தப் பழங்காலச் சாசனம் அழிந்து விடும் நிலையைக் கண்ட அதன் ரகசியக் காப்பாளர்கள் அச்சாசனங்களை microfilm (நுண்ணிய படச்சுருள்) எடுத்தார்கள்.

அதன் ஒரு செட் போட்டோ காப்பிகள் அமெரிக்காவில் உள்ள லாஸ் ஏஞ்சல்ஸ் நகரிலிருக்கும் ஒரு நூலகத்துக்குப் பாதுகாப்புக்காக அனுப்பி வைக்கப்பட்டது.

1990ஆம் ஆண்டு அந்த நூலகத்துக்குத் தலைவராக ஐஸ்மேன் என்ற அறிஞர் நியமிக்கப்பட்டார். அவர் முன்பே அந்த சாசனச் சுருள்களைப் படிப்பதற்கு ஆர்வம் காட்டி, அதற்கான வாய்ப்பு மறுக்கப்பட்டவர்.

இப்போது தனது அதிகாரத்தில் உள்ள நூலகத்தில் இருந்து சாசனச் சுருள்களின் நுண்ணிய போட்டோக்களைப் பெரிய அளவில் போட்டோ எடுக்கச் செய்து அவற்றைப் படித்தார்.

அவற்றைப் படித்த போது தமக்கு வியப்பு ஏற்பட்டதாக வாக்குமூலம் அளிக்கின்றார்.

இத்தனை காலமும் கிறித்தவ சபை அந்த சாசனச் சுருள்களை மற்றவர்களுக்குக் காட்டாமல் இருந்ததன் உள் நோக்கம் என்ன என்பதையும் புரிந்து கொண்டதாகக் கூறுகின்றார்.

மைக்கேல் வைஸ் என்னும் சிகாகோ பல்கலைக் கழக ஹிப்ரு மொழிப் பேராசிரியர் ஒருவரின் உதவியைக் கொண்டு அந்த சாசனச் சுருள்களில் முக்கியமானது என்று அவர் கருதிய 100 menuscripts (கையெழுத்துப் பிரதி)களை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து வெளியிட்டார்.

அந்தப் புத்தக வெளியீடு கிறித்தவ உலகத்தை உலுக்கியது என்றும், குறிப்பாக கிறித்தவ மத ஆலயங்கள் பேரதிர்ச்சியில் உறைந்து போயின என்றும் அந்த டாக்குமென்டரியின் செய்தியாளர் கூறுகின்றார்

மேற்கத்திய மக்களின் மதநம்பிக்கையைத் தகர்ப்பதாக அந்தப் புத்தக வெளியீடு இருந்தது என்றும், ஆகவே அந்த இரு அறிஞர்களும் சட்ட நடவடிக்கைகளுக்கு உட்படுத்தப்படுவார்கள் என்ற அச்சம் இருந்தது என்றும் அதன் செய்தியாளர் குறிப்பிடுகிறார்.

அப்படி எது நடந்தாலும் அதைத் தாங்கள் எதிர் கொள்ளத் தயாராக இருப்பதாகவும், இதற்கு அஞ்சி ஒரு மிகப் பெரும் பேருண்மையை உலகத்திலிருந்து தாங்கள் மறைக்க விரும்பவில்லை என்றும் அவ்விரு அறிஞர்களும் வெளிப்படையாகக் கூறுவதையும் அந்தத் தொலைக்காட்சி டாக்குமெண்டரி பதிவு செய்து காட்டுகின்றது.

கிறித்தவ மத ஆலயங்களில் இப்போது ஏசுவின் பெயரால் செய்யப்படும் மதச் சடங்குகளும், வழிபாடுகளும் ஆரம்ப கிறித்தவர்களிடையே நடைபெறவில்லை என்பதையும், அது ஏகத்துவத்தை அழுத்தம் திருத்தமாக சாசனச் சுருள்கள் நிரூபிக்கின்றன.

இந்தச் சடங்குகளுக்கும், ஏசுலின் பிரச்சாரத்திற்கும், கொள்கை கோட்பாடுகளுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அவை அனைத்தும் 'பவுல்' என்பவரால் பிற்காலத்தில் ஏற்படுத்தப்பட்டவை.

மொத்தத்தில் இப்போது ஏசுவின் பெயரால் சொல்லப்படும் அனைத்து கிறித்தவக் கொள்கைகளும் பொய்யானவை. அவற்றை ஏசுவிற்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்த உண்மையாளர்களின் வாழ்வில் காண முடியவில்லை.

மேற்கண்டவாறு அறிஞர் ஐஸ்மேன் கூறும் போது, ஒரு யூதரிடம் அவற்றைப் பற்றி வாதம் செய்கையில், it confirnd islam' அது இஸ்லாத்தை உறுதிப்படுத்துகிறது என்று ஆணித்தரமாகக் கூறுகிறார். அவ்விடத்தில் அந்த வாதம் நிறுத்தப்பட்டு மறு காட்சி காட்டப்படுகின்றது.

இதே முறையில் மைக்கேல் வைஸ் என்ற அறிஞரும் பேசும் போது, it confind Islam அது இஸ்லாத்தை உறுதிப்படுத்துகின்றது என்று கூறுகிறார். இங்கும் காட்சி மாற்றப்படுகின்றது.

ஆகவே இந்தச் சாசனச் சுருள்கள் எந்த வகையில் குர்ஆனையும், இஸ்லாத்தையும் உண்மைப்படுத்துகின்றன என அவர்கள் கூறுகிறார்கள் என்பதைப் பார்வையாளர்கள் அறிய முடியவில்லை

அந்தச் செய்தியிலிருந்து நாம் ஆச்சரியமான ஓர் உண்மையைத் தெரிந்து கொள்கிறோம் ஈஸா (அலை) அவர்களுக்கு இறைவன் இஞ்ஜீல் எனும் வேதத்தை வழங்கியதாகத் திருக்குர்ஆன் பல இடங்களில் கூறுகின்றது. ஆனால் கிறித்தவ சமுதாயத்திடம் அந்த வேதம் நிச்சயமாக இல்லை எனலாம்.

ஏனெனில் பைபிளின் புதிய ஏற்பாடு என்பது இயேசுவுக்குக் கடவுள் வழங்கியநன்று. மாறாக ஏசுவைப் பற்றி மற்றவர்கள் எழுதிய குறிப்புகள் தான் புதிய ஏற்பாடு

“ராஜ்ஜியத்தின் சுவிஷேசத்தை இயேசு பிரசங்கித்தார்" என்று பைபிளில் கூறப்பட்டுள்ளது (மாற்கு 1:14-15).

எந்த இறை வேதத்தை மறைத்தார்களோ அதைத் தான் இயேசுவின் வழி வந்த நல்ல மனிதர்கள் தங்களுடன் எடுத்துச் சென்று குகையில் தங்கினார்கள் என்று முடிவு செய்யப் போதுமான காரணம்

இருக்கிறது. "குர்ஆனை ஒத்திருக்கின்றது' என்பது தான் அந்தச் சுருள்களைப் படித்த கிறித்தவ அறிஞர்களின் கருத்தாகும். இஞ்ஜீல் எனும் வேதத்தைக் திருக்குர்ஆன் மெய்ப்பிப்பதாக திருக்குர்ஆனும் பல இடங்களில் குறிப்பிடுகின்றது.

அதை வாசித்த பாதிரியார்கள் திட்டமிட்டு மறைத்ததும் இந்தக் கருத்தை உறுதிப்படுத்துகின்றது. மனிதர்களால் எழுதப்பட்ட ஏட்டுக்கு இவ்வளவு முக்கியத்துவம் அளித்து இறைவன் கூறியிருக்க மாட்டான் என்பதும் இக்கருத்தை மேலும் உறுதிப்படுத்துகின்றது.

சாவுக் கடல் (Dead Sea) ஆவணச் சுருள் தற்போது இணையதளத்தில் கிடைக்க உள்ளது. இயேசு போதித்த கொள்கையை குழி தோண்டிப் புதைத்துவிட்டு பவுல் என்பவர் உண்டாக்கிய பொய்க் கிறித்தவக் கொள்கை ஆட்டம் காணும் நாள் நெருங்கிவிட்டது.

இஸ்ரேல் அருங்காட்சியகமும், கூகுளும் இணைந்து சாவுக் கடல் (Dead Sea) ஆவணச் சுருளை இணையதளத்தில் வெளியிடும் திட்டத்தை துவங்கி உள்ளது. 2016-ஆம் ஆண்டில் இந்தத் திட்டம் முடிவடைந்து ஆவணச் சுருள் முழுவதும் பொது மக்களின் பார்வைக்கு வெளிவரும்.

இந்த இணையதளத்தில் 5 முக்கிய ஆவணச் சுருள்களின் தொகுப்பு வெளியிடப்பட்டுள்ளது.

1.பைபிளில் (பழைய ஏற்பாட்டில்) இடம் பெற்றுள்ள ஏசயா (ash என்னும் புத்தகம்.

2 கோயில் சுருள் (Temple Scroll) மற்றும்

3.மூன்று புத்தகங்கள்.

இதை ஆங்கிலத்தில் மொழிமாற்றம் செய்ய, இதனுடைய மேற்பரப்பு அதிநவீன ஸ்கேனர்கள் மூலம் ஸ்கேன் செய்யப்பட்டுள்ளது.

2000 ஆண்டுகளுக்கு முந்தையது என்று சொல்லப்படும் இந்த ஆவணச் சுருள் 1947-ல் ஜெருசலேமிலிருந்து 13 மைல் தொலைவில் சாவுக் கடலின் வடமேற்குக் கரையில் உள்ள 11 குகைகளில் இருந்து கண்டெடுக்கப்பட்டது.

இந்தப் பகுதி கடல் மட்டத்திலிருந்து 1300 அடி கீழே உள்ளது. தொடர்ந்து நடந்த ஆய்வில் 1952 ஆம் ஆண்டு 15,000 ஆவணச் சுருள்களின் துண்டுகள் கண்டெடுக்கப்பட்டன. இவை 500 ஆவணச் சுருள்களின் தொகுப்பாகும்.

கோவில் சுருள் (Temple Scroll) என்று சொல்லப்படும் சுருள் தான் இருப்பதிலேயே அளவில் பெரிய சுருள். இது 28 அடி நீளம் உடையது.

இதில் சில பகுதிகள் சிதிலமடைந்து 26.7 அடி உள்ளது. மொத்தமாக 825 முதல் 870 ஆவணச் சுருள்களின் தொகுப்புகள் கண்டெடுக்கப்பட்டன. இந்தச் சுருள்களை தொல் பொருள் ஆராய்ச்சியளர்கள் பைபிளைச் சார்ந்தவை, பைபிளைச் சாராதவை என இரண்டு வகைகளாகப் பிரிகின்றனர்.

இந்தச் சுருள்கள் விலங்கினங்களின் தோலினாலும், காப்பர் தகடுகளினாலும் உருவாக்கப்பட்டுள்ளன. இவை அரபி எழுத்துக்கள் போல் வலமிருந்து இடது பக்கமாக எழுதப்பட்டுள்ளது. இதில் குறியீடுகள் இல்லை. எழுத்து மட்டும் தான் உள்ளது (பண்டைய கால அரபி எழுத்துக்கள் போல்). ரபி எழுத்துக்கள் பத்திகளைப் பிரிப்பதற்கு மட்டும் குறியீடுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சில இடங்களில் வார்த்தைக்கு இடையில் இடைவெளி கூட இல்லை. தற்போது இவை அனைத்தும் இஸ்ரேலின் தொல்பொருள் துறையிடம் (Israel Antiquities Authority) உள்ளது (ஒரு சில துண்டுச் சுருள்களை தனி நபர்களும் வைத்துள்ளனர்).

1947-ஆம் ஆண்டு கண்டு பிடிக்கப்பட்ட இந்தச் சுருள்கள் இத்தனை ஆண்டுகாலம் ஒரு சில மத குருமார்கள் மட்டுமே பார்க்க அனுமதிக்கப்பட்டு இருந்தது. ஆனால் தற்போது அனைத்தும் ஸ்கேன் செய்யப்பட்டு ஆன்லைனில் வந்துள்ளது. மூல சுருள்கள் (இஸ்ரேலின் கட்டுபாட்டிலிருக்கும்) ஜெருசலேத்தில் உள்ள ஒரு அருங்காட்சியகத்தில் மிகவும் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது.

இங்கு மூன்று அடுக்கு பாதுகாப்பு உள்ளது. ஒவ்வொரு நுழைவாயிலிலும், மின்காந்த அட்டைகள், சங்கேத் வார்த்தைகள் (Secret Code) மூலமே நுழைய முடியும்.

2000 ஆம் ஆண்டுகளுக்கு முன் ஜெருசலேத்தைச் சேர்ந்த யூதர்களால் எழுதப்பட்ட அல்லது தொகுக்கப்பட்டது தான் இந்தச் சுருள்கள், பின்னர் இவர்கள் ஜெருசலேமிலிருந்து சாவுக் கடலின் அருகில் உள்ள கும்ரான் (Qurra) என்ற பகுதிக்கு குடிபெயர்ந்துள்ளனர் என வரலாற்று ஆய்வுகள்

தெரிவிக்கின்றன.

கிறித்துவர்களால் மறைக்கப்பட்ட ஹீப்ரு பைபிளின் உண்மைகள் மற்றும் கிறித்துவ மதம் உருவான உண்மை வரலாறு போன்ற தகவல்கள் இந்த சுருள்களில் உள்ளதாக நம்பப்படுகின்றது.

மறைக்கப்பட்ட இந்த ஆவணம் இணைய தளத்தில் வெளியிடப்பட்டாலும் அது ஹீப்ரு மொழியில் உள்ளதால் அந்த மொழியை அறிந்தவர்களுக்கு மட்டுமே உடனடியாக பயன் கிடைக்கும். அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் ஆங்கிலத்தில் மொழி மாற்றம் செய்யப்பட்டால் அதை ஒட்டி உலகின் அனைத்து மொழிகளிலும் இது மொழிபெயர்க்கப்பட்டு விடும்.

இஸ்ரேலிய அரசு அருங்காட்சியகத்தின் அதிகாரப்பூர்வ இணையதளத்தில் www.dss.collections imi **arg.il**

வரலாற்று சிறப்பு மிக்க மலைகள் 6

( கும்ரான் மலை - Qumran - 2 )

கும்ரான் குகை ரகசியம் :-




**********************

பலஸ்தீன மேற்கு கரை கடலுக்கும் ஜோர்டானிய நதி மற்றும் சவக்கடல் பகுதிக்கும் இடைப்பட்ட மலைகள் கெர்மிட் கும்ரான் எனப்படுகிறது. கும்ரான் மலையில் இயற்கையாக அமைந்த 11 குகைகள் உண்டு, அந்த குகைகள் மற்றும் அந்த மணல்குன்று மலைகள் யாவும் நபி சுலைமான் அவர்களால் கட்டப்பட்ட முதல் ஆலயம் என்றும் இயற்கை பிரயங்களில் அவை அழிந்து போய் மலைக்குன்றுகள் போல் காட்சியளிக்கின்றன என்றும் சில நிலவாய்வாளர்களால் நம்பப்படுகிறது, இப்பகுதி மக்களும் தொன்றுதொட்டு இவ்வாறே நம்பியும் வருகின்றனர்.

கும்ரான் மலை குகை பகுதி என்பது சவக்கடலில் இருந்து சுமார் 1.2 கீமி தொலைவில் அமைந்துள்ள ஒரு மணல்குன்று பிராந்தியமாகும்.. அங்கு 1946ல் நாடோடிக் கூட்டத்து ஆடு மேய்ப்பவர்களான முகமது எத்-திப் மற்றும் அவரது சிறியதகப்பனார் மகன்களான ஜுமா முகமது, கலீல் மூசா ஆகியோரால் கண்டெடுக்கப்பட்ட 7 தோல் ஏடுகள் தான் முதல் முதலில் கண்டுபிடிக்கப்பட்ட சாசனச் சுருள்களாகும் அவற்றை இன்னதென அறியாத அவர்கள் அதனைக் கொண்டு ஜெருசலேத்தில் தொல்பொருள் கடை நடத்தி வந்த சிரிய-கிறிஸ்தியானி திருச்சபையை சேர்ந்தவரிடம் ஒரேயொரு தோல் சுவட்டை மாத்திரம் 7 ஐரோப்பிய டோலருக்கு ( 7 GBp ) விற்றுவிட்டனர்.

பிறகு அந்த சிரிய- கிறிஸ்தியானி பெத்லஹேமை சேர்ந்த பழம்பொருள் டீலரான எலிஜாவிடம் எடுத்துச் சென்றார், அதனைக்கண்ட அவர் இது அத்தனை மதிப்பானது ஒன்றுமல்ல ஏதோ யூத கல்லறைகளில் திருடிய ஒன்றை உங்களிடம் விற்றுவிட்டனர் என கூறி அனுப்பி வைத்துவிட்டார்..

மீண்டும் சில தோல் சுவடிகளை விற்க வந்த அதே ஆடுமேய்ப்பர்களை வழிமறித்த ஒரு அராபிய ஆசிரியர் ( ஷேக்கின் பெயர் குறிப்பிடப்படவில்லை) ஒருவர் இதனை கிறிஸ்தியானியிடம் விற்கவேண்டாம் மாறாக கலீல் இஸ்கந்தர் ஷாஹின் ( Arabic scholar ) என்கிற அராபியரிடம் சென்று விற்குமாறு கூறினார்.

அவரிடம் சென்று மேலும் சில சுவடிகளை விற்ற நாடோடி ஆடுமேய்ப்பர்களை கலீல் இஸ்கந்தர் ஷாஹின் , அமெரிக்க ஓரியண்டல் ரிசர்ச் சென்டரின் உறுப்பினரான Dr. John Trevor இடம் அறிமுகம் செய்து வைத்தார், 1947 ல் John Trevor ஆடுமேய்ப்பர்களை அழைத்து மீண்டும் சில சாசனச்சுருள்களை அவர்களிடமிருந்து அவை கிடைக்கப்பெற்ற இடம்,நாள் ஆகியவற்றை முழுவதுமாக கேட்டறிந்துகொண்டார்.

தம்மிடமிருந்த சாசனங்களை Radio carbon and Paleographic dating tests எடுத்ததன் பெயரில் அவை யாவும் கி.மு. 8- 11 ம் நூற்றாண்டை சேர்ந்தவை என்றும் first templar period Jews காலத்திய யூத பைபிள் என்றும் அவை உலகில் கண்டுபிடிக்கப்பட்ட மூன்றாவது பழமையான பொருள் எனவும் , கி.மு.6 நூற்றாண்டை சார்ந்த யூத பைபிள் லெவிக்டஸாக இருக்கலாம் எனவும் தீர்மானித்திருந்தார்.

1948 ல் அரபு - இஸ்ரேல் போரின் போது அந்த சாசனச்சுருள்கள் அனைத்தும் Nash Papyrus என்கிற பழங்கால எழுத்துச்சுவடியில் எழுதப்பட்டு அழியும் நிலையில் இருப்பதனால் லெபனானின் பெய்ரூத் மியூசியத்தில் வைத்து பாதுகாக்கப்பட்டது.. போர் ஓய்ந்த பிறகு அதேயாண்டு ஏப்ரலில் ASOR (American School of Oriental Research ) ன் தலைவரான Millar Burrows சாசனச்சுருள்களை பற்றிய தகவல்களை பிரஸ்ஸிற்கு வெளியிட்டார், இதனால் Millar Burrows பதவி நீக்கம் செய்யப்பட்டார்.

1948 செப்டம்பரில் ASOR கும்ரான் மலைகளில் மீண்டும் களப்பணியில் ஈடுபட்டு மேலும் சில சாசனச்சுருள்களை கண்டுபிடித்தனர், அப்போது Prof. Ovid R.Sellers என்பவர் ASOR ன் புதிய சுயாதிகார தலைவராக பொறுப்பேற்றார்...

மீண்டும் 1949 ஜனவரியில் பெல்ஜிய நாட்டை சேர்ந்த U.N Observer Captain.Phillip Lippens and Arab Legion Captain. Akkash El zebu ஆகியோரது தலைமையில் தேடுதல் பணி நடைபெற்று செப்புக்காசுகள் அடங்கிய தோல்கிழிகள் கிடைத்தன.

1949-51 வரை Poland de Vaux என்பவரது தலைமையில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சி மூலம் 300 மணல் ஜாடிகளும், 33 கைப்பிரதிச்சுருள்களும் கிடைத்தன...இந்த சுருள்களில் பப்ரஸி மற்றும் செப்புத்தகடுகளில் Jubilees,Wisdom of sirach,Ben siva ஆகிய தலைப்புகளில் எபிரேய மொழியில் எழுதப்பட்ட சாசனங்கள் கிடைத்தன..

1952 ல் ஏப்ரலில் மீண்டும் சில செப்புத்தகடுகளும் கிடைத்து ஒரு பரபரப்பான சூழலை கும்ரான் குகை சாசனங்கள் மக்கள் மத்தியில் உண்டாக்கியிருந்தன... அதுபோக 1953-56 வரை நடந்த அகழ்வாராய்ச்சியில் ஜோர்டான் நாட்டு விவசாய மக்களும் ஆடுமேய்ப்பர்களும் அதிக அளவில் தோண்டுதல் பணியில் ஈடுபட வைக்கப்பட்டனர், இது அவர்களிடம் பரபரப்பை ஏற்படுத்தி அந்த சாசனச்சுருள்களின் பக்கம் உலக மக்களின் கவனம் திசை திருப்பப்பட்டுக் கொண்டிருந்தது.

(ஆகமொத்தமாக 981 சாசனச்சுருள்கள் கிடைத்தன என்பது முதல் தகவல் அறிக்கையில் குறிப்பிடப்பட்ட உண்மை, பிறகு அடுத்தடுத்த காலங்களில் அங்கு கண்டெடுக்கப்பட்டது 800 சுருள்கள் தான் என்பது பொய். - மீதம் 181 சுருள்களின் ரகசியங்களை ஒளித்துவிட்டனர் என்பதே மெய். )

அரமைக், எபிரேயம், கிரேக்கம் மற்றும் நாபதீய அரமைக் ஆகிய நான்கு மொழிகளில் எழுதப்பட்ட அந்த சாசனச்சுருள்கள் நபி சுலைமான் காலத்திய யூத பைபிளாக இருக்கலாம் என்கிற யூத எபிரேய மொழி ஆய்வாளர்கள் அதில் கூறப்பட்டுள்ள தகவல் இன்னதென இன்றுவரை கூறவில்லை...அது அமெரிக்க வாழ் யூதர்களின் வற்புறுத்தல் காரணமாக பிறகு அமெரிக்க மியூசியத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டது...அதிலுருக்கும் செய்திகளை மைக்ரோ பிலிமாக தயார் செய்து மீயூசியத்தின் டிஜிட்டல் லைப்ரரியில் பாதுகாக்கப்படுகிறது..

கும்ரான் குகை சாசனச்சுருள்களை பற்றிய வீடியோவை மாத்திரம் உலகிற்கு வெளிக்காட்டிய அமெரிக்க ஊடகத்துறை அதிலிருக்கும் செய்திகளை வெளியிடவில்லை...அவ்வாறு அவர்கள் வெளியிட்ட ஆங்கில ஒலிநாடாவின் தமிழாக்கமே கீழே தொடரும் பத்திகளாகும், ஆனால் இதில் பதிவாயிருக்கும் தகவல்களில் பெரும் மோசடியும் இருட்டடிப்பும் உண்டு என்பதனை உணர்ந்தே இந்த ஒலிநாடாவில் பதிவு செய்யப்படாத ஆடுமேய்ப்பர்களின் பெயர்கள், பதவி நீக்கம் செய்யப்பட்ட ASOR தலைவரின் பெயர், மற்றும் ஷேக் இஸ்கந்தர் , ஜான் டிரவோர் ஆகியோரது பெயரை முதலிலேயே குறிப்பிட்டேன்.

---------------------------------------------------------

சவக்கடல் சுருள்களைப் பற்றிய உண்மைகள் யாவை?

ஐம்பது வருடங்களுக்கு முன் ஒரு நாள் நடந்த சம்பவம் இது. அரேபிய நாடோடி இனத்தைச் சேர்ந்த ஆடு மேய்ப்பவன் ஒருவன், தற்செயலாக எறிந்த கல் ஒரு குகையில் இருந்த அரிய பொக்கிஷத்தைக் கண்டுபிடிக்க உதவியது. அவன் எறிந்த கல் ஒரு மண் ஜாடியை உடைத்தது. அதிலிருந்து நிறைய சுருள்கள் கண்டெடுக்கப்பட்டன. அவையே இன்று மிகப் பிரபலமாக அறியப்படும் சவக்கடல் சுருள்களின் முதல் ஏழு சுருள்கள்.

இச்சுருள்கள் மெத்தப் படித்த கல்விமான்கள், செய்தித்துறை வட்டாரங்கள் ஆகிய இரு தரப்பினரின் கவனத்தையும் ஈர்த்தன. பொதுமக்களிடையே குழப்பத்தையும் தவறான கருத்துக்களையும் பரப்பின. வதந்திகளுக்கும் குறைவில்லை. யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்களின் விசுவாசத்தைக் குலைக்கும் விஷயங்கள் இவற்றில் இருக்கலாம் என்பதால், பொதுமக்களுடைய பார்வைக்கு வராதபடி இச்சுருள்களை மூடிமறைக்க பிரயத்தனங்கள் செய்யப்பட்டதாக வதந்திகள் பரவின. ஆனால், இந்தச் சுருள்கள் எவ்வளவு முக்கியமானவை? இவை கண்டுபிடிக்கப்பட்டு 50 ஆண்டுகள் கடந்தோடிய பிறகும், உண்மைகளை தெரிந்துகொள்வது சாத்தியமா?

சவக்கடல் சுருள்கள் என்ன?

பூர்வ யூத கையெழுத்துப்பிரதிகளே இந்த சவக்கடல் சுருள்கள். அவற்றில் பெரும்பாலானவை எபிரெய மொழியிலும், சில அரமிய மொழியிலும், ஒரு சில பகுதிகள் கிரேக்க மொழியிலும் எழுதப்பட்டவை.

இந்தச் சுருள்களும் இவற்றோடு கண்டெடுக்கப்பட்ட சில பாகங்களும் 2000-க்கும் அதிகமான ஆண்டுகள் பழமையானவை. அதாவது, இயேசு கிறிஸ்துவின் பிறப்பிற்கு முந்தைய காலத்தை சேர்ந்தவை. இச்சுருள்களில் சில அரேபிய நாடோடிகளிடமிருந்து வாங்கப்பட்டன. அவற்றுள் முதலாவது பெறப்பட்டவை நீளமான ஏழு சுருள்களாகும். இந்த கையெழுத்துப் பிரதிகள் ஒவ்வொன்றும் வித்தியாசமான நிலையில் இருந்தன; அதாவது சில நல்ல நிலையிலும் சில மிகவும் சிதைந்த நிலையிலும் இருந்தன.

இன்னும் பல குகைகளை ஆராய்ந்ததில், வேறு சில சுருள்களும் ஆயிரக்கணக்கான சுருள் பாகங்களும் கண்டெடுக்கப்பட்டன. 1947-56 வரையான காலப்பகுதியில், இப்படிப்பட்ட சுருள்கள் அடங்கிய குகைகள் மொத்தம் 11 கண்டுபிடிக்கப்பட்டன. இவை சவக்கடல் பகுதியிலுள்ள கும்ரான் என்ற இடத்திற்கு அருகில் கண்டுபிடிக்கப்பட்டன.

இந்தச் சுருள்களும் அவற்றோடு கிடைத்த சுருள் பாகங்களும் வகைப்படுத்தப்பட்டன; அப்போது, சுமார் 800 கையெழுத்துப்பிரதிகள் பிரித்தெடுக்கப்பட்டன. இதில் சுமார் கால்பாகம் அல்லது 200-க்கும் சற்று அதிகமானவை, பைபிளின் எபிரெய புத்தகங்களுடைய பாகங்களின் பிரதிகள். மற்றவையோ, தள்ளுபடியாகமம் (Apocrypha), பழைய ஏற்பாட்டின் எழுத்தாளர்கள் எழுதியதாக கூறப்படும் எழுத்துச் சுவடிகள்(Pseudepigrapha) என்றழைக்கப்படும் பைபிள் சாராத பூர்வ யூத புத்தகங்கள் அடங்கியவை.

சில சுருள்கள் கல்விமான்களின் கவனத்தை பெரிதும் கவர்ந்தன; அவை அதற்கு முன் அறியப்பட்டிராதவை. இவற்றில் யூத சட்டங்களைப் பற்றிய விளக்கங்கள், கும்ரானில் வாழ்ந்த ஒரு மதப் பிரிவினருக்கான திட்டவட்டமான சட்டங்கள், வணக்கத்திற்கான பாடல்கள் மற்றும் ஜெபங்கள், பைபிள் தீர்க்கதரிசனத்தின் நிறைவேற்றத்தையும் கடைசி நாட்களையும் விவரிக்கும் இறையியல் தொகுப்புகள் ஆகியவை அடங்கும்.

அதுமட்டுமல்ல, தனிச்சிறப்புமிக்க பைபிள் விளக்கவுரைகளும் அவற்றில் இருந்தன. மிகப் பழமையான இவை, வசனம் வசனமாக விளக்கவுரை தரும் நவீன நாளைய புத்தகங்களுக்கு முன்னோடியாய் விளங்குகின்றன.

சவக்கடல் சுருள்களை எழுதியது யார்?

பூர்வ ஆவணங்கள் எழுதப்பட்ட காலத்தை நிர்ணயிக்க பல விதமான முறைகள் கையாளப்படுகின்றன. இவற்றின்படி, இந்தச் சுருள்கள் பொ.ச.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து பொ.ச. முதல் நூற்றாண்டு வரையான காலப்பகுதியில் நகல் எடுக்கப்பட்டவையாக அல்லது தொகுக்கப்பட்டவையாக இருக்கலாம். பொ.ச. 70-ல் ஆலயம் அழிக்கப்படுவதற்கு முன் எருசலேமிலிருந்த யூதர்களால் இந்தக் குகைகளில் இவை ஒளித்து வைக்கப்பட்டிருக்கலாம் என சில கல்விமான்கள் கருத்து தெரிவிக்கின்றனர்.

என்றாலும், இந்தச் சுருள்களில் எழுதப்பட்டிருப்பவை இந்த கருத்திற்கு சற்றும் பொருந்தாதவை என இவற்றை ஆராய்ந்த வல்லுநர்களில் பெரும்பாலானோர் தெரிவிக்கின்றனர். ஏனெனில், எருசலேமின் மத நம்பிக்கைகளுக்கு முற்றிலும் மாறான கருத்துக்களையும் பழக்கங்களையும் இந்த சுருள்கள் குறிப்பிடுகின்றன.

அதாவது, எருசலேமின் ஆசாரியர்களையும் ஆலய சேவையையும் கடவுள் நிராகரித்து விட்டார் என்பதையும் ஆலய வணக்கமுறைக்கு பதிலாக வனாந்தர வணக்க முறையையே அவர் ஏற்றுக்கொள்கிறார் என்பதையும் நம்பிய ஒரு மதப் பிரிவினரையே இந்த சுருள்கள் சுட்டிக்காட்டுகின்றன. எனவே, இப்படிப்பட்ட சுருள்கள் அடங்கிய தொகுப்பை எருசலேமின் ஆலய நிர்வாகிகள் ஒளித்து வைத்திருப்பார்கள் என்பது ஒத்துக்கொள்ள முடியாத விஷயம்.

கும்ரானில் நகல் எடுப்பவர்களின் ஒரு குழுவினர் இருந்திருக்கலாம்; என்றாலும், பெரும்பாலான சுருள்கள், அவற்றை நம்பியவர்களால் மற்ற இடங்களிலிருந்து சேகரிக்கப்பட்டு கும்ரானுக்கு கொண்டு வரப்பட்டிருக்கலாம். ஒருவிதத்தில், சவக்கடல் சுருள்களை ஒரு நூலகத் தொகுப்பு என்றே சொல்லலாம். எந்தவொரு நூலகத்திலுமே பல்வேறு கருத்துக்களை தெரிவிக்கும் புத்தகங்கள் இருக்க வாய்ப்பிருக்கிறது; அவை அனைத்துமே அவற்றை வாசிப்போரின் மத நம்பிக்கையை தெரிவிப்பவையாக இருக்க வேண்டுமென்கிற அவசியமில்லை.

அதுபோலவே, இந்தச் சுருள்களும் பல கருத்துக்களைத் தெரிவிக்கும் நூலகத் தொகுப்பே. என்றாலும், எந்த புத்தகங்களுக்கு நிறைய பிரதிகள் உள்ளனவோ, அவை கும்ரான் மதப்பிரிவினருடைய நம்பிக்கைகளையும் கருத்துக்களையும் பெரும்பாலும் தெரிவிக்கின்றன.

கும்ரானில் வசித்தோர் யூதத் துறவியரா?

இந்த சுருள்கள் கும்ரான் நூலகமாய் இருந்ததென்றால், அங்கு வசித்தோர் யார்? இந்தச் சுருள்கள் யூதத்துறவிகளுடையது(Essenes) என்ற கருத்தை முதன்முதலில் தெரிவித்தவர் பேராசிரியர் எலியேசர் சூகனிக். இவர் 1947-ல், எருசலேமிலுள்ள எபிரெய பல்கலைக்கழகத்திற்காக மூன்று சுருள்களை பெற்றுக்கொண்டவர்.

முதல் நூற்றாண்டு எழுத்தாளர்களான ஜொஸிஃபஸ், அலெக்சாந்திரியாவின் ஃபிலோ, மூத்த பிளைனி ஆகியோர் இந்த யூத மதத் தொகுதியினரைப் பற்றி குறிப்பிட்டுள்ளனர். இந்தத் தொகுதியினர் தோன்றிய கதை யாருக்கும் சரியாக தெரியவில்லை. அதைக் குறித்து பல்வேறு கருத்துக்களும் ஊகங்களும்தான் நிலவுகின்றன.

பொ.ச.மு. இரண்டாம் நூற்றாண்டில் மக்கபேயர்களுடைய புரட்சியைத் தொடர்ந்து நிலவிய கலவரமான காலப்பகுதியில் இந்தத் தொகுதியினர் தோன்றியிருக்கலாம்.*பரிசேயர்கள், சதுசேயர்களுடைய மத நம்பிக்கைகளிலிருந்து இவர்களுடைய நம்பிக்கைகள் எப்படி வேறுபட்டிருக்கின்றன என்பதை விளக்குகையில், அந்தக் காலப்பகுதியில் அவர்கள் வாழ்ந்ததாக ஜொஸிஃபஸ் தெரிவிக்கிறார். சவக்கடல் பகுதியில் எரிகோவுக்கும் என்கேதிக்கும் இடையே யூதத் துறவியர் வசித்ததாக பிளைனி குறிப்பிட்டுள்ளார்.

பேராசிரியர் ஜேம்ஸ் வான்டர்காம் என்பவர் சவக்கடல் சுருளை ஆராய்ச்சி செய்த வல்லுநர். “யூதத் துறவியர்களின் இயக்கத்தைச் சேர்ந்தவர்களில் ஒரு சிறிய தொகுதியினரே கும்ரானில் வாழ்ந்தவர்கள்” என இவர் கருத்து தெரிவிக்கிறார். இவர்கள் மொத்தம் நாலாயிரம் பேர் இருந்ததாக ஜொஸிஃபஸ் குறிப்பிட்டுள்ளார். இந்த கருத்துக்கள் எதுவும் யூதத் துறவியருக்கு நூற்றுக்கு நூறு பொருந்தவில்லை; என்றாலும், கும்ரான் பிரதிகளிலிருந்து கிடைக்கும் தகவல்கள் அந்தக் காலப்பகுதியில் வாழ்ந்த வேறெந்த யூதப் பிரிவினரையும்விட இந்த துறவியருக்கே அதிகம் பொருந்துகிறது.

கும்ரானில்தான் கிறிஸ்தவம் தோன்றியது என சிலர் கருத்து தெரிவிக்கின்றனர். ஆனால், அது சரியல்ல. ஏனென்றால், முதல் நூற்றாண்டு கிறிஸ்தவர்களின் நம்பிக்கைகளுக்கும் கும்ரான் மதப் பிரிவினரின் நம்பிக்கைகளுக்கும் இடையே பல குறிப்பிடத்தக்க வித்தியாசங்கள் உள்ளன.

மிகவும் கறாரான ஓய்வுநாள் சட்டதிட்டங்களையும் புனிதத்தைக் காத்துக்கொள்வதற்கான எக்கச்சக்கமான சடங்குகளையும் பாரம்பரியங்களையும் கும்ரான் பிரதிகள்

குறிப்பிடுகின்றன.(மத்தேயு 15:1-20; லூக்கா 6:1-11) மனித சஞ்சாரமற்ற இடத்தில் அவர்கள் துறவு வாழ்க்கையை மேற்கொண்டனர்; விதி, ஆத்துமா அழியாமை போன்றவற்றை நம்பினர்; திருமணம் செய்யாதிருப்பதற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தனர்;

தூதர் வணக்கத்தைப் பற்றி பல்வேறு மூட நம்பிக்கைகளையும் வைத்திருந்தனர். இயேசு மற்றும் முதல் நூற்றாண்டு கிறிஸ்தவர்களின் போதனைகளுக்கு இவை முற்றிலும் முரணானவை.—மத்தேயு 5:14-16; யோவான் 11:23, 24; கொலோசெயர் 2:19; 1 தீமோத்தேயு 4:1-3.

மூடிமறைத்தோ, ஒளித்தோ வைக்கப்படவில்லை

சவக்கடல் சுருள்கள் கண்டுபிடிக்கப்பட்ட வருடத்திற்குப் பின், அவற்றின் பல பதிப்புகள் வெளியிடப்பட்டுள்ளன. இதனால் ஆரம்பத்தில் கண்டுபிடிக்கப்பட்ட சுருள்களின் தகவல்களை உலகம் முழுவதிலுமுள்ள வல்லுநர்கள் பெற முடிந்தது. ஆனால், குகை 4 என அறியப்பட்டதிலிருந்து கிடைத்த ஆயிரக்கணக்கான சுருள் பாகங்கள் மிகுந்த சர்ச்சைக்குள்ளாயின.

கிழக்கு எருசலேமிலுள்ள (யோர்தானின் பாகமாக இருந்த) பாலஸ்தீன தொல்பொருள் ஆராய்ச்சி அருங்காட்சியகம் நியமித்த சர்வதேச வல்லுநர்களின் ஒரு சிறிய குழுவினிடம் இந்த சுருள்கள் ஒப்படைக்கப்பட்டன. இந்தக் குழுவில் யூத கல்விமான்களோ அல்லது இஸ்ரேலிய கல்விமான்களோ சேர்க்கப்படவில்லை.

தங்கள் ஆராய்ச்சியின் முடிவை அதிகாரப்பூர்வமாக வெளியிடும்வரை இந்தச் சுருள்களை யாருடைய கண்ணிலும் இந்தக் குழு காட்டவில்லை. அதுமட்டுமல்ல, ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையான வல்லுநர்களே இந்த ஆராய்ச்சிக்கு நியமிக்கப்பட்டிருந்தனர். மேலும், ஓர் உறுப்பினர் இறந்துவிட்டால், அவருக்குப் பதிலாக ஒரேவொரு புதிய வல்லுநரே நியமிக்கப்பட்டார்.

ஆனால், முடிக்க வேண்டிய வேலையோ அதிகமாக இருந்ததால், ஒரு பெரிய குழு தேவைப்பட்டது. சில சமயங்களில், பூர்வ எபிரெய, அரமிய மொழியில் கைதேர்ந்தவர்கள் வேண்டிய அவசியமும் இருந்தது. “எவ்வளவுதான் திறமைசாலிகளாக இருந்தபோதிலும், பல ஆயிரக்கணக்கான சுருள்களின் பாகங்களை ஆராய எட்டு வல்லுநர்கள் போதவே போதாது” என ஜேம்ஸ் வான்டர்காம் குறிப்பிட்டுள்ளார்.

1967-ல் நடந்த ஆறு நாள் யுத்தத்தால், கிழக்கு எருசலேமும் அதன் சுருள்களும் இஸ்ரேலிய ஆதிக்கத்தின் வசம் வந்தது. ஆனால், அந்தச் சுருள்களை ஆராய்ந்த குழுவின் செயல்பாட்டில் எந்தவித மாற்றமும் செய்யப்படவில்லை. எனவே, அந்தச் சுருளை வெளியிடுவதில் ஏற்பட்ட தாமதம் மேலும் பல பத்தாண்டுகள் நீடித்தது. இதை எதிர்த்து வல்லுநர்கள் அநேகர் கண்டனக்குரல் எழுப்பினர்.

இருபதாம் நூற்றாண்டில், கல்வித்துறை சார்ந்த மோசடிகளிலேயே மாபெரும் மோசடி என இதை 1977-ல், ஆக்ஸ்ஃபர்ட் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் கேஸா வெர்மெஷ் அழைத்தார். கிறிஸ்தவத்திற்கு சாதகமற்ற தகவல்கள் இந்தச் சுருள்களில் இருப்பதால் இதை மூடிமறைக்க கத்தோலிக்க சர்ச் வேண்டுமென்றே பிரயத்தனங்கள் செய்ததாக வதந்திகள் பரவ ஆரம்பித்தன.

1980-களில், 20 வல்லுநர்களுடன் அந்தக் குழு விரிவாக்கப்பட்டது. பின்னர் 1990-ல், எருசலேமின் எபிரெய பல்கலைக்கழகத்தைச் சேர்ந்தவரும், புதிதாக நியமிக்கப்பட்ட தலைமை பதிப்பாசிரியருமான இம்மானுவேல் டோவ் கொடுத்த ஆலோசனையின்படி, அந்தக் குழு மேலும் விரிவுபடுத்தப்பட்டது. 50-க்கும் அதிகமான வல்லுநர்கள் அதில் சேர்க்கப்பட்டனர். மீதமுள்ள சுருள்களைக் குறித்த விரிவான குறிப்புகளும் விளக்கங்களும் அடங்கிய பிரதிகள் வெளியிடுவதற்கு திட்டவட்டமான அட்டவணைகள் போடப்பட்டன.

1991-ல், இந்த முயற்சி சற்றும் எதிர்பாராதவிதமாக, ஒரு மைல்கல்லை எட்டியது. முதலாவதாக, பிரசுரிக்கப்படாத சவக்கடல் சுருள்களின் ஆரம்பப் பதிப்பு (ஆங்கிலம்) வெளியிடப்பட்டது. அந்தக் குழு ஏற்கெனவே தயாரித்த அகரவரிசை அட்டவணையின் அடிப்படையில், கம்ப்யூட்டர் உதவியுடன் இந்தப் பதிப்பு பிரசுரிக்கப்பட்டது.

அடுத்தபடியாக, இந்த சுருள்களின் எல்லா புகைப்படங்களும் எந்த வல்லுநருக்கும் கிடைக்கும் என கலிபோர்னியாவின் சான் மேரினோவிலுள்ள ஹன்டிங்டன் நூலகம் அறிவித்தது. அதைத் தொடர்ந்து,

அதுவரை பிரசுரிக்கப்படாத சுருள்களின் புகைப்படங்கள் அடங்கிய சவக்கடல் சுருள்களின் மறுபதிப்பு (ஆங்கிலம்) என்ற புத்தகம் வெளியிடப்பட்டது.

எனவே, கடந்த பத்தாண்டுகளில், சவக்கடல் சுருள்கள் எல்லாம் ஆராய்ச்சிக்கு “கைமேல்” கிடைத்தன. அதனால், அவற்றில் ஏதும் மூடிமறைக்கப்படவோ, ஒளித்து வைக்கப்படவோ இல்லை என்பதை இந்த ஆராய்ச்சி தெளிவாக்குகிறது. அந்த சுருள்களின் அதிகாரப்பூர்வ பதிப்பு பிரசுரிக்கப்பட்டிருப்பதால், முழு அளவிலான ஆராய்ச்சியை இப்போது துவங்கலாம். அதாவது, சுருள்களை ஆராயும் கல்விமான்களின் புதிய தலைமுறை பிறந்திருக்கிறது என்றே சொல்லலாம். ஆனால், பைபிள் மாணாக்கர்களுக்கு இந்த ஆராய்ச்சி உண்மையிலேயே முக்கியமானதா?

[அடிக்குறிப்புகள்]

(“ஒளித்து வைக்கப்பட்டது” என்ற சொல்லர்த்தமான அர்த்தத்தையுடைய) தள்ளுபடியாகமமும் (“பொய்யான எழுத்துக்கள்” என்ற சொல்லர்த்தமான அர்த்தத்தையுடைய) எழுத்துச் சுவடிகளும் பொ.ச.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து பொ.ச. முதல் நூற்றாண்டு வரையான காலப்பகுதியைச் சேர்ந்த யூத புத்தகங்கள். பரிசுத்த ஆவியால் ஏவப்பட்டு எழுதப்பட்ட பைபிளின் அதிகாரப்பூர்வ பட்டியலில் தள்ளுபடியாகமத்தை ரோமன் கத்தோலிக்க சர்ச் சேர்த்துள்ளது.

ஆனால், இந்தப் புத்தகங்களை யூதர்களோ, புராட்டஸ்டண்டினரோ ஏற்றுக் கொள்ளவில்லை. எழுத்துச் சுவடிகள் என்பவை பைபிள் கதைகளைப் பற்றி விரிவான விவரங்களைத் தருபவை. இவை, பைபிளிலுள்ள பிரபலமான சில ஆட்களுடைய பெயரில் எழுதப்பட்டவை.

சவக்கடல் அருகே பூர்வ சுருள்கள் கண்டெடுக்கப்பட்ட குகைகள்

சுருள்களின் பாகங்கள்: பக்கங்கள் 3, 4, 6: Courtesy of Israel Antiquities Authority

Ref: **https://wol.jw.org/ta/wol/d/r122/lp-tl/2001120...**

கும்ரான் குகை.. மறைக்கப்பட்ட உண்மை செய்திகள் பக்கம் என்ற தளத்திலிருந்து ...

## வரலாற்று சிறப்பு மிக்க மலைகள் 7

தாபோர் மலை ( உருமாற்ற மலை)




என்பது இசுரேலின் கீழ் கலிலேயாவில் யெசுரியேல் பள்ளத்தாக்கின் கிழக்கு முடிவில், மேற்கு கலிலேயக் கடலிலிருந்து 11 மைல்கள் (18 km) தொலைவில் உள்ளது.

கி.மு. 12ம் நூற்றாண்டின் மத்தியில்,இப்பகுதியில் இசுரயேலிய நீதிபதி தெபோரா தலைமையின் கீழ் பாராக்கிற்கும் சிசாரா தலைமையின் கீழான யபீன் படைகளுக்குமிடையில் "தாபோர் மலை சண்டை" இடம் பெற்றது. இங்கு இயேசுவின் உருமாற்றம் இடம்பெற்றதாக பல கிறித்தவர்களால் நம்பப்படுகின்றது.இம்மலை உருமாற்ற மலை எனவும் அழைக்கப்படுகின்றது.

தாபோர் மலை (575 மீட்டர் அல்லது 1,886 அடி உயரம்) பாரம்பரிய இடமகவுள்ளது. 3 ஆம் நூற்றாண்டில் தாபோர் உருமாற்ற மலையாக அடையாளம் காணப்பட்டது. இது புனித சிறில், ஜெரோம் ஆகியோரால் 4 ஆம் நூற்றாண்டில் குறிப்பிடப்பட்டது.

உருவமாற்ற தேவாலயம் தாபோர் மலையின் உச்சியில் அமைந்துள்ளது.இது 5 ஆம் நூற்றாண்டு மரியாவின் விண்ணேற்பு விடயத்திலும் குறிப்பிடப்பட்டது.

இயேசு கிறித்து மலையில் உருவமாற்றம் பெறுதல் பற்றி புதிய ஏற்பாடு குறிப்பிடும் தெரியாத இடம் ஒன்று ,. மத்தேயு நற்செய்தி பின்வருமாறு குறிப்பிடுகிறது.

தாபோர் மலையில் உருவமாற்ற தேவாலயம்

"ஆறு நாள்களுக்குப் பின்பு இயேசு பேதுருவையும் யாக்கோபையும் அவர் சகோதரரான யோவானையும் ஓர் உயர்ந்த மலைக்குத் தனிமையாகக் கூட்டிக்கொண்டு போனார்.

அங்கே அவர்கள்முன் அவர் தோற்றம் மாறினார். அவரது முகம் கதிரவனைப் போல் ஒளிர்ந்தது. அவருடைய ஆடைகள் ஒளிபோன்று வெண்மையாயின. இதோ! மோசேயும் ( நபி மூஸாவும் ) எலியாவும் (நபி இலியாஸும் ) அவர்களுக்கு முன் தோன்றி இயேசுவோடு உரையாடிக்கொண்டிருந்தனர்.

سَلٰمٌ عَلٰٓى اِلْ يَاسِيْنَ

“ஸலாமுன் அலா இல்யாஸீன்” இல்யாஸீன் மீது ஸலாமுண்டாவதாக.

(அல்குர்ஆன் : 37:130)

பேதுரு இயேசுவைப் பார்த்து: ' ஆண்டவரே, நாம் இங்கேயே இருப்பது நல்லது. உமக்கு ஒன்றும் மோசேக்கு ஒன்றும் எலியாவுக்கு ஒன்றுமாக மூன்று கூடாரங்களை அமைக்கட்டுமா? இது உமக்கு விருப்பமா?' என்றார்.

அவர் தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தபோது ஒளிமயமான மேகம் ஒன்று அவர்கள்மேல் நிழலிட்டது. அந்த மேகத்தினின்று,' என் அன்பார்ந்த மைந்தர் இவரே, இவர்பொருட்டு நான் பூரிப்படைகிறேன். இவருக்குச் செவிசாயுங்கள்' என்று ஒரு குரல் ஒலித்தது.

அதைக் கேட்டதும் சீடர்கள் மிகவும் அஞ்சி முகங்குப்புற விழுந்தார்கள். இயேசு அவர்களிடம் வந்து அவர்களைத் தொட்டு,' எழுந்திருங்கள், அஞ்சாதீர்கள்' என்றார். அவர்கள் நிமிர்ந்து பார்த்தபோது இயேசு ஒருவரைத்தவிர வேறு எவரையும் காணவில்லை.

அவர்கள் மலையிலிருந்து இறங்கிவந்தபோது இயேசு, 'மானிட மகன் இறந்து உயிருடன் எழுப்பப்படும்வரை இக்காட்சியைப்பற்றி எவருக்கும் சொல்லக்கூடாது' என அவர்களுக்குக் கட்டளையிட்டார்."

(மத்தேயு 17:1–9)

வரலாற்று சிறப்பு மிக்க மலைகள் 8

( ஆதம் மலை - இலங்கை )




பொதுவாக மலையைப் பற்றி விஞ்ஞானம் கூறுவதை கேட்டுவிட்டு பின் வரலாற்றுக்குப் போவோம்

உலகில் இமயமலை போன்று பல மலைகள் முக்கோண வடிவத்தில் அமைந்துளன வடிவத்தின் பின்னால் மர்மம் என்ன ?

மலைகள் உருவாக ஆயிரக்கணக்கான ஆண்டுகளை எடுத்துக் கொள்கின்றன மற்றும் டெக்டோனிக் சக்திகள், ஈர்ப்பு, உராய்வு சக்தி, அரிப்பு போன்ற பல்வேறு சக்திகள் உள்ளன, அவை மலைகள் உருவாக வழிவகுக்கிறது.

ஆரம்பத்தில், மலைகள் உருவாவதில் முக்கிய பங்கு வகிக்கும் இரண்டு முக்கிய சக்திகள் உள்ளன, இவை ஈர்ப்பு விசை மற்றும் உராய்வு ஆகியவை மணல் துகள் மீது செயல்படுகின்றன. ஈர்ப்பு மணலை தரையை நோக்கி இழுக்கிறது மற்றும் உராய்வு இரண்டு துகள்களும் ஒன்றையொன்று சரியச் செய்கிறது.

இந்த இரண்டு சக்திகளும் ஒன்றுக்கொன்று போட்டியிடும்போது, இங்கு ஈர்ப்பு விசையின் தீவிரமும் விளைவும் உராய்வும் பொறுத்தது மணல் துகள் அமைகிறது.எடுத்துக்காட்டாக, குவியல் செங்குத்தானதாக இருந்தால், அது ஈர்ப்பு உராய்வை மறைக்கிறது,

ஆனால் நேர்மாறான நிலைமைகளின் கீழ், உராய்வு அதிகம். இதனால், புவியீர்ப்பு உராய்வை விட அதிகமாக மணல் குவியத் தொடங்குகிறது மற்றும் நேர அடித்தளம் பரவி மீண்டும் சாய்வு ஆழமற்றதாக இருக்கும் வரை மணல் கீழ்நோக்கி சரியத் தொடங்குகிறது.

இலங்கை ஆதம் மலை முக்கோண வடிவில் உள்ளதால் மலையில் ஏதோ ஒரு சக்தி இருக்கிறது என்பதாக இந்துக்கள் சிவனடி பாதம்தான் அம்மலைக்கு காரணம் என்கிறார்கள். பௌத்தர்கள் கத்தலிக்கர் , முஸ்லீம்கள், கிருஸ்தவர்கள் அந்த மலையை முதல் தீர்க்கதரிசியான ஆதம் சுவனத்திலிருந்து இறங்கியதால் தங்கள் மதத்தின் புனித மலை என்று சொந்தம் கொண்டாடுகிறார்கள்.

இலங்கையில் உள்ள மலையே (சரந்தீப் மலையே) இன்னும் ஆதம் மலை என்று பெயருடன் விளங்கி வருகிறது. அதனை போர்ச்சிகீஸியர்கள் "பைக்கோடி ஆதம்" என்று அழைத்தனர்.

மலையின் உயரம் 7351 அடி கூம்பில் 74 அடி நீளமும்,, 24 அடி அகலமும் உள்ள தளம் உள்ளது. அதில் மனிதன் பாதம் போன்று ஒரு குழி உள்ளது அதன் நீளம் 5 அடி 4 அங்குலம், அகலம் 2 அடி 6 அங்குலம்.

ஆதம் ( அலை ) அவர்கள் விண்ணிலிருந்து இந்தியாவில் இறங்கியதாக புகாரி ஷரீஃபின் விரிவுரையாளர் அய்னி (ரஹ்) அவர்கள் கூறுகின்றனர். முற்காலத்தில் இந்தியாவின் ஒரு பகுதியாகவே இலங்கை இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது

உலகின் எப்பாகத்திலும் வசிக்கும் மக்களுக்குக் கிடைக்காத ஒருபாக்கியம் இலங்கையில் வாழும் மக்களுக்குக் கிடைத்திருக்கின்றது, அதுதான் இறைவனால் படைக்கப்பட்ட முதல் மனிதரான ஆதம் (அலை) ( ADAM) இலங்கைக்கு இறக்கப்பட்டமையாகும்,

குறிப்பாக இலங்கை முஸ்லிம்கள் தமது இருப்பு தொடர்பான பூர்வீக அடிப்படைக்கான மூலக்காரணியான ஆதம் மலையையும், (Adams peak) அதன் வரலாற்றையும் பாதுகாப்பதாகும்

ஆதம்மலை , சிவனொளி பாதமலை, சிறீ பாத மலை என்ற பெயர்களைக் கொண்ட இம்மலை இலங்கை- இரத்தினபுரியில் இருந்து 40 KM ல் உள்ளது, 2243 அடி உயரத்தைக் கொண்ட இதன் சிகரத்தில் 5அடி நீளமும்,2அரை அடி அகலமும் கொண்ட கால் தடம் காணப்படுகின்றது, இது பல்லாயிரம் ஆண்டுகள் பழைமையானது என மதிப்பிடப்படுகின்ளது, December - April வரையான காலப்பகுதியில், தரிசிக்கக்கூடிய இடமாகவும், பின்னர், இதன். சிகரம் மேகங்களிடையே மறைந்து விடும் இடமாகவும் உள்ளது

சமய நோக்குப்படி இந்துக்கள் ,இது சிவனின் பாதம் எனவும், பௌத்தர்கள் புத்தர் இலங்கைக்கு தனது 3 வது வருகையின் போது உருவானது எனவும், கிறிஸ்தவர்களும், முஸ்லிம்களும். ஆதமுடையது எனவும் நம்புகின்றனர், தமது நம்பிக்கையின் பிரகாரம் புனித பயணங்களிலும், கிரிகைகளிலும் ஈடுபடுகின்றனர். இவ்வாறான தடயங்கள், இந்தியாவின் லோபாக்சி, மலேசியா, தாய்லாந்து, சிரியா போன்ற நாடுகளிலும் காணப்படுகின்றது.

ஆதம் மலை, இலங்கை முஸ்லிம்கள் இந் நாட்டில் வாழ்ந்ததற்கான தமது புராதனத்தை நிறுவுவதற்கான மிகப் பிரதானமான வரலாற்றுச் சின்னம், இதுவாகும், இலங்கை முஸ்லிம்கள் சர்வ தேச பிரபலமும், அடையாளமும் பெறுவதற்கு வரலாற்றின் மிக நீண்ட காலத்தில் இருந்தே இம் மலையும், பாதச் சிகரமும் மிகவும் செல்வாக்குச் செலுத்தியுள்ளன. என்பது மிகப் பலமான ஆதாரமாகும்.

வரலாற்றுப் பதிவுகளின்படி இலங்கையை நாடி நாடுகாண் பயணிகளும், ,மன்னர்களும், இறை நேசர்களும் வந்து சென்றதற்கான அடிப்படையாக அமைந்த்து ,இம்மலைப் பிரதேசமாகும், முஹ்யதீன் அப்துல் காதிர் ஜீலானி (றஹ்), ஷாஹுல் ஹமீது வலியுள்ளாஹ் போன்றோர் இலங்கை வந்தற்கான காரணங்களில் பிரதானமானது, இம்மலையும், ஆதமின் பாதமுமாகுமாகும்.

SEYLLAN - (சுவர்க்கம்) என அறபுக்களால் அழைக்கப்பட்ட இலங்கைக்கு முஸ்லிம் நாடுகாண் பயணியான இப்னு பதூதா (Ibn Batuta- 1304-1368) தனது இலங்கைக்கான விஜயத்தினை கி. பி. 1344ல் மேற் கொண்ட போது, இது பற்றிய பல குறிப்புக்களைக் கூறியுள்ளார்,

இப்னு பதூதாவின் குறிப்புக்கள் கூறுவது, இப்பிரதேசம் பற்றி பல முக்கியமான பதிவுகளை இட்டுச் சென்றுள்ளார், அதில் அவர் இவ்விடம் முஸ்லிம்களாலும், ஏனையோராலும், புனிதமாக்க் கருதப்படுகின்றனர்.

அதே வேளை, உலக அறபுக்கள் இப்பிரதேசத்தில் சமய பயணத்திற்காகவும், இரத்தினக்கல் வியாபாரத்திற்காகவும், அடிக்கடி விஜயம் செய்து வருவதாக, குறிப்பிட்டுள்ளார். அதே வேளை, இங்கு" பக்கீர்" எனும் சமயத் தியானிகள் தங்கி ஆழ்ந்த தியானத்தில் ஈடுபட்டுள்ளதாகவும் கூறியுள்ளார்,

இது பற்றிய ஆய்வுகளில் ஈடுபட்டு வரும், Prof,MSM ANES. அவர்களின் ஆய்வுகளும் இதனை உறுதிப்படுத்துகின்றன, இன்னும் சில பதிவுகளின் படி, இம்மலை அடிவாரத்திலும், உச்சியிலும், பிரபலமான இறை நேசர்களின், சியாறங்கள் இருந்த்தாகவும், ஆதார பூர்வமான பதிவுகளில் குறிப்பிடப் படுகின்றது, இந்த வகையில் நோக்கினால் இலங்கையில் முஸ்லிம் பூர்விகத்தின் அடிப்படை ஆதம் மலை என்பதற்கான அடிப்படைகள். உறுதியாக உள்ளன எனலாம்.

அதுபோல், Marco Polo(1254- 1324) அவரது வருகை, குறிப்புக்களும்,மற்றும் , Alexander ( 365- 323 BC) மன்னன் போன்றோரும் இங்கு வந்ததாக கருதப்படுகின்றது,

வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 9

அரபாத் மலை ( ஜபல் அர்-ரஹ்மா )



சவூதி அரேபியாவில் மெக்காவிற்கு தென்கிழக்கே சுமார் 20 கிமீ (12 மைல்) தொலைவில் உள்ளது. இம்மலையானது தோராயமாக 70 மீ (230 அடி) உயரம் கொண்டது, அதன் மிக உயர்ந்த இடம் 454 மீட்டர் (1,490 அடி) உயரத்தில் அமைந்துள்ளது.

இம் மலையைச் சுற்றியுள்ள மைதானத்திற்கு சொல்லப்படும் பெயர் அரஃபா ஆகும். அரஃபா மைதானம் சுமார் 8 மைல் நீளமும், 4 மைல் அகலமும் கொண்டதாகும்.

நபி இப்ராஹீம் {அலை} அவர்களுக்கு ஹஜ்ஜின் கிரியைகளை அல்லாஹ்வின் பேரில் கறுறுக் கொடுக்க வந்த ஜிப்ரயீல் (அலை) அவர்கள் ஒவ்வொன்றையும் கற்றுக் கொடுத்த பின்னர் ”நீங்கள் அறிந்து கொண்டீர்களா?” என்று கேட்டுக் கொண்டே வந்தார்கள்.

இறுதியாக, அரஃபாவில் செய்ய வேண்டிய கிரியைகளை கற்றுக் கொடுத்த பின்னர் மீண்டும்”நீங்கள் அறிந்து கொண்டீர்களா?” என்று கேட்டார்கள். அதற்கு, இப்ராஹீம் {அலை} அவர்கள் “அரஃப்து”="நான் அறிந்து கொண்டேன்" என பதில் கூறினார்கள். ஆகவே, அரஃபா என பெயர் வந்ததாக கூறப்படுகின்றது.

நம் தந்தை ஆதாமும், தாய் ஏவாளும் ( ஹவ்வா ) இருவரும் சொர்க்கத்தில் இருந்து தனித்தனியாக விழுந்து தத்தம் ஜோடியை தேடியலைந்து, பிறகு பூமியில் மீண்டும் இணைந்த இடம் அரபாத் மலை,

இத்தம்பதியினர் சுவனத்தில் செய்த தவறுக்கு அவர்கள் பூமியில் மன்னிக்கப்பட்ட இடம் அரபாத் மலை. எனவே அதற்கு ஜபலுர்-ரஹ்மா என்று பெயர். - "கருணையின் மலை" என்று பொருள். இந்த நிகழ்வு நடந்ததாக நம்பப்படும் இடத்தை அடையாளப்படுத்த மலையின் மேல் ஒரு தூண் அமைக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு ஆண்டும் ஹஜ்ஜுடைய காலத்தில் லட்சோப லட்ச முஸ்லிம்கள் இன, மொழி, நிற பேதமின்றி ஒருவருக்கொருவர் அறிமுகம் ஆகிக் கொள்வதால் அரஃபா என பெயர் வந்ததாகவும் கூறப்படுகின்றது.

இம்மலை அமைந்த அரஃபா பெருவெளிக்கு “அல் மஷ்அருல் ஹராம்” புனித வழிபாட்டுத் தலம், ”அல் மஷ்அருல் அக்ஸா” கோடியிலுள்ள வழிபாட்டுத்தலம், இலால் மணற்குன்று ஆகிய பெயர்களும் உண்டு.

“அல்லாஹ் நுஃமான் எனப்படும் அரஃபா பெருவெளியில் ஆதம் {அலை} அவர்களின் முதுகுத்தண்டிலிருந்து உறுதிமொழி பெற்றான். அதாவது, அவரது முதுகுத்தண்டிலிருந்து தான் படைத்த அனைத்து வழித்தோன்றல்களையும் வெளியோக்கினான். பிறகு தனக்கு முன்னால் அவர்களை அணுக்களைப் போன்று பரப்பினான்.

பின்னர், அவர்களை நோக்கி “ நான் உங்கள் இறைவன் அல்லவா?” என்று கேட்டான். ஆம்! நாங்கள் நீதான் எங்கள் இறைவன் என சாட்சியமளிக்கின்றோம்” என்றனர்” என மாநபி {ஸல்} அவர்கள் கூறினார்கள்.( நூல்: இப்னு கஸீர் )

மேலும், அரஃபா தினத்தின் முத்தாய்ப்பாக அமைந்த ஓர் அம்சம் இருக்குமானால், அது மாநபி {ஸல்} அவர்களின் ஹஜ்ஜத்துல் விதா – விடைபெறும் ஹஜ்ஜில் அரஃபாப் பெருவெளியில் ஆற்றிய உரை தான்.

இஸ்லாம் முழுமைத்துவமும், ரப்பின் திருப்பொருத்தத்தையும் பெற்ற தினம்தான் அரஃபா தினம்.

மாநபி {ஸல்} அவர்கள் அரஃபா தினத்தன்று “பத்னுல் வாதி” எனும் இடத்தில் கஸ்வா வாகத்தின் மீதமர்ந்து சுற்றி இருந்த 1,24,000 நபித்தோழர்களுக்கு மத்தியில் ஆற்றிய விடை பெறும் உரையின் முடிவாக மேற்கூறிய இறைவசனத்தை இறக்கி அருளினான்.

மாநபி {ஸல்} அவர்கள் அரஃபா தினத்தன்று “பத்னுல் வாதி” எனும் இடத்தில் கஸ்வா என்ற ஒட்டக வாகனத்தின் மீதமர்ந்து சுற்றி இருந்த 1,24,000 நபித்தோழர்களுக்கு மத்தியில் இறைவனைப் புகழ்ந்த பின்னர்...

“மக்களே! நான் சொல்லப்போவதை மிகக் கவனமாகக் கேளுங்கள்!. ஏனெனில், இந்த ஆண்டுக்குப் பிறகு இந்த இடத்தில் மீண்டும் உங்களைச் சந்திப்பேனா? என்று எனக்குத் தெரியாது” என்று துவங்கி சுமார் நாற்பது அம்சங்களை குறிப்பிட்டார்கள்.

அவைகளில், சில கடமைகளில் கவனமாக இருக்குமாறும், சில கடமைகளை அவசியம் செய்யுமாறும் ஆர்வமூட்டினார்கள்.

சில செயல்களை பெரும்பாவமாக அறிவித்து அவைகளில் இருந்து விலகி வாழுமாறு எச்சரிக்கைச் செய்தார்கள்.

சாதாரணமாக் கருதி விடப்படும் சில கடமைகளை அதன் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறி அதைச் செய்யுமாறு வலியுறுத்தினார்கள்.

இந்த உம்மத்துக்கு மகத்தான சில சோபனங்களையும், வாழ்த்துக்களையும் கூறினார்கள்.

உரையின் நிறைவாக,

“மறுமையில் என்னைப் பற்றி உங்களிடம் விசாரிக்கும் போது நீங்கள் என்ன பதில் கூறுவீர்கள்?” என்று கூடியிருந்த நபித்தோழர்களை நோக்கி வினவினார்கள்.

இதைக் கேட்ட கூடியிருந்த நபித்தோழர்கள் ““நிச்சயமாக! நீங்கள் ( சத்தியத்தை - ஏகத்துவத்தை ) எடுத்துரைத்தீர்கள்! அல்லாஹ் உங்களிடம் அமானிதமாக ஒப்படைத்த இந்த தீனின் கட்டளைகளை முழுமையாக நிறைவேற்றினீர்கள்! ஒட்டுமொத்த மனித குலத்திற்கும், முஸ்லிம் உம்மாவிற்கும் நலவையும், நன்மையையுமே நீங்கள் நாடினீர்கள் என்று நாங்கள் சாட்சி கூறுவோம்” என்றார்கள்.

இதனைக் கேட்ட மாநபி {ஸல்} அவர்கள் “தங்களது ஆட்காட்டி விரலை வானை நோக்கி உயர்த்தி, பின்னர் மக்களை நோக்கித் திரும்பி அல்லாஹ்வே! நீயே, இதற்கு சாட்சியாவாய்!” என்று மூன்று முறை கூறிவிட்டு, ”இங்கு வந்திருப்பவர்கள் அனைவரும் இங்கு வராத மற்றவர்களுக்கு எடுத்துக் கூறிவிடுங்கள்” இன்னொரு அறிவிப்பில் “என்னிடத்தில் இருந்து தெரிந்து கொண்ட ஒரு விஷயமாக இருந்தாலும் கூட அதை எத்தி வைத்து விடுங்கள்!”.

ஏனெனில், செய்தியைக் கேள்விப்படுபவர்களில் சிலர், நேரடியாகக் கேட்பவர்களை விட நன்கு விளக்கமுடையவர்களாக இருப்பார்கள்” என்று கூறி உரையை நிறைவு செய்தார்கள்.

இந்த உரை நிறைவு பெற்றதும் அல்லாஹ் {ஜல்}

في يوم عرفة نزل قوله سبحانه وتعالى

( الْيَوْمَ أَكْمَلْتُ لَكُمْ دِينَكُمْ وَأَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِي وَرَضِيتُ لَكُمُ الْإِسْلَامَ دِينًا )

“இன்று உங்களது மார்க்கத்தை உங்களுக்காக நான் முழுமையாக்கி விட்டேன்! என்னுடைய அருட்கொடையை உங்களுக்கு முழுமைப் படுத்திவிட்டேன்! மேலும், இஸ்லாத்தை அழகிய நெறியாக பொருந்திக் கொண்டேன்”. ( அல்குர்ஆன்: 5: 3 )

அரஃபாப் பெருவெளியில்தான் புதியதோர் தியாகத்தை அறிமுகம் செய்த நபித்தோழர்கள்....

அரஃபாப் பெருவெளியில் மாநபி இட்ட “இங்கு வந்திருப்பவர்கள் அனைவரும் இங்கு வராத மற்றவர்களுக்கு எடுத்துக் கூறிவிடுங்கள்!”

இன்னொரு அறிவிப்பில்... “என்னிடத்தில் இருந்து தெரிந்து கொண்ட ஒரு விஷயமாக இருந்தாலும் கூட அதை எத்தி வைத்து விடுங்கள்!” இந்த கட்டளை மாநபித்தோழர்களை இஸ்லாமிய உலகிற்கு புதியதோர் தியாகத்தை அறிமுகம் செய்வதற்கு அழைத்துச் சென்றது.

ஆம்! அல்லாஹ்வின் கட்டளையும், மாநபி {ஸல்} அவர்களின் ஆணையும் மாநபித் தோழர்களை சில போது உணர்வுகளைத் தியாகம் செய்யத் தூண்டியது. உணர்வுகளைத் தியாகம் செய்தார்கள்.

சில போது உறவுகளைத் தியாகம் செய்யத் தூண்டியது. உறவுகளைத் தியாகம் செய்தார்கள்.

சில போது செல்வங்களைத் தியாகம் செய்யத் தூண்டியது. செல்வங்களைத் தியாகம் செய்தார்கள்.

சில போது வீடு, வாசல், சொத்து சுகங்களைத் தியாகம் செய்யத் தூண்டியது. அப்படியே தியாகம் செய்தார்கள்.

ஏன் ? சில போது உயிர்களைக் கூட தியாகம் செய்யத் தூண்டியது. உயிர்களையும் கூட தியாகம் செய்தார்கள்.

ஆனால், இப்போது அவர்களுக்கு முன்னால் இடப்பட்ட கட்டளை ”நன்மைகளைத் தியாகம் செய்யுமாறுத் தூண்டியது” அல்லாஹ்வின் கட்டளை, அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களின் ஆணை அது எவைகளை இழக்கத் தூண்டினாலும் கொஞ்சம் கூட தயக்கமின்றி தியாகம் செய்யதவர்கள் நபித் தோழர்கள், இப்போதும் அதை அந்த உடனேயே செயல் படுத்த ஆயத்தமானார்கள்.

ஆம்! அல்லாஹ்வின் ஆலயமாம் திருக்கஅபாவில் தொழுகிற ஒவ்வொரு தொழுகைக்கும் கிடைக்கிற நன்மைகளை, மாநபிப் பள்ளியில் தொழுகிற ஒவ்வொரு தொழுகைக்கும் கிடைக்கிற நன்மைகளை, ஆண்டு தோறும் ஹஜ், உம்ரா செய்கிற வாய்ப்பை இன்னும் இதர நன்மைகளை உங்களுக்கும், எனக்கும் இன்னும் கறுப்பருக்கும், வெள்ளையருக்கும் ஈமான் கிடைக்க வேண்டும், இஸ்லாமிய வாழ்க்கை நெறி கிடைக்க வேண்டும் என்பதற்காக தியாகம் செய்ய துணிந்தார்கள்.

அன்று அவர்கள் அரஃபா பெருவெளியில் இந்த தியாகம் செய்ய துணிந்திருக்கா விட்டால் உலகின் 232 நாடுகளில் 180 கோடி முதல் 200 கோடி வரை முஸ்லிம் சமூகத்தினர் வாழ்கின்றார்கள். உலகில் நடமாடும் நான்கு பேரில் ஒருவர் முஸ்லிம் என்கிற இந்த நிலை ஏற்பட்டிருக்காது.

வரலாறு இப்படிச் சொல்கிறது...

ஆம்! மாநபி {ஸல்} அவர்களின் இறுதிப் பேருரையில், அரஃபா பெருவெளியில் பங்கெடுத்த நபித்தோழர்களின் எண்ணிக்கை 1,24,000 ஆனால், மதீனா ஜன்னத்துல் பகீவு மண்ணறையில் அடக்கம் செய்யப்பட்டவர்களின் எண்ணிக்கை வெறும் 10000 தான்.

ஷாம், இராக், ஸிரியா, ஃபலஸ்தீன், பஸரா, திமிஷ்க், எகிப்து ஆகிய பகுதிகளில் சுமார் 30,000 நபித்தோழர்கள் அடக்கம் செய்யப்படிருக்கின்றார்கள்.

மீதமுள்ள நபித்தோழர்கள் எங்கே சென்றார்கள்? என்னவானார்கள்? அவர்களின் அடக்கஸ்தலம் எங்கே இருக்கின்றது? இப்படியான ஒரு தேடலை முன் வைத்தோமானால் விடை இப்படித் தான் கிடைக்கும்.

ஆம்! அரஃபாப் பெருவெளியின் உரை முடிந்து அடுத்த நாள் ஹஜ்ஜுடைய கிரியைகள் முடிந்ததும் தத்தமது வாகனங்கள் எத்திசை நோக்கி நின்றனவோ அத்திசையில் வாகனத்தை செலுத்தினார்கள்.

அரஃபாப் பெருவெளியிலிருந்து கிளம்பி, உலகின் எட்டு திசைகளுக்கும் இஸ்லாம் என்கிற ஏக இறைவனின் ஏகத்துவ ஜோதியை நிரப்பினார்கள்.

அரஃபாப் பெருவெளியிலிருந்து நமது இந்திய திரு நாட்டின் தமிழகத்திற்கும் அந்த சத்திய நபித்தோழர்கள் அந்த ஏகத்துவ ஜோதியை எடுத்து வர மறக்கவில்லை. அதன் ஓர் அடையாளம்தான் கோவளம் கடற்கரையில் அடங்கப்பபட்டிருக்கும் ஸைய்யிதினா தமீமுல் அன்ஸாரி (ரலி) அவர்கள்.

வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 10

( ஜூதி மலை )

நூஹ் நபிகளை தன் தூதராக அல்லாஹ் அங்கீகரித்தான். அவருக்கு நபி பட்டம் கொடுத்து, ‘மக்களிடம் ஏக இறைவன் அல்லாஹ் ஒருவனே, அவனை மட்டுமே வணங்க வேண்டும்’ என்று எடுத்துக் கூறச்செய்தான்.

கிட்டதட்ட 900 ஆண்டுகள் நூஹ் நபியின் பிரச்சாரம் தொடர்ந்தும் கூட ஒரு சிலரைத் தவிர மற்றவர் எவரும் அல்லாஹ்வை நம்பிக்கை கொள்ளவில்லை. அவரது சொந்த மகனே இதை ஏற்கவில்லை.

நூஹ் நபியவர்கள் இறைவனிடம் கையேந்தி இவ்வாறு பிரார்த்தனை செய்தார்கள்: ‘இறைவா, நல்ல முறையில் உன்னைப் பற்றிய உண்மைகளை எடுத்துச் சொல்லியும் இம்மக்கள் அதனை புரிந்து கொள்ளும் அறிவு அற்றவர்களாகவே இருக்கின்றனர். இதற்கு ஒரு நல்ல முடிவை நீ ஏற்படுத்துவாயாக’.

இந்த பிரார்த்தனையை ஏற்றுக்கொண்ட அல்லாஹ், நூஹ் நபி அவர்களுக்கு கீழ்க்கண்ட இறைச்செய்தியை அறிவித்தான்:

“முன்னர் நம்பிக்கை கொண்டவர்களைத் தவிர இனி உமது மக்களில் ஒருவரும் நிச்சயமாக நம்பிக்கை கொள்ள மாட்டார்கள். ஆதலால் அவர்கள் செய்வதைப் பற்றி நீர் கவலைப்படாதீர்.”

“நாம் அறிவிக்குமாறு நம்முடைய கண் முன்பாகவே ஒரு கப்பலை நீங்கள் செய்யுங்கள். அநியாயம் செய்தவர்களைப் பற்றி (இனி) நீங்கள் என்னுடன் (சிபாரிசு) பேசாதீர்கள். நிச்சயமாக அவர்கள் (பிரளயத்தில்) மூழ்கடிக்கப்படுவார்கள்” (என்றும் அறிவிக்கப்பட்டது). (திருக்குர்ஆன் 11:36,37)

மலை போன்ற உயரத்திற்கு வெள்ளம் வந்ததால் ஜூதி மலைக்கு மேல் கப்பல் நிலை கொண்டது. இம்மலை துருக்கி நாட்டின் எல்லையில் அமைந்துள்ளது. துருக்கி நாட்டைச் சேர்ந்த போதான் மாவட்டத்திலுள்ள அரராத் என்ற மலை தான் ஜூதி மலை என்று ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

அமெரிக்க நாட்டைச் சேர்ந்த ஒரு மலையேறும் குழு அம்மலையை ஆய்வு செய்து பனிப் பாறைகளுக்கு அடியில் கப்பல் துண்டுகள் இருந்ததைக் கண்டுபிடித்துள்ளது.

1969ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம், 2ஆம் தேதியன்று கிழக்குத் துருக்கியின் ரஷ்ய எல்லையில் அமைந்துள்ள அரராத் மலைத் தொடரில் ஒரு கப்பலின் சில மரப் பகுதிகளை அந்த ஆராய்ச்சிக் குழு கண்டுபிடித்தது.

இம்மலைத் தொடரின் மேற்குப் பகுதியில், 14,000 அடி உயரத்தில் பனியால் மூடப்பட்ட பாறைகளுக்கிடையே 20 மீட்டர் ஆழத்தில், அக்கப்பலின் மரப் பலகைகள் புதைந்து கிடந்தன.

14 ஆயிரம் அடி உயரமுடைய மலையின் மேல் ஒரு கப்பல் நிலை கொண்டுள்ளது என்றால் அந்த அளவுக்கு வெள்ளப் பெருக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். அதன் காரணமாக அந்த மலைக்கும் மேலே கப்பல் மிதந்து கொண்டு இருக்கும் போது வெள்ளம் வடிந்திருக்க வேண்டும். இதனால் அந்தக் கப்பல் மலையின் மீது நிலை கொண்டிருக்க வேண்டும் என்று ஆய்வாளர்கள் ஊகித்துச் சொல்வதை திருக்குர்ஆன் 1400 ஆண்டுகளுக்கு முன்பே சொல்லி விட்டது.

மலையின் மேலே கப்பலைக் கொண்டு போய் வைத்தது யார் ? என்ற கேள்விக்குத் திருக்குர்ஆன் மட்டுமே தக்க விடை கூறுகிறது.

"அக்கப்பலை அத்தாட்சியாக விட்டு வைத்திருக்கிறோம்; சிந்திப்பவர் உண்டா?" என்று கூறி, இந்த உண்மையை 14 நூற்றாண்டுகளுக்கு முன்பே திருக்குர்ஆன் முன்னறிவிப்பு செய்துள்ளது.

திருக்குர்ஆன் இறைவனின் வேதம் என்பதற்கு இதுவும் சான்றாகவுள்ளது.

11:44. "பூமியே! உனது தண்ணீரை நீ உறிஞ்சிக் கொள்! வானமே நீ நிறுத்து!" என்று (இறைவனால்) கூறப்பட்டது. தண்ணீர் வற்றியது. காரியம் முடிக்கப்பட்டது. அந்தக் கப்பல் ஜூதி மலை மீது அமர்ந்தது. "அநீதி இழைத்த கூட்டத்தினர் (இறையருளை விட்டும்) தூரமாயினர்" எனவும் கூறப்பட்டது.

29:14. நூஹை அவரது சமுதாயத்திடம் அனுப்பினோம். அவர்களுடன் ஆயிரம் ஆண்டுகளுக்கு ஐம்பது ஆண்டுகள் குறைவாக வசித்தார். அவர்கள் அநீதி இழைத்த நிலையில் அவர்களைப் பெரு வெள்ளம் பிடித்துக் கொண்டது.

29:15. அவரையும், கப்பலில் இருந்தோரையும் காப்பாற்றினோம். இதை அகிலத்தாருக்குச் சான்றாக்கினோம்.

54:15. அதைச் சான்றாக விட்டு வைத்தோம். படிப்பினை பெறுவோர் உண்டா?

26:119. எனவே அவரையும், அவருடன் இருந்தோரையும் நிரப்பப்பட்ட கப்பலில் காப்பாற்றினோம்.

26:120. பின்னர் எஞ்சியோரை மூழ்கடித்தோம்.

26:121. இதில் தக்க சான்று உள்ளது. அவர்களில் அதிகமானோர் நம்பிக்கை கொள்வதில்லை.

நம் ஆதி பிதா ஆதம் (அலை) அவர்கள் இலங்கை ஆதம் மலையில் இறங்கிய பின்னே மனிதகுல உருவாக்கம் நடந்தது. நபி நூஹ் (அலை) அவர்களை வரலாறு "இரண்டாம் ஆதம்" என்கிறது. உலகின் மனித குலம் மீண்டும் உருவானது ஜூதி என்னும் ஆராரா மலைத் தொடரில் இருந்துதான் என்பதாக வரலாறு கணிக்கிறது.

ஆக மனிதகுல உருவாக்கத்திற்கு மலைகள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன என்பதை மலைகளைப் பற்றி நமக்கு சொல்ல வருகிறது

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 11

மலைகளும், நிறைவேறும் பிரார்த்தனைகளும்.

ஆதம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் இந்த உலகை விட்டு பிரியும் நேரம் வந்தவுடன் தன் பிள்ளைகளை அழைத்து இறுதி உரை வழங்கினார்கள். அப்போது அவர்களின் இளைய மகனார் ஷீத் (அலை) அவர்களிடம் :

"நான் என் குற்றத்தை மன்னித்தருளுமாறு வேண்டி **#அரஃபாத்** மலை சென்று அழுதேன். அப்பொழுதுதான் என் பாவ மன்னிப்பை இறைவன் ஏற்றுக் கொண்டான்.

தம் அருமை மகன் ஷீத் (அலை) அவர்களை நோக்கி மகனே! எனக்குச் சுவனத்து ஸைத்தூன் எண்ணெய்யையும் அதன் இலைகளையும் அருந்த ஆவலாயுள்ளது" என்ற கூறினார்கள்.

அது கேட்ட ஷீத் (அலை) அவர்கள் தந்தையின் ஆணைப்படி உடனே **#தூர்ஸீனா** மலை சென்று, ''இறைவ, எம்பெரும! உன் அடியார் ஆதம் நோயுற்றுப் படுத்த படுக்கையாய்க் கிடக்கிறார். சுவனத்து ஸைத்தூன் எண்ணெய்யையும் ஸைத்தூன் இலைகளையும் உண்ண விரும்பி அவற்றைப் பெற்றுவர என்னை இங்கு அனுப்பியுள்ளார்" என்று இருகரம் ஏந்தி இறைஞ்சினர்.

அப்பொழுது, "ஒரு பாத்திரத்தைக் கொண்டு வாரும்! என்று அசரீரி முழங்கியதைக் கேட்டு அவ்விதமே செய்தனர் ஷீத் (அலை).

கண்மூடிக் கண் திறப்பதற்குள் அது ஸைத்தூன் எண்ணெய்யாலும் இலைகளாலும் நிரம்பிவிட்டது. அவற்றை எடுத்துக் கொண்டு வந்து ஷீத் (அலை) அவர்கள் தம் தந்தையின் கையில் கொடுக்க அவர்கள் எண்ணெய்யில் சிறிதை உடலில் தடவவும் சிறிதை அருந்தவும் இலைகளை உண்ணவும் செய்தார்கள். அதன் காரணமாக அவர்கள் சிறிது உடல் நலம் பெற்றார்கள்.

அதன் ஒரு நாள் "என் அருமை மக்களே! எனக்குச் சுவனத்துக் கொடி முந்திரிப் பழம் உண்ண ஆவலாயுள்ளது. வெளியே வானவர்களைக் காணின் அவற்றை அவர்களிடம் கேட்டு வாங்கி வாருங்கள்" என்றனர் அவ்விதமே அவர்களின் மக்கள் வெளியே சென்றனர் ஷீத் அலை அவர்கள் மட்டும் தந்தையின் அருகில் அமர்ந்து அவர்களுக்கு பணிவிடை செய்து கொண்டிருந்தனர்.

பழம் கொண்டு வர வெளியே சென்ற தம் மக்கள் நெடுநேரம் ஆகியும் திரும்பி வராததைக் கண்ட, ஆதம் ( அலை ) அவர்கள் தம் அருகிலிருந்த மகன் ஷீத் (அலை) அவர்களை நோக்கி, "மகனே **#இன்ன** மலை மீது சென்று இறைவனிடம் இறைஞ்சும் அளப்பெரும் அருளானாகிய அல்லாஹ் தன் பேரருளால் அப்பழங்களை அனுப்பி வைக்க போதுமானவன் என்று கூறினார்கள்.

அவ்வாறே மகனாரும் அம்மலை சென்று, இறைவனிடம் இறைஞ்ச , ஜிப்ரீல் (அலை) அவர்கள் பழங்கள் நிறைந்த ஒரு பொன் தட்டை தலையில் சுமந்த வண்ணம் சுவனத்து கண்ணழகி ஹூருல்ஈன் ஒருவருடன் சுமந்து ஆதம் (அலை) அவர்களின இல்லத்திற்கு வந்து கொண்டிருந்தார்கள்.

இதனால்தானோ ஜபல் நூர் என்ற மலையில் ஹிரா குகையில் நபி (ஸல்) தவம் செய்தார்களோ,

நபி மூஸா (அலை) அவர்கள் இறைவனை சந்திக்க தூர்ஸினா மலை சென்றார்களோ ...

இறைவனும் தூர்ஸினா மலையில் பிரசன்னமாகியதாக குர்ஆனில்....

மூஸா (தம்) தவணையை முடித்துக்கொண்டு, தம் குடும்பத்துடன் பயணம் செய்து கொண்டிருந்த போது; “தூர்” (மலையின்) பக்கத்தில் ஒரு நெருப்பைக் கண்டார்; அவர் தம் குடும்பத்தாரிடம் “நீங்கள் (இங்கு சிறிது) தங்குங்கள்; நிச்சயமாக, நான் ஒரு நெருப்பைக் காண்கின்றேன். நான் உங்களுக்கு அதிலிருந்து ஒரு செய்தியையோ, அல்லது நீங்கள் குளிர் காயும் பொருட்டு, ஒரு நெருப்புக் கங்கையோ கொண்டு வருகிறேன்” என்று கூறினார். (குர்ஆன் : 28:29)

அவர் நெருப்பின் அருகே வந்த போது, (அங்குள்ள) பாக்கியம் பெற்ற அப் பள்ளத்தாக்கிலுள்ள ஓடையின் வலப்பக்கத்தில் (ஒரு) மரத்திலிருந்து: “மூஸாவே! நிச்சயமாக நானே அகிலத்தாருக்கெல்லாம் இறைவனாகிய அல்லாஹ்!” என்று கூப்பிடப்பட்டார். (குர்ஆன் : 28:30)

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 12

( அபுல் குபைஸ் மலை )




அபுல் குபைஸ் மலையே உலகத்தில் படைக்கப்பட்ட முதல் மலையென்று வரலாற்று ஆய்வாளர்கள் கூறுவர்.

நபி இப்ராஹிம் (அலை) அவர்கள் தம் மனைவி அன்னை ஹாஜிரா (அலை) அவர்களையும் கைக் குழந்தையான நபி இஸ்மாயில் (அலை) அவர்களையும் கூட்டிக் கொண்டுவந்து, விட்டுச்சென்ற இடம் சவூதி அரேபிய பாலைவனத்தின் பாரான் மலை ஆகும். இப்பாரான் மலை பள்ளத்தாக்கில்தான் இறை இல்லமான கஃபா அமைந்துள்ளது.

இந்த பாரான் மலை அபுல் குபைஸ் மலை, கியான் மலை மற்றும் ஹிரா மலைகளுக்கு இடையே அமைந்துள்ளது.

படம் : புகைப்படத்தின் வலது பக்கத்தில் அல்-மஸ்ஜித் அல்-ஹராமின் கிழக்கே ஜபல் அபு குபைஸ் அமைந்துள்ளது . மற்றும் திருக்குர்ஆன் அருளப்பட்ட ஜபல் அல்-நூர் மலையையும் பின்னணியில் காணலாம்.

நபி ஆதம் (அலை அவர்களும் , அவர்களின் அருமை மைந்தர் இஸ்மாயில் (அலை) அவர்களும் இறை இல்லமான கஃபாவை கட்டினர். கட்டடம் ஓரளவு உயர்ந்ததும் சுவரில் ஓரிடத்தில் மட்டும் ஒரு கல் இல்லாது காலியாக விடப்பட்டிருப்பதைக் கண்ட தனயர், தந்தையாரை நோக்கி அதற்கான காரணத்தை வினவினர்.

அப்பொழுது தந்தையார், தனயரிடம் ''மகனே! கஃபா இதனை இடம் சுற்றி வருவதற்கு மனிதர்களுக்கு ஓர் அடையாளமாய் இருக்கும் பொருட்டு இதில் ஓர் அழகிய கல்லைப் பதிக்க விரும்புகின்றேன். எங்கேனும் பார்த்து எடுத்துவா!" என்று கூறினர்.

அவர்கள் பல இடங்களிலும் தேடிப் பல கற்களை எடுத்து வந்து தந்தையாரிடம் காட்டிய போதிலும் அவற்றில் ஒன்றேனும் அவர்களுக்கு மகிழ்ச்சியை நல்கவில்லை.

அப்பொழுது அண்மையிலிருந்த அபுல் குபைஸ் மலையிலிருந்து ஒரு சப்தம் கேட்டது, "இப்ராஹீமே! என்னிடம் ஓர் அடைக்கலப் பொருள் ஆதம் (அலை காலம் தொட்டு என்னிடம் உள்ளது. அதனை எடுத்துக்கொள்ளும்!" என்று.

அதாவது நபி இப்ராஹீம் (அலை) கஃபாவை நிர்மாணிக்க ஓர் உயரமான கல்லை எடுத்து வருமாறு தன் மகன் இஸ்மாயீல் (அலை) அவர்களிடம் கூற,அவர்கள் அபுல் குபைஸ் மலையின் பக்கம் கல் எடுத்து வரச் சென்றார்கள்.

அங்கு ஜிப்ரயீல் (அலை) தோன்றி, இஸ்மாயீல் (அலை) அவர்களைச் சந்தித்து, "ஆதம் சுவனத்திலிருந்து வரும் போது இரண்டு பாக்கியம் மிகு கற்களைத் தம்முடன் கொண்டு வந்தார்கள். அதில் ஒன்றை நபி இத்ரீஸ் (அலை) அவர்கள், நபி நூஹ் (அலை) அவர்களின் காலத்தில் ஏற்படவிருக்கும் பிரளயத்தில் அழிந்து விடுமோ” என்று அஞ்சி இந்த அபுல் குபைஸ் மலையடிவாரத்தில் புதைத்து வைத்தார்கள் என்று கூறி விட்டு,

புதைக்காமல் கிடந்த மற்றொரு கல்லைச் சுட்டிக்காட்டி, இப்ராஹீம் நிற்பதற்காக இதனை எடுத்துச் செல்லவும்! என்று கூறினர். இதுவே மக்காமே இப்ராஹீம் என்கிற கல்,

பின்னர் கஃபாவைக் கட்டி முடித்ததும் இதனை இடம் சுற்றி வருவதற்கு அடையாளமாக இதில் ஒரு கல்லை பதித்து வைக்க எண்ணி ஒரு கல்லை எடுத்துவருமாறு இப்ராஹீம் (அலை) சொல்ல ஜிப்ரயீல் (அலை) எதிர்ப்பட்டு “இத்ரீஸ்(அலை) முன்பு புதைத்து வைத்திருந்த அக்கல்லைக் காட்ட, அதனை அவர்கள் எடுத்து வந்து கஃபாவின் சுவரில் பதித்தனர். இதுவே ஹஜ்ருல் அஸ்வத்”ஆகும். (ஆதாரம் : நபிமார்கள் வரலாறு அப்துற் ரஹீம்)

ஹஜ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்கள் இறை இல்லமாம் க'பதுல்லாஹ்வை கட்டியதும் (அபூகுபைஸ்) மலையின் மீது ஏறி, எல்லா ஆன்மாக்களையும் முன்னோக்கி, அல்லாஹ்வின் அடியார்களே! (அல்லாஹ் ஹஜ்ஜை கடமை ஆக்கி உள்ளான், ஹஜ் செய்யுங்கள்) என்று கூவி அழைத்தார்கள். கியாமத் நாள் வரையிலும் படைக்கப் படுகின்றவர்கள் அனைவரும் அவ்வழைப்பை கேட்டனர். எவர்கள் "லெப்பைக்" என்று சொல்லி பதில் அளித்தார்களோ அவர்கள் நிச்சயமாக ஹஜ் செய்தே தீருவார்கள். எவர்கள் மௌனமாக இருந்தார்களோ அவர்களுக்கு ஹஜ் செய்ய ஒரு போதும் முடியாது போய்விடும்.. என்று தப்சீர்களில் 22:27 வசனத்திற்கு விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது

وَاَذِّنۡ فِى النَّاسِ بِالۡحَجِّ يَاۡتُوۡكَ رِجَالًا وَّعَلٰى كُلِّ ضَامِرٍ يَّاۡتِيۡنَ مِنۡ كُلِّ فَجٍّ عَمِيۡقٍ ۙ

ஹஜ்ஜை பற்றி மக்களுக்கு அறிவிப்பீராக! அவர்கள் நடந்தும் வெகு தொலைவிலிருந்து வரும் மெலிந்த ஒட்டகங்களின் மீதும் உம்மிடம் வருவார்கள் (எனக் கூறினோம்). (குர்ஆன் : 22:27)

மேலும் அதே வலைத்தளத்தில் ஹஜ்ருல் அஸ்வத் கல் மற்றும் மக்காமூ இப்ராஹிம் என்ற கண்ணாடி கூண்டிற்குள் வைக்கப்பட்டிருக்கும் கல் இவைகளின் சிறிய துண்டு (Basalt Rock) பிரிட்டிஷ் மியூசியத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

இம்மூன்று சிறு கற்களையும் ஆய்வு செய்த விஞ்ஞானிகள் இக்கற்கள் மூன்றும் சூரியகுடும்பத்தைச் (Solar Family) சேர்ந்தவை அல்ல, இக்கற்கள் சூரியனையும் தாண்டிய விண்வெளியிலிருந்து பூமிக்கு வந்திருக்க வேண்டும் என்பதாக ஆய்வு செய்துள்ளனர். இந்தக் கற்களைப் பற்றிய பூர்வீக வரலாறும் மேற்கூறப்பட்ட கருத்தையே மெய்ப்பிக்கின்றன.

ஆக இரு கற்களுமே வானுலகத்திலிருந்து இறங்கி இறை இல்லமான கஃபா கட்டும் வரை அபுல் குபைஸ் மலைக்குள்ளே ரகசியமாக புதைக்கப்பட்டிருந்தது என்பதை அறிய முடிகிறது

அபூ குபைஸ் மலையின் சிறப்புகளும் அந்தரங்கமும்

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

ஹஸ்ரத் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களும் ஸையிதா ஹவ்வா அலைஹிஸ்ஸலாம் அவர்களும் கடைசியாக வந்து மக்காவில் குடியேறினார்கள்.

நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மரணித்தவுடன் அவர்கள் ‘அபூ குபைஸ் மலையிலிருந்த குகையில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

ஸையிதா ஹவ்வா அலைஹிஸ்ஸலாம் மரணத்தைத் தழுவிய பின், அவர்களும் அவர்களுக்குப் பக்கத்திலேயே நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

ஆதம் அலைஹிஸ்ஸலாம் இவர்களின் உடல் அபுல் குபைஸ் மலையின் அடிவாரத்தில் உள்ள "மகாரத்துல் குன்ஸ்" என்ற குகையில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

ஆனால் மற்றொரு வரலாறு ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உடல் கஃபாவிற்குள்ளும், கால் கஃபாவிற்கு வெளியிலும் அடக்கப்பட்டதாக கூறுகிறது.

இந்த அபுல் குபைஸ் மலைதான் புனித கஃபா அமைந்திருக்கும் இடத்தை அடுத்து காணப்படும் மலை. அந்த மலையை அடிவாரத்திலேயே பனூ ஹாஷீம் கோத்திரத்தார் பரந்து விரிந்து, காலம் காலமாக வாழ்ந்து வந்தனர்.

இங்குதான் ஸையிதா ஆமினா அம்மையார் ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் இல்லம் இருந்தது. அங்கேயே நபி(ஸல்)ﷺ அன்னவர்களின் உதயம் நடந்தேறியது.

புனித மாநபிகளார் ﷺ அன்னவர்களின் முன்னோர்களுக்கு சொந்தமான இல்லங்களுள் ஒன்றே ‘தாருன்னத்வா’. இங்கேயே நபி (ஸல்)ﷺ அன்னவர்கள் பிறந்தார்கள். தனது பிள்ளை பருவத்தை இங்கேயே நபி (ஸல்) ﷺ அவர்கள் கழித்தார்கள். தன் வாலிபப் பருவத்தையும் இங்கேயே அடைந்தார்கள்.

இந்த மலையில் நின்றுக்கொண்டு இருக்கும்போதே பரிசுத்த மாநபிகளார் ﷺ அன்னவர்கள், பால் நிலவை இரண்டாகப் பிளந்தார்கள்.

இந்த காரணங்களெல்லாம் ஸையுதுனா நபி ஆதம் (அலை) அவர்களுக்கு முன்னறிவிப்பு செய்யப்பட்டதால், இப்பகுதியில் வந்து குடியேறினார்கள். தான் இதன் புற சூழலில் நல்லடக்கமாக வேண்டும் எனவும் ஆசைப்பட்டார்கள்.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 13

( ஜபல் அல்-நூர் மலை )




ஜபல் அல்-நூர் என்பது 'ஒளியின் மலை' அல்லது 'வெளிச்சத்தின் மலை' 'அறிவொளியின் மலை' எனப்படுகிறது. இது சவுதி அரேபியாவின் ஹிஜாஸ் பகுதியில் உள்ள மெக்காவிற்கு அருகிலுள்ள ஒரு மலை .

ஜபல் அல்-நூரை மற்ற மலைகள் மற்றும் குன்றுகளிலிருந்து வேறுபடுத்தும் ஒரு இயற்பியல் அம்சமாக கருதப்படுகிறது. அதன் அசாதாரண உச்சியில் இரண்டு மலைகள் ஒன்றின் மேல் ஒன்றாக இருப்பது போல் காட்சியளிக்கிறது.

ஜபல் அல் நூர் மலையில் "ஹிரா " என்ற குகை உள்ளது, இது உலகம் முழுவதும் உள்ள முஸ்லிம்களுக்கு மிகப்பெரிய முக்கியத்துவத்தைக் கொண்டுள்ளது,

இம்மலை மக்காவின் மிகவும் பிரபலமான சுற்றுலாத்தலங்களில் ஒன்றாகும். 640 மீ (2,100 அடி) உயரம் கொண்டது; ஆயினும்கூட, ஹிரா குகைக்கு கடினமான நடைபயணம் செய்ய ஒன்று முதல் இரண்டு மணிநேரம் வரை ஆகும்.

மேலே செல்ல 1750 படிகள் உள்ளன. இந்தப் படிக்கட்டுகள் சுமார் 3.7 மீ (12 அடி) நீளமும் 1.60 மீ (5 அடி 3 அங்குலம்) அகலமும் கொண்டது. இது 270 மீ (890 அடி) உயரத்தில் உள்ளது.இந்தக் குகையைப் பார்க்க தினமும் ஐந்தாயிரம் பார்வையாளர்கள் ஏறுகிறார்கள்.

இந்தப் படிக்கட்டுகள் ஏதுவும் அமைக்கப்படாத ஆதிகாலதில் நபி (ஸல்) அவர்களின் மனைவி அன்னை கதீஜா (ரலி) அவர்கள் நபியவர்களுக்கு உணவை தினமும் கொண்டு சென்றிருக்கிறார்கள்.

மலைப்பாங்கான பாலைவனத்தில் தனிமைப்படுத்தப்பட்டுள்ள இந்த மலையின் உச்சி தனிமையான இடங்களில் ஒன்றாகும். இருப்பினும் , கஃபா வின் திசையை எதிர்கொள்ளும் வகையில் குகையின் வாசல் இருக்கிறது.

அப்போது மலை முற்றத்தில் நிற்கும் போது, மக்கள் சுற்றியுள்ள பாறைகளை மட்டுமே பார்க்க முடியும். இப்போதெல்லாம், சுற்றியுள்ள பாறைகள் நூற்றுக்கணக்கான மீட்டர்கள் முதல் பல கிலோமீட்டர் தொலைவில் உள்ள கட்டிடங்களை மக்கள் பார்க்க முடியும்.

ஹிரா ஒரு சில முட்களைத் தவிர தண்ணீர் அல்லது தாவரங்கள் இல்லாமல் உள்ளது. ஹிரா மலை தபீர் மலையை விட உயரமானது மற்றும் செங்குத்தான மற்றும் வழுக்கும் சிகரத்தால் முடிசூட்டப்பட்டது,

மலையானது ஊடுருவும் எரிமலைப் பாறைகளால் ஆனது , முக்கியமாக ப்ரீகேம்ப்ரியன் வயதுடைய கரடுமுரடான ஹார்ன்ப்ளெண்டே டோனலைட் , துணை கிரானோடியோரைட் பாறை வகையைக் கொண்டது .

நபியவர்களின் நபித்துவத்திற்கு முன்,மக்காவில் இருந்த மனிதர்கள் பெரும்பாலும் சிலை வணக்கத்தில் ஈடுபட்டிருந்தனர்.

ஆனால் அதில் ஒரு சிறு கூட்டம்,சிலை வணக்கம் செய்யாது,இப்ராஹீம் (அலை) அவர்களுடைய வழிமுறையான இஸ்லாமின் பிரகாரம் அல்லாஹ்வை மாத்திரம் வணங்கிக் கொண்டிருந்தனர்.

இப்ராஹீம் (அலை) அவர்களின் நம்பிக்கை அறியப்பட்டிருந்தாலும் அவர்களது அமல்கள் காலப்போக்கில் மக்களால் மறக்கப்பட்டது. எனவே அந்த சில மக்கா வாசிகள் அமல் செய்யாமல், ஆனால் இப்ராஹீம் நபியின் ஓரிறைக் கொள்கையில் இருந்தனர்.

அவர்களுக்கு "ஹனீப்கள்" எனப்படும். நபி(ஸல்) அவர்களின் பாட்டனார் அப்துல் முத்தலிப் ஒரு ஹனீப்.

நபி(ஸல்) அவர்களுக்கு முன், ஹிராக் குகையை அப்துல் முத்தலிப் அவர்கள்தான் பயன்படுத்தினார்கள்.

இந்தக் காலக்கட்டத்தில்தான்....

'நான் யார்' நான் ஏன் இவ்வுலகிற்கு வந்தேன்? நான் வாழும் இவ்வுலகைப் படைத்தவன் யார்? உலகிற்கு வெப்பத்தையும் வெளிச்சத்தையும் அளிக்கும் கதிரவனைப் படைத்தவன் யார்? காரிருளை விரட்டியடித்து உலகை ஒளி வெள்ளமாக்கும் அந்த முழுமதியத்தை உண்டு பண்ணியவன் எவன்? வானில் ஒளிவிட்டுக் கதிர்வீசும் விண்மீன் கூட்டங்களைத் தோற்றுவித்தவன் எவன்?

அண்ட கோளங்களையும் ஒன்றோடொன்று இணைத்து அல்லும் பகலும் சுழலச் செய்து கொண்டிருக்கும் அந்த மாபெரும் ஆற்றல் யாது? இரவும்பகலும் ஏன் மாறிமாறி வருகின்றன? வாழ்வு என்றால் என்ன?

நான் எதை நம்புவது? எதைத் தள்ளுவது? நான் என் செய்வது? நான் என் செய்யா திருப்பது? என் வாழ்வினால் உலகுக்கு நன்மை ஏற்படாதிருப்பின் நான் ஏன் இவ்வுலகில் வாழவேண்டும்? வானத்தை அண்ணாந்து பார்த்துப் பார்த்து அவர்களின் கண்களும் பூத்தன.

இவற்றையெல்லாம் படைத்தவன் எவன் என்னும் கேள்விகள் அவர்களின் சிந்தனையில் புகுந்து கொண்டது. அவர்களுக்கு விடை தோன்றவில்லை. நபிப் பட்டம் அருளப்படுவதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தனிமையின் மீதான விருப்பத்தை அல்லாஹ் அவர்களுக்கு ஏற்படுத்தினான்.

நாற்பது வயதை எட்டிப்பிடித்து மனிதப் பருவத்தை எய்தி நின்ற முஹம்மத் [ஸல்] அவர்களின் வினாவுக்கு உள்ளத்தில் அரியாசனம் ஏறி ஆட்சி செய்யும் அந்த இறைவன் தான் அவர்களின் கேள்விக்கு பதில் அளிக்க முன் வந்தான்.

ஆம் , அல்லாஹ்தான் நபியவர்களின் தேடலுக்கு விடை கொடுத்தான்.

நபி முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு. 610 கி.பி ஆகஸ்ட் 10, அல்லது ரமழானின் 21 ஆம் தேதி திங்கட்கிழமை மிகவும் சிறப்பு வாய்ந்த லைலத்துல் கத்ர் என்னும் இரவில் இறைவன் "நாமூஸுல் அஃலம்" என்னும் ஜிப்ரீயல் (அலை) அவர்கள் மூலமாக இறுதி வேதமான குர்ஆனின் முதல் ஐந்து வசனங்களின் வெளிப்பாடு இங்கு தான் இறக்கியருளப்பட்டிருக்கிறது

"(யாவற்றையும்) படைத்த உம்முடைய இறைவனின் திரு நாமத்தைக் கொண்டு ஓதுவீராக.

“அலக்” என்ற நிலையிலிருந்து மனிதனை படைத்தான்.

ஓதுவீராக: உம் இறைவன் மாபெரும் கொடையாளி.

அவனே எழுது கோலைக் கொண்டு கற்றுக் கொடுத்தான்.

மனிதனுக்கு அவன் அறியாதவற்றையெல்லாம் கற்றுக் கொடுத்தான்.

(குர்ஆன் : 96: 1- 5)

அப்போது நபி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குக்கு 40 சந்திர ஆண்டுகள், 6 மாதங்கள் மற்றும் 12 நாட்கள், அதாவது 39 சூரிய ஆண்டுகள், 3 மாதங்கள் மற்றும் 22 நாட்கள் பூர்த்தியாகி இருந்தன.

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 14

( தௌர் குகை )



இருண்ட இரவு. இன்னும் சில மணி நேரங்களில் கிழக்கு வெளுத்துவிடும். அதன் பிறகு மக்கத்து குறைஷியருக்கு விஷயம் தெரிந்து போகும். தங்களின் இரவு முற்றுகை வீணாய்ப் போனதை அறிந்து மக்கா கொதிக்கும். நகரம் சல்லடை போடப்படும்!

மக்காவில் இறைத்தூதர் முஹம்மது நபிகளார் தம் போதனைகளை எடுத்துரைத்துக் கொண்டிருந்த காலமது. உருட்டலும், மிரட்டலும் தோல்வியடைந்தது. எதிரிகள் எடுத்த முடிவு ‘படுகொலை’. தனிநபர் மீது பழி விழுந்திடாமலிருக்க ஒவ்வொரு குலத்திலிருந்தும் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டுக் கொலைக்கான நாளும் நிர்ணயிக்கப்பட்டது.

இரவில் தப்பிப் போகாமல் முற்றுகையிட்டுக் காவல் காத்து, பொழுது புலரும் வேளையில் கொன்றுவிடுவது. இதுவே எதிரிகளின் திட்டம். கருத்தை, கருத்தைக் கொண்டு உரசாமல் ஆயுதங்களின் கூர்மையால் ஒடுக்க நினைத்தனர்.

தம்மைச் சுற்றி நடப்பதை நபி பெருமானார் அறிந்து கொண்டார். நுண்ணறிவுடன் ஒரு திட்டம் தீட்டினார். அதற்கு முழுமையாய் ஆதரவு தர இளந்தோழர் அலியும் ஒப்புக் கொண்டார்.

பகைவர்கள் உருவிய வாள்களோடு பெருமானார் (ஸல்) அவர்களை எதிர்பார்த்துச் சூழ்ந்திருக்கின்றனர்.

அத்தகைய வேளையிலுங் கூட, பெருமானார் (ஸல்) அவர்கள் உயிரைக் காட்டிலும் நம்பிக்கையைக் காப்பாற்றுவதையே பெரிதாகக் கருதினார்கள்.

அலி (ரலி) அவர்களை அழைத்து வரச் செய்து, “ மக்காவை விட்டுப் புறப்பட்டுச் செல்லும்படி எனக்கு உத்தரவு கிடைத்திருக்கிறது. என்னுடைய கட்டிலில் என்னுடைய போர்வையைப் போர்த்துக் கொண்டு நீர் படுத்துக் கொள்ளும், காலையில் எழுந்து என்னிடம் நம்பிக்கையாகக் கொடுக்கப்பட்டிருந்த பொருள்களை, அவற்றிற்கு உரியவர்களிடம் ஒப்படைத்துவிட்டு, நீர் மதீனாவுக்கு வந்து சேரும்” என்று கூறினார்கள்.

தாம் தப்பி விட்டதை எதிரிகள் அறிந்து கொள்ளாமலிருக்க அலி படுக்கையில் பொழுது புலரும்வரை துயில் கொள்ள வேண்டும். முள் படுக்கையை மலர் படுக்கையாய் எண்ணி அத்தோழரும் அதற்கு இசைந்தார்.

அதன்பின் பெருமானார் அவர்கள் வெளியே வந்து, கஃபாவைப் பார்த்து, “மக்காவே! உலகிலுள்ள அனைத்திலும் நீ எனக்கு மேன்மையாக இருக்கிறாய். ஆனால் உன்னுடைய மக்களோ, என்னை இங்கே இருக்கவிடவில்லை” என்று கூறிவிட்டு,

அபூபக்கர் (ரலி) அவர்கள் வீட்டுக்குச் சென்று, அங்கிருந்து இருவரும் புறப்பட்டுச் சென்று, மூன்று மைல் தொலைவிலுள்ள தௌர் என்னும் குகையில் தங்கினார்கள்.

நபி பெருமானார் (ஸல்) தம் அருமைத் தோழர் அபூபக்கருடன் (ரலி) அவர்களுடன் மக்கா மாநகரை விட்டுக் கிளம்பிவிட்டார். ஏற்கெனவே இறைவனிடமிருந்து முன்னெச்சரிக்கையாய் மக்காவைத் துறக்க வேண்டியிருக்கும் என்ற சமிக்ஞைகள் வந்துவிட்டிருந்தன. ஏற்பாடுகளும் சித்தமாயிருந்தன.

வீட்டிலிருந்து கிளம்பிய நபிகளார் கஃபாவுக்குத் தெற்காக அமைந்திருந்த ‘மிஸ்பலா’வை அடைந்தார்கள். அந்த இடத்தில்தான் தோழர் அபூபக்கரின் வீடும் இருந்தது. மக்காவைத் துறந்து மதீனாவை அடைவது நபிகளாரின் திட்டம்.

மதீனா வட திசையிலிருக்க பயணமோ தென் திசை நோக்கி அமைந்தது. ஏனெனில், நபிகளாரைக் காணாத எதிரிகள் முதலில் விரைவது இரண்டு இடங்கள். ஒன்று அபூபக்கரின் வீடு; அடுத்தது மதீனாவுக்குச் செல்லும் பாதை. எதிரிகளைக் குழப்பி, பாதுகாப்பாக, தாம் எண்ணிய இடத்தை அடைய நபிகளார் தம் பயணத்தை வேறு விதமாக அமைத்தார்.

இரவின் கும்மிருட்டு, நட்சத்திரங்களின் கண் சிமிட்டல் ஊடாக மக்காவுக்கு தெற்கிலிருந்த மலைப்பகுதியை நபி பெருமானாரும், அபூபக்கரும் சென்றடைந்தார்கள். யார் கண்ணிலும் படாமலிருக்க நல்லதொரு மறைவிடம் தேடினார்கள். அங்கு ‘தௌர்’ என்னும் மலையின் மீது ஒரு குகை இருந்தது. குறுகியதும், ஆழமானதுமான தக்க புகலிடம். இரவு இன்னும் இருட்டிலிருந்து கரையவில்லை.

நபித்தோழர் அபூபக்கர் (ரலி) குகைக்குள் நுழைந்தார்கள். அதைச் சுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். விஷ ஜந்துக்களால் தம் தோழருக்கு ஆபத்து ஏதும் ஏற்பட்டுவிடக் கூடாதே என்ற கவலை அவருக்கு. குகையின் தரையில் நிறைய பொந்துகள் இருந்தன.

அபூபக்கர்(ரலி) அவர்கள் தம் மேலாடையைக் கழற்றி அதை சிறு சிறு துண்டுகளாய் கிழித்தார்கள். ஒவ்வொரு துண்டையும் உருட்டி பந்தாக்கினார்கள் ; பொந்துக்களை அடைத்தார்கள். இனிக் கவலையில்லை என்ற முழு நிம்மதியுடன் நபிகளாரைக் குகைக்குள் அழைத்துச் சென்றார்கள். பொழுது புலர்ந்தது.

விடியலில் தம் எதிரியை அழிக்க உருவிய வாட்களுடன், பயங்கர ஆயுதங்களுடன் நின்றனர் மக்கத்து இளைஞர்கள். வீட்டில் கண்டதோ இளம் நபித்தோழர் அலியை. கோபத்தின் உச்சிக்கே சென்றவர்கள் பெரும் கூப்பாடு போட்டார்கள். வசை மாரி பொழிந்தார்கள்.

“விடாதீர்கள்..! ஓடுங்கள்..! அபூபக்கர் வீட்டிற்கு! தேடுங்கள்.. நகர் முழுவதும் வலை வீசி! மக்காவை விட்டுச் செல்லும் பாதைகள் அனைத்தையும் அடைத்துவிடுங்கள்!

எங்கே அந்த பாலையின் தேடுவார்கள்? சென்று தேடுங்கள்.. அப்துல்லாஹ்வின் மைந்தன் முஹம்மதுவை! பெறுங்கள் அளவற்ற பரிசுகளை! தேடுங்கள்..! விடாதீர்கள்..! விடாதீர்கள்…!!” - கூச்சலும், குழப்பமுமாய் பொழுது புலர்ந்தது.

வழித்தடங்களைக் கண்டு தப்பித்தவர்கள் செல்லும் பாதையைக் கணிக்கும் நிபுணத்துவம் பெற்ற பாலைவாழ் மக்கள், நபி பெருமானார்(ஸல்) அவர்கள் சென்ற பாதையைக் கண்டுபிடித்தும் விட்டனர். அதைத் தொடர்ந்து மலைப்பகுதிக்கும் வந்து சேர்ந்தனர். எதிரிகளால் இவ்வளவு சீக்கிரம் வளைக்கப்படுவோம் என்று நபிகளார் எண்ணவில்லை.

மலையின் ஒவ்வொரு அங்குலமும் எதிரிகளால் அலசி ஆராயப்பட்டது. குகைக்குள் இருந்த நபித்தோழரின் நெஞ்சமோ படபடத்தது. இப்போது காலடிகளின் ஓசையும், வாள்களின் உரசலும் தெளிவாய்க் கேட்டன.

‘தௌர்’ மலைக்குகையையும் எதிரிகள் கண்டுபிடித்து விட்டனர். குகையின் வாயிலோ சிலந்தி வலையால் பின்னப்பட்டிருந்தது.

தேடி வந்தவர்களில் ஒருவன், “காலடிச் சுவடுகள் இத்துடன் முடிகின்றன. அவர்கள் இங்கு எங்கோதான் இருக்க வேண்டும். எதற்கும் குகைக்குள் நுழைந்து பார்த்து விடுவோம்!” – என்றான்.

மற்றவர்களும், “ஆம்..! ஆம்..! குகைக்குள் தேடுவோம்!” – என்றவாறு பளபளக்கும் வாட்களுடன் குகைக்குள் நுழையத் தயாரானார்கள்.

‘உமைய்யா பின் கலப்’, தலையை அசைத்தவாறு “நாம் தேடி வந்தவர்கள் குகைக்குள் இருக்க வாய்ப்பே இல்லை. இதோ! பார்த்தீர்களா சிலந்தி வலையை? யாராவது குகைக்குள் நுழைந்திருந்தால் இவ்வலை அறுந்திருக்க வேண்டுமே!

நாம் இங்கு கிடந்து நேரத்தை வீணாக்க வேண்டாம்! வாருங்கள்! வேறு பக்கம் தேடுவோம்! அவர்கள் தப்பி விடுவதற்குள் பிடித்தாக வேண்டும்!” என்றான் பதற்றத்துடன்.

அதேநேரத்தில் வெளியில் நடப்பதைச் சரியாகத் தெரிந்து கொள்ள முடியாத நிலையில் குகைக்குள் நபித்தோழர் அபூபக்கர் பெரும் கவலை அடைந்தார். நபிகளாரோ எவ்விதமான சலனமுமின்றி இறைவனைத் தொழுது கொண்டிருந்தார்.

அமைதி… அமைதி.. பேரமைதி! எண்ணங்கள் குவிக்கப்பட்ட அமைதி!

பரம்பொருளைச் சரணடைந்துவிட்ட உள்ளமைதி! பிராணனில் அமைதி!

பேரானந்தத்தை தொட்டுவிட்ட அமைதி! இறையருளைப் பெற்றுவிட்ட

பிரத்தியட்ச அமைதி!” நபிகளார் தொழுது முடித்தார்கள்

ஏறிட்டுப் பார்த்தார்கள். தம் தோழரின் விழிகளிலிருந்து கண்ணீர்த்துளிகள் வழிந்தோடுவதைக் கண்டார்கள்.

எதிரிகளை எதிர்கொள்ளத் தக்க ஆயுதமும், வேண்டிய ஆள் பலமும் இல்லாத நிர்க்கதியான அந்நிலையில் நபி பெருமானாரின் அமுத வாயிலிருந்து தெள்ளத் தெளிவாய் நீரோடையின் சலசலப்பாய் வார்த்தைகள் வெளிப்பட்டன.

“அஞ்சற்க தோழரே! அஞ்சற்க! இருவர் அல்ல நாம் மூவர்; இறைவனையும் சேர்த்து! இறைவன் நம்மோடு இருக்கிறான் அஞ்சற்க!”

இறை நம்பிக்கையின் இறுக்கமான உறுதியால் மலை போல வந்த பேராபத்து பனியாய் விலகிப்போனது.

மலைக்குகையின் வாயை, அற்ப சிலந்தி வலையால் பின்னச் செய்து தன் அடியாரை இறைவன் காத்துக் கொண்டான்.

சிலந்தி வலையாலும் புறா கட்டிய கூட்டினாலும் அல்லாஹ் உண்டாக்கிய பாதுகாவல், ஊருக்குச் சட்டைகளையும், உயர் கோட்டைகளையும் தேவையற்றதாக்கிவிட்டது என இமாம் பூஸிரி தங்கள் புர்தா ஷரீபில் அழகுறக் கருத்தாழத்துடன் பாடியுள்ளார்கள்.

இந்த நிகழ்வு நடந்தது தௌர் குகை அமையப்பட்ட மலையில்,

(நம் தூதராகிய) அவருக்கு நீங்கள் உதவி செய்யா விட்டால், (அவருக்கு யாதொரு இழப்புமில்லை;) நிராகரிப்பவர்கள் அவரை ஊரை விட்டு வெளியேற்றியபோது நிச்சயமாக அல்லாஹ் அவருக்கு உதவி செய்தே இருக்கின்றான்; குகையில் இருவரில் ஒருவராக இருந்த போது, (நம் தூதர்) தம் தோழரிடம், “கவலைப்படாதீர்கள்; நிச்சயமாக அல்லாஹ் நம்முடன் இருக்கின்றான்” என்று கூறினார்.

அப்போது அவர் மீது அல்லாஹ் தன் சாந்தியை இறக்கி வைத்தான்; மேலும் நீங்கள் பார்க்க முடியாப் படைகளைக் கொண்டு அவரைப் பலப்படுத்தினான்; நிராகரிப்போரின் வாக்கைக் கீழாக்கினான்;

ஏனெனில் அல்லாஹ்வின் வாக்குத்தான் (எப்போதும்) மேலோங்கும் - அல்லாஹ் மிகைத்தவன், ஞானமிக்கவன்.(குர்ஆன் : 9:40)

இறுதி வேதம் திருக்குர்ஆன் பிறந்ததோ ஹிரா மலைக்குகை.

இஸ்லாமிய வருடப் பிறப்பான ஹிஜ்ரி பிறந்ததோ தௌர் மலைக்குகை

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 15

( உஹது மலை)




1 ) உஹத் மலை நம்மை நேசிக்கிறது; அதை நாம் நேசிக்கிறோம்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

2) " உஹதே ! , தளும்பாதே உன் மீது ஒரு நபியும் , ஒரு சித்தீக்கும் , (அபூபக்கர் (ரலி) இரு ஷுஹதாக்களும் (உமர் (ரலி) , அலீ (ரலி) ) இருக்கிறார்கள் " என்று நபி (ஸல்) அவர்கள் உஹது மலையிடம் சொன்னார்கள் .

3) எல்லா சுவனத்திலும் உஹது மலை கற்கள் பதிக்கப்பட்டிருக்கும்.



சவுதி அரேபியாவின் ஹெஜாசி பகுதியில் உள்ள மதீனாவிற்கு வடக்கே உள்ள ஒரு மலையாகும் . இது 1,077 மீ (3,533 அடி) உயரமும் 7.5 கிமீ (4.7 மைல்) நீளமும் கொண்டது.

மதீனாவின் சிறிய முஸ்லீம் சமூகத்தைச் சேர்ந்த ஒரு படைக்கும், வடமேற்கு அரேபியாவில் உள்ள மக்காவிலிருந்து வந்த ஒரு படைக்கும் இடையே நடந்த இரண்டாம் யுத்தம் உஹது யுத்தம் .

உஹுது யுத்தம் 19 மார்ச், 625 CE , ஹிஜ்ரி 3 ம் வருடம் ஷவ்வால் மாதம் பிறை 15 சனிக்கிழமை அன்று நடந்தது.

பத்ரு யுத்த்தில் எப்படி முஸ்லிம்களுக்கு ஒரு மாபெரும் வெற்றி விரைவாக கிடைத்ததோ அதே போன்ற ஒரு வெற்றி உஹதிலும் முதலில் முஸ்லிம்களுக்கு கிடைத்தது, ஆனால் முஸ்லிம்களில் ஒரு சிலர் பெருமானார் (ஸல்) அவர்களை உத்தரவை சரியாக புரிந்து கொண்டு செயல்படாத காரணத்தினால் சற்று நேரத்தில் யுத்த்த்தின் போக்கு மாறியது. முஸ்லிம்களின் வெற்றி பறி போனது.

தனது வாழ்வில் எந்த யுத்த்திலும் காயம்டையாத முஹம்மது நபி (ஸல்) அவர்கள் உஹது யுத்த்தில் காயமடைந்தார்கள். அவர்களது கண்ணத்தில் காயம் பட்ட்து, முன்பற்கள் ஷஹீதாயின. பதுரு யுத்தத்தில் காபிர்களுக்கு ஏற்பட்ட அளவுக்கான உயிர்சேதம் உஹது யுத்த்தில் முஸ்லிம்களுக்கு

ஏற்பட்டு 70 முஸ்லிம்கள் ஷஹீதாயினர். அதில் ஹம்ஸா, முஸ் அப் (ரலி) போன்ற பல முக்கிய சஹாபாக்கள் ஷஹீதானார்கள்.

முஸ்லிம்கள் திகைத்தும் தடுமாறிப்போனார்கள். அல்லாஹ்விற்காக போரிடுகிற நாம் எப்படி தோற்றுப் போனோம். முஹம்மது நபி (ஸல்) அவர்கள் நம்மோடு இருக்கும் போது எப்படி நமக்கு தோல்வி ஏற்படும்? என்ற கேள்விகள் அவர்களுடையை மனதை குடைந்தெடுத்தன.

யுத்ததிலிருந்து தான் யுத்தங்கள் பிறக்கிறது என்பார்கள், அதற்கொப்ப பத்ரு யுத்ததிலிருந்து உஹது யுத்தம் பிறந்தது,

பத்ரில் ஏற்பட்ட தோல்விக்கு பழி வாங்குவதற்காக மக்காவின் காபிர்கள் தயாரானார்கள்.காபிர்கள் ஒவ்வொருவரும் அவரவர்களது சக்திக்கும் தரத்திற்கும் ஏற்ப சபதம் எடுத்துக் கொண்டனர்,

பழிதீர்க்கும் வரை மனைவியோடு உறவு கொல்லப் போவதில்லை என அபூசுப்யான் உறுதி எடுத்துக் கொண்டார்.அவரது மனைவி ஹிந்தாவோ அதுவரை எண்ணை பூசிக் கொள்ளப் போவதில்லை என்று சபதம் எடுத்துக் கொண்டார்.கவிஞர்கள் தம் கவிதையால் மக்களை தூண்டிவிட சபதம் பூண்டனர். பணக்கார்ரர்கள் தம் அடிமைகளுக்கு முஸ்லிம் தலைவர்களின் பெயர்களை குறிப்பிட்டு இன்னவரை கொன்றால் உனக்கு விடுதலை என்று வாக்களித்தனர்.

இவ்வாறு தயாரான் காபிர்களின் படை ஷவ்வால் 5 அன்று மக்காவை விட்டு புறப்பட்டது .

மக்காவின் காபிர்கள் புறப்பட்ட செய்தியை அங்கிருந்த அப்பாஸ் (ரலி) அவர்கள் ஒரு ஆள் மூலம் பெருமானாருக்கு தெரிவித்தார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்கள் மதீனாவின் அருகில் குபாவில் இருந்த போது இந்த செய்தி வந்து சேர்ந்த்து,

பெருமானார் (ஸல்) அவர்கள் அதற்கு முன்னதாக ஒரு கனவு கண்டிருந்தார்கள்,

சில மாடுகள் கொல்லப்படுவதாகவும், பெருமானாருடைய வாளில் ஒரு ஓட்டை விழுவதாகவும். ஒரு பாதுகாப்பான கோட்டையில் அவர்கள் கை விடுவதாகவும், சில ஆடுகள் அவர்களை பின் தொடர்வதாகவும் கனவு கண்டிருந்தார்கள்.

தனது தோழர்கள் சிலர் கொல்லப்படுவார்கள் என்றும் தனது குடும்பத்தை சார்ந்த ஒருவர் கொல்லப்படுவார் என்றும் பாதுகாப்பான கோட்டை மதீனா என்றும், பின் தொடரும் ஆடுகள் என்பது எதிர் அணியினரின் கொடி வீரர்கள் கொல்லப்படுவார்கள் என்றும் தனது கனவுக்கு பெருமானார் விளக்கமும் சொல்லியிருந்தார்கள்.

மக்காவிலிருந்து வந்த செய்தியை கேட்டதும் தோழர்களை திரட்டி ஆலோசனை செய்த முஹம்மது (ஸல்) அவர்கள் மதீனாவிற்குள்ளிருந்தே நாம் எதிர்களை எதிர் கொள்வோம் தரையில் அவர்களோடு சண்டையிடுகிற அதே நேரத்தில் நம் வீடுகளின் மேலிருந்தும் அவர்கள் மீது தாக்குதல் தொடுக்கலாம் என்றார்கள்.

எதிரிகள் வாசல்வரை வந்துவிட்ட நிலையில் நாம் ஊருக்குள் உட்கார்ந்திருப்பது கோழைத்தனம் என சில தோழர்கள் கருதினர். அவர்கள் உணர்ச்சி வசப்பட்டனர்.

வெள்ளிக்கிழமை ஜும் ஆ தொழுகையை முடித்துக் கொண்ட பெருமானார் (ஸல்) அவர்கள் தோழரகளின் ஆர்வத்திற்கேற்ப வெளியே புறப்பட் ஆயுதங்களை அணிந்து தயாராக வெளியே வந்த போது பெருமானாரின் விருப்பத்திற்கு மாறாக பேசி விட்டோமே என அத்தோழர்கள் வருந்தினர். முடிவை மாற்றிக் கொள்ளலாமே என்று கேட்டனர். ஒரு நபி ஆயுதம் தரித்து விட்ட நிலையில் முடிவை மாற்ற முடியாது என பெருமானார் (ஸல்) அறிவித்தார்கள்

ஆயிரம் பேர் பெருமானாருடன் புறப்பட்டனர். இடைவழியில் அப்துல்லாஹ் பின் உபை பின் சலூல் தனது ஆத்ரவாளர்கள் 300 பேருடன் பின்வாங்கிச் சென்று விடவே 700 பேருடன் பெருமானார் (ஸல்) சனிக்கிழமை அதிகாலை உஹது மலையடிவாரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். உஹது மலை மதீனாவின் எல்லையில் ஊரிலிருந்து மூன்று மைல் தொலைவில் இருந்தது,

எதிரிகளின் வலது பக்க குதிரை அணியில் காலித் பின் வலீத் இருந்தார். இடது பக்க அணியில் இக்ரிமா பின் அபீஜஹ்ல் இருந்தார்.காலிதை கண்காணிக்க சுபைர் (ரலி) அவர்களை நியமித்திருந்தார்கள்.காலிதின் நடவடிக்கைகளை கவனமாக கவனிக்க வேண்டும் என்பதற்கு பெருமானார் (ஸல்) செய்த ஏற்பாடு இது,

முஸ்லிம் வில்லாளிகள் 50 பேருக்கு தலைவராக அப்துல்லாஹ் பின் ஜுபைர் (ரலி) அவர்களை நியமித்திருந்தார்கள், அவர்களை மைதானத்திலிருந்த உயரமான ஒரு சிறு மலையின் மீது நிற்க வைத்து விட்டு நாங்க வெற்றி பெற்றாலும், தோற்றாலும் நம்முடைய உத்தரவு வராத வரை அந்த இடத்தை விட்டு அகல வேண்டாம் என்று தெளிவாக அவர்களுக்கு உத்தரவிட்டிருந்தார்கள்

யுத்தம் தொடங்கியது பெருமானார் (ஸல்) அவர்கள் கனவு கண்டது போல எதிரணியினரில் கொடி ஏந்தி நின்ற வீர்ர்கள் ஒருவர் பின் ஒருவராக 11 பேர் வெட்டி வீழ்த்தப்பட்டார்கள். யுத்தம் சூடு பிடித்து, காபிர்கள் தாங்கள் கொண்டு வந்தவைகளை களத்திலே போட்டு விட்டு ஓட்த்தொடங்கினார்கள்.

முஸ்லிம்கள் சீக்கிரத்திலேயே வெற்றியடைந்தனர்.மலையின் மேல்புறத்திலிருந்து முஸ்லிம் வில்லாளிகள் சிலர் நாம் தான் வெற்றியடைந்து விட்டோமே , இனி ஏன் இங்கு நிற்க வேண்டும். நாமும் சென்று எதிர்களின் பொருட்களை எடுப்பதில் உதவுவோம் என்று கூறினர்,

அவர்களுடைய தலைவர் பெருமானாருடையை உத்தரவின் வாசகத்தை எடுத்துச் சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை. மலையிலிருந்து கீழே இறங்கினர்.

யுத்தத்திலிருந்து திரும்பி ஓடிக்கொண்டிருந்த காலித் பின் வலீத் மலைப்பகுதி காலியாவதை கவனித்தார். சாமார்த்தியமாக ஆட்களை திரட்டி அந்த வழியாக மேடேறி முஸ்லிம்களின் மீது திடீர் தாக்குதல் தொடுத்தார். பின்னாலிருந்து முஸ்லிம்களின் அணிக்குள் ஊடுறுவினார்.

என்ன நடக்கிறது என்று யூகிப்பதற்குள்ளாக மூஸ்லிம்களின் அணி பிரிந்தது. யார் நம்முடைய ஆள் என்று தொரிந்து கொள்ள முடியாத குழப்பம் ஏற்பட்டது. அந்தக் குழப்பத்தில் முஸ்லிம்களில் சிலர் சில முஸ்லிம்களையே கொன்றனர்

நபி (ஸல்) அவர்களுக்கும் காயம் பட்டது, .எதிர்களிடமிருந்து பறந்து வந்த கல் பெருமானார் மீது பட்ட்து. அவர்களது கன்னம் காயமடைந்த்து, பெருமானாரின் தலைக்கவசம் உடைந்து அவர்களது முகத்தில் அதன் கன்னிகள் குத்தியிருந்தன. அதனால் அவர்களது முன் பற்கள் உடைந்தன. உதடு கிழிந்த்து., பெருமானார் மயக்கமானார்கள் சரிந்த அவர்களை தல்ஹா பின் உபைதுல்லாஹ் அலீ (ரலி) ஆகியோர் தாங்கிப் பிடித்து நிற்கவைத்தனர்.

பெருமானார் தான் நின்று கொண்டிருந்த மேட்டின் மீது ஏறி நிற்க முயனறார்கள், முடியவில்லை.

இதற்கிடையே இப்னு கமிஆ அல்லைஸீ என்கிற எதிரி முஸ்லிம்களின் கொடிவீரரான முஸ் அப் (ரலி) யை கொன்றான். அவர் பெருமானாரைப் போலவே இருந்ததாலும். அன்றை தினம் பெருமானாருடைய தலைக்கவசத்தை அவர் அணிந்திருந்த்தாலும் பெருமானரையே கொன்று விட்ட்தாக இப்னு கமிஆ நினைத்தான். முஹம்மதை கொன்று விட்டேன் என்று சப்தமிட்டான்.

பெருமானார் (ஸல்) நின்று கொண்டிருந்த இடத்தில் தேடினார்கள் அது காலியாக இருக்கவே செய்தி உண்மை என்று நினைத்த முஸ்லிம்கள் அதிர்ந்து போனார்கள், செய்வதறியாது நின்றார்கள் .சிலர் போர்க்களத்திலிருந்து வெளியேறினார்கள். போர்க்களத்தின் போக்கு மாறியது முஸ்லிம்களின் 70 பேர் கொல்லப்பட்டார்கள்.

பெருமானார் (ஸல்) யுத்த களத்திலிருந்து ஒரு அடி கூட நகரவில்லை. அந்த நிலையிலும் போராடிக் கொண்டிருந்தார்கள்,போராடுபவர்களுக்கு உதவிக் கொண்டிருந்தார்கள்.

அந்த நிலையிலும் சில நபித்தோழ்ரகள அற்புதமான் தெளிவுடன் இருந்தார்கள்.

முஸ்லிம்களின் ஒரு பெரும் தோல்விக்கு இடையிலும் இஸ்லாம் தோற்காது என்பதற்கான சான்று அனஸ் பின் நுழர் (ரலி) யின் வழியாக வெளிப்பட்ட்து.

ஒரு பெண்மணியின் வீரம் பெருமானாரை தேடி இப்னு கமிஆ வந்த போது அவனை உம்ம அம்மாரா (ரலி) எதிர் கொண்டார்கள்

வேதனையின் உச்சத்திலும் பெருமானாரை பாதுகாத்த சஹாபாக்களின் அக்கறை உம்மு அம்மாரா அம்மையாரில் வெளிப்பட்டது.

எனினும் முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட சோகம் அதிகமாக இருந்தது,

உஹது யுத்த்தின் தோல்வி ஆழமான வடுவாக இருந்தாலும் அதனால் முஸ்லிம்களுக்கு கிடைத்த பாடமும் படிப்பினைகளும் இஸ்லாமின் வெற்றி வரலாற்றுகு பெரிதும் உதவியாக இருந்தது.



உஹது மலைக்குகை ஒன்றில் நபி(ஸல்) அவர்களுக்கு பல்லுக்கான முதலுதவி சிகிச்சை உம்மு பாத்திமா (ரலி) அளித்தார்கள் .

2004- ஹஜ்ஜில் அக் குகையினுள் நாங்கள் சென்ற போது கஸ்தூரி இன்னும் வாடை கமகமத்தது . இன்றைக்கு வேலி போட்டு ஏறவே முடியாதபடி கான்கிரீட் போடப்பட்டுள்ளது .

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 16

( காஃப் மலை )



1) காஃப் மலையைப் பற்றி முதல் சம்பவம்

நபி இப்ராஹீம் (அலை) அவர்களிடம் , நம்ரூது , "இப்ராஹீமே.! உன்னுடைய இறைவனோடு யுத்தம் செய்ய வரச் சொல்லும். நானும் 60 லட்சம் வீரர்களோடு காத்திருக்கிறேன் " என்றான் நம்ரூத் .

இறைவன் காஃப் மலையிலுள்ள எல்லா கொசுக்களையும் திறந்தால் உலகமே கொசுக்களுக்கு பற்றாமல் அழிந்துவிடும் என்பதால் எனவே 60 லட்சம் கொசுக்களை மட்டும் திறந்து விட வானவர்களுக்கு உத்திரவு விட , அக்கொசுக்கள் ஒவ்வொருவரின் இரத்தத்தையும் தசையையும் எலும்பையும் தின்று தீர்த்தது .

கொசுக்களின் ராணி நம்ரூத்தின் மூக்கினுள் நுழைந்து மூளையை தின்ன ஆரம்பித்தது . நம்ரூத் தன்னைச் சேர்ந்தவர்களிடம் கால் மிதியடிகளைக் கொண்டு தன் தலையை அடிக்க அடிக்க தலைவலி குறைவதாகச் சொன்னான்.அடிப்பது நிறுத்தினால் தலைவலி கூடுவதால் எந்நேரமும் மிதியடி கொண்டு அடித்து தலையே பிளந்தது .பிளந்த தலையிலிருந்து ராணி கொசு பிறந்த குஞ்சுகளோடு வெளிவந்தது.

நம்ரூதும் அவனது 60 லட்சம் படை வீரர்களும் மாண்டனர்.



2) காஃப் மலையைப் பற்றி இரண்டாம் சம்பவம்.

وَّالْجِبَالَ اَوْتَادًا ۙ

"மலைகளை நாம் முலைகளாக ஆக்கிவைத்திருக்கிறோம்"

(குர்ஆன் : 78:7)

மலைகள் இருக்கக்கூடிய பகுதியில் பூகம்பங்கள் அதிகமாக ஏற்படாது. அதுபோல இந்த சமூகத்தில் இறைநேசச் செல்வர்களை அல்லாஹுதஆலா மலைகளாக ஆக்கிவைத்துள்ளான், சமுதாயம் பிளந்துவிடாமல் பாதுகாப்பாக அவர்கள் இருந்து கொண்டு இருப்பார்கள்.

மௌலானா ரூமி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் வாழ்வின் இறுதி பாகத்தில் அந்த பகுதியில் அடிக்கடி பூகம்பம் ஏற்பட்டது. மக்கள் எல்லோரும் மௌலானாவை சந்தித்து, "மௌலானா அவர்களே ! அடிக்கடி பூகம்பம் ஏற்படுகிறதே என்று சொன்னபோது,

மௌலானா அவர்கள் சொன்னார்கள், "பூமிக்கு பசிக்கிறது அதற்கு உணவு கொடுத்தால் சரியாகி விடும்" என்றார்கள், மௌலானா என்ன சொல்கிறார்கள் என்பதை மக்களால் விளங்கிக் கொள்ள முடியவில்லை.

சிலநாட்கள் கழித்து ரூமி நாயகம் வஃபாத்தாகி விட்டார்கள். அவர்களை அடக்கம் செய்யப்பட்டது. அதற்குப் பின் அந்த பகுதியில் பூகம்பம் ஏற்படுவது நின்றுவிட்டது. தான் வஃபாத்தானதும் மண்ணில் அடக்கம் செய்துவிட்டால் பூகம்பம் நின்றுவிடும் என்பதை அவர்கள் அறிந்திருந்ததால் அவ்வாறு மறைமுகமாக சொல்லியுள்ளார்கள்.

பூகம்பம், நிலநடுக்கம் எப்படி ஏற்படுகிறது?

ஹழரத் துல்கர்னைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் காஃப் எனும் மலையிடம் சென்று "அல்லாஹ்வின் மகத்துவம் பற்றி ஏதேனும் கூறு " என்று கேட்டபோது,

காஃப் மலை "அல்லாஹ்வின் மேன்மைகள் குறித்த விஷயங்கள் வார்த்தைகளில் அடங்காது" என்று கூறியதும், துல்கர்னைன் அவர்கள் எந்த அளவிற்கு நீ அறிந்துள்ளாயோ அந்த அளவிற்கு கூறு" என்றார்கள்.

காஃப் மலை கூறியது :

"எல்லா மலைகளும் என்னுடைய நரம்புகளாக உள்ளன. அழகிலும், சிறப்பிலும், அவை என்னை போன்று இல்லை. ஒவ்வொரு நகரத்திலும் என் நரம்புகள் மறைந்துள்ளது. உலகின் எல்லா திசைகளிலும் எனது நரம்புகள் வலை பிணைக்கப்பட்டுள்ளன.

வல்ல இறைவன் ஏதாவது ஒரு நகரத்தில் நிலநடுக்கம் ஏற்படுத்த நாடினால் என்னுடைய நரம்புகளை அசைக்கும் படி எனக்கு கட்டளையிடுகிறான். எந்த நரம்பு அந்த நகரத்துடன் இணைக்கப்பட்டுள்ளதோ அந்த நரம்பை நான் ஆங்காரத்துடன் அசைத்து விடுவேன். அவன் போதும் என்று கூறியதும் என்னுடைய நரம்பு அசைவை நிறுத்தி விடுகிறது.

நான் வெளிப்பார்வைக்கு அசைவற்று நிற்பதாக தெரிகிறது ஆனால் செயல்பாட்டின் பிரகாரம் நான் மிகவும் வேகமாக செயல்பட்டு வருகிறேன்.

புண்ணுக்கு தடவப்படும் களிம்பு பார்வைக்கு அசையாமல் இருந்தாலும் அதன் விளைவுகள் பயனுள்ளதாக இருக்கும். அறிவும் அசையாமல்தான் இருக்கிறது ஆனால் அதுவே வார்த்தைகளின் அசைவுக்கு காரணமாக நிற்கிறது.

பூகம்பம் குறித்த விஷயங்களை யாருடைய அறிவு அறிந்து கொள்ளவில்லையோ அவர்களின் கண்ணோட்டத்தில் நிலநடுக்கம் என்பது பூமிக்குள்ளே இருந்து கிளம்பும் வெப்பஆவியின் காரணமாகத் தெரிகிறது.

அது பூமிக்குள்ளிருந்து கிளம்பும் ஆவி அல்ல என்பதை அறிந்து கொள். அது அல்லாஹ்வின் கட்டளை மற்றும் அந்த பெரும் மலையின் காரணத்தினால்தான் ஏற்படுகிறது.

( மஸ்னவி ஷரீபின் தமிழாக்கத்தின் மூலமாக நாம் எவ்வளவு பெரிய அரிய பொக்கிஷங்களை அறிய முடிகிறது )

🟨🟦🟥🟩🟫🟪🟨🟦🟥🟩🟫🟪🟨🟦🟨🟦🟥🟩🟫🟪🟨🟦🟥🟩🟫

காஃப் மலையைப் விக்கிபீடியாவில் தேடியபோது

மவுண்ட் காஃப் - விக்கிபீடியா

மவுண்ட் காஃப் , அல்லது காஃப்-குஹ் , காஃப்சு மற்றும் காஃப்குஹ் ( பாரசீகம் : قافکوه ), அல்லது ஜபல் காஃப் என்றும் உச்சரிக்கப்படுகிறது,

டிஜெபல் காஃப் ( அரபி : جبل قاف ), அல்லது கோ-இ-காஃப் , கோ-காஃப் மற்றும் குஹி-ஜ என்றும் உச்சரிக்கப்படுகிறது. -

Qaf அல்லது Kuh-e Qaf ( பாரசீக மொழி : کوه قاف ) என்பது மத்திய கிழக்கின் பிரபலமான புராணங்களில் உள்ள ஒரு பழம்பெரும் மலையாகும் .

சில ஆரம்பகால அரபு மரபுகளில், காஃப் மலை ஜின்களின் தாயகம் என்றும் கடவுளால் பிரகாசிக்கும் மரகதத்தால் ஆனது என்றும் கூறப்படுகிறது .

ஒரு தேவதையால் பிடிக்கப்பட்ட பரந்த மீன் ( பஹாமுட் ) பிரபஞ்சத்தின் கட்டமைப்பின் இந்த வகை காட்சிப்படுத்தல் பதின்மூன்றாம் நூற்றாண்டில் அசாதாரணமானது அல்ல."

வரலாற்று ரீதியாக ஈரானிய சக்தி வடக்கு காகசஸ் முழுவதும் பரவியதில்லை மற்றும் பண்டைய கதைகள் இந்த உயரமான மலைகளை மர்மமாக மறைத்தன. ஈரானிய பாரம்பரியத்தில் இந்த மலை பின்வருவனவற்றில் ஏதேனும் இருக்கலாம்:

காஃப்காஸில் உள்ள மிக உயரமான மலை "தெரியாத" மலை Gapkuh என்று குறிப்பிடப்படுகிறது

காஃபின் பெரி மற்றும் டீவ் ராஜ்ஜியங்களில் ஷாட்-உ-காம் (இன்பம் மற்றும் மகிழ்ச்சி), அதன் அற்புதமான தலைநகரான ஜுஹராபாத் (ஜூவல்-சிட்டி), அம்பராபாத் (ஆம்பர்-சிட்டி) மற்றும் அஹர்மானாபாத் ( அஹர்மனின் நகரம்) ஆகியவை அடங்கும் .

அரபு பாரம்பரியத்தில் உள்ள மவுண்ட் காஃப் ஒரு மர்மமான மலையாகும், இது பூமியைச் சுற்றியுள்ள கடலின் தொலைவில் அமைந்துள்ளதால் "பூமியின் தொலைதூரப் புள்ளி" என்று அறியப்படுகிறது.

தொலைவில் இருப்பதால், வட துருவம் சில சமயங்களில் இந்த மலையுடன் அடையாளப்படுத்தப்படுகிறது. ஹாதிம் தையின் கணக்கின்படி , காஃப் மலைகள் பச்சை மரகதம், பெரிடாட் அல்லது கிரைசோலைட் ஆகியவற்றால் ஆனதாகக் கூறப்படுகிறது,

அதன் பிரதிபலிப்பு வானத்திற்கு பச்சை நிறத்தை அளித்தது. இது ஜின் இனத்தின் இல்லமாகவும், அதற்கு அப்பால் காணப்படாத தெய்வீக உலகம் தொடங்கும் இடமாகவும் கருதப்படுகிறது .

அரபு இலக்கியத்தில், காஃப் என்பது பூமியைத் தாங்குவதற்காக அல்லாஹ்வால் உருவாக்கப்பட்ட மலைத்தொடர்களில் மிக உயரமானது மற்றும் மற்ற அனைத்து பூமிக்குரிய மலைகளின் பெற்றோராகவும் இருந்தது, அது நிலத்தடித் தொடர்களால் இணைக்கப்பட்டது. அறியப்பட்ட உலகத்தைச் சுற்றியுள்ள கடல்களால் மனிதர்களின் உலகத்திலிருந்து வரம்பு பிரிக்கப்பட்டுள்ளது.

காஃப், ஆதிகால மலையாக, இயற்கை மற்றும் இயற்கைக்கு அப்பாற்பட்டவை சந்தித்த அண்ட மலையை அடையாளப்படுத்தியது மற்றும் நில மற்றும் வான உலகங்களுக்கு இடையிலான இணைப்பு நிறுவப்பட்டது. அங்கயும் ருக்கையும் இங்கு வந்து சேரும் என்பது ஐதீகம் . இருளில் அமைந்துள்ள மரகதத்தால் செய்யப்பட்ட நகரங்களான ஜபுல்கா மற்றும் ஜபுல்சா , காஃப் மலையை ஒட்டியதாக கூறப்படுகிறது.

ஜகாரியா அல்-கஸ்வினி ʿAjā'ib al-makhluqāt wa gharā'ib al-mawjūdāt ("படைப்பின் அற்புதங்கள்", அதாவது "உருவாக்கப்பட்ட விஷயங்களின் அதிசயங்கள் மற்றும் இருக்கும் விஷயங்களின் அதிசயமான அம்சங்கள்") 13 ஆம் நூற்றாண்டில், ஒரு புத்தகத்தில் வெளியிட்டார் . ஆரம்பகால நவீன இஸ்லாமிய சமுதாயத்தில் அது செல்வாக்கு செலுத்தியது.

கஸ்வினியின் அண்டவியல் படி, வானம் பூமியில் விழாதபடி கடவுளால் பிடிக்கப்படுகிறது. பூமி தட்டையாகக் கருதப்படுகிறது (பின்னர் இஸ்லாமிய அறிஞர்கள் அது வட்டமானது என்று நம்பினர்) மற்றும் மலைகளால் சூழப்பட்டுள்ளது - மவுண்ட் காஃப் உட்பட - அது ஆப்புகளைப் போல அதன் இடத்தில் உள்ளது; அண்டப் பெருங்கடலில் வசிக்கும் ஒரு மாபெரும் மீன் ( அரபு : بهموت Bahamūt ) பஹாமுட்டின் மீது நிற்கும் குயுதன் மூலம் பூமி ஆதரிக்கப்படுகிறது ; கடல் ஒரு தேவதை அல்லது ஜின் மேல் அமர்ந்திருக்கும் ஒரு கிண்ணத்தில் உள்ளது .

சில ஆசிரியர்களின் கூற்றுப்படி, முஸ்லீம் பிரபஞ்சவியலின் ஜபல் காஃப் என்பது ரூப்ஸ் நிக்ரா மலையின் ஒரு பதிப்பாகும் , அதன் ஏற்றம் - பர்கேட்டரி மலையில் டான்டே ஏறுவது போன்றவை ஆன்மீக நிலைகளின் வழியாக யாத்ரீகரின் முன்னேற்றத்தைக் குறிக்கிறது.

சூஃபி பாரம்பரியத்தில் காஃப் மலை

Rezoanul Islam Rasel Bahr e Okianus ஐப் பார்வையிட்டார், அங்கு ஏராளமான கதைகள் உள்ளன, அங்கு மீன் ஏதுமின்றி தேவதைகள் நிறைந்த நதி இருந்தது மற்றும் அவர்களால் வாழ்த்தப்பட்டது.

ஆன்மிக விழிப்புணர்வு இல்லாவிட்டால் யாரும் பார்க்க முடியாது. அது ஒரு நதி. சில சூஃபிஸ்திக் வாய்வழி மரபுகளில் , அப்துல்-ரஹ்மான் மற்றும் அத்தர் ஆகியோரால் கருத்தரிக்கப்பட்டது ,

காஃப் மலை நனவின் மண்டலமாகவும் முரீதின் இலக்காகவும் கருதப்பட்டது . ஹடா சாஹிப் (இ. 1903) ஒரே இரவில் காஃப் மலைக்கு விஜயம் செய்ததாகவும், பெரிஸ் மன்னரால் வரவேற்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது .

மவுண்ட் காஃப் (அசல் துருக்கிய தலைப்பு Kafdağı ) என்பது துருக்கிய எழுத்தாளர் Müge İplikçi எழுதிய நாவலின் தலைப்பாகும் .

மவுண்ட் காஃப் 1001 இரவுகளில் ஜின்களின் இல்லமாக அடிக்கடி குறிப்பிடப்படுகிறது .

Qāf என்பது மத்திய பாரசீக வார்த்தையான gâp என்பதன் அரேபிய வடிவமாகும்,அதாவது "தெரியாது".

படம் : பிரபஞ்சவியல் ஜகாரியா அல்-கஸ்வினியின் " உருவாக்கத்தின் அற்புதங்கள் " இல் உள்ள ஒரு விளக்கம், "காஃப் மலைகளின் சுற்றிலும் உள்ள ஒரு வட்டு போன்ற பூமியை ஒரு ராட்சத காளையின் (அல்-ரய்யான்) முதுகில் தங்கியிருப்பதைக் காட்டுகிறது.

கருங்கடலுக்கும் காஸ்பியன் கடலுக்கும் இடையில் உள்ள மலைகளுக்கான ஷாபூர் (கி.பி. 241-272) கல்வெட்டில் கப்கு அல்லது "தெரியாத மலை" பற்றிய பழமையான குறிப்பு காகசஸ் மலைகளின் பெயர் இறுதியில் கப்கோஃப் அல்லது காஃப்காஸிலிருந்து வந்ததாகக் கூறப்படுகிறது ,

காஃப் மலை என்பது காக்கசஸ் மலைத்தொடரா ?

"காக்கசஸ் மலைத்தொடர் ஐரோவாசியாவில் கருங்கடலுக்கும் காஸ்பியன் கடலுக்கும் நடுவில் அமைந்த மலைத்தொடர்.

காக்கசஸ் மலைகள்: உயரம் 5,642 m (18,510 அடி), நீளம் 1,100 km (680 mi), அகலம் 160 km (99 mi)

புவியியல்படி காக்கசஸ் மலைத்தொடர் ரசியா, ஜோர்ஜியா, ஆர்மீனியா, அசர்பைஜான், துருக்கி and ஈரான்

காக்கசஸ் மலைத்தொடரில் இரண்டு பிரிவுகள் உள்ளன.

பெரும் காக்கசஸ் மலைத்தொடர், கருங்கடலின் வடகிழக்கு எல்லையில் சோச்சியிலிருந்து பாகு அருகில் காஸ்பியன் கடலோரம் வரை நீட்டுகிறது. இதற்கு 100 கிமீ தெற்கில் சிறிய காக்கசஸ் மலைத்தொடர் அமைந்திருக்கிறது. காக்கசஸ் தொடரின் மிக உயரமான மலை, ரசியாவில் அமைந்த எல்பிரஸ் மலை, 5,642 மீ உயரம் அடையும்.

காக்கசஸ் மலைத்தொடர் ஐரோப்பாவுக்கும் ஆசியாவுக்கும் எல்லையாக அறியப்படுகிறது.

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 17

( துல்கர்னைன் (அலை) இருமலைகளுக்கு இடையே கட்டிய தடுப்புச் சுவர் )




இரு மலைகளுக்கிடையே (இருந்த ஓரிடத்தை) துல்கர்னைன் எத்தியபோது, அவ்விரண்டிற்கும் அப்பால் இருந்த ஒரு சமூகத்தாரைக் கண்டார். அவர்கள் எந்தச் சொல்லையும் விளங்கிக் கொள்பவராக இருக்கவில்லை.

அவர்கள் “துல்கர்னைனே! நிச்சயமாக யஃஜூஜும், மஃஜூஜும் பூமியில் ஃபஸாது - குழப்பம் - செய்கிறார்கள்; ஆதலால், எங்களுக்கும், அவர்களுக்குமிடையே ஒரு தடுப்பு(ச் சுவரை) நீர் ஏற்படுத்தித் தரும் பொருட்டு நாங்கள் உமக்கு ஒரு தொகையைத் தரலாமா?” என்று கேட்டார்கள்.

அதற்கவர்: “என் இறைவன் எனக்கு எதில் (வசதிகள்) அளித்திருக்கிறானோ அது (நீங்கள் கொடுக்க இருப்பதைவிட) மேலானது; ஆகவே, (உங்கள் உடல்) பலம் கொண்டு எனக்கு நீங்கள் உதவி செய்யுங்கள்; நான் உங்களுக்கும், அவர்களுக்குமிடையே ஓர் உறுதியான தடுப்பை ஏற்படுத்தி விடுகிறேன்”என்றுகூறினார்.

“நீங்கள் இரும்புப் பாளங்களை எனக்குக் கொண்டு வாருங்கள் (என்றார்). பிறகு அவை இரு மலைகளின் (இடையே நிரம்பி) உச்சிக்குச் சமமாகும் போது, ஊதுங்கள் என்றார்; அதனை அவர் நெருப்பாக

ஆக்கியதும் (பின்னர் “உருக்கிய) செம்பை என்னிடம் கொண்டு வாருங்கள்; அதன் மேல் ஊற்றுகிறேன்” (என்றார்).

எனவே, (யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தார்) அதன் மீது ஏறவும் சக்தி பெறவில்லை, அதில் துவாரமிடவும் அவர்கள் சக்தி பெறவில்லை. (குர்ஆன் : 18: 93-97)

இந்த இரு மலைகளும் பற்றிய குறிப்பு :

காக்கசஸ் மலைத்தொடர் ஐரோவாசியாவில் கருங்கடலுக்கும் காஸ்பியன் கடலுக்கும் நடுவில் அமைந்த மலைத்தொடர்.

காக்கசஸ் மலைத்தொடர்

உயர்ந்த இடம் உச்சி: 5,642 m (18,510 அடி)

நீளம் : 1,100 km (680 mi)

அகலம் :160 km (99 mi)

புவியியல் மலை தொடர்புடைய நாடுகள் : ரஷியா, ஜோர்ஜியா, ஆர்மீனியா, அசர்பைஜான், துருக்கி மற்றும் ஈரான்

காக்கசஸ் மலைத்தொடரில் இரண்டு பிரிவுகள் உள்ளன. பெரும் காக்கசஸ் மலைத்தொடர், கருங்கடலின் வடகிழக்கு எல்லையில் சோச்சியிலிருந்து பாகு அருகில் காஸ்பியன் கடலோரம் வரை நீட்டுகிறது. இதற்கு 100 கிமீ தெற்கில் சிறிய காக்கசஸ் மலைத்தொடர் அமைந்திருக்கிறது. காக்கசஸ் தொடரின் மிக உயரமான மலை, ரசியாவில் அமைந்த எல்பிரஸ் மலை, 5,642 மீ உயரம் அடையும்.

காக்கசஸ் மலைத்தொடர் ஐரோப்பாவுக்கும் ஆசியாவுக்கும் எல்லையாக அறியப்படுகிறது.

நூல் தஃப்சீர் தபரீ இரு மலைகளுக்கிடையே இடைவெளி உள்ள இடத்தில் சந்தித்த மக்கள் யார் என்பது தொடர்பாகப் பல்வேறு தகவல்கள் காணப்படுகின்றன.

அவர்கள் நபி நூஹ் (அலை) அவர்களின் புதல்வரான யாஃபிஸ் (யாப்பேத்) என்பவரின் வழித்தோன்றல்களான துருக்கர்கள்தான் என்பதே பலரது கருத்தாகும்.

யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தார் மங்கோலிய இனத்தார் என்று சொல்லப்படுகிறது. இவர்கள் அந்த மலைகளுக்கப்பால் வசித்துவந்தனர். வாய்ப்புக கிடைக்கும்போதெல்லாம் மலை இடுக்கின் வழியாக அந்தத் துருக்கர்களைக் கொள்ளையடிப்பது அவர்களின் வாடிக்கையாக இருந்தது. மத்திய ஆசியாவில் இருந்த 'துருக்கிஸ்தான்' பகுதியே துருக்கர்களின் வசிப்பிடமாக இருந்தது. இன்று அப்பகுதி சீனாவிலும் ரஷியாவிலுமாகப் பிரிந்துவிட்டது

யஃஜூஜ் மஃஜூஜ் என்பது வடகிழக்கு ஆசியாவில் வாழ்ந்த ஒரு சமூகத்தாரின் பெயராகும் என்று சொல்லப்படுகிறது. இவர்கள் வளமிக்க நாடுகளைக் கொள்ளையடித்து வாழ்ந்துவந்தனர். மாஸ்கோ உள்ளிட்ட ரஷியப் பகுதிகளில் அவர்கள் வசித்துள்ளனர். கருங்கடலின் வடக்கு கிழக்குப் பகுதிகளில் வாழ்ந்த 'சித்தியன்' (Soythians) சமூகத்தாரே யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தார் ஆவர் என்பது சிவரது வாதமாகும்.

ஆர்மீனியா ஆதர்பைஜான் ஆகிய இரு மலைகளுக்கிடையில்தான் துல்கர்னைன் தடுப்புச் சுவர் எழுப்பி அவர்களின் ஊடுருவலைத் தடுத்தார் என்பர் சிலர் (சுயூத்தி)

இன்னும் சிலர், மங்கோலிய ஆதிவாசிகளே யஃஜூஜ் மஃஜூஜ் இனத்தார் என்றும், தென் ரஷியாவில் 1200 கி.மீ. நீளமுள்ள 'கவ்காஸ் (Caucase) மலைத்தொடரில் வசித்த மக்களே துல்கன்னைனிடம் முறையிட்டனர் என்றும் கூறுவர்.

எனவே துல்கர்னைன் காஸ்பியன் கடற்கரையில் உள்ள 'தர்பந்த்' நகரிலிருந்து கருங்கடல் தடுப்புச் சுவர் எழுப்பினார் சிலர் இதை மறுக்கின்றனர்; அது துருக்கிஸ்தான் நாட்டின் 'தர்பந்த்' என்கின்றனர் காண்க வரைபடம் -

யஃஜூஜ் மஃஜூஜ் பற்றி விவிலியம் பழைய ஏற்பாட்டில் 'எசேக்கியேல்' ஆகமத்தில் 38 மற்றும் 39ஆவது அதிகாரங்களில் குறிப்பிட்டுள்ளதாகச் சிலர் கருதுகின்றனர்.

மேசேக் தூபால் ஜாதிகள் என்றும் அதன் அதிபதியின் பெயர் கோக் என்றும் பழைய ஏற்பாடு சொல்கிறது. (தஃப்சீர் மாஜிதீ அல்முன்ஜித்)

இந்த சுவர் எங்கே இருக்கிறது?

திருக்குர்ஆனில் இந்த சுவர் இருக்கும் இடம் பற்றி எந்தக் குறிப்பும் இல்லை. வரலாறு மற்றும் புவியியல் நூல்களில் இதுபற்றி இவ்வாறு கூறப்படுகிறது.

''யாஜூஜ், மாஜூஜ் என்பது துருக்கியரிலுள்ள ஒரு கூட்டத்தினர் பெயராகும். இவர்கள் ஐந்தாவது ஆறாவது கண்டங்களின் கீழ் திசையில் வசித்தவர்கள்" (ஆதாரம்: ஹக்கானி)

முஹம்மத் பின் ஜரீர் தபரீ தமது சரித்திர நூலில் குறிப்பிடுகையில், "ஆஜர் பைஜானின் தேசாதிபதி இந்த தேசத்தை வென்றபொழுது, அந்தச் சுவரைப் பார்த்து வருவதற்காக ஒருவரை அனுப்பினார். அவர் வடக்கில் கேஸ்பியன் கடலிலுள்ள கரஜ் எனும் கடற்கரை வழியாகச் சென்று பார்த்து வந்தார்" என்று குறிப்பிடுகின்றார்.

கலீபா முஃதஸிம் தமது கனவில் இந்த சுவர் இடிந்து தகர்ந்திருப்பது போல் கண்டார். அதனை நிச்சயப்படுத்திக் கொள்வதற்காக ஐம்பது பேர் கொண்ட ஒரு குழுவை அனுப்பினார்.

அதே கரஜ் வழியாகச் சென்ற அவர்கள், பார்த்து வந்து, இரும்புப் பாளங்களால் உறுதியாகக் கட்டப்பட்டிருப்பதாகவும், மிக உயரமாக இருப்பதாகவும் அதற்கு ஒரு பெரிய தலைவாசல் இருப்பதாகவும் அதில் பூட்டு போடப்பட்டிருப்பதாகவும் கூறினார்கள்.

அந்தக் குழுவுக்கு வழிகாட்டியாகச் சென்றவர், அவர்களை ஸமர்கந்திற்கு நேராக வெளிக் கொணர்ந்ததாகவும் கூறுகின்றனர். இவ்வாறு இப்னு கர்திபா என்பவர் தமது நூலில் குறிப்பிடுகிறார்.

''அஹ்ஸனுத் தக்ஸீம், பீமஃரிபத்தில் அகாலீம்" - (கண்டங்களை அறிவதற்குரிய அழகிய நூல்) என்பதில் இவ்வரலாறு இப்படி விவரமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது:

"அப்பாஸி கலீபா வாதிக் பில்லாஹ் என்பவர், ஒரு குழுவை நியமித்து அதன் தலைவராக முஹம்மது பின் மூஸா காரீஸ் என்பவரை ஏற்படுத்தி பிரயாணத்திற்குரிய சாதனங்களையெல்லாம் தயார் செய்து கொடுத்து அனுப்பினார்."

"இக்குழுவினர் துருக்கிஸ்தான் அரசர் தர்கான் என்பவரின் நாட்டு வழியாக அந்தச் சுவர் இருக்கும் இடத்தை அடைந்தனர். அதைப்பற்றிய விவரத்தை அவர்கள் அறிவிக்கையில்,'

"150 கஜமுள்ள இருமலைகளுக்கிடையிலுள்ள ஒரு கணவாய். அதன் இருபக்கங்களிலும் 15 கஜ அகலத்தில் இரும்புப் பாளங்களால் கட்டப்பட்டு அதன்மீது உருக்கப்பட்ட செம்பை ஊற்றி இடைவெளிகள் இணைக்கப்பட்டுள்ளன. ஓர் உறுதியான பலம் வாய்ந்த முக்கியத் தலைவாசல் அமைக்கப்பட்டு மிகப் பலமான இரும்புத் தாழ்ப்பாள்களால் அடைக்கப்பட்டிருக்கிறது"

"இது பூமியின் வடக்கில் புகாராவுக்கு அருகிலுள்ள தர்பந்து எனும் இடத்தில் இருப்பதாகக் கூறப்படுகிறது என்பதாகவும்" மேற்கண்ட நூலில் கூறப்பட்டுள்ளது.

வேறு சிலரும் சில குறிப்புக்களைக் கூறியுள்ளனர். அல்லாஹ்வே நன்கறிகிறவன்.

ஆக, துல்கர்னைனிடம் ஒரு கூட்டத்தினர் யாஜூஜ், மாஜூஜின் அட்டகாசங்கள் பற்றிக் கூறியபொழுது, அவர்களிடம் அக்கூட்டம் வரமுடியாதவாறு அவர் மலைகளைக் கெட்டியாக அடைத்துவிட்டார்.

அவர்கள் அக்கட்டடத்தின் மீது ஏறித் தாண்டி வந்துவிடவோ, அதனைத் துளையிட்டு நுழைந்து வந்துவிடவோ முடியாது. இறுதிநாள் தோன்றியதும் இதர மலைகள் எல்லாம் உடைந்து சிதறுவது போல் இதுவும் சிதறிப்போய் விடும். அப்பொழுது மற்றவர்களைப் போல் யாஜூஜ், மாஜூஜ் கூட்டத்தினரும் ஒன்று திரட்டிக் கொண்டு வரப்படுவர்.

"இது என்னுடைய இரட்சகனிடமிருந்து (எனக்குக் கிடைத்து)ள்ள அருளாகும். ஆகவே, என்னுடைய இரட்சகனின் வாக்குறுதி (யான இறுதிநாள்) வரும் பொழுது அதனை (த்தூள் தூளாக்கி) சமதரையாக ஆக்கி விடுவான். மேலும், என்னுடைய இரட்சகனின் வாக்குறுதி உண்மையானதாக இருக்கின்றது" என்று (துல்கர்னைன்) கூறினார் ( குர்ஆன் : 18 : 98 )

அன்னை ஜைனப் பின்து ஜஹஷ் (ரலி) அவர்கள் இதுபற்றி அறிவிக்கிறார்கள்:-

''ஒருநாள் பெருமானார் (ஸல்) அவர்கள் பீதி அடைந்தவர்களாக என்னிடம் வந்து, '"அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் இல்லை. ஒரு தீங்கினால் அரபியருக்குக் கேடு விளையப் போகிறது. யாஜூஜ், மாஜூஜின் தடுப்புச் சுவர் திறக்கும் நாள் இந்த அளவிற்கு நெருங்கிவிட்டது எனக் கூறியவர்களாக பெருவிரலையும் சுட்டு விரலையும் வளைய விட்டுக் காட்டினார்கள்.

அப்பொழுது நான் , "அல்லாஹ்வின் தூதரே ! நம்மிடையே நல்லவர்கள் இருக்கையில் நாமும் நாசம் அடைந்து விடுவோமா ?" எனக் கேட்டேன்

அதற்கு அவர்கள், " ஆம் கெடுதி அதிகரிக்கும் பொழுது ( அழிய வேண்டியதுதான் ) " என்று பதில் அளித்தார்கள். ( நூல் புகாரி )

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 18

( நிஹாவந்த் மலை )

திண்ணமாக உமர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் ஒரு படையை மதீனாவிலிருந்து 150 கி.மீ தூரத்தில் நிஹாவந்த் என்னும் இடத்திற்கு அனுப்பி வைத்தார்கள். ஸாரியா (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களை அப்படைக்கு தளபதியாக நியமித்தார்கள். (மதீனாவில்) சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்த உமர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் 'யா ஸாரியா! அல் ஜபல்!' (ஸாரியாவே! மலையை கவனித்து சண்டையிடுங்கள்) என சப்தமிட்டார்கள்.

பிறகு படையிலிருந்து ஒரு தூதர் வந்து சொன்னார். அமீருல் முஃமினீன் அவர்களே! எங்கள் எதிரிகளோடு நாங்கள் போர் புரிந்தபோது அவர்கள் எங்களை விரட்டியடித்தார்கள். அப்போது 'யா சாரியா அல் ஜபல்' என்று சத்தம் கேட்டது. பின்னர் மலையை எங்களுக்கு பின்புறமாக ஆக்கி கொண்டு போர் செய்தோம். அல்லாஹ் அவர்களை விரட்டி விட்டான்.

ஹழ்ரத் இப்னு உமர் (ரழியல்லாஹு அன்ஹு)

நூல் – பைஹகீ (தலாயிலுந் நுபுவ்வா) – 2655

ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் மதீனா நன்னகரிளிருந்து கொண்டே "நிஹாவந்து என்னும் இடத்தில் போர் செய்து கொண்டு இருந்த படை தளபதி சாரியா (ரலி) அவர்களுக்கு (யா சாரியா அல் ஜபல் என) எச்சரிக்கை விடுத்துள்ளார்கள்" (நூல் மிஷ்காத் 546)

இந்த நிஹாவந்த் மலையில் அறிவியலை மிஞ்சிய ஆன்மிக செயல்கள் நடைபெற்றது .

உமர் (ரலி) அவர்களது கண், மிகத் தொலைவில் உள்ள தம் படையின் காட்சியை கண்டது என்றும், சாரியா (ரலி) அவர்களது காது தொலைவிலுள்ள உமர் (ரலி) அவர்களது சப்தத்தை கேட்டது என்றும் இந்த நிகழ்ச்சி உறுதி செய்கிறது இம்மலையில் தான்.

வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 19

( ஸஃபா மற்றும் மர்வா மலைகள் )

ஹிஜாஸ் மலைத்தொடர் மற்றும் சரவத் மலைத்தொடர்

இரண்டு மலைகளின் தனிப்பட்ட புவியியல் வரலாறு ஒப்பீட்டளவில் அறியப்படுகிறது.

மர்வா மலை, ஸஃபா மலையை விட மென்மையானது மற்றும் இலகுவான நிறமாக விவரிக்கப்பட்டுள்ளது, சிலர் அதை மஜ்த் அத்-தின் ஃபெரோசாபாடி, அஸ்-ஜுபைடி, அல்-ஃபயோமி போன்ற வெள்ளை என்றும் அழைக்கிறார்கள்.

ஸஃபாவின் நிறம் சிவப்பு நிறத்துடன் ஒப்பிடத்தக்கது

ஸஃபா என்பது ஹிஜாஸ் மலைத்தொடரில் அபு குபைஸ் மலையின் அடிப்பகுதியில் அமைந்துள்ள ஒரு சிறிய மலையாகும், இது கஃபாவின் தென்கிழக்கே 130 மீ (430 அடி) தொலைவில் உள்ளது , இது தொங்கலோட்டம் என்னும் ஸயீயின் தொடக்க மலையாகும்.

மர்வாவைப் பொறுத்தவரை, இது கபாவின் வடகிழக்கில் 300 மீ (980 அடி) தொலைவில் அமைந்துள்ள வெள்ளைக் கல்லால் ஆன ஒரு சிறிய மலையாகும், மேலும் இது ஸயீயின் முடிவைக் குறிக்கும் வகையில் கைகான் மலையுடன் இணைக்கப்பட்டுள்ளது.

இம்மலைகள் இப்போது சவூதியின் அரேபியா மக்காவின் ஒரு பகுதியான அல்-ஹராம் கஃபாவுடன் இணைத்துப் பார்க்கப்படுகிறது.

முஸ்லீம்கள் ஹஜ் மற்றும் உம்ராவின் சடங்கு யாத்திரைகளில் பயணம் செய்து, இவைகளுக்கு இடையே ஏழு முறை முன்னும் பின்னுமாக ஷயீ என்னும் தொங்கலோட்டமாக ஓடுகின்றனர். ஸஃபாவிற்கும் மர்வாவிற்கும் இடையிலான தூரம் தோராயமாக 450 மீ (1,480 அடி), எனவே, ஏழு பயணங்கள் முன்னும் பின்னுமாக சுமார் 3.6 கிமீ (2.2 மைல்) ஆகும்.

ஏன் தொங்கலோட்டம் ஓட வேண்டும் ?

இது கஃபாவுக்கு அருகில் உள்ள இரு குன்றுகளின் பெயர்களாகும் இதைப்பற்றி அல்லாஹ் குர்ஆனில்

"நிச்சயமாக ஸஃபாவும்,மர்வாவும் அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் ஒன்றாகும்.(2:158)என்று கூறுகின்றான்.

ஆதம் ஸஃபியுல்லாஹ் (அலை) அவர்கள் ஸஃபா மலை மீது உட்கார்ந்ததால் அதற்கு அந்தப் பெயர் வந்தது என்றும்,

ஹவ்வா (அலை) அவர்கள் மர்வா மலை மீது உட்கார்ந்ததினால் மர்வா (பெண் - மனைவி) என்று பெயர் ஏற்பட்டதாகவும் கூறப்படுகின்றது.

அரபிகள் இரு மலைகளிலும் அஸஃப்,நாயிலா என்ற சிலைகளை வைத்து தொங்கோட்டம் ஓடித் தொட்டு வந்தனர் என்றும் பின்னர் ,அரபிகள் இஸ்லாத்தை ஏற்ற பின் அச்சிலைகள் அகற்றப்பட்டன.என்றும் வரலாறு கூறுகின்றது.

பின்னர் அதில் தொங்கோட்டம் ஓடுவதில் மக்கள் ஐயமுற்றபோது அல்லாஹ் அதனால் குற்றமில்லை என்று செய்தி அனுப்பினான்.

‘நிச்சயமாக ஸஃபா மர்வா (என்னும் மலைகள்) அல்லாஹ்வின் அடையாளங்களில் உள்ளவை. எனவே, (கஅபா என்னும்) அவ்வீட்டை ஹஜ் அல்லது உம்ராச் செய்பவர்கள் அவ்விரண்டையும் வலம் வருவது குற்றமில்லை’ என்ற (திருக்குர்ஆன் 02:158)

மேலும் சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன் நபி இப்றாஹீம் (அலை) தங்கள் மனைவி ஹாஜரா,குழந்தை இஸ்மாயீல் இருவரையும் இங்கே அல்லாஹ்வின் கட்டளைப்படி கொண்டு வந்து விட்டு சென்றனர்.

“ஜம் ஜம்”! அது ஒரு கடலோ, ஏறியோ, நதியோ அல்ல ! இரண்டு ஒன்று நபர்கள் கட்டிப் பிடித்தால் அதற்குள் அடங்கி நிற்கும் அளவுள்ள ஒரு ஊற்றுக் கிணறு தான் ! ஆனால் அது படைத்து நிற்கும் சரித்திரமோ வரலாற்று நாயகர்களை எல்லாம் வியப்பில் ஆழ்த்தி நிற்கச் செய்திருக்கிறது

மனிதர்கள் இல்லாத பாலைவனமாக இருந்த அந்த இடத்தில் குழந்தை இஸ்மாயீலை படுக்க வைத்துவிட்டு,அன்னை ஹாஜரா ஸஃபா- மர்வா மலைகளுக் கிடையே தண்ணீரைத்தேடி இங்கும்மங்கும் ஓடினார்கள்கள்.

அனல் பறக்கும் கொடும் வெய்யிலில் தரையில் கிடத்தப்பட்டிருந்த பிஞ்சுப் பாலகன் இஸ்மாயீல் தாகக்கொடுமை தாழாமல் கதறிப் பீறிட்டுக் கத்தி அழுது கொண்டு கிடந்தார்கள். பசியும் சேர்ந்து சோதித்தது !

குழந்தையின் அழுகுரல் கேட்டு மனம் பதைத்த அன்னை ஹாஜரா அவர்கள் செய்வதறியாது விழித்தார்கள். மார்பிலே அமுது வற்றிப் போயிருந்தது. மண்ணிலே நீர் வறண்டு போய்க் கிடந்தது. தொண்டை கிழியக் கதறி அழும் மழலைக்குத் தொண்டையை நனைத்து விடக்கூட அங்கு ஒரு துளி நீரும் இல்லை. பெற்ற மனம் பதறியது !

இடப்புறம் திரும்பிப் பார்த்தார்கள். அன்னை ஹாஜரா அம்மையார் “ஸபா” குன்றில் நீர் வடிவம் தெரிந்தது ! ஓடிச் சென்று பார்த்தார்கள் அது காணும் நீரல்ல ! கானல் நீர் !

மீண்டும் வலப்புறம் பார்த்தார்கள். “மர்வா” குன்றில் நீர் வடிவம் நெழிந்தது. ஓடிச்சென்று பார்க்கையில் அதுவும் வெற்றுக் கானல் நீரே !

இப்படியே ஏழுமுறை ஸபா – மர்வா மலைக்குன்றுகளில் தன் பெண்மையின் மென்மையை சிதைத்து வதைத்து ஓடி ஓடிப் பார்த்தார்கள். எல்லாம் ஏமாற்றமே ! குழந்தையின் அழுகுரல் தவிர எதையும் பெற முடியவில்லை !

தாகக் கொடுமையால் தளிர் பாதம் உதறி உதறிக் கதறும் இஸ்மாயீல் அவர்களின் மேல் இறைவன் கருணை கொண்டு விட்டான். அவர்களின் பிஞ்சுப்பாதம் உதைத்து உதைத்துத் தோண்டிய சின்னஞ்சிறு குழியில் புனித அமுத “ஜம் ஜம்” நீர் பொங்கிப் பெருகி ஓடத் துவங்கியது !

திடீரென்று இதைக் கண்ணுற்ற அன்னை ஹாஜரா அவர்கள் அத்தண்ணீர் எங்கே ஓடி மறைந்து விடுமோ என்ற பயத்தால் தன்னிரு கரம் கொண்டு மணல் அணை கட்டி தன் தாய் மொழியால் “ஜம் ஜம்” “நில் ! நில்” என்றார்கள். அள்ளிப் பருகினார்கள் ! ஆனந்தம் கொண்டார்கள் ! இறைவனுக்கு நன்றி சொன்னார்கள் !

அன்று அன்னை ஹாஜரா அவர்கள் அணை போட்டுத் தடுத்து ஜம் ஜம் (நில் நில்) என்று சொல்லாமல் இருந்திருந்தால் இக்காலமும் இனி எக்காலமும் அந்நீர் உலகமெல்லாம் ஓடிக் கொண்டு இருக்கும். இறைவன் எண்ணம் அப்படி நடந்து விட்டது!

ஒரு தாய்மையின் பாதம் புண்ணாகிப் போன நிலைக்கு இறைவன் அளித்த அருட்கொடை தான் “ஜம் ஜம்” தண்ணீர் ! இறைவனுக்காக எதையும் தாங்கும் இதயம் கொண்ட குடும்பத்துக்குக் கிடைத்த பரிசு தான் “ஜம் ஜம்” தண்ணீர் !

இத்தனை வரலாறுகளையும் தன்னகத்தே கொண்டதுதான் ஸஃபா மற்றும் மர்வா மலைகள் என்பதை அல்லாஹ் :

"நிச்சயமாக ஸஃபா மர்வா (என்னும் மலைகள்) அல்லாஹ்வின் அடையாளங்களில் உள்ளவை" (திருக்குர்ஆன் 02:158)

வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 20

( தூர் சினாய் மலை - எகிப்து )



இம்மலை கடல் மட்டத்திலிருந்து 7,497 அடி (2,285 மீட்டர்) உயரமுள்ள மலை

சினாய் மலை , தென்-மத்திய கிரானைட் சிகரம் சினாய் தீபகற்பம், சினாய் மலை யூத வரலாற்றில் தெய்வீக வெளிப்பாட்டின் முக்கிய தளமாக அறியப்படுகிறது,

இம்மலையில்தான் கடவுள் தோன்றியதாகக் மேற்கண்ட மூன்று மதங்களிலும் கூறப்படுகிறது.

மோசே அவருக்கு பத்துக் கட்டளைகளைக் கொடுத்தார் (யாத்திராகமம் 20; உபாகமம் 5).இம்மலை கிறிஸ்தவ மற்றும் இஸ்லாமிய மரபுகளிலும் மிகவும் புனிதமானது.

இன்னும், நாம் அவரை தூர் (ஸினாய்) மலையின் வலப்புறத்திலிருந்து கூப்பிட்டோம்; மேலும் இரகசியத்தில் பேச நாம் அவரை நம்மிடம் நெருங்கி வரச் செய்தோம். ( குர்ஆன் 19:52)

"தூர் மலையை உங்கள் மேல் உயர்த்தி நாம் உங்களுக்குக் கொடுத்த (தவ்ராத்)தை உறுதியுடன் பற்றிக் கொள்ளுங்கள்; அதை செவியேற்றுக்கொள்ளுங்கள். என்று உங்களிடம் நாம் வாக்குறுதி வாங்கினோம். (அதற்கு அவர்கள்) நாங்கள் செவியேற்றோம்; மேலும்(அதற்கு) மாறு செய்தோம் என்று கூறினார்கள்

மேலும் அவர்கள் நிராகரித்த காரணத்தினால் அவர்கள் இதயங்களில் காளைக்கன்றின் (பக்தி) புகட்டப்பட்டது. நீங்கள் முஃமின்களாக இருந்தால் உங்களுடைய ஈமான் எதை கட்டளையிடுகிறதோ அது மிகவும் கெட்டது என்று (நபியே!) நீர் கூறும்.( குர்ஆன் 2:93)

பாரான் மலையில் தோன்றிய பிரகாசம் எது?

ஆதார நூல்: பைபிளில் நபிகள் நாயகம்

பைபிளின் பழைய ஏற்பாட்டில் உபாகமம் என்ற ஆகமம் உள்ளது. இந்த ஆகமத்தில் நபிகள் நாயகம் (ஸல்) குறித்த மற்றொரு முன்னறிவிப்பு காணப்படுகிறது.

மோசேவின் வேதமான உபாகமம் 33:1,2 ஆகிய இரு வசனங்களில் இந்த முன்னறிவிப்பைக் காணலாம். கடவுளின் மனுஷனாகிய மோசே தான் மரணமடையுமுன் இஸ்ரவேலரை ஆசீர்வதித்துக் கூறிய ஆசீர்வாதமாவது,

கர்த்தர் சீனாயிலிருந்து எழுந்தருளி, சேயீரிலிருந்து அவர்களுக்கு உதயமானார்,

பாரான் மலையிலிருந்து பரிசுத்தவான்கள் நடுவிலிருந்து பிரசன்னமானார்.

அவர் வலதுபுறத்தில் அக்கினிமயமான பிரமானம் அவர்களுக்கு வெளிப்பட்டது. (உபகாமம் 33:1,2)

கடவுளாகிய கர்த்தர் தனது வேத வெளிப்பாட்டை தீர்க்கதரிசிகளுக்கு வழங்கிய இடங்கள் இங்கே குறிப்பிடப்படுகின்றன.

”கர்த்தர் சீனாயிலிருந்து எழுந்தருளி” என்பது சீனாய் மலையைக் குறிப்பிடுகிறது. சீனாய் மலையில் தான் மோசேவுக்கு வேதம் அருளப்பட்டது. கர்த்தரின் வழிகாட்டுதல் சீனாய் மலையில் வழங்கப்பட்டதால் ”கர்த்தர் சீனாயிலிருந்து எழுந்தருளி” எனக் கூறப்படுகிறது. கர்த்தர் எழுந்தருளி என்பதன் பொருள் என்ன என்பதை அறிய முடிகிறது.

”சேயீரிலிருந்து அவர்களுக்கு உதயமானார்” என்பதன் பொருள் என்ன? மோசேவுக்கு அருளப்பட்ட இவ்வேதத்தில் ”சேயீரிலிருந்த அவர்களுக்கு உதயமானார் எனக் கூறப்படுகிறது. இது சேயீரிலிருந்து ஒரு தீர்க்கதரிசிக்கு வேதம் அருளப்பட்டதைக் குறிக்கிறது என்று தான் எடுத்துக் கொள்ள வேண்டும். மோசேவுக்கு அருளப்பட்ட இந்த முன்னறிவிப்பு இயேசுவின் வருகை மூலம் நிறைவேறியது.

”பாரான் மலையிலிருந்து பிரகாரமாய்த் தோன்றி” என்பதன் பொருள் என்ன? அதை நாம் அறிந்திட பாரான் மலை எதுவென நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

பாரான் மலை என்பது மோசே வாழ்ந்த பகுதியிலும் இல்லை. இயேசு வாழ்ந்த பகுதியிலும் இல்லை. மாறாக அது மக்காவில் அமைந்துள்ள மலைகளில் ஒரு மலையின் பெயராகும்.

இதை நாம் சொல்லவில்லை. பைபிளே கூறுகின்றது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இஸ்ரவேல் சந்ததயில் தோன்றியவர்கள் என்பதை முஸ்லிம்களும் கிறித்தவர்களும் யூதர்களும் அறிவார்கள். இஸ்மாயீல் என்னும் இஸ்மவேல் மக்கா நகரில் தான் வளர்ந்தார், வாழ்ந்தார் என்பது அனைவரும் அறிந்த உண்மையாகும்.

ஸம்ஸம் எனும் நீரூற்று இஸ்மவேல் குழந்தையாக இருந்த போது அவரது தாகம் தனிப்பதற்காக கடவுளால் ஏற்படுத்தப்பட்டது என்பது முஸ்லிம்களின் நம்பிக்கை. அந்த நீரூற்று இன்று வரை மக்காவில் இருந்து வருகிறது.

இஸ்மவேல் எந்தப் பகுதியில் வளர்ந்தார், வாழ்ந்தார் என பைபிளும் கூறுகிறது.

கடவுளோ ஆபிரகாமைப் பார்த்து அந்தப் பிள்ளையின் பொருட்டு உன் அடிமைப் பெண்ணின் பொருட்டும் நீ வருத்தப்பட வேண்டாம். சாராள் உனக்குச் சொல்வதெல்லாவற்றிற்கும் செவிகொடு, ஈசாக் மகனிடமே உன் சந்ததி விளங்கும். அடிமைப் பெண்ணின் மகனையும் ஒர ஜனமாக்குவேன். அவனும் உன் சந்ததியே என்றார்.

ஆபிரகாம் அதிகாலையில் எழுந்து, ஆகாரமும் ஒரு துருத்தித் தண்ணீரும் எடுத்து ஆகாரிடம் கொடுத்து, அவள் தோளின் மேல் வைத்து, பிள்ளையையும் ஒப்புக்கொடுத்து அவளை அனுப்பி விட்டான். அவள் புறப்பட்டுப்போய், பெயர்ஷெபாவின் வனாந்திரத்தில் அலைந்து திரிந்தாள்.

துருத்தியிலிருந்து தண்ணீர் செலவழியவே, அவள் பிள்ளையை ஒரு செடியின் கீழ் விட்டு, பிள்ளை சாகிறதை நான் பார்ப்பேனோவென்று சொல்லி, அம்பு பாயும் தூரத்தில் போய், எதிரே உட்கார்ந்து சப்தமிட்டு அழுதாள்.

கடவுள் பிள்ளையின் சத்தத்தைக் கேட்டார். கடவுளின் தூதனானவன் வானத்திலிருந்து ஆகாரைக் கூப்பிட்டு, ஆகாரே உனக்கு நேரிட்டதென்ன? பயப்படாதே. பிள்ளை இருக்கும் இடத்தில் கடவுள் அவன்

சப்தத்தைக் கேட்டார். நீ எழுந்து பிள்ளையை எடுத்து, அவனை உன் கையால் பிடித்துக் கொண்டு போ! அவனைப் பெரிய ஜனமாக்குவேன் என்றார். கடவுள் அவளுடைய கண்களைத் திறந்தார்.

திறக்கவே தண்ணீருள்ள ஒரு துரவை அவள் கண்டு, போய், துருத்தியில் தண்ணீர் நிரப்பி, பிள்ளைக்குக் குடிக்கக் கொடுத்தாள். கடவுள் பிள்ளையோடிருந்தார். அவன் வளர்ந்து வனாந்திரத்தில் குடியிருந்தான். அவன் வளர வளர வில் வித்தையிலும் வல்லவனானான்.

பாரான் வனாந்தரத்தில் அவன் குடியிருக்கையில் அவனுடைய தாய் எகிப்து தேசத்துப் பெண் ஒருத்தியை அவனுக்கு விவாகஞ் செய்வித்தான். (ஆதியாகமம் 21:12-21)

இஸ்மவேல் பாரான் வனாந்தரத்தில் வசித்ததாக பைபிள் கூறுகிறது. இஸ்லாமிய வரலாறு மக்கா எனக் கூறுவதும், பைபிள் பாரான் எனக் கூறுவதும் ஒரே பகுதி தான். என்பதை இதிலிருந்து நாம் அறியலாம். இந்தப் பகுதியில் வாழ்ந்த இஸ்மவேலின் வழித்தோன்றல்களாகத் தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்தார்கள்.

மோசேயின் காலத்திலிருந்து இன்றைய காலம் வரை பாரான் மலையிலிருந்து வேத வெளிப்பாடு யாருக்காவது கிடைத்ததா? என்றால் நபிகள் நாயகம் தவிர வேறு யாருக்கும் கிடைக்கவில்லை.

சீனாய் மலையில் தோன்றிய பிரகாரசம் மோசேவின் வேதம் என்றால்,

சீயேரில் தோன்றிய ஒளி இயேசுவின் வேதம் என்றால்,

பாரானில் தோன்றிய பிரகாசம் எது?

அப்பகுதியில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைத் தவிர வேறு எவரும் கர்த்தரின் தூதர் எனக் கூறியதில்லை. மோசே காலம் முதல் நபிகள் நாயகம் காலம் வரை பாரானின் மக்கள் அறியாமை இருளிலேயே மூழ்கியிருந்தனர்.

எனவே பாரான் (ஹிரா) மலையிலிருந்து தோன்றிய பிரகாசம் என்பது நபிகள் நாயகத்தையும் அவர்களுக்கு அருளப்பட்ட வேதத்தையும் தான் குறிப்பிடுகிறது என்பதில் ஐயமில்லை.

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 21

( கல்வாரி மலை )



கல்வாரி மலை ஜெருசலேம் நகரின் வடமேற்கில், ஒரு சுண்ணாம்பு குவாரிக்கு அருகில் அமைந்துள்ளது. கல்வாரி மலை அல்லது கோல்கோதா (அராமைக் மொழியில், கோல்கோதா,'மண்டை ஓடு') அங்கு இயேசு பைபிளின்படி, அவர் சிலுவையில் அறையப்பட்ட பிறகு கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டார்.

இயேசு சிலுவையுடன் நடந்த தூரம் நாசரேத்தின் மையத்தில் தொடங்கி 24 மைல்கள் (40 கி.மீ) தூரமுள்ள கல்வாரி மலைக்கு நடந்தார்

இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்ட நாள் வெள்ளிக்கிழமை, ஏப்ரல் 3ந் திகதி, கிபி 33ம் வருடம் (03-04-33)

அல்லாஹ் எனும் ஒரே ஒரு கடவுள் தான் இருக்கிறான். அவனைத் தவிர வேறு கடவுள் இல்லை. அவனைத் தவிர யாரையும், எதனையும் வணங்கக் கூடாது என்பதை நம்புவதும், மனிதர்களை நல்வழிப்படுத்த மனிதர்களில் இருந்தே தூதர்களை இறைவன் நியமித்து வந்தான்.

அந்தத் தூதர்கள் வரிசையில் இறுதியாக வந்தவர் முஹம்மது நபி என்பதை நம்புவதும் இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையாகும். இக்கொள்கையை ஒருவன் நம்பினால் தான் அவன் முஸ்லிமாக முடியும்.

உலகின் மிகப் பெரிய மதங்களில் ஒன்றாகத் திகழும் கிறித்தவ மதத்தின் கொள்கை என்ன? ஒருவன் கிறித்தவனாவதற்கு அவன் கொள்ள வேண்டிய கொள்கை என்ன?

ஆதாமும் ஏவாளும் அந்தக் கட்டளையை மீறி தடுக்கப்பட்ட மரத்தின் கனியைப் புசித்தனர். இதனால் அவர்கள் பாவிகளானார்கள். அவர்கள் பாவிகளானதால் அவர்களின் சந்ததிகளும் பாவிகளாகப் பிறக்கின்றனர்.

எந்த ஒரு பாவம் செய்தாலும் அதற்குப் பாவ நிவாரணப் பலி கொடுக்க வேண்டும். ஆதாம் செய்த பாவத்தின் காரணமாக மனிதர்கள் பாவிகளாகப் பிறப்பதால் மிகப் பெரும் பலியைக் கொடுத்தால் தான் அந்தப் பாவம் மனிதனை விட்டு விலகும். அதற்காக இயேசு தன்னையே பலியிட்டு அனைவரின் பாவங்களுக்கும் பரிகாரம் தேடி விட்டார்.

இயேசு நமக்காக தன் உயிரையே கொடுத்தார் என்று ஒருவன் நம்பினால் தான் பிறவிப் பாவம் விலகும். இயேசு நமக்காகப் பலியானார் என்பதை யார் ஒப்புக் கொள்ளவில்லையோ அவரை விட்டு பிறவிப் பாவம் (ஜென்மப் பாவம்) நீங்காது.

இந்தக் கொள்கையின் மீது தான் கிறித்தவம் கட்டி எழுப்பப்பட்டுள்ளது

ஆனால் திருக் குர்ஆனோ ...

وَّقَوْلِهِمْ اِنَّا قَتَلْنَا الْمَسِيْحَ عِيْسَى ابْنَ مَرْيَمَ رَسُوْلَ اللّٰهِ وَمَا قَتَلُوْهُ وَمَا صَلَبُوْهُ وَلٰـكِنْ شُبِّهَ لَهُمْ وَاِنَّ الَّذِيْنَ اخْتَلَـفُوْا فِيْهِ لَفِىْ شَكٍّ مِّنْهُ مَا لَهُمْ بِهٖ مِنْ عِلْمٍ اِلَّا اتِّبَاعَ الظَّنِّ وَمَا قَتَلُوْهُ يَقِيْنًا ۙ

அன்றி "அல்லாஹ்வுடைய தூதர், மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹை நிச்சயமாக நாம் (சிலுவையில் அறைந்து) கொலை செய்து விட்டோம்" என்று அவர்கள் கூறியதனாலும் அவர்களைச் சபித்தோம். அவரை அவர்கள் கொலை செய்யவும் இல்லை. அவரை அவர்கள் சிலுவையில் அறையவும் இல்லை.

(அவர் இருந்த அறைக்குள் அவரைத் தேடிச் சென்றவன் அவரைப்போல் ஆக்கப்பட்டு விட்டான். தேடிச்சென்ற மற்றவர்கள் அவனையே சிலுவையில் அறைந்தனர். இதனால்) அவர்கள் சந்தேகத்திற்குள்ளாக்கப்பட்டு விட்டனர். ஆகவே, எவர்கள் இதற்கு மாறான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்களோ அவர்கள் வீண் சந்தேகத்திலேயே ஆழ்ந்து விட்டனர். வீண் சந்தேகத்தைப் பின்பற்று வதன்றி அதில் அவர்களுக்கு உண்மையான ஞான(ஆதார)ம் கிடையாது. நிச்சயமாக அவர்கள் அவரைக் கொலை செய்யவே இல்லை. (குர்ஆன் : 4:157)

இயேசு சிலுவையில் அறையப்படவில்லை என்று 1,500 ஆண்டுகள் பழமையான பைபிள் கூறுகிறது - விக்டர் ஓச்சியெங்

மே 24, 2019 அன்று VOI ஆல் இடுகையிடப்பட்டது

சவக்கடல் சுருள்கள் மற்றும் நாஸ்டிக் நற்செய்திகள் உட்பட பல பைபிள்கள் சமீபத்திய காலங்களில் வெளிவந்திருந்தாலும், இந்த சமீபத்தியது வத்திக்கானுக்கு ஒரு பெரிய கவலையாகத் தோன்றுகிறது, குறிப்பாக இயேசு சிலுவையில் அறையப்படவில்லை என்று கூறுவதால். - விக்டர் ஓச்சியெங்

துருக்கியில் கண்டுபிடிக்கப்பட்ட சுமார் 1,500-2,000 ஆண்டுகள் பழமையான பைபிள் வத்திக்கானை அதிர்ச்சியில் ஆழ்த்தியுள்ளது, ஏனெனில் அது பரவலாக நம்பப்படும் இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப்படவில்லை என்பதை உறுதிப்படுத்துகிறது.

2000 ஆம் ஆண்டு கண்டுபிடிக்கப்பட்டு அங்காராவின் எத்னோகிராபி அருங்காட்சியகத்தில் ரகசியமாக வைக்கப்பட்ட பைபிளில் இயேசுவின் சீடர் பர்னபாஸின் நற்செய்தி உள்ளது .

கிறிஸ்து சிலுவையில் அறையப்படவில்லை அல்லது கடவுளின் மகன் அல்ல என்று நற்செய்தி கூறுகிறது . மாறாக, அவர் ஒரு தீர்க்கதரிசி என்று கூறுகிறது. புத்தகம் அப்போஸ்தலன் பவுலை "வஞ்சகர்" என்றும் குறிப்பிடுகிறது, மேலும் கிறிஸ்து உயிருடன் பரலோகத்திற்கு ஏறிச் சென்றார், காட்டிக் கொடுத்த யூதாஸ் இஸ்காரியோட் அவருக்குப் பதிலாக சிலுவையில் அறையப்பட்டார்.

தற்போது சர்ச்சைக்குரிய புத்தகம் மத்திய தரைக்கடல் பகுதியில் நடத்தப்பட்ட நடவடிக்கையின் போது, பழங்கால பொருட்கள் மற்றும் சட்டவிரோத வெடிபொருட்களை கடத்தும் கும்பலுக்கு எதிராக அதிகாரிகள் சென்றதால், மீட்கப்பட்டதாக தி நேஷனல் டர்க் செய்தி வெளியிட்டுள்ளது . பழைய புத்தகம் தற்போது 40 மில்லியன் துருக்கிய லிராஸ், தோராயமாக $28 மில்லியன் என மதிப்பிடப்பட்டுள்ளது.

நிபுணர்கள் மற்றும் மத அமைப்புகள் புத்தகத்தை ஆய்வு செய்து, இது அசல் துண்டு என்று ஒப்புக்கொண்டனர். இது இயேசு கிறிஸ்துவின் மொழியான அராமிக் மொழியில் தங்க எழுத்துக்களில் தெளிவாக எழுதப்பட்டுள்ளது. பைபிளின் புதிய ஏற்பாட்டிற்கு முரணான இஸ்லாத்துடன் உடன்படும் போதனைகள் இதில் உள்ளன. புத்தகத்தில், 700 ஆண்டுகளுக்குப் பிறகு இஸ்லாத்தின் தீர்க்கதரிசி முஹம்மது நபியின் பிறப்பை இயேசு முன்னறிவித்தார் .

இத்தனை வரலாற்று சம்பவங்களும் கல்வாரி மலையை மையப்படுத்தி நடந்த நிகழ்வுகளாகும்.

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 22

( துவா மலைப் பள்ளத்தாக்கு )

ஃபிர்அவ்னின் பிடியில் இருந்து தப்பித்த இஸ்ராயீலர்கள் மூஸா அலைஹி வஸ்ஸலாம் மற்றும் ஹாரூன் அலைஹி வஸ்ஸலாம் ஆகியோருடன் சினாயில் தங்கியிருந்த இடத்திற்கு பெயர் உயூன் மூஸா என்பதாகும். உயூன் மூஸா என்ற அரபி சொல்லுக்கு மூஸாவின் ஊற்றுக்கள் என்று பெயர்.

اِذْ نَادٰىهُ رَبُّهٗ بِالْوَادِ الْمُقَدَّسِ طُوًى

“துவா” என்னும் புனித பள்ளத்தாக்கில் அவருடைய இறைவன் அவரை அழைத்து, (குர்ஆன் : 79:16)

اِنِّىْۤ اَنَا رَبُّكَ فَاخْلَعْ نَـعْلَيْكَ‌ اِنَّكَ بِالْوَادِ الْمُقَدَّسِ طُوًى

“நிச்சயமாக நாம் தான் உம்முடைய இறைவன்; நீர் உம் காலணிகள் இரண்டையும் கழற்றிவிடும்! நிச்சயமாக நீர் “துவா” என்னும் புனிதமான பள்ளத்தாக்கில் இருக்கிறீர். (குர்ஆன் : 20:12)

தெற்கு சினாய்க்கு சென்ற இஸ்ராயீலர்களை அழைத்து மீண்டும் துவா பள்ளத்தாக்கிற்கு அருகிலிலுள்ள வாதியராஹ் என்ற இடத்தில் தங்கவைத்தார்கள். அந்த காலத்தில் இஸ்ராயீலர்களுக்கு தண்ணீர் பற்றாக்குறை ஏற்ப்பட்டபோது அவர்கள் மூஸா அலைஹிவஸ்ஸலாம் அவர்களிடம் முறையிட்டனர். அதற்கு பிறகு நடைபெற்ற நிகழ்ச்சியை குர்ஆன் விவரிக்கிறது.

மூஸாவின் கூட்டத்தாரைத் (தனித்தனியாகப்) பன்னிரண்டு கூட்டங்களாக பிரித்தோம்; மூஸாவிடம் அவர்கள் குடி தண்ணீர் கேட்டபோது, நாம் அவருக்கு: “உம்முடைய கைத்தடியால் அக்கல்லை அடிப்பீராக!” என்று வஹீ அறிவித்தோம், (அவர் அவ்வாறு அடித்ததும்) அதிலிருந்து பன்னிரண்டு ஊற்றுக்கள் பொங்கி வந்தன; அவர்களில் ஒவ்வொரு வகுப்பாரும் தாம்(நீர்) அருந்தும் ஊற்றைக் குறிப்பறிந்து கொண்டார்கள். 7:160

“மூஸா தம் கூட்டத்தவருக்கு நீர் புகட்டத் தேடிய போது நாம் (அவரிடம்) நீர் உம்முடைய (கைத்) தடியால் இக்கல்லில் அடிப்பீராக!“ எனக் கூறினோம். (அவரடித்தார்) உடனே அதிலிருந்து 12 ஊற்றுக்கள் ஓலித்தோடின. ஒவ்வொரு கூட்டத்தினரும் தாங்கள், அருந்தும் (நீர்த்) துறையை அறிந்து கொண்டனர். (அல்குர்ஆன் - 02 :60)

வாதி அர்பையின் என்று அறியப்படும் இந்த பள்ளத்தாக்கில் இந்த கல்லில்தான் மூஸா அலைஹி வஸ்ஸலாம் அவர்கள் அடித்தார்கள். அந்த ஊற்றுக்களில் நீர் வடிந்த அடையாளங்கள் இன்றும் உள்ளன.

வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 23

( குகைத் தோழர்களின் மலைக் குகை )




திருக்குர்ஆன் சூரா கஹ்பில் 9ஆம் வசனத்தில இருந்து 20ம் வசனம் வரைக்கும் ஓர் அற்புதமான வரலாறு சொல்லப்பட்டிருக்கிறது. ஆம் குகைத் தோழர்களின் அதிசயமான வரலாறு.

தக்யானோஸ் என்ற ஒரு கொடுங்கோல் மன்னன் ஆட்சி செய்து வந்தான். அவனும் அவனது குடிமக்களும் அல்லாஹ்வுக்கு இணைவைப்பவர்களாக இருந்தனர்.

அப்போது இணைவைத்தல் மடமை என்றும் பாவம் என்றும் அறிந்து கொண்ட இறைநம்பிக்கை கொண்ட, நபி ஈஸா (அலை) அவர்களை பின்பற்றி நடக்கும் ஏழு இளைஞர்கள் இணைவைக்கக் கூடாது அல்லாஹ்வை மாத்திரமே வணங்க வேண்டும் என்று மக்களுக்கு உபதேசம் செய்தனர். இதை அறிந்த மன்னன் இவ்வாலிபர்களைக் கொலை செய்ய முயற்சித்தான்.

அவர்களோ தமக்கிருந்த அனைத்து வசதிவாய்ப்புக்களையும் விட்டுவிட்டு அல்லாஹ்வின் மார்க்கத்தைச் சுமந்தவர்களாக தலைமறைவாயினர். கடைசி வரை மன்னனாலும் மக்களாலும் அவர்களைக் கண்டுகொள்ளவே முடியவில்லை.

அவர்கள் ஜோர்டானின் தலைநகர் அம்மானிலிருந்து தென்கிழக்கே 7 கி.மீ தொலைவில் அல்- ரஜீப் என்ற கிராமம் இருக்கிறது.இன்றும் அந்த குகை அங்கே இருக்கிறது. அந்த இடத்தின் பெயரை திருக்குர்ஆன் ரகீம் என்று கூறுகிறது. ஏழு இளைஞர்களும் அம்மலைக் குகையில் தஞ்சமடைந்தனர். புகலிடம் தேடிக் குகைக்குள் நுழைந்தவர்கள் தம்மைக் காத்தருளும்படி நெஞ்சுருக இறைவனிடம் வேண்டினார்கள். குகையில் போதிய இட வசதி இருந்தது. இளைஞர்களுடன் அவர்களின் செல்லப் பிராணியான நாயும் அவர்களுடன் இருந்தது.

அதிகாலையில் சூரியன் உதிக்கும்போது, அதன் கதிர்கள் குகையை விட்டு விலகி வலதுபுறமாகப் பாயும். மாலையில் மறையும்போது குகையைக் கடந்து இடதுபுறமாகத் தாழும். இத்தகைய அமைப்பில் மலைக்குகை அமைந்திருந்தது.

குகைக்குள் சென்ற இளைஞர்கள் களைப்பில் படுத்தனர். ஆழ்ந்த உறக்கம் அவர்களைப் பற்றிக்கொண்டது. குகை வாயிலில் நாய் படுத்துக் கொண்டது.

ஆழ்நிலை உறக்கம் அது. வருடக் கணக்கில் துயில் கலையாமல் இருக்கும்படியான நித்திரையை இறைவன் வழங்கியதாக குர்ஆனில்

فَضَرَبْنَا عَلٰٓى اٰذَانِهِمْ فِى الْـكَهْفِ سِنِيْنَ عَدَدًا ۙ

ஆதலால், அக்குகையில் பல வருடங்கள் (நித்திரை செய்யும் படி) அவர்களுடைய காதுகளைத் தட்டிக் கொடுத்தோம்.(குர்ஆன் : 18:11)

நித்திரையில் இருந்த அத்தனை காலமும், உணவும், நீரும் இல்லாமல் வலப்புறம், இடப்புறம் என்று மாறி மாறிப் புரண்டு தூக்கத்தில் பல்லாண்டுகள் லயித்திருந்தார்கள்.

இதற்கிடையில், ஊரில் இறைநம்பிக்கை கொண்ட ஆட்சி, அதிகாரம் என்று பல மாற்றங்கள் நடந்துவிட்டன.

குகையில் உறங்கிக் கொண்டிருந்த இளைஞர்களின் உறக்கம் கலைந்தது. கொட்டாவி விட்டுக்கொண்டே ஒருவர், “சரியான தூக்கம்” என்றார்.

“நாம் எவ்வளவு நாட்கள் உறங்கியிருப்போம்?” என்று அடுத்தவர் கேட்டார்.

“என்ன.. ஒரு நாள் அல்லது அதைவிடக் குறைவான நேரமாகத்தான் இருக்கும்!” என்றார் இன்னொருவர்.

“சரி.. சரி.. சர்ச்சையை விடுங்கள்! நாம் எத்தனை நாள் உறங்கினோம் என்பதை எல்லாம் வல்ல இறைவன் நன்கறிவான். பசி வயிற்றைக் கிள்ளுகிறது. அதனால், ஒருவர் ஊருக்குள் சென்று சாப்பிட ஏதாவது வாங்கி வாருங்கள். யாராவது அடையாளம் கண்டுவிடப் போகிறார்கள் எச்சரிக்கை!” என்று தம் ஊரார் குறித்த பயம் விலகாமலேயே அவர் சொன்னார்.

இளைஞர்களில் ஒருவர் ஊருக்குள் சென்றார். கடைவீதிகளெல்லாம் வித்தியாசமாக இருந்தது. பரிச்சயமானவர்கள் யாரும் தென்படவில்லை. இதுவும் அவருக்கு வியப்பாக இருந்தது.

ஒரு கடைக்குள் சென்றவர் தேவையான உணவுப் பொருட்களைக் கேட்டு வாங்கினார். அதற்கான காசை நீட்டினார். அதைப் பெற்றுக் கொண்ட கடைக்காரரின் முகம் மாறியது. அவர் இளைஞரை மேலும் கீழும் பார்த்தார். நாணயத்தை உருட்டி உருட்டிச் சோதித்தார். மெல்ல சிரித்தார்.

இளைஞருக்கு ஒன்றும் புரியவில்லை. முந்நூறு ஆண்டுகள் காலம் கடந்து, ரோம் நகரின் ஒரு அங்காடியில், பழங்கால நாணயத்தையல்லவா அவர் நீட்டியிருந்தார்!

கடைக்காரர் இளைஞரின் கையைப் பிடித்துக்கொண்டு, “செல்லாக்காசைக் கொடுத்து என்னை ஏமாற்றவா பார்க்கிறாய்? நானாவது ஏமாறுவதாவது! இந்த நாணயம் உனக்கு எப்படிக் கிடைத்தது? நிச்சயம் ஏதாவது புதையல்தான் உனக்குக் கிடைத்திருக்க வேண்டும். என்னுடன் வா.. அரசாங்க அதிகாரியிடம் செல்வோம்!” என்று மிரட்டினார்.

“பெரியவரே! நான் நேற்றுதான் இந்த ஊரிலிருந்து வந்தேன். அப்போது நான் வைத்திருந்த நாணயம் இது. அதற்குள் செல்லாக் காசாகிவிட்டது என்றால் எப்படி? பல நூறு ஆண்டுகளுக்கு முந்தையது என்று வேறு சொல்கிறீர்கள். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. குழப்பமாக இருக்கிறது” என்றார் அந்த இளைஞர்.

“உனக்கு ஒன்றும் புரியாதுதான்! விசாரிக்க வேண்டிய முறைப்படி விசாரித்தால் எல்லா உண்மையும் வெளிப்பட்டுவிடும்” .

கடைக்காரர் போட்ட கூப்பாட்டில் கடைவீதியே கூடிவிட்டது.

இளைஞரின் பேச்சு எல்லோரையும் குழப்ப, கடைசியில் அவரை அரசவைக்கு அழைத்துச் சென்றார்கள்.

பல்லாண்டுகளுக்கு முன் இறந்தோர் மீண்டும் எழுப்பப்படுவாரா? என்று மறுமை தொடர்பான விவாதம் அரசவையில் நடந்துகொண்டிருந்தது.

விசாரணையின் முடிவில் கொடுங்கோலர்களிடமிருந்து தங்கள் இறைநம்பிக்கையைப் பாதுகாத்துக்கொள்ள கொஞ்ச நாளைக்கு முன்னாடிதான் ஊர்துறந்து ஒரு குகையில் தஞ்சமடைந்ததாக அந்த இளைஞர் அரசனிடம் சொன்னார். ஆனால் அச்சம்பவத்தை பல நூறு ஆண்டுகளுக்கு முன் ஊராரும் தங்கள் மூதாதையரிடமிருந்து பரம்பரை பரம்பரையாக கேள்விப்பட்டிருந்தார்கள்.

இளைஞர்கள் தங்கிய குகைக்கு முன்னால் ஊரார் அனைவரும் வியப்பில் கூடினார்கள்.

“முந்நூறு ஆண்டுகளா நாம் உறங்கிக் கிடந்தோம்!” என்று இளைஞர்கள் வியப்பில் ஆழ்ந்தனர். குகைக்கு வெளியே திரளாய் நின்றிருந்த மக்களுக்கு வாழ்த்துத் தெரிவித்தார்கள். இறைவனை துதித்தவாறு மீண்டும் படுத்துக்கொண்டார்கள். அந்த நிமிடமே அவர்களின் உயிரும் பிரிந்தது.

இம்மையில் மாண்டவர், மறுமையில் மீண்டெழுவது குறித்த விவாதத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் அதற்கான உதாரணத்தை நேரில் கண்டார்கள்.

பொதுவாக குகைகள் இரகசியங்களோடு தொடர்புடவை. தோழர்களின் குகையோ ஒரு சத்தியத்தின் பகிரங்ரமான பிரகடனம். இந்த சம்பவம் அம்மலையும், அம்மலையில் உள்ள குகையிலும் நடந்தது.

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 24

(தாயிஃப் நகரத்து இரு மலைகள் )

தாயிஃப் ஹிஜாஸ் மலைகளின் சரிவுகளில் 1,879 மீ (6,165 அடி) உயரத்தில் அமைந்துள்ளது, இதுவே சரத் மலைகளின் ஒரு பகுதியாகும் ,

கி.பி. 619 மே மாதம் இறுதி அல்லது ஜுன் மாத ஆரம்பத்தில் அதாவது

நபித்துவத்தின் பத்தாவது ஆண்டு நபி (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து 60 மைல் தொலைவிலுள்ள தாயிஃபிற்கு தங்களது அடிமை ஜைது இப்னு ஹாஸாவுடன் கால்நடையாகச் சென்றார்கள். திரும்பும்போதும் கால்நடையாகவே திரும்பினார்கள்.

வழியிலிருந்த ஒவ்வொரு கூட்டத்தாருக்கும் இஸ்லாமிய அழைப்பு கொடுக்கப்பட்டும், அக்கூட்டத்தால் எவரும் இஸ்லாமிய அழைப்பை ஏற்றுக் கொள்ளவில்லை.

நபி (ஸல்) அவர்கள் தாயிஃபிற்குச் சென்றடைந்தபோது அங்கு வசித்து வந்த ஸகீஃப் கூட்டத்தாரின் தலைவர்களும் ‘அம்ர் இப்னு உமைர் அஸ்ஸகபி’ என்பவனின் பிள்ளைகளுமான 1) அப்து யாலில்,2) மஸ்ஊது 3) ஹபீப் என்ற மூன்று சகோதரர்களிடம் சென்றார்கள். அவர்களிடம் இஸ்லாமைப் பரப்புவதற்கு உதவி செய்ய வேண்டும் என்று கோரினார்கள்.

ஆனால், அவர்களில் ஒருவன் “உன்னை அல்லாஹ் தூதராக அனுப்பியது உண்மையென்றால் நான் கஅபாவின் திரைகளைக் கிழித்து விடுவேன்” என்று கூறினான்.

மற்றொருவன் “அல்லாஹ்வுக்கு உன்னைத் தவிர நபியாக அனுப்ப வேறொருவர் கிடைக்கவில்லையா?” என்று கேட்டான்.

மூன்றாமவன், “அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் உன்னிடம் ஒருபோதும் பேச மாட்டேன். நீ உண்மையில் தூதராக இருந்தால் உனது பேச்சை மறுப்பது எனக்கு மிக ஆபத்தானதாகும். நீ

அல்லாஹ்வின் மீது பொய் கூறுபவராக இருந்தால் உன்னிடம் பேசுவதே எனக்குத் தகுதியல்ல” என்று கூறினான்.

அப்போது நபி (ஸல்) “இதுதான் உங்கள் முடிவாக இருந்தால் நமது இந்த சந்திப்பை மக்களுக்கு வெளிப்படுத்தாமல் மறைத்துவிடுங்கள்” என்று கூறினார்கள்.

நபி (ஸல்) தாயிஃபில் பத்து நாட்கள் தங்கி அங்குள்ள மற்ற எல்லா தலைவர்கள், பிரமுகர்களைச் சந்தித்து இஸ்லாமிய அழைப்பு விடுத்தார்கள். ஆனால், அவர்களில் எவரும் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளாததுடன் தங்களது ஊரைவிட்டு உடனடியாக வெளியேறும்படியும் கூறி, நபி (ஸல்) அவர்கள் மீது வம்பர்களை ஏவிவிட்டனர்.

நபி (ஸல்) அவர்கள் ஊரைவிட்டு வெளியே செல்ல முயன்றபோது அங்குள்ள வம்பர்களும் அடிமைகளும் ஒன்றுகூடி அவர்களை ஏசிப்பேசினர்.

இறுதியில் மக்களின் கூட்டம் அதிகமாகி அவர்கள் அனைவரும் இரு அணிகளாக நின்று கொண்டு, நபி (ஸல்) அவர்களின் மீது கற்களை எறிந்தனர். அதிகமான கற்களை நபி (ஸல்) அவர்களின் குதிகால் நரம்பை நோக்கி எறியவே அவர்களது பாதணிகளும் இரத்தக் கறைகளாயின.

நபி (ஸல்) அவர்களுடன் இருந்த அவர்களது அடிமை ஜைது இப்னு ஹாஸா நபியவர்களைக் காப்பதற்காக தங்களையே கேடயமாக்கிக் கொண்டார்கள். இதனால் அவரது தலையில் பலத்த காயம் ஏற்பட்டது.

தாயிஃபிலிருந்து மூன்று மைல்கள் தொலைவிலுள்ள ரபிஆவுடைய மகன்களான உத்பா, ஷைபா என்ற இருவருக்குச் சொந்தமான தோட்டம் வரை நபி (ஸல்) அவர்களை அடித்துக் கொண்டே வந்தனர். நபி (ஸல்) அந்த தோட்டத்திற்குள் சென்று அங்குள்ள திராட்சை தோட்ட பந்தலின் நிழலில் அமர்ந்தார்கள்.

அப்போதுதான் மிகப் பிரபலமான அந்த பிரார்த்தனையை நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் வேண்டினார்கள். இதனால் நபி (ஸல்) அவர்களின் உள்ளம் அவர்களுக்கு நேர்ந்த கொடுமைகளினால் எவ்வளவு வேதனை அடைந்திருந்தது என்பதையும் தாயிஃப் மக்கள் இஸ்லாமை ஏற்காததினால் எவ்வளவு துக்கத்திற்கு ஆளானார்கள் என்பதையும் இந்த பிரார்த்தனையிலிருந்தே தெரிந்துகொள்ளலாம்.

இதோ நபி (ஸல்) கேட்ட பிரார்த்தனை:

“அல்லாஹ்வே! எனது ஆற்றல் குறைவையும் எனது திறமைக் குறைவையும் மனிதர்களிடம் நான் மதிப்பின்றி இருப்பதையும் உன்னிடமே முறையிடுகிறேன். கருணையாளர்களிலெல்லாம் மிகப்பெரியகருணையாளனே! நீதான் எளியோர்களைக் காப்பவன் நீதான் என்னைக் காப்பவன். நீ என்னை யாரிடம் ஒப்படைக்கிறாய்? என்னைக் கண்டு முகம் கடுகடுக்கும் அந்நியனிடமா? அல்லது என்னுடைய காயத்தை நீ உரிமையாக்கிக் கொடுத்திடும் பகைவனிடமா?

உனக்கு என்மீது கோபம் இல்லையானால் இந்த கஷ்டங்களை யெல்லாம் நான் பொருட்படுத்தவே மாட்டேன். எனினும், நீ வழங்கும் சுகத்தையே நான் எதிர்பார்க்கிறேன். அதுவே எனக்கு மிக விசாலமானது.

உனது திருமுகத்தின் ஒளியினால் இருள்கள் அனைத்தும் பிரகாசம் அடைந்தன் இம்மை மறுமையின் காரியங்கள் சீர்பெற்றன. அத்தகைய உனது திருமுகத்தின் ஒளியின் பொருட்டால் உனது கோபம் என்மீது இறங்குவதிலிருந்தும் அல்லது உனது அதிருப்தி என்மீது இறங்குவதிலிருந்தும் நான் பாதுகாவல் கோருகிறேன்.

அல்லாஹ்வே! நீயே பொருத்தத்திற்குரியவன். நீ பொருந்திக் கொள்ளும்வரை உன் கோபத்திலிருந்து பாதுகாப்புத் தேடுகிறேன். அல்லாஹ்வே! பாவத்திலிருந்து தப்பிப்பதும், நன்மை செய்ய ஆற்றல் பெறுவதும் உனது அருள் இல்லாமல் முடியாது.”

நபி (ஸல்) அவர்களை இந்த நிலைமையில் பார்த்ததும் ரபிஆவின் மகன்களுக்கு இரக்கம் வந்தது. தங்களது கிறிஸ்துவ அடிமை அத்தாஸை அழைத்துத் “திராட்சைக் குலையை அவருக்குச் சென்று கொடு” என்று கூறினர்.

திராட்சைக் குலைகளை அத்தாஸ் நபி (ஸல்) அவர்களுக்கு முன் வைத்தவுடன் நபி (ஸல்) அவர்கள் ‘பிஸ்மில்லாஹ்’ என்று கூறி சாப்பிட்டார்கள்.

இதைக் கண்ட அத்தாஸ் “இந்தப் பேச்சு இவ்வூர் மக்கள் பேசும் பேச்சல்ல. உங்களுக்கு இது எப்படித் தெரியும்?” என்று கேட்டார்.

அதற்கு, “உனக்கு எந்த ஊர்? உனது மார்க்கம் என்ன?” என்று அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கேட்க,

அதற்கு அவர் “நீனவாவைச் சேர்ந்த கிறிஸ்துவன் நான்” என்றார்.

“நல்லவரான யூனுஸ் இப்னு மத்தாவின் ஊரைச் சேர்ந்தவர்தானே?” என்று நபி (ஸல்) அவரிடம் கேட்டதற்கு அவர் ஆச்சயத்துடன்,

“யூனுஸ் இப்னு மத்தாவைப் பற்றி உங்களுக்கு எப்படி தெரியும்” என்றார்.

“அவர் எனது சகோதரர் அவரும் ஓர் இறைத்தூதராக இருந்தார். நானும் இறைத்தூதர் தான்” என்று நபி (ஸல்) அவர்கள் பதில் கூறியவுடன், அத்தாஸ் நபி (ஸல்) அவர்களின் தலை, கை மற்றும் கால்களை முத்தமிட்டார்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த ரபிஆவின் மகன்களில் ஒருவர் மற்றவரிடம் “இதோ உனது அடிமையை அவர் குழப்பிவிட்டார்” என்று கூறினான்.

அத்தாஸ் திரும்பி வந்தவுடன் “உனக்கு என்ன கேடு நேர்ந்தது?” என்று அவ்விருவரும் இடித்துரைத்தனர்.

அதற்கு அத்தாஸ், “எனது எஜமானர்களே! இவரை விடச் சிறந்த எவரும் இப்பூமியில் இல்லை. இவர் எனக்கு ஒரு விஷயத்தை மிக உறுதியாகக் கூறினார். அதனை இறைத்தூதரைத் தவிர வேறெவரும் அறிந்திருக்க முடியாது” என்றார்.

அதற்கு அவ்விருவரும் “அத்தாஸே! உனக்கென்ன கேடு. இவர் உம்மை உமது மார்க்கத்திலிருந்து திருப்பிவிடாமல் இருக்கட்டும். உமது மார்க்கம்தான் இவன் மார்க்கத்தைவிட சிறந்தது” என்று கூறினர். (இப்னு ஹிஷாம்)

நபி (ஸல்) அவர்கள் அந்தத் தோட்டத்திலிருந்து வெளியேறி மிகவும் கவலையுடன் உள்ளம் உடைந்தவர்களாக மக்கா நோக்கி திரும்பும் வழியில் ‘கர்னுல் மனாஜில்’ என்ற இடத்தை அடைந்த போது அல்லாஹ் அவர்களிடம் ஜிப்ரீலையும், மலைகளின் வானவர் மலக்குல் ஜிபாலையும் அனுப்பினான்.

மலக்குல் ஜிபால் தாயிஃப்வாசிகளாகிய இம்மக்களை இரு மலைகளையும் ஒன்று சேர்த்து நசுக்கி அழித்துவிடவா”? என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்.

ஆயிஷா (ரழி) இச்சம்பவத்தின் விவரத்தைக் கூறுகின்றார்கள்:

"நான் நபி (ஸல்) அவர்களிடம் “உஹுத் போரைவிடக் கடுமையான நாள் எதுவும் உங்களது வாழ்க்கையில் வந்துள்ளதா?” என்று கேட்டேன்.

அதற்கு “உனது கூட்டத்தாரின் மூலம் நான் பல துன்பங்களைச் சந்தித்துள்ளேன். அவற்றில் நான் சந்தித்த துன்பங்களில் மிகக் கடுமையானது ‘யவ்முல் அகபா’ என்ற தினத்தில் எனக்கு ஏற்பட்ட வேதனையே ஆகும்.

நான் அப்து யாலிலின் மகனிடம் என்னை அறிமுகப்படுத்தினேன். ஆனால், அவன் எனது அழைப்பை ஏற்றுக் கொள்ளவில்லை. நான் கவலையுடன் திரும்ப மக்காவை நோக்கி பயணமாகி ‘கர்னுல் மனாஜில்’ என்ற பெயருள்ள ‘கர்னு ஸஆலிப்’ என்ற இடத்தில் வந்து தங்கிய போதுதான் எனக்கு முழுமையான நினைவே திரும்பியது.

நான் தலையைத் தூக்கிப் பார்த்தபோது என் தலைக்கு மேல் ஒரு மேகம் நிழலிட்டுக் கொண்டிருந்தது. அந்த மேகத்தில் ஜிப்ரீல் இருந்தார். அவர் என்னை அழைத்து 'நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் உங்களது கூட்டத்தாரிடம் பேசியதையும் அவர்கள் உங்களுக்குக் கூறிய பதிலையும் கேட்டுக் கொண்டான். இம்மக்கள் விஷயத்தில் நீங்கள் விரும்பியதை மலக்குல் ஜிபாலுக்கு ஏவ வேண்டும் என்பதற்காக அவரை உங்களிடம் அனுப்பி இருக்கின்றான்' என்று கூறினார்.

மலக்குல் ஜிபால் என்னை அழைத்து எனக்கு ஸலாம் கூறி "முஹம்மதே! ஜிப்ரீல் கூறியவாறே அல்லாஹ் என்னை உங்களிடம் அனுப்பியுள்ளான். நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்? நீங்கள் விரும்பினால் இவர்களை இரண்டு மலைகளையும் கொண்டு நசுக்கி விடுகிறேன்" என்று கூறினார்.

அதற்கு நபி (ஸல்) "அதை ஒருக்காலும் நான் விரும்ப மாட்டேன். மாறாக, அவர்களிலிருந்து அல்லாஹ்வை மட்டும் வணங்கி அவனுக்கு இணை வைக்காதவர்களை அவன் உருவாக்குவான் என்று நான் ஆதரவு வைக்கிறேன்" என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

இந்த பதிலின் மூலம் நபி (ஸல்) அவர்களின் தனித்தன்மை தெரியவருவதுடன், அவர்கள் எத்தகைய மகத்தான பண்புள்ளவர்கள் என்பதையும் நாம் தெரிந்துகொள்ளலாம்.

ஏழு வானங்களுக்கு மேலிருந்து அல்லாஹ் அருளிய இம்மறைவான உதவியைப் பார்த்து நபி (ஸல்) அவர்களின் மனம் மிகவும் நிம்மதியடைந்தது.

படம் : சரத் மலை முன்புறத்தில் தாயிஃப் செல்லும் சாலை பின்னணியில் ஹிஜாஸ் மலைகள்

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 25

( அஹ்காஃப் என்ற ஏமன் மலைப்பள்ளத்தாக்கு )




இறைத்தூதர் ஹூத் (அலை) அவர்கள் ஆத் எனும் சமூகத்தாருக்கு நபியாக அனுப்பப் பட்டார்கள். விவிலியம் பழைய ஏற்பாட்டில் ஹூத் எனும் பெயரே ஏபேர் எனக் கூறப்பட்டுள்ளது.

ஆத் பின் இரம் பின் சாம் பின் நூஹ் நோவா -சேம் ஆராம் -ஊத்ஸ் என்பது. அவர்களின் பரம்பரை ஆகும். பழங்கால அரபு சமூகத்தாரான 'ஆத் கூட்டத்தார் தென் அரபியாவில் இன்றைய யமன் (ஏமன்) ஏமன் நாட்டில் உள்ள சலாலாஹ் என்ற நகரத்திலிருந்து 172 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது. அதாவது ஓமான் மற்றும் யெமனுக்கு நடுவில் உள்ள உபார்- அல் அஹ்கஃப் என்ற பகுதியில் வாழ்ந்தனர் .

ஆது சமூகத்தினர் மிகவும் உயரமானவர்களாகவும் (40 அடி ) உடல் வலிமை மிக்கவர்களாகவும் இருந்தார்கள். அவர்களைப் போன்று வேறு எந்தச் சமுதாயமும் படைக்கப்படவில்லை,

"உங்கள் உடலில் வலிமை பலத்தை அதிகமாக்கியதை நினைவு கூறுங்கள்" குர்ஆன் (7 : 69 )

ஆதுக்கள் வாழ்ந்த இடம் நீங்கள் போய்ப் பார்த்தல் தெரியும் சமதளமாக இல்லாமல் மணற் குன்றுகள் நிறைந்த பகுதி . திருக்குர்ஆன் "அஹ்காஃப் " என்று குறிப்பிடுகிறது .இப்பகுதியில் வாழ்ந்த ஆதுக்களை "கௌமுல் அஹ்காஃப்" என்றழைக்கிறது பள்ளத்தாக்குகளில் மிகவும் கெட்டவை அஹ்காஃப் பள்ளத்தாக்கு

ஆது சமுதாயத்தவர்கள் மணற்குன்றுகளில் (அஹ்காஃப்) கூடாரங்கள் அமைத்து முதலில் வசித்து வந்தனர். பின் அந்த மலைக்குன்றுகளை குடைந்து, அழகிய வடிவமைத்து வாழும் முறையை கற்றுக் கொண்டனர். பெரிய பெரிய தூண்கள் கொண்ட மாடமாளிகைகளை அமைத்து வாழ்ந்து வந்தார்கள்.

நீங்கள் அழியாது என்றென்றும் இருப்பவர்களைப் போன்று (உயர்ந்த மாளிகைகளில் உயர்ந்த வேலைபாடுகளையும் அமைக்கின்றீர்கள்" என்று குர்ஆன் (26 : 128 ,129) குறிப்பிடுகிறது

நிகழ்காலத்தில் இருப்பது போன்றே ஆது சமூகத்தினரும் மிகவும் நாகரீகமானவர்களாகவும், செழுமையானவர்களாகவும் இருந்தனர் செல்வம் அதிகமாக இருந்ததால் மக்கள் மத்தியில் பெருமையும், வலிமையும் ஆணவமும் சேர்ந்தே இருந்தது.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஒட்டகத்தை அறுத்து சுட்டு உண்ணக் கூடியவர்கள்.இதனால் இறைவன் பெருகும் ஒட்டகை மந்தைகளையும் , பேரீச்ச மரங்களில் செழிப்பையும் ஏற்படுத்தி இருந்தான்.

எவ்வளவு இருந்தும் வாழ்வில் திருப்தி இல்லாதவர்களாக, தம் பெருமையைப் பறைசாற்றுபவர்களாக அதனால் அவர்கள் ஓர் இறைக் கொள்கையை மறந்து தம் வசதிக்கேற்ப பெரிய பெரிய சிலைகளை அமைத்து வணங்கி வந்தார்கள்

ஆது சமூகம் வழிதவறியதைக் கண்ட ஹூத் நபி 'அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள்' என்றும் 'உங்கள் மனக் கிளர்ச்சிக்காகவும், செருக்கிற்காகவும், அதன் காரணங்களால் நீங்கள் செய்யும் அநியாயப் பாவங்களுக்காகவும் மன்னிப்பு கேட்டு நல்வழியில் திரும்புங்கள்' என்றும் போதிக்க, அவர்கள் அவர் சொல்வதை நிராகரித்துள்ளனர்.

'உங்களை இறைவன் வறட்சியிலிருந்து காத்து, மழையைத் தந்து உங்கள் வளங்களை மேலும் அதிகரிப்பான்' என்று சொல்லும் போதும் புறக்கணித்து,

'நீ சொல்வதற்கு என்ன அத்தாட்சியுள்ளது? நீ சொல்வதற்காக எங்கள் தெய்வங்களை நாங்கள் விட்டுவிட முடியாது. எங்களைப் போன்ற இன்னொரு மனிதனான உனக்கு ஏன் இப்படியான வேற்றுச் சிந்தனை? இதையெல்லாம் கேட்க எங்களுக்கு நேரமில்லை. ஏதோ 'வறட்சி' என்றாயே அதை வரச் சொல், பிறகு பார்ப்போம்' என்று ஹூத் நபியிடம் கேலி பேசினர்.

வறட்சி பரவியது. பச்சைப்பசேலென்று இருந்த இடங்கள் காணாமல் போகத் தொடங்கின. மழை வராமல் நிலம் வறண்டிருந்தது, ஆனால் ஆது சமூகத்தின் ஆணவம் குறையவில்லை. சூரியன் அந்தப் பாலைவன மணலில் குடி கொண்டது.

அதன்பிறகு பிறிதொரு நாளில் தண்டனைக்கான உத்தரவு வந்தபோது, அவர்கள் இருந்த பள்ளத்தாக்குகளை நோக்கி மேகமாக வருவதைக் கண்டதும், அவர்கள் அது மழை மேகமென்று உற்சாகமடைந்தனர். ஆனால் அது அவர்களுக்கு நோவினை தரவிருக்கும் கொடுங்காற்று என்று அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை.

பலத்த காற்று எல்லாவற்றையும் பிடுங்கி எறிந்து இரக்கம் காட்டாமல் ஏழு இரவுகளும் எட்டுப் பகல்களும் தொடர்ந்து வீசி, அந்தச் சமூகத்தினரை அடியுடன் சாய்ந்த ஈச்சமரங்களைப் போல் பூமியில் வீழ்த்தியது. எல்லாப் பொருட்களும் அழிந்து தரைமட்டமாகி அவர்களுடைய வீடுகள் மட்டும் ஆள்அரவம் அற்று அமைதியாக நின்றன.தற்போது அவர்கள் செழிப்பாக வாழ்ந்த உபாரை சுற்றிலும் யாருமற்ற பாலைவனம் தான் உள்ளது.

ஹூதும் அவருடன் நம்பிக்கை கொண்டவர்களும் மட்டும் இறையருளால் காப்பாற்றப்பட்டார்கள். காற்றைக் கொண்டு இறைவன் ஆக்கவும் செய்வான், அழிக்கவும் செய்வான்.

"நிக்கோலஸ் க்லாப் என்ற தொல்பொருள் ஆரய்ச்சியாளர் ஆது சமூகத்தார் வாழ்ந்த உபர் நகரை கண்டுபிடித்தார்.ஐக்கிய அமெரிக்கா ( NASA) மூலம் குறிப்பிட்ட அந்த பகுதியை செயற்கைகோள் உதவியுடன் படம் பிடிக்கப்பட்டது.

ஆது சமுகத்தினர் வாழ்ந்த 'இரம்' என்ற உபார்ர் நகரம் கண்டறியபட்டது. தோண்டி எடுக்கபட்ட நகரம் 12 மீட்டர் அழமான மணல் அடுக்குகளால் மூடபட்டு இருந்ததை ஆய்வாளர்கள் கணகிட்டுள்ளனர்.தோண்டி எடுக்கபட்ட 'இரம்' நகரில் உயரமான தூண்கள் மற்றும் கோபுரங்கள் இருந்தன.

வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 26

( ஒட்டகத்தை ஈன்ற அல்காத்திபா மலையும், ஸமூது மக்களும் )



நீங்கள் பார்க்கும் இந்த அழகான படங்களுக்குப் பின்னே மிகுந்த சோகமும் மறைந்துள்ளது.

நூஹ் நபி அவர்களின் வம்சாவழியில் வந்த ஸமூத் என்பவரின் வழிவந்தவர்களே ஸமூது கூட்டத்தார் என அழைக்கப்படுகின்றனர்.

அல் ஹிஜிர் என்னும் பெயரில் உள்ள மலைப்பகுதியில் மலைகளை குடைந்து வீடுகள் அமைத்து வாழ்ந்து வந்தனர்.

சவுதி அரேபியாவில் உள்ள மதாயன ஷாலிஹ் என்ற இடத்தில் பெரும்பாறைகளை குடைந்து அவர்கள் வாழ்ந்த குகை வீடுகள் இப்போதும் உள்ளன.

மதீனாவிலிருந்து 405 கிலோமீட்டர் தொலைவில் வடக்கு திசையில் மதாயன ஷாலிஹ் உள்ளது. மக்காவிலிருந்து 700 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. அல் ஊலா என்ற ஊரிலிருந்து 22 கிலோ மீட்டர் தூரத்தில் இந்த நகரம் அமைந்துள்ளது.

அங்குதான் ஹிஜ்ர் பகுதி உள்ளது. 'மதாயின் ஸாலிஹ்' என்று கூறுகிறார்கள். இதுவே ஸமூத் கூட்டத்தாரின் தலைமைபீடமாக இருந்தது.

இது பண்டைய காலத்தில் "அல் ஹிஜ்ர்" எனக் கூறப்பட்டு வந்தது.ஹிஜ்ர் என்றால் பாறை குர்ஆனில் 15வது அத்தியாயம் ஹிஜ்ர்.

இப்போது அதை ‘மதாயின் ஸாலிஹ்’ -ஸாலிஹ் (அலை) அவர்கள் வசித்த ஊர் என்று அழைக்கின்றார்கள்.

இந்த மக்கள் பேசிய மொழி அரபி மொழியாகும். இறைவன் அனுப்பிய தூதர்களில் அரபுகளாக அறியப்படுபவர்கள் நான்கு பேர். 1.நபி ஹூத் (அலை) 2. நபி ஷூஐப் (அலை) 3.நபி ஸாலிஹ் (அலை) 4.நபி முஹம்மது (ஸல்)

இந்தகரை கி.மு 312 ல் ஹூது (அலை) சமூத்தவரான ஆது மக்கள் (எடோனாமட்ஸ் ) வடிவமைத்தனர்.பின் ஸாலிஹ் (அலை) சமூகத்தவர்களான ஸமூது மக்களால் (நபாட்டியன்கள்) கலை அம்சத்தோடு பொலிவு பெற்றது ஹிஜ்ர் நகர். இதையே குர்ஆன்

"ஆது மக்களுக்குப் பின்னர் அவர்களுடைய பூமியில் உங்களைச் குடியேறச் செய்து அதன் சமவெளியில் மாளிகைகளைக் கட்டியும் , மலைகளைக் குடைந்து வீடுகளை அமைத்துக் கொள்கின்றீர்கள் ." குர்ஆன் ( 7 : 74)

ஸமூது மக்கள் சுமார் 600 வருடங்கள் ஹிஜ்ர் யை ஆட்சி செய்து ,தங்கள் வாழ்க்கை முழுவதும் பாறையாலும், ஒட்டகைகளாலும் சூழப்பட்டது .

ஸமூது கூட்டத்தார் மலைகளை குடைந்து உருவாக்கிய சில கட்டிடங்கள் இன்றும் காணப்படுகிறது.

ஹிஜ்ரை சுற்றி பலமான மலைகள் தக்க பாதுகாப்போடு இயற்கையாகவே அமையப் பெற்றதால் , எதிரிகளைப் பற்றி பயப்படவே இல்லை.

அழகிய சிற்பங்களை செய்து அதனை வணங்கினர் தலைமை பூசாரி காபூக் பின் உபைது . அவரது கனவில் " ஸமூது மக்களின் அழிவு நெருங்கி விட்டது காபூக்கின் மகனார் ஸாலிஹ்யால் மக்கள் நேர்வழி பெறுவர் "என்பதை அவர் கனவாக கண்டார் .

விடியலில் கோயிலுக்குப் போனார் சிலைகள் யாவும் தலைக்குப்புற வீழ்ந்து கிடக்க பூசாரி தூய்மையற்ற செயலை கோவிலுக்குள் செய்திருப்பார் எனவே அவருக்கு மரண தண்டனையை மன்னர் வழங்க ,

காபூக் இறைவனை வேண்ட , ஒரு மலைப் பாறையினுள் யாருக்கும் தெரியாமல் 40 வருடம் மறைத்தான். பின் வெளியே வரும் போது அந்த மன்னர் போய் வேறு மன்னர் இருந்தார் . பின் ஸாலிஹ் நபியைப் பெற்றார் .

ஏகத்துவ கொள்கையை மக்களிடம் நபி ஸாலிஹ் (அலை) எடுத்துரைக்க இவருக்கும் மரண தண்டனை , இறைவன் இவர்களையும் ஒரு மலைப்பாறையில் 40 வருடம் உறங்க வைத்தான்

மீண்டும் பிரச்சாரத்தை தொடங்க , மன்னன் ஜுன்தாஹ் , " ஸாலிஹே ! அதோ உயர்ந்த அல்காத்திபா மலைப்பாறையில் இருந்து சூல் கொண்ட நிறைமாத ஒட்டகம் வெளிவர வேண்டும். வந்ததும் கன்றை ஈன வேண்டும் .அப்படி நீர் செய்தால் சொல்வதை கேட்போம் .

"அதெப்படி உயிரற்ற மலைப் பாறை உயிருள்ள ஒட்டகத்தை எப்படி ஈனும் ? சரி, வெளிவந்த ஒட்டகம் ஆண் துணை இல்லாமல் எப்படி கன்றை ஈனும் ? நபி ஸாலிஹ் (அலை) அதிர்ச்சியுற்றார்கள் .

இறைவன், "ஸாலிஹே..! நான் 4000 வருடங்களுக்கு முன்பே அப்படி ஒரு ஒட்டகத்தை அந்த அல்காத்திபா மலைப்பாறையில் மறைத்து வைத்துள்ளேன் " என்று கூற, மலைப்பாறை முணுமுணுக்க , பாறை பிளந்து ஒட்டகம் ஓடோடி வந்து இவர்களின் கண் முன்னே கன்றையும் ஈன்றது.

இறைவனின் ஒட்டகத்தின் மேய்ச்சல் இடத்தையும்,கிணற்று தண்ணீர் பங்கீட்டுப் பற்றியும் முறை செய்யப்பட்டது இது பற்றி குர்ஆன் (54 : 28 ) வர்ணிக்கிறது .

இறைவனின் ஒட்டகத்தை கொல்லக் கூடியவன் இம்மாதம் பிறப்பதாக ஸாலிஹ் நபிக்கு வஹி வந்தது . உடனே ஸமூது மக்களிடம் கூற , இம்மாதம் பிறந்த 9 ஆண் மக்களை ஸமூது கொன்றனர். ஆனால் 10 வது பிறந்த " குதார்" (இவன் விபச்சாரத்தில் பிறந்தவன் ) என்பவனின் தகப்பனார் ஸாலூஃப் ஸமூதுகளின் தலைவர் எனவே அவனை கொல்லவில்லை . பிரச்சனை ஆரம்பம்

குதார் எந்த பிரச்சனை இல்லாமல் நன்கு வளர்ந்தான் . இப்படிதானே தம் மகன்களும் வளர்ந்திருப்பார்கள் என்று 9 பெற்றோர்கள் குமுற நபி ஸாலிஹை கொல்வதற்கு மலைப்பாறையில் மறைந்திருக்க அந்த மலைப்பாறை இடிந்து 9 பேர்களும் மாண்டனர் .

ஸாலிஹ் நபி குனியக்காரர் எனவேதான் ஸமூது 9 பேர்கள் இறந்தனர் மேலும் இவர் சூனியத்தால் மலைப்பாறையில் இருந்தது வெளிவந்த ஒட்டகமும் சூனியம் தான் எனவே அதனையும் அதன் கன்றையும் கொல்ல முடிவு எடுத்தனர் .

"உனைஷா " என்ற பெரும் பணக்காரி யின் ஒட்டகங்களுக்கு மேய்ச்சல் கிடைக்காமல் ஸாலிஹ் ஒட்டகம் இருந்ததால் , அந்த ஒட்டகத்தை கொல்ல வாலிபனாக இருந்த குதாருக்கு தன் இரு மகள்களில் ஒருத்தியை தாரை வார்த்தாள்.

"ஸ்தூப் " என்ற பேரழகி தன் கணவரை ஸாலிஹ் நபி தன் மதத்திலிருந்து பிரித்து அவர் ஏகத்துவத்தை ஏற்றுக் கொள்ள செய்ததால், ஸாலிஹ் நபியை கொல்வதற்கு , பெரும் செல்வத்தையும் அதற்கு முன் பெண் சுகமாக தன்னையும் தருவதாக "மஸ்தஹ் " என்பவனை அவள் ஏற்பாடு செய்து , தன்னை அவனுக்கு விருந்தாக்கினாள் .

ரபியுல் ஆகிர் 16 ஆம் நாள் புதன்கிழமை உலக வரலாற்றில் துர்க்குறியான நாள். குதாரும் , மஸ்தஹும் மேலும் ஸமூதுகளில் கீழ்த்தரமான 7 பேர்களையும் சேர்த்துக் கொண்டு மது அருந்தி விட்டு , ஒட்டகம் நீரருந்தி விட்டு திரும்பும் வழியில் காத்திருந்தனர் ஆக இந்த ஒன்பது பேரை குர்ஆன் (27 : 48 ) விவரிக்கிறது ,

குதார் ஒரு மலைப் பாறையின் அடியிலும் மஸ்தஹ் அதற்கு எதிர்பாறையின் அடியிலும் மறைந்திருந்தனர்.

மஸ்தஹ் வின் அருகில் ஒட்டகம் வந்ததும் அவன் அம்பு எய்தான் அது ஒட்டகத்தின் கால் தசையிதுள்ள நரம்பை துண்டித்தது .

உடனே உனைஷா தன் மகள்களுக்கு கட்டளைப் பிறப்பிக்க அந்த கும்பல்களுக்கு தங்களது முகத்தை திறந்து காட்டினார்கள் . எப்பா..என்ன அழகு !

உடனே குதார் தனது வாளால் ஒட்டகத்தின் பின்னங் காலை பலமாக தாக்கினான். தாய் ஒட்டகம் மிகப் பெரிய மூன்று பேரொலியை எழுப்பி தரையில் சாய்ந்தது அதன் கன்று மலையைப் பிளந்து வெளிவந்த அதே அல்காத்திபா மலைப்பாறையினுள் சென்று மறைந்தது. இந்த ஒட்டகக் கன்று தான் கியாமத் நாளின் போது வெளியாகும் அதுதான் "தாப்பத்துல் அர்ளு " என்று சொல்லப்படுகிறது .

பின் அந்த ஒன்பது பேர் கும்பல் நபியவர்களை கொல்ல திட்டம் தீட்டி குர்ஆன் (27 : 49,50 ) மலைப்பாறையினுள் பதுங்கினார்கள் அந்த மலைப்பாறையும் சரிந்து அவர்களுடைய சமூகத்தினர் அழிவதற்கு முன்பே இந்த 9 பேர்களும் மாண்டனர்,

ஒட்டகம் 3 பேரொளியை எழுப்பியதால் 3 நாட்கள் கெடு ஆரம்பமானது ஸமூது மக்கள் மரணத்திலிருந்து தப்பிக்க மலைப் பாறையின் அடியில் சுரங்கம் தோண்டி காதில் பஞ்சை வைத்து அடைத்துக் கொண்டு பதுங்கி இருந்தனர் நான்காம் காலை பொழுது புலர்ந்தது ஒரே ஒரு இடி சப்தம்தான் .

"அவர்கள் செய்து கொண்டிருந்த அநியாயங்களின் காரணமாக அழிந்து போன அவர்களுடைய வீடுகள் இதோ பாழடைந்து கிடக்கின்றன. அறியக்கூடிய மக்களுக்கு நிச்சயமாக இதில் ஒரு நல்ல படிப்பினை இருக்கிறது " குர்ஆன் (27 : 52)

நபி (ஸல்) அவர்கள் தபூக் யுத்தத்திற்கு செல்லும் போது வாகனத்தில் அமர்ந்தபடியே போர்வையால் தம்மை மறைத்துக் கொண்டு அந்த இடங்களை விட்டும் விரைவாகக் கடந்தார்கள்.

ஹிஜ்ர் பகுதியில் உள்ள கிணற்றில் தண்ணீர் அருந்தவோ, தண்ணீர் நிரப்பிக் கொள்ளவோ வேண்டாம் என்று நபி (ஸல்) அவர்கள் தோழர்களுக்கு கட்டளையிட்டார்கள்.

நாங்கள் நீரை நிரம்பிக் கொண்டோம். அந்த தண்ணீரைக் கொண்டு மாவும் பிசைந்து விட்டோமே! என்று நபித் தோழர்கள் கூறியபோது,

தண்ணீரை ஊற்றி விடுங்கள்! மாவையும் வீசி விடுங்கள்! என்று நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

அக்கிரமம் புரிந்தவர்களின் வசிப்பிடங்களில் அவர்களுக்கு கிடைத்த தண்டனை போன்று உங்களுக்கும் கிடைத்துவிடுமோ என்ற அச்ச உணர்வுடனும் அழுதவாறும் நுழையுங்கள் என்று உபதேசித்தார்கள்.- புகாரி 3377, -3381

ஸமூத் மக்களைப் பற்றி குர்ஆனின் 15 வது அத்தியாயத்தில் குறிப்பிடுகிறது பெயர் " அல் ஹிஜ்ர் " ஹிஜ்ர் என்றால் மலைப்பாறை

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 27

( ஜெருசலேமில் உள்ள கோவில் மலை )

மலையின் உயரம் உயர்ந்த இடம் 743 m (2,438 அடி) யூதேய மலைத்தொடர் , மலையின் வகை :சுண்ணாம்புக் கல்

கடவுள் தன் தெய்வீக பிரசன்னத்திற்கான இடமாக கோவில் மலையை தேர்ந்தெடுத்தார் என யூதம் குறிப்பிடுகிறது. யூதர்களின் முக்கிய நூலாகிய தல்மூத், இந்த இடத்தில்தான் கடவுள் முதன் மனிதன் ஆதாமை உருவாக்கினார் எனக் கூறுகிறது.

இந்த இடத்தில்தான் ஆபிரகாம் தன் மகன் ஈசாக்கை பலி கொடுக்க முனைந்தார். இங்கேதான் இரு யூத ஆலயங்களும் அமைந்திருந்தன. வேதாகமத்தின்படி இந்த இடம் எல்லா உயிர்களுக்கும் மத்தியமானதும்

இரண்டாம் கோவில் காலத்தில் இவ்விடம் பொருளாதார நிலையமாக செயற்பட்டது. யூத பாரம்பரியத்தின்படி, முதல் கோவில் சாலமோனால் கி.மு. 957 இல் கட்டப்பட்டு, பாபிலோனியரால் கி.மு. 586 இல் அழிக்கப்பட்டது.

இரண்டாம் கோவில் கி.மு. 516 இல் செரூபாலினால் கட்டப்பட்டு, உரோம பேரரசால் கி.பி. 70 இல் அழிக்கப்பட்டது.

யூத பாரம்பரியம் இங்கு மூன்றாவதும் இறுதியுமான கோவில் கட்டப்படுமென நம்புகிறது. யூதர்களுக்கு இந்த இடம் மிக புனிதமும், அவர்கள் செபம் செய்யும்போது இப்பக்கத்தை நோக்கியே செய்வர். சில யூதர்கள் இந்த இடத்தில் நடக்க மாட்டர்கள். மகா பரிசுத்த இடத்தில் தற்செயலாக நுழைவதை தவிர்க்கவே இந்த முன்னெச்சரிக்கை. யூத போதர்களின் சட்டப்படி, இவ்விடத்தில் கடவுளின் தெய்வீக பிரசன்னம் தற்போதும் உள்ளதென்கின்றனர்.

இசுலாத்தில் மூன்றாவது புனித இடமாக இந்த இடம் இசுலாமியரால் நோக்கப்படுகிறது.

உயர் புகலிடமாகவும், முகம்மது நபி சொர்க்கத்திற்கு சென்ற இடமாகவும் இவ்விடம் கருதப்படுகிறது.

கி.பி 637 இல் இசுலாமியர் எருசலேமை வெற்றி கொண்டதும் உமையா கலீபா அல் அக்சா பள்ளிவாசல் மற்றும் பாறைக் குவிமாடம் என்பவற்றை கட்ட உத்தரவிட்டார். பாறைக் குவிமாடம் கி.பி. 692 இல் கட்டி முடிக்கப்பட்டது. இக்கட்டடம் உலகத்திலுள்ள பழைய இசுலாமிய கட்டிடக் கலையாக காஃபாவிற்கு அடுத்ததாகத் திகழ்கிறது.

அல் அக்சா பள்ளிவாசலானது பாறையின் தெற்குப்பக்கத்தில் மக்காவை நோக்கியவாறு கட்டப்பட்டுள்ளது. பாறைக் குவிமாடம் மத்திய பகுதியில் யூத ஆலயம் கட்டப்படாதவாறு உள்ளது.

யூதம் மற்றும் இசுலாமிய உரிமை கோரலில், இந்த இடம் உலகிலுள்ள அதி போட்டியான சமய இடமாகக் காணப்படுகிறது.

சிலுவைப் போர் காலத்தில், எருசலேம் இசுலாமிய சமூகம் இடையூ இன்றி இப் பகுதியை பாரமரித்தனர்.1967 இலிருந்து இசுரேல் கட்டுப்பாட்டுக்குள் உள்ள இப்பகுதி மீது இசுரேலும் பாலஸ்தீன அதிகாரமும் தத்தமக்கே இப்பகுதியில் அதிகாரம் உள்ளதென்கின்றனர்.

அரபு-இசுரேல் முரண்பாட்டில் இதுவே மிக முக்கிய காரணியும் ஆகும்.இசுரேலிய அரசு இப்பகுதியில் இசுலாமியர் அல்லாதோர் செபிப்பதை தடை செய்துள்ளது.

படம்: ஒலிவ மலையிலிருந்து பார்க்கும்போது கோவில் மலையின் அகலப் பரப்பு காட்சி

"மிஃராஜ் எனும் விண்ணுலகப் பயணம் நபி (ஸல்) அவர்களை மக்காவிலிருந்து பைத்துல் முகத்தஸிற்கு அழைத்துச் செல்லப்பட்டது ச

பைத்துல் முகத்தஸுக்கு வந்ததும் நபிமார்கள் (வாகனத்தை) கட்டும் வளையத்தில் புராக்கை நான் கட்டினேன். பிறகு பள்ளியில் நுழைந்தேன்.அறிவிப்பவர்: அனஸ் (ரலி)

நூல்: முஸ்லிம்-259 (234), அஹ்மத்-12047

பைத்துல் முகத்தஸில்…

என்னை நபிமார்களின் கூட்டத்தில் இருக்கக் கண்டேன். அப்போது மூஸா (அலை) அவர்கள் தொழுது கொண்டிருந்தார்கள். அவர்கள் ஷனூஆ குலத்தைச் சோந்த மனிதரைப் போன்று நல்ல தோற்றமும், நடுத்தர உயரமும் உள்ள மனிதராக இருந்தார்கள்.

அப்போது ஈஸா (அலை) அவர்களும் தொழுது கொண்டிருந்தார்கள். அவர்கள் மக்களில் கிட்டத்தட்ட உர்வா பின் மஸ்ஊத் சகபீயைப் போன்று இருந்தார்கள்.

அப்போது இப்ராஹீம் (அலை) அவர்களும் தொழுது கொண்டிருந்தார்கள். அவர்கள் உங்களுடைய தோழரை (முஹம்மத்) போன்றிருந்தார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி)

நூல்: முஸ்லிம்-271 (251)"

நபிமார்களுக்கு இமாமாக நின்று தொழுவித்தல்

அப்போது தொழுகைக்கு நேரமாகி விட்டது. நான் அவர்களுக்குத் தொழுவித்தேன். நான் தொழுது முடித்ததும், “முஹம்மதே! இதோ மாலிக்! நரகத்தின் அதிபதி! இவருக்கு ஸலாம் சொல்லுங்கள்” என்று ஒருவர் சொன்னார். உடனே அவர் பக்கம் திரும்பினேன். அவர் முதலில் எனக்கு (ஸலாம்) சொல்லி விட்டார்.

இந்த நிகழ்வுகளெல்லாம் இம்மலையிலுள்ள மஸ்ஜித் அல் அக்ஸாவில் நடைபெற்றது.

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 28

( சின்ஜார் மலைத்தொடர் )

நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் ஈராக்கைச் சேர்ந்த பாபிலோனில் இருந்து ஷாம் நோக்கி வந்தார்கள். வழியில் சின்ஜார் மலைத்தொடரை கடக்கும் போது , நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் இறந்த ஒருவரின் சடலத்தைக் கண்டார்கள்.

அதன் தசை சிதறிச் சின்னா பின்னமாக கிடந்தது. தண்ணீர் பெருகி வரும்பொழுது அத்துடன் வருகின்ற மீன்கள் சிலவற்றை தின்கின்றன , அங்கு வரக்கூடிய வனாந்திர மிருகங்கள் அவற்றுக்கு வேண்டிய அளவுக்கு தசையைப் புசிக்கின்றன. ஆகாயத்தில் பறந்து திரிகிற பறவைகளும் கொத்தி எடுத்துக்கொண்டு செல்கின்றன. முடிவில் சடலத்தின் எல்லா பாகங்களும் காலியாகி விட்டன.

இக்காட்சியைக் கண்ட இப்ராஹீம் நபியின் உள்ளத்தில் ஓர் எண்ணம் எழுந்தது. இறைவா ! நீ இப்பிணத்தின் எல்லா அம்சங்களையும் மீன், விலங்கினங்கள், பறவைகள் ஆகியவற்றிலிருந்து வெளிக் கொணர்ந்து ஒன்று திரட்டி உருவமாக்கி உயிர் கொடுக்கிறவன்

இதன் அம்சங்கள் காற்றோடு போயினும், மண்ணோடு மண்ணாகி விடினும் நெருப்பில் பொசுங்கி சாம்பலாக்கி விடினும் உயிர் கொடுத்து எழுப்ப நீ நாடினால் அவைகள் எல்லாம் ஒன்று சேர்ந்து உயிர் ஆக்கி விடுவாய் இதில் எனக்கு பூரண நம்பிக்கை உண்டு எனினும் இந்த அபூர்வ சக்தியை நேரடியாக கண்டு இதயம் அமைதி பெற விரும்புகிறது ஆகவே என் ரட்சகா ! மரித்தோரை எப்படி உயிர்ப்பிப்பாய் என்பதை எனக்கு காண்பி" என்று அவர்கள் அடக்கத்துடன் கேட்டார்கள்

குர்ஆனில் ..."இன்னும், இப்ராஹீம்: “என் இறைவா! இறந்தவர்களை நீ எவ்வாறு உயிர்ப்பிக்கிறாய் என்பதை எனக்குக் காண்பிப்பாயாக!” எனக் கோரியபோது,

அவன்,“நீர் (இதை) நம்ப வில்லையா?” எனக் கேட்டான்; “மெய்(யாக நம்புகிறேன்!) ஆனால் என் இதயம் அமைதிபெறும் பொருட்டே (இவ்வாறு கேட்கிறேன்)” என்று கூறினார்

“(அப்படியாயின்,) பறவைகளிலிருந்து நான்கைப்பிடித்து, (அவை உம்மிடம் திரும்பி வருமாறு) பழக்கிக்கொள்ளும்; பின்னர்(அவற்றை அறுத்து) அவற்றின் பாகத்தை ஒவ்வொரு மலையின் மீது வைத்து விடும்; பின், அவற்றைக் கூப்பிடும்; அவை உம்மிடம் வேகமாய்(ப் பறந்து) வரும்; நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவன், பேரறிவாளன் என்பதை அறிந்து கொள்ளும்” என்று (அல்லாஹ்) கூறினான். (குர்ஆன் : 2:260)

அதற்கு அல்லாஹ் 1) மயில் 2) கழுகு 3) சேவற்கோழி 4) காகம் இந்நான்கு பறவைகளை எடுத்து நன்கு பழக்கச் சொன்னான். இப்றாஹீம் நபி நான்கு பறவைகளை எடுத்து வளர்த்தார்கள். பின்னர் அவற்றை அல்லாஹ் கூறிய விதத்தில் அறுத்து துண்டு துண்டாக்கினார்கள்.

பறவையின் பாகங்கள் அனைத்தையும் ஒன்றாக் கலந்தார்கள். பின்னர் கலந்த அவற்றின் மாமிச உறுப்புக்களை நான்கு பகுதிகளாகப் பிரித்து நான்கு மலைகளின் மீது வைத்தார்கள். பறவைகளின் தலைகளை மட்டும் தனது கையில் வைத்துக் கொண்டார்கள். அதன் பின்னர் அந்தப் பறவைகளின் பெயர் கூறி அழைத்தார்கள்.

என்ன ஆச்சரியம்! அவர் பெயர் கூறி அழைத்ததும் ஒவ்வொரு மலையில் இருந்தும் துண்டு போடப்பட்ட இறைச்சி அவற்றின சிறகுகள், கால் எல்லாம் ஒன்று சேர்ந்து மீண்டும் பழைய பறவையாகி வந்து இப்றாஹீம் நபியின் கையில் இருந்த தலையுடன் இணைந்தன. இவ்வாறு நான்கு பறவைகளும் உயிர் பெற்ற அற்புதத்தை இப்றாஹீம் நபி கண்ணாறக் கண்டு பேராணந்தம் அடைந்தார்கள்.

இவ்வாறுதான் இறந்து அடக்கப்பட்டவர்கள், எரிக்கப்பட்டவர்கள், கடலில் மீன்களுக்கும், காட்டில் விலங்குகளுக்கும் இரையானவர்கள் அனைவரையும் அல்லாஹ் உயிர் கொடுத்து எழுப்புவான்.

மேற்கூறப்பட்ட சம்பவம் நபி இப்ராஹிம் (அலை) அவர்கள் ஈராக் வண்டல் சமவெளிகளுக்கு வடக்கே, டைக்ரிஸ் மற்றும் யூப்ரடீஸ் நதிகளுக்கு இடையில், வறண்ட அல்-ஜஸிரா பீடபூமி உள்ளது . அதன் மிக முக்கியமான மலைத்தொடர் சின்ஜார் மலைகள், அதன் மிக உயர்ந்த சிகரம் 4,448 அடி (1,356 மீட்டர்) உயரத்தைக் கொண்டது..

இம்மலைகளில் முக்கிய நீர் வழித்தடம் வாடி அல்-தார்தார் , சின்ஜார் மலைகளில் இருந்து தர்தார் (உப்பு) தாழ்வு மண்டலம் வரை 130 மைல்கள் (210 கிமீ) தெற்கு நோக்கி ஓடுகிறது. மில்ஹாத் அஷ்கர் இப்பகுதியில் உள்ள பல உப்பு அடுக்குகளில் மிகப்பெரியது .

நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் மேற்கண்ட நிகழ்வு ஜஸிரா பீடபூமியில் உள்ள சின்ஜார் மலைகளில் நடந்திருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 29

( நபி தாவூத் (அலை) அவர்களுடன் துதித்த சீயோன் மலை )



மெய்யாகவே நாம் தாவூதுக்குப் பெரும் அருள்புரிந்து மலைகளை நோக்கி "நீங்கள் அவருடன் (சேர்ந்து) துதி செய்யுங்கள்" என்று கட்டளையிட்டோம். அவ்வாறே பறவைகளுக்கும் (கட்டளையிட்டோம். அன்றி,) அவருக்கு இரும்பை (மெழுகைப் போல்) மெதுவாக்கித் தந்தோம். (குர்ஆன் : 34:10)

இதையே பைபிள் சங்கீதம் 48: 2 வசனத்தில் "வடதிசையிலுள்ள சீயோன் பர்வதம் வடிப்பமான ஸ்தானமும் சர்வபூமியின் மகிழ்ச்சியுமாயிருக்கிறது, அதுவே மகாராஜாவின் நகரம்.

சீயோன் மலை (Mount Zion) இது ஜெருசலேம் பழைய நகருக்கு வெளியில் அமைந்துள்ள ஓர் குன்று.

“சீயோன் மலை” என்பது ஜெருசலேமோடு இணைந்த ஒரு பர்வதம் ஆகும். ஒருகாலத்தில் அது எபூசியர் என்ற புறஜாதியாரின் வசம் இருந்தது. அந்த கோட்டை அரணிப்புள்ளதாகவும், பாதுகாப்புள்ளதாகவும் இருந்தது.

எபூசியர்களின் கோட்டை நகரமாகிய எபூசுவின் பெயர்தான் சீயோன். இது எருசலேமின் தென்கிழக்கு மலைமீது இருந்தது. தாவீது (தாவூது (அலை) அவர்கள் இந்த நகரத்தைக் கைப்பற்றிய பின்பு, இங்கே தன் அரண்மனையைக் கட்டினார். இது “தாவீதின் நகரம்” என்று அழைக்கப்பட்டது. (2சா 5:7, 9) ஒப்பந்தப் பெட்டியை ( தாபூத்து சகீனா - மன அமைதிப் பேழை ) தாவீது சீயோனுக்குக் கொண்டுவந்த பின்பு, இந்த மலை யெகோவாவுக்குப் பரிசுத்தமான மலையாக ஆனது

நபி தாவூத் (அலை) அவர்களுக்கு இறைவன் 'ஸபூர்' வேதத்தை ஜிப்ரீல், மீக்காயில் போன்ற வானவர்கள் மூலமாக அருளப்படாமல் 'ஞான உதிப்பு' (இல்ஹாம்) மூலமே வழங்கினான்.

அதிலே 150 அத்தியாயங்கள் இருந்தன. அவற்றில் 50 அத்தியாயங்கள் பக்தி நஸர் பற்றியும், பாபல் நகர் மக்களைப் பற்றியும் 50 அத்தியாயங்கள் ரூம், ஈரான் ஆகிய நாடுகளில் மக்களைப் பற்றியும், பாக்கி 50 அத்தியாயங்கள் அறிவுரைகளாகவும் இருந்தன.ஆனால் அதில் விதிக்கப்பட்டதைப் பற்றியும் விலக்கப்பட்டதைப் பற்றியும் யாதொன்றும் குறிப்பிடப்படவில்லை. அதில் இறை துதியும் இறை

புகழுமே நிரம்பி இருந்தன.

இத்தகு திருமறையை எழுபத்திரண்டு வகையான இராகங்களுடன் ஓதவும் இறைவன் அவர்களுக்குக் கற்றுக் கொடுத்து அவர்களின் குரலைத் தேனினும் இனிமையாக, அமுதினும் இனிமையாக ஆக்கி அந்த இனிமைக்குள்ளே ஒருவிதக் கவர்ச்சியையும் கம்பீரத்தையும் புகுத்தினான்'

எனவே அவர்கள் தீங்குரலெடுத்து 'ஸபூர்' வேதத்தை காலையிலும் மாலையிலும் ஓதும்பொழுது குன்றுகளும், மலைகளும் அவர்கள் பால் வயப்பட்டு அவர்களுடன் சேர்ந்து இறைதுதி பாடின.

தாவூத் (அலை) அவர்களுக்குக் கொடுத்தது போன்ற தொனியை இறைவன் வேறு எவருக்குமே கொடுக்கவில்லை என் றும் அவர்கள் ஸபூர்வேதத்தை மென்குரல் எடுத்து ஒதும் பொழுது இலைகளும் மஞ்சளாயின என்றும் காற்றும் வீசாது நின்றுவிடும் என்றும் கடலில் அலைகளும் அடிக்காது என்றும் ஆற்று நீரும் ஓடாது நின்றுவிடும் என்றும் கூறப்படுகிறது.

காந்தத்தால் ஈர்க்கப்பட்ட இரும்புப் போன்று புள்ளினங்கள் அவர்களைச் சூழ்ந்து நின்று அவர்களுடன் சேர்ந்து இன்னிசை முழங்கின. புள்ளினங்கள் மட்டுமல்லாது விலங்கினங்களும் அவர்களின் இன்னிசை கேட்டு மயங்கின.

மனிதர்களும் ஜின்களும் ஷைத்தான்களும் அவர்களைச் சூழநின்று அவர்களின் திருவாயிலிருந்து வெளிவந்த இசை அமிர்தத்தை மாந்தி, மாந்தி மகிழ்ந்தார்கள். அதில் மூழ்கி மூழ்கித் திளைத்தார்கள். உரத்த குரலெடுத்து தாவூத் (அலை) அவர்கள் ஒதும் பொழுது அது நாற்பது 'பர்ஸங்' தொலைவரை கேட்டது.

அதுகேட்டு உருவத் தொழும்பர்கள் உணர்ச்சியற்றுக் கீழே வீழ்ந்து உயிர்துறந்தும் ஓரிறை வணக்கத்தினர் உணர்ச்சி மீக்குற்றுக் கீழே விழுந்து உயிர்நீந்தும் வந்தார்கள். இது அவர்கள் செய்த முதல் அற்புதமாய் இருந்தது.

## வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள் 30

"வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள்" தொடர் பதிவுகள் குறித்து என் ஆய்வு சிந்தனை மலையைப் போலவே உயரமாய் அகலமாய் விரிந்து கொண்டே போனது உதாரணத்திற்குச் சொல்றேன்.

மலைகள் இல்லாமல் மனிதர்களால் வாழ முடியுமா? என்று ஆய்வு ஆரம்பித்து மலைகள் குறித்து....

மலைகள் இல்லாமல் இவ்வுலகில் மனிதர்கள் மட்டுமல்ல எந்தவொரு உயிரினமும் வாழ முடியாது.

ரொம்ப சாதாரணமா யோசிங்க.

பூமியில் பொழியும் மழையில் கிட்டதட்ட 80–90% மழை காற்றானது மலையினால் தடுக்கப்பட்டு வீசிய திசைக்கு எதிர்த் திசையில் வீசுகிறது. இதனால்தான் மேகம் உண்டாகி பெரும்பாலும் மழை பொழிகிறது.

மலைகள் இல்லாவிடில் காற்றானது எந்தத் தடையுமின்றி பயணிக்கும்.தடையில்லாததால் அதனால் மழையை உருவாக்கும் மேகங்களை உருவாக்க முடியாது. எனவே காற்றுக்கு ஒரு தடை வேண்டும்.

இந்தியாவில் ஆரவல்லி மலைத்தொடரானது காற்று வீசும் திசையிலேயே அமைந்துள்ளது. அப்படி இல்லாமல் அது காற்று வீசும் திசைக்கு எதிரில் அமைந்திருந்தால் தென்மேற்கு பருவக்காற்றால் இந்தியாவுக்கு கிடைக்கும் மழையை விட அதிகம் கிடைக்கும்.

இப்படி மலை இல்லாவிடில் காற்றுத் தடை இருக்காது.காற்றுத் தடை இல்லாவிடில் பூமியில் உயிரினங்கள் பிறக்கவும் வாய்ப்பில்லை.ஆக மலைதான் மழையை பொழிவிக்க உதவுகிறது.

இந்தக் கருத்தை மையமாக வைத்து, மேற்குதொடர்ச்சி மலை மேகத்தினை தடுக்கிறது எனவே தமிழ்நாட்டில் மழை இல்லை என சொல்லி பலர் மேற்குதொடர்ச்சி மலையின் உயர அளவினை குறைக்க வேண்டுமென முன்பு வழக்கிட்டனர்,

ஒரு சில வகையில் அது உண்மை என்று எடுத்துக்கொண்டாலும் சில முக்கிய காரணிகள் பற்றி நாம் கொஞ்சம் உணர வேண்டும்.

மேற்கு தொடர்ச்சி மலை அருகில் உள்ள மாவட்டங்கள் அப்படி குறைத்தால் மழை அதிகளவு பெறலாம். குறிப்பாக கோவை,ஈரோடு, திருப்பூர், திண்டுக்கல் தேனி, மதுரை, கரூர் விருதுநகர் நெல்லை போன்ற மாவட்டங்களும் ,டெல்டா மாவட்டத்திலும் மழை அளவு தென்மேற்கு சமயத்தில் அதிகம் ஆகும்

ஆனால்,

அவ்வாறு மலையின் உயர அளவை குறைத்தல் என்ன பிரச்சினைகள் நடக்கும் என்று அறிய வேண்டும்..அவைகள்

அங்கு வாழும் பல்வேறு வகையான உயிரினங்கள் நிலை கேள்விக் குறியாகும்.மேற்கு தொடர்ச்சி மலை ஒரு பல்லுயிர் பெருக்கத்தின் அமைப்பாகும்.

அங்கு உருவாகி பல இடங்களை செழிப்பாக்கும் ஆறுகள் தண்ணீர் இன்றி வறண்டு விடும்.(பவானி,அமராவதி,வைகை,தாமிரபரணி) பவானி ஆறு காவேரி ஆற்றின் முக்கிய துணை ஆறு.அது பெரும்பாலும் தென் மேற்கு பருவ மழை நம்பி உள்ள ஆறு.

மலை மேல் உள்ள பகுதிகளில் விவசாயம் சார்ந்த தொழில்களை நம்பி உள்ள மக்களின் நிலமை கேள்விக் குறியாகும்.மற்ற சில பகுதிகள் பற்றி அறிந்தால் இன்னும் தெளிவாகும்

மலை இல்லாத கணவாய் பகுதிகள் மழை பெறுவது இல்லை. அவைகள் காற்றால் வறண்ட பகுதிகளாக உள்ளது.

அதேபோல வடகிழக்கு பருவ மழை சமயத்தில் மேற்கு தொடர்ச்சி மலை இல்லை என்றால் நாம் மழை பெரும் அளவு குறையலாம்.

அதேபோல கோடை மழை அளவும் குறையும்.

.... இந்த கோணத்திலும் என் ஆய்வை தொடர வேண்டும் என்று நினைத்தேன்.

அப்புறமாக, இலக்கிய ரீதியிலும் மலையை கொஞ்சம் அசைத்துப் பார்க்க ஆசைப்பட்டேன்.

மலை என்ற சொல் எப்படி உருவானது? எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே தானே !

சற்றேறக்குறைய 40 - 50 ஆண்டுகளுக்கு முன்புதான் சில வெளிநாட்டு புவியியல் வல்லுநர்கள் பெரும்பாலான மலைகள் புவித்தட்டு நகர்வுகளின் பாதிப்பினால் சில அங்குலங்கள் வளர்வதாகக் கண்டுபிடித்து ஆய்வறிக்கையை வெளியிட்டனர்.

எவரெஸ்ட் சிகரமானது வருடத்திற்கு 0. 16 அங்குலம் (0.41 செ. மீ ) - வளர்ச்சியடைவதாகவும் உறுதி செய்தனர்.

ஆனால் மலைகளின் இத்தகைய வளரும் பண்பை பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே நமது முன்னோர்கள் நன்கு உணர்ந்து அறிந்திருந்தனர் என்பதற்கு ஆதாரம்தான் "மலை" - என இடப்பட்ட காரணப் பெயர்.

மல் என்பதற்கு வளம் என்று பொருள்.

மல் — > மலை

வளம் நிறைந்த பகுதி மலை. வளம் தருவதால் மலை. மலை இல்லையேல் வளம் இல்லை.

Abundance / abound என்னும் பொருளில் மலிவு என்னும் சொல்லும் தமிழில் உண்டு.

மல் >>> மலிவு

இன்று விலை குறைவு என்னும் பொருளில் மலிவு என்னும் சொல் வழக்கத்தில் உள்ளது.

வளம் நிறைந்து இருப்பின் பொருளும் மிகையாக இருக்கும். மிகையாகக் கிடைக்கும்போது விலையும் குறைந்தே இருக்கும். அதனால்தான் மலிவு என்கிறோம்.

மலை - என்ற பெயர் மல் - என்கிற தமிழ் மூலத்திலிருந்து தோன்றியதாகும்.

மல் -மல்கு / மல்குதல்.

மல்குதல் - என்றால் மிகுதல் , பெருகுதல் , அதிகரித்தல். ( to expand).

மலைத்தல் என்றால் வியத்தல்.

✔மல் > மலர் > மலர்தல் .

மலர்தல் = சிறிய மொட்டு விரிந்து அளவில் மிகும் நிகழ்வை மொட்டு மலர்ந்தது என்கிறோம்.

✔மல்லார்தல் = பரத்தல், விரிதல் ; முகம் மேனோக்கிக் கிடத்தல். கை காலைப் பரப்பிக்கொண்டு மல்லார்ந்து கிடப்பது.

இதே மூலத்திலிருந்து தோன்றிய ஆங்கிலச் சொல்தான் - MULTI / MULTIPLE/ MULTIPLY. ஆனால் இவை இலத்தீன் மூலமான Multiplus - லிருந்து வந்ததாக அகராதிகள் பிதற்றுகின்றன.

சரி அப்படியே வைத்துக்கொள்வோம். இலத்தீன் இதனை எங்கிருந்து பெற்றது ? - நம் தமிழிடமிருந்தே !!

.... இப்படித்தான் ஆய்வை மேலே சொல்லப்பட்ட ஒவ்வொரு குறிப்பையும் கொண்டு மலையின் வேர் போல் அதிஆழத்தில் இருந்து செல்ல நினைத்தேன்.

ஆய்வு மிகப் பெரிய பரப்பளவைக் கொண்டதாக அமையலாம் அப்பப்பா... எனவே "வரலாற்றுச் சிறப்புமிக்க மலைகள்"- என்ற தலைப்பை ( " வேத வரலாற்றுச் சிறப்பு மிக்க மலைகள்") என்று உங்களுக்கு சொல்லாமல், எனக்குள்ளே சுருக்கி இந்த பதிவுடன் நிறைவு செய்கிறேன் .

உங்களது மேலான கருத்துக்களை பின்னூட்டமாக பதியுங்கள். சந்தோஷப்படுவேன்

## வெளிப்படும் இரகசியங்கள் 1

( மெய்ம்மை (reality) என்பது விளக்கிக் கொள்ள முடியாதது )



இயேசு தம் சீடர்களிடம் கூறுவர். நீங்கள் குழந்தைகளைப்போல் ஆகாவிடில் என் தேவனின் ராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டீர்கள்' என்று. 'அறிந்திராத நிலையில் இருந்துகொண்டு செயல்படுங்கள்' என்கிறார் அவர்.

உபநிடதங்கள் சொல்கின்றன. 'யார் தங்களை அறிந்தவர்களாகக் காட்டிக் கொள்கிறார்களோ, அவர்கள் எதையுமே அறிந்திருக்க மாட்டார்கள், தாங்கள் ஒன்றையும் அறிந்திருக்கவில்லை என்பவர்களிடம் உங்களை ஒப்படைத்துக் கொள்ளுங்கள் காரணம், அவர்களால் மட்டுமே தங்களைச் சுற்றியிருப்பவர்களிடம், தங்களோடு தொடர்பில் இருப்பவர்களிடம் மாற்றத்தைக் கொண்டுவர முடியும்.

விவேகம் மிக்க சாக்ரட்டீஸ் கூறுவார்.

'நான் ஒன்றை மட்டும் அறிவேன். எதையும் நான் அறிந்திருக்கவில்லை என்பதை' என்று.

' வெற்றுக் கோப்பையாக இருங்கள் ' என்கிறது ஜென்

எதையும் அறிந்திராத நிலையில் இருந்து கொண்டு செயல்படுங்கள், மிகப்பெரிய பரவசமூட்டும் அனுபவங்களை அது உங்களுக்கு வழங்கும். காரணம் எதையுமே அறிந்திராதவர் வியக்கும் திறனுடையவராக இருப்பார். தம்மை அறியாதவராய் காட்டிக்கொள்பவர் மரியாதை கலந்த அச்சத்தை உண்டுபண்ணுவார்.

ஒரு ரோஜா மலரைக் கண்டதுமே அவரால் ஆடமுடியும். நட்சத்திரங்களால் நிரம்பிய வானம் அவரைப் பாடத் தூண்டும். அவர் பிரபஞ்சத்தோடு தம்மைப் பொருத்திக் கொள்கிறவர். சூரிய அஸ்தமனத்தைக் கண்டதும் அவர் பெருமகிழ்ச்சி கொண்டு விடுவார் - காரணம் அவர் எதையும் அறிந்திருக்கவில்லை, மிகச்சாதாரணமானவையும் அவருக்கு அசாதாரணமானவையாகி விடும், காரணம் ஒவ்வொன்றும் அவருக்குப் புதிதாய் தெரியும்.

ஒவ்வொன்றுமே புரிந்துகொள்ள முடியாததும் விளக்கம் காண முடியாததுமான மறைபொருள்தான், உங்கள் அறிவில் உங்களுடைய அறிவின்மை (அறியாமை) யை நீங்கள் மறைத்துக்கொள்ள முடியும் அதே சமயம் மற்றவர்களை வியப்பிலாழ்த்தும் திறனை நீங்கள் இழந்து விடுவீர்கள்.

அறிவு இறைமையுடன் இணையும் பண்பை (mysticism) அழித்துவிடும். எனவேதான், காலகாலமாக மறைஞானிகள் ஒரேயொரு விஷயத்தைச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்: 'அறிவை விடுங்கள், எல்லா அறிவும் தேவையற்ற குப்பை' என்று.

அறிந்திராத நிலையில் இருங்கள், அந்த நிலையில் இருந்து கொண்டு செயல்படுங்கள் ஒரு குழந்தையைப்போல் மரங்களைப் பாருங்கள். ஒரு கவிஞனைப் போல் நிலவைப் பாருங்கள், ஒரு கிறுக்கனைப்போல் வானத்தைப் பார்த்திருங்கள்.

என்ன, எத்தகையது என்பதை எப்படிப் புரிந்துகொள்வது என்று கேட்காதீர்கள். 'எப்படி' என்பது உங்களுக்கு ஓர் ஆராய்ச்சி முறை (methodology). குறிப்பிட்ட அறிவு, குறிப்பிட்ட தகவல் தேவைப்படுவதையே குறிக்கிறது. அதைக்கொண்டு மெய்ம்மையை விளங்கிக்கொள்ள முற்படுவீர்கள்.

ஆனால் மெய்ம்மை (reality) என்பது விளக்கிக் கொள்ள முடியாதது. உங்களுக்கு ஒன்று தேவைப்பட்டால் அதுபற்றி உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்று நினைப்பீர்கள் - ஆனால், மெய்ம்மை வரையறுத்துச் சொல்ல முடியாதது.

ஆச்சரியப்படக் கூடியவராக மட்டுமே இருங்கள்.

قُلْ يٰۤاَيُّهَا النَّاسُ اِنِّىْ رَسُوْلُ اللّٰهِ اِلَيْكُمْ جَمِيْعَاْ ۨالَّذِىْ لَهٗ مُلْكُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ لَاۤ اِلٰهَ اِلَّا هُوَ يُحْىٖ وَيُمِيْتُ فَاٰمِنُوْا بِاللّٰهِ وَرَسُوْلِهِ النَّبِىِّ الْاُمِّىِّ الَّذِىْ يُؤْمِنُ بِاللّٰهِ وَكَلِمٰتِهٖ وَاتَّبِعُوْهُ لَعَلَّكُمْ تَهْتَدُوْنَ

(நபியே!) நீங்கள் கூறுங்கள்: "மனிதர்களே! (நீங்கள் எந்த நாட்டவர் ஆயினும் எவ்வகுப்பாராயினும்) நிச்சயமாக நான் உங்கள் அனைவருக்கும் அல்லாஹ்வினால் அனுப்பப்பட்ட ஒரு தூதர்.

வானங்கள் பூமியின் ஆட்சி அவனுக்குடையதே! (வணக்கத்திற்குரிய) இறைவன் அவனைத்தவிர வேறு ஒருவருமில்லை. அவனே உயிர்ப்பிக்கிறான்; மரணிக்கும்படி செய்கிறான்.

ஆகவே, அந்த அல்லாஹ்வையும், எழுதப் படிக்க அறியாத அவனுடைய இத்தூதரையும் நீங்கள் நம்பிக்கை கொள்வீர்களாக! அவரும் அல்லாஹ்வையும், அவனுடைய வசனங்களையும் நம்பிக்கை

கொள்கிறார். ஆகவே, நீங்கள் நேரான வழியை அடைய அவரையே நீங்கள் பின்பற்றுங்கள். (குர்ஆன் : 7:158)

## வெளிப்படும் இரகசியங்கள் 2

( ஒன்றித்தல் )



சிஸ்டைன் தேவாலயக் கூரையில் ஓவியம் வரைந்து கொண்டிருந்தார் உலகப் புகழ் பெற்ற ஓவியர் மைக்கேல் ஆஞ்செலோ. மல்லாந்து படுத்த நிலையிலும், புரண்ட நிலையிலும் சித்திரம் தீட்டியதில் அவர் களைத்துப் போனார்.

தற்செயலாகத் திரும்பியபோது, கீழே ஓர் இத்தாலியப் பெண் பிரார்த்தனை செய்வதைக் கவனித்தார். அந்தப் புகழ்பெற்ற ஓவியர் சின்னதாய் ஒரு குறும்பு செய்யத் தீர்மானித்தார்.

தாம் வேலை செய்து கொண்டிருந்த கம்பு சாரக்கட்டின் விளிம்பில் அமர்ந்தபடி 'நான் இயேசு கிறிஸ்து. நான் இயேசு கிறிஸ்து! காது கொடுத்துக் கேள். நான் அற்புதங்களைச் செய்வேன்' என்று கூவினார்.

இத்தாலியப் பெண் அண்ணாந்து நோக்கினாள், தன்னுடைய ஜெப மாலையை இறுக்கிப் பிடித்தபடி, 'உம்முடைய வாயை மூடும். நான் உமது அன்னை மரியாவுடன் பேசிக் கொண்டிருக்கிறேன்' என்று பதிலளித்தாள்

ஒன்றான இறைவனிடம் ஒன்றிப்பது ஒப்பற்ற அற்புத நற்பேறு.

பற்றற்றான் பற்றினைப் பற்றி பிடிப்பதற்கு பற்றுவிடும் முதல்படி உளத்தூய்மை. அதுவே ஒன்றான இறைவனிடம் ஒன்ற வைக்கும். தூய்மையான உள்ளத்தில் தீய எண்ணங்கள் எழாது, அலைபாயும் அகத்தின் விழைவு விபரீதமாகிவிடும். விழுந்து வீழ்ந்து தாழ்ந்து ஓய்ந்து மாய்ந்திடும் நிலையே ஏற்படும்.

இக வாழ்வில் அகபுற தூய்மை உடையோர் இறைவனிடம் ஒன்றுவர் என்று உரைக்கிறது குர்ஆன் 87- 14 ஆவது வசனம்.

நீங்கள் என்னை நினைவு கூருங்கள். நான் உங்களை நினைப்பேன். எனக்கு நன்றி விசுவாசமாய் இருங்கள் என்ற 2-152 ஆவது வசனப்படி இறை கட்டளைகளை நிறைவேற்றுவது இறைவனை நினைவு கூர்வதாகும்.

அடியார்கள் மீது இரக்கம் காட்டும் இறைவனின் பொருத்தத்தை நாடி தேடி தம்மையே விற்றவர்கள் மனிதர்களில் உண்டு என்ற 2-207 ஆவது வசனம் அல்லாஹ்விற்காக ஏற்ற ஏக இறை கொள்கையை நிலைநிறுக்குவதற்காக உடல், பொருள், உயிர் அனைத்தையும் துறந்த ஸுஹைப் இப்னு ஸினான் ரூமி (ரலி) அம்மார் பின் யாஸிர் (ரலி) பிலால் (ரலி) கப்பாப் இப்னு அரத்து (ரலி) முதலியவர்களைக் குறிப்பிடுகிறது

اِذْ قَالَ مُوْسٰى لِاَهْلِهٖۤ اِنِّىْۤ اٰنَسْتُ نَارًا سَاٰتِيْكُمْ مِّنْهَا بِخَبَرٍ اَوْ اٰتِيْكُمْ بِشِهَابٍ قَبَسٍ لَّعَلَّكُمْ تَصْطَلُوْنَ

மூஸா தம் குடும்பத்தாரை நோக்கி: “நிச்சயமாக நான் நெருப்பைக் காண்கிறேன்; உங்களுக்கு நான் அதிலிருந்து (நாம் செல்ல வேண்டிய வழி பற்றிய) செய்தியைக் கொண்டு வருகிறேன், அல்லது நீங்கள் குளிர்காயும் பொருட்டு (உங்களுக்கு அதிலிருந்து) நெருப்புக் கங்கைக் கொண்டு வருகிறேன்” என்று கூறியதை (நபியே!) நினைவு கூர்வீராக!

(குர்ஆன் : 27:7)

فَلَمَّاۤ اَتٰٮهَا نُوْدِىَ مِنْ شَاطِیِٴ الْوَادِ الْاَيْمَنِ فِى الْبُقْعَةِ الْمُبٰرَكَةِ مِنَ الشَّجَرَةِ اَنْ يّٰمُوْسٰۤى اِنِّىْۤ اَنَا اللّٰهُ رَبُّ الْعٰلَمِيْنَ ۙ

அவர் (நெருப்பு) அதனிடம் வந்தபொழுது, மிக்க பாக்கியம் பெற்ற அந்த மைதானத்தின் ஓடையின் வலது பக்கத்திலுள்ள ஒரு மரத்தில் இருந்து "மூஸாவே! நிச்சயமாக உலகத்தாரை படைத்து வளர்த்து காக்கும் அல்லாஹ் நான்தான்" என்ற சப்தத்தைக் கேட்டார். (குர்ஆன் : 28:30)

இறைவனிடம் பேசிக் கொண்டிருந்த நபி மூஸா (அலை) அவர்களிடம் இப்லீஸ் குறுக்கிட்டு " மூஸா உன்னுடன் உரையாடுவது நெருப்பால் படைக்கப்பட்ட சைத்தான் என்பது அறிந்து அஞ்சிக் கொள்ளும் " என்று கூறினான்.

அப்பொழுது மூஸா (அலை) அவர்கள் இப்லீஸை நோக்கி, " நான் செவியேறுவது இறைவனுடைய குரலை இன்றி வேறு எவருடைய குரலும் அல்ல அதனை நான் நாலாத் திக்குகளில் இருந்தும் செவியுறுகிறேன்.என் உறுப்புகள் அனைத்திலிருந்தும் செவியுறுகிறேன். எனவே இது என் இறைவனுடைய குரல் தான் " என்று கடுகடுப்புடன் கூறினார். அது கேட்டு சைத்தான் முகங்கருகிச் சென்றான்.

இறைவனிடம் ஒன்றித்தல் என்பது இறைவனிடமே ஒன்றித்தலாகும்

## வெளிப்படும் இரகசியங்கள் 3

( சரணடைதல் )

இயேசு ''நான் '' என்கிறபோது அதே 'நான்' என்பதை அவர் குறிக்கவில்லை. 'நான் வாசலாயிருக்கிறேன், நான் சத்தியமாயிருக் கிறேன். நான் வழியாயிருக்கிறேன்' என்கிறபோது அவருடைய '' நான் '' தற்பெருமையை பொருளாய் கொண்டிருக்கவில்லை.

பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனிடம், ''என் பாதம் பணிந்து. என்னைச் சரணடை'' என்றார். அந்த 'நான்' உங்களுடைய 'நான்' அல்ல !

புத்தர் தமது சீடர்களிடம் அடிக்கடி சொல்வார். ''உங்களிடத்தே ஒளியாயிருங்கள் '' என்று.

புகழ்பெற்ற அரசனான பிரசேனஜித் அவரைக் காணவந்தான். புத்தரிடம் பல சந்நியாசிகள் வந்து சிரம் தாழ்த்தி வணங்குவதைக் கண்டான். அவர்கள்,

'புத்தம் சரணம் கச்சாமி' (நான் புத்தரின் பாதங்களில் இணைகிறேன்),

'சங்கம் சரணம் கச்சாமி' (நான் புத்தரின் திருக்கூட்டத்தில் இணைந்து கொள்கிறேன்).

'தர்மம் சரணம் கச்சாமி (நான் முடிவான விதியுடன் இணைகிறேன்) என்றார்கள்.

பிரசேனஜித் தர்க்கவியல் கற்றவன். அவனுக்குக் கொஞ்சம் குழப்பம். சிறந்த கல்விமானும் வாதங்களில் தேர்ந்தவனுமான அந்த அரசன் புத்தரிடம் கேட்டான்,

''ஐயனே, பொறுத்தருளும். ஆனால் நீங்கள் 'உனக்கு நீயே ஒளியாயிரு' என்று மக்களிடம் கூறுகிறீர்கள். ஆனால் அவர்கள் உங்களிடம் சரணடைகிறபோது. உங்கள் பாதங்களில் பணிகிறபோது நீங்கள் அவர்களைத் தடுக்கவில்லை. நீயே உனக்கு ஒளியாயிரு' என்று நீங்கள் சொல்வீர்களாயின், அடுத்தவர் காலில் விழுகிற அவசியமில்லை பிறகெதற்கு அவர்கள் உங்களுடைய காலில் விழுந்து கொண்டிருக்கிறார்கள் ?'' என்று.

புத்தர் சிரித்தபடி சொன்னார்:

"அவை என்னுடைய கால்களல்ல. அவர்கள் என்னிடம் சரணடையவுமில்லை. காரணம் உரிமை கொண்டாடக் கூடிய தற்பெருமை போல் எதுவும் எனக்குள் இல்லை. 'நான் வெறும் காரணம். என்னை ஒரு காரணம் வைத்துக்கொண்டு அவர்கள் சரணடைகிறார்கள். அவர்கள் என்னிடம் சரணடையவில்லை. அதுவே சரணாகதி, அவ்வளவே. ஏதாவதொரு சாக்குபோக்கு இல்லாமல் அவர்களால் சரணடைய முடியாது. என்னை ஒரு சாக்காகக் கொள்கிறார்கள். என்னை அவ்வாறு அவர்கள் பயன்படுத்திக் கொள்ள நான் இடமளிக்கிறேன் "

ஹஜ்ரத் அமீருல் முஃமினீன் உமர் பாரூக் (ரலி) அவர்கள் , ஹஜ்ருல் அஸ்வத் கல்லை முத்தமிட்டுக் கொண்டு , பிறகு ,"சந்தேகமின்றி நீ ஒரு கல் , உன்னை முத்தமிடுவதால் , நீ நன்மை செய்வதுமில்லை , முத்தமிடாவிட்டால் நீ தீமை செய்வதுமில்லை.நபிகள் நாயகம் ﷺ அவர்கள் உன்னை முத்தமிடாதிருந்தால், நான் உன்னை முத்தமிட்டிருக்க மாட்டேன் " என்று கூறினார்கள்.

இதைக் கேட்ட ஹஜ்ரத் அலி (ரலி) அவர்கள்," (மஹ்லன் ! யா உமர் ) உமர் அவர்களே ! சற்று நிதானியுங்கள் ! நாவைப் பேணுங்கள் ! முத்தமிடுவதால் இந்தக் கல் நிச்சயமாகப் பிரயோஜனத்தைக் கொடுக்கின்றது ; முத்தமிடாவிட்டால் அது நஷ்டத்தைக் கொடுக்கின்றது "என்று கூறினார்கள் .

அவர்களது அந்தக் கூற்றுக்கு விளக்கம் தரும்படியாக உமர் (ரலி) அவர்கள் கேட்கவே, அலி(ரலி) அவர்கள் ,

"இல்லா மனித்தகத -இன்தர் ரஹ்மானி - அஹ்தா " _ " ரஹ்மானிடம் அறுதிமானம் எடுத்துள்ள வனைத் தவிர " என்று குர்ஆனில் ( 7: 172 ) இறைவன் கூறியுள்ளதன் கருத்து யாதெனில் ,

ஆன்மா உலகில் (ஆலம் அர்வாஹ்வில் ) நாம் அல்லாஹ்விடம் , அறுதிமானம் செய்த உறுதிப் பிரமாணம் இந்தக் கல்லின் வாயினுள் வைக்கப்பட்டிருக்கிறது .

அந்த அறுதிமான வார்த்தைப்பாடு , எழுதப்பட்டுள்ள சத்திய நாமாவையே நாம் முத்தமிடுகிறேமேயல்லாது கல்லை அல்ல , நாம் அங்கு காட்டுகின்ற மரியாதை ஒழுக்கம்யாவும் கல்லுக்காக அல்ல .

"ஹஜ்ருல் அஸ்வத் உலகில் அல்லாஹ்வின் கரம் (யமீனுல்லாஹி) என்பதாக நபிகள் நாயகம் ﷺ அவர்கள். திருவாய் மலர்ந்தருளி உள்ளார்கள் .

"உமர் அவர்களே ! இதற்குப் பிறகும் தாங்கள் இதை ஒரு சாதாரணக் கல்தானே என்றே எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள் போலும் ! " என்று அலி ( ரலி) விளக்கினார்கள் .

இவ்வகமியம் உமர் (ரலி) அவர்களுக்கு வெளிப்பட்டதும் , "அலி இல்லாவிட்டால் இந்த உமர் ஹலாக்காகி இருப்பார் " என்று உமர் (ரலி) அவர்கள் கூறினார்களாம் .

ஸஹீஹில் புகாரி பாகம் 4 பக் 608

அஷிஅத்துல் - லம் ஆத்- தர்ஜுமா மிஷ்காத் .

வெளிப்படும் இரகசியங்கள் 4

( பதற்றம் )




ஏதோ ஒன்றை அறிந்துகொள்வதற்காக விஞ்ஞானிகள் தினமும் போராடிக் கொண்டிருக்கிறார்கள். திரும்பத் திரும்பத் தங்கள் முயற்சியில் அவர்கள் தோற்றுத்கொண்டிருப்பார்கள். அவர்கள் ஒருநாள் திடுதிப்பென்று சற்றும் எதிர்பாராதபோது, அவர்கள் தேடியது எந்த முயற்சியுமின்றி அது வெளிப்பட்டு விடும். தற்செயலாகத்தான் அது நடந்து விடுகிறது.

அப்போது அவர்கள் புகைத்துக்கொண்டோ அல்லது குளியல் தொட்டியில் ஓய்வாக இருந்து கொண்டோ அல்லது தோட்டத்தில் எதையாவது தோண்டிக் கிளறிக் கொண்டோ இருந்திருப்பார்கள்.

அது வெளிப்பட்டதில் திட்டவட்டமாய் ஒரு ரகசியம் இருக்கிறது.

நீங்கள் ஒரு குறிக்கோளுடன் நேரடியாக தீவிரமாக முயன்று பெற்று விடத் துடிப்பீர்கள். ஆனால், எவ்விதக் கிளர்ச்சியும் இல்லாமலிருப்பவர்களுக்கே வாழ்க்கை தனது ரகசியங்களை வெளிப்படுத்துகிறது !

நீங்கள் ரொம்பத் தீவிரமும் மூர்க்கமும் கொண்டு வாழ்க்கையின் ரகசியத்தை அறிந்துகொள்ள முயல்கிறீர்கள். அப்போது உங்களுக்குத் தடுமாற்றமும், பதற்றமும் உண்டாகிவிடும். நீங்கள் ஏற்கக்கூடியவராய் இருக்க மாட்டீர்கள். சத்தியத்தால் சந்து பொந்துகளில் நுழைய முடியாது. அது ரொம்பப் பெரியது.

நீங்கள் தணிவு நிலையில் (relaxed) இருந்தால் உங்களுடைய தடுமாற்றம், பதற்றம் மறைந்துவிடும். எந்தப் பக்கத்திலும் தடையற்றவராயிருப்பீர்கள்,

சும்மா குளியல் தொட்டியில் சோப்பு நுரைகளுடன் துளைந்தாடிக் கொண்டிருப்பது போல. ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் அப்படித்தான் எந்த மனக் கிளர்ச்சி இல்லாமல் மிகப்பெரிய கண்டுபிடிப்புகளை நிகழ்த்திக் கொண்டிருந்தார். அவர் மணிக்கணக்கில் குளியல் தொட்டியில் சோப்பு நுரைகளுடன் விளையாடுவது உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். அதை எப்படி மற்றவர்களிடம் சொல்வது, அவருடைய மனைவி சங்கடப்படுவார்.

நண்பரொருவர் அவரைப் பார்க்கப்போய், ஆறு மணி நேரம் காத்திருக்கும்படி ஆயிற்று. காரணம் ஐன்ஸ்டீன் குளியல் தொட்டியைவிட்டு வரவேயில்லை. கடைசியில் அவருடைய மனைவி உண்மையைச் சொல்லும்படி ஆயிற்று.

"அவர் குளியலறையில் இருக்கும்போது நாம் அவரைத் தொந்தரவு பண்ண முடியாது. அவருடைய ஆய்வுக்கூடத்தில் கூட நீங்கள் நுழைந்து தொல்லை கொடுக்கலாம். பாத்ரூமில் அவர் நுழைந்துவிட்டால் அது சாத்தியமில்லை. அங்கேதான் அவர் ஓய்வாக இருப்பார்.

அப்போதுதான் பல நுட்பமான சமாசாரங்கள் அவருக்குத் தோன்றியபடி இருக்கும். நாம் ஒன்றும் செய்வதற்கில்லை.

அவர் சோப்பு நீர்க்குமிழ்களுடன் விளையாடிக் கொண்டிருக்கிற போதுதான் தொலைதூர நட்சத்திரங்கள் அவருக்காகத் தரையிறங்கி வந்து அவரிடம் பிரபஞ்ச உண்மையைப் பற்றி பேசுகின்றன.

இலட்சோப லட்சம் ஆண்டுகளாய் பூமிக்கு வந்து சேராத ஒளி பயங்கர வேகத்தில் பயணம் செய்கிறது அதுவும் நம்ப முடியாத வேகத்தில்... நொடிக்கு இரண்டு லட்சத்து தொண்ணூற்று ஒன்பதாயிரத்து எழுநூற்று தொண்ணூற்று இரண்டு மீட்டர் வேகத்தில் ஒளி பயணித்து வருகிறது.

பூமி தோன்றிய போது தொடங்கிய ஒளியின் பயணம் இன்னும் முடிந்தபாடில்லை என்பதை நுரைக்குமிழ்களோடு விளையாடியபடி இருந்த ஐன்ஸ்டீனிடம் அந்த நட்சத்திரங்கள் சொல்லிக்கொண்டு போனதாம் " என்றார்.

இந்த யுகத்தின் மிகப்பெரிய கண்டுபிடிப்பான சார்பு நிலைக் கொள்கையை ( Relativity ) யை அப்படித்தான் கண்டுபிடித்தாராம்.

எந்த ஒரு செயலையும் நாம் அழகே செய்து முடித்திட நிதானம் தேவை. அவசரம் கூடாது. பதற்றம் எந்த ஒரு காரியத்தையும் கெடுத்து விடும். பதறாத காரியம் சிதறாது என்பது முதுமொழி.

சாதாரண சூழலில் யாரும் பதற்றம் அடைய மாட்டார்கள் தான். ஆனால் சில அழுத்தம் தரும் சூழல்கள் (stressful situations) பதற்றத்தைக் கொண்டு வரலாம். அந்த சமயங்களில் நாம் எவ்வாறு நடந்து கொள்கிறோம் என்பதே நமது ஆளுமையை (personality) நிர்ணயிக்கும்.

சரி, பதற்றமான சூழல்களில் அண்ணலார் (ஸல்) அவர்களின் முன்மாதிரி எப்படி ?

பத்ர் போருக்கு முன். நபியவர்கள் பதற்றப் பட்டார்களா? இல்லையே! ஏன்? எந்த ஒரு போரின் போதும் சரி நபியவர்கள் பதற்றப்பட்டதே கிடையாது.

அரபுலகம் முழுவதுமே திரண்டு வந்து மதீனாவை முற்றுகையிட்டு அழித்திட வந்த அகழ் யுத்தத்தின் போதும் நபியவர்கள் பதற்றம் அடைந்திடவில்லை. நபித்தோழர்களும் பதற்றம் அடைந்திடவில்லை.

அவ்விடத்தில் முஃமின்கள் (பெருஞ்) சோதனைக்கு உள்ளாக்கப்பட்டு, இன்னும் கடுமையான அதிர்ச்சியினால் அதிர்ச்சிக்கப்பட்டார்கள்.

குர்ஆன் (33: 11)

பொதுவாகச் சொல்வதென்றால் – எல்லா இறைத்தூதர்களின் வாழ்க்கையிலும் இப்படிப்பட்ட சூழல்கள் நிறைந்தே காணப்படுகின்றன. இப்படிப்பட்ட சூழல்களில் வைத்துத் தான் அல்லாஹு தஆலா இறைத்தூதர்களுக்கும் இறை நம்பிக்கை கொண்ட அந்த நபித் தோழர்களுக்கும் “பயிற்சி” அளித்திருக்கின்றான்.

ஹிஜ்ரத்தின் போது தவ்ர் குகையில் அண்ணலாரும் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களும் தங்கியிருந்த சமயம் பதற்றத்திற்குரியது தான். “பயப்பட வேண்டாம்! அல்லாஹ் நம்முடன் இருக்கின்றான்!” என்றார்கள் நபியவர்கள்.

## வெளிப்படும் இரகசியங்கள் 5

( மனம் )

ஒரு மனிதனும், சின்னப்பையன் ஒருத்தனும் முடிதிருத்தும் கடைக்குச் சென்றார்கள். அந்த மனிதனுக்கு சவரம், ஷாம்பு, நகம் வெட்டுதல், முடிவெட்டுதல் என்று வழக்கமான சடங்குகள் நடந்தன. அடுத்து, பையன் நாற்காலியில் உட்கார்த்தி வைக்கப்பட்டான்.

'நான் அணிவகுப்பில் கலந்துகொள்ள, பச்சைநிற கழுத்துப் பட்டி வாங்க வேண்டும். சில நிமிடங்களில் திரும்பி விடுவேன்' என்று சொல்லிச் சென்றான் அந்த மனிதன்.

பையனுக்கு முடிவெட்கிற வேலை முடிந்தது. அந்த மனிதன் இன்னமும் வந்தபடியில்லை. கடைக்காரன் பையனிடம் சொன்னான். ''பார்த்தாயா உன்னுடைய அப்பாவுக்கு உன்னைப் பத்தின ஞாபகமே இல்லை போலிருக்கு''என்று.

பையன் சொன்னான். 'அவர் என்னோட அப்பா அல்ல. வழியில் வருகிற போது, என்னுடன் கைகோர்த்துக் கொண்டு சொன்னார், "குழந்தே, நாம ரெண்டு பேரும் ஃப்ரீயா முடி வெட்டிக்கலாம்"!னு

அறிவின் மனதின் ஒட்டுமொத்த செய்கையும் தந்திரமானது மற்றவர்களுடன் போட்டி போடுவதற்கான யுக்தியை நீங்கள் உருவாக்கிக் கொள்கிறீர்கள், சாமர்த்தியமாக மனிதர்களை எளிதில் ஏமாற்றுகிறீர்கள். காலப்போக்கில் ஏமாற்றிக் கொண்டு விடுவீர்கள். மனம் அதைத்தானே செய்கிறது. அது மற்றவர்களையும் ஏமாற்றுகிறது உங்களையும் ஏமாற்றுகிறது.

ஆனால் உண்மையில் எல்லா மரபுகளிலும் மனதிற்குப் பல்வேறு பெயர்கள் உண்டு. ஒரு மரபில் அது 'பேய்' என்றும், மற்றொன்றில் 'சாத்தான்' என்று அழைக்கப்படுகிறது. ஆனால் அதுவெல்லாம் மனதைப் பற்றிய உருவகங்களேயாகும் .

இயேசு மலைகளில் சஞ்சரிக்கிறார். தியானம் பண்ணுகிறார், அப்போது பேயை எதிர்கொள்கிறார். அந்தப்பேய் யாரென்று உங்களுக்குத் தெரியுமா? அது புறத்தேயிருக்கிற யாரோ அல்ல. குழந்தைகளுக்காக எழுதப்படுகிற கதைகளில் தலையில் கொம்பு, நீண்ட வால், குளம்புகளும் உறுமிக் கொண்டிக்குமே அந்தப் பேய்கள் அல்ல அது.

இயேசுவைக் கவர்ந்திழுக்க முயன்ற பேய் எது? அதுதான் மனம். பேய் என்பது மனம் குறித்த மிகப் பழைமையான உருவகம் (metaphor) நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பதை அது கண்காணித்தபடி இருக்கும்.

நீங்கள் அதை ஊட்டி வளர்த்துக் கொண்டிருந்தால் அது சமர்த்தாக இருக்கும். அதனிடமிருந்து நீங்கள் விலக முற்பட்டால், அது உங்களுக்குத் தொல்லை கொடுக்கத் தொடங்கிவிடும். ஒரு திட்டம் பலிக்கவில்லை என்றால், தன் திட்டத்தை அது உடனே மாற்றிக் கொண்டு சந்திக்கும். அது உண்மையிலேயே சமர்த்துதான்.

கபீரின் சூத்ரங்களை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா ?.

'நான் காமத்தை அடக்கினேன். அது கோபமாக மாறியது. நான் கோபத்தை அடக்கினேன் அது பேராசையானது. நான் அடக்கிய பேராசை முகம்காட்டியது அதே மனந்தான். ஒரே மனந்தான் நீங்கள் அதனுடன் சண்டையிடத் தொடங்கினால், தன்னுடைய நிறங்களை அது மாற்றிக் கொண்டேயிருக்கும் - அது ஏமாற்றுவதற்காகத் தான் ?

அடக்கிவைத்த காமம், கோபமாக மாறுகிற பொழுது, அது காமந்தான் என்பதை நீங்கள் புரிந்து கொள்வதில்லை. கோபம் என்றே பாசாங்கு செய்கிறீர்கள்.

கோபம் காமத்தில் இருந்து முற்றிலும் மாறுபட்டதாய் காட்சியளிக்கும். உண்மையில் அவை துருவ முனைகளாய் தெரியும்.காமத்தில் நேசம் இருக்கிறது. ஆனால் கோபத்தில் வெறுப்பு இருக்கிறது அவை எப்படி ஒன்றாக இருக்க முடியும் ?

மனம் எதிரிடையானதை மறைக்க முயலும். விளங்காததைக் கண்டுக்கொள்ள பெரிய அளவில் அறிவுத் திறன் தேவைப்படும். இல்லையேல், நீங்கள் ஏமாற்றப்படுவீர்கள். பிறகு. கோபம் உங்களை வேதனைக்குள்ளாக்கும்

நீங்கள் கோபத்தை அடக்கிவைத்தால் அது பேராசையாக மாறும். கோபம் பேராசையாகிறது என்பதை தர்க்கரீதியாக யார் தான் சிந்திக்க முடியும்? அவை ஒன்றுக்கொன்று தொடர்புடையதாய் தெரியவில்லை. உள்ளார்ந்து நிகழ்வுகளை நீங்கள் ஊன்றிக் கவனித்தால் ஒழிய அந்தத் தொடர்பை உங்களால் புரிந்துக் கொள்ளமுடியாது.

மனம் அப்படி பல புதிய முகங்களை புதிய முகமூடிகளைத் தரித்துக் கொண்டுவிடும். அதன் பிறகு நீங்கள் பேராசையை அடக்க அது கர்வமாய் முகங்காட்டுகிறது அது எல்லையற்றதாய் என்றும் தொடரக் காண்பீர்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

"ஒவ்வொரு மனிதனிடத்திலும் அல்லாஹ் ஷைத்தானின் ஆதிக்கத்தையும், மலாயிக்கத்துனுடைய ஆதிக்கத்தையும் படைத்திருக்கின்றான்.

ஷைத்தானின் ஆதிக்கம் மனிதனை உண்மையை பொய்ப்படுத்தவும், தீமையான விஷயங்களில் ஆர்வமூட்டவும் வழிநடத்திச் செல்லும். இந்த இடத்தில் "யா அல்லாஹ் விரட்டப்பட்ட ஷைத்தானின் தீங்கை விட்டும் பாதுகாவல் தேடுகின்றேன்"என்று சொல்லி அந்த எண்ணத்திற்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்.

மேலும் வறுமை ஏற்படும்போதும் ஷைத்தான் நம்மை ஆதிக்கம் செலுத்தப் பார்ப்பான். இந்த இடத்தில் மிக கவனமாக செயல்பட்டு அவன் ஊசலாட்டத்திலிருந்து தப்பித்து இதே பாதுகாவல் தேடவேண்டும்.

மலாயிக்கத்தின் தூண்டுதலோ நம்மை நன்மையின் பக்கம் வழிநடத்தும். இப்படி மலாயிக்கத்தின் தூண்டுதல் நம்மை நெருங்கி நல்ல ஒரு காரியத்தை செய்ய நாடும்போது, முதன் முதலாக நாம் அல்லாஹ்வை புகழ்ந்து , போற்றவேணும்.

அப்பொழுதுதான், தீமையான காரியத்தின் வழி நடத்தலில் நமக்கு நாட்டம் அற்றுப்போய், நல்லதை செய்ய மனம் நாடுவதோடு, நின்றுவிடாமல், நல்லதை நடத்தியும் காட்டும். ஆதலால் ஷைத்தான் இந்த இடத்தில் நம்மிடம் தோற்று ஓடும் நிலைமையை அது ஏற்படுத்தும்.

## வெளிப்படும் இரகசியங்கள் 6

( மனம் அது ஏன் உள்ளது? )

மனம் இல்லாமல் உங்களால் தியானம் செய்ய முடியாது, மனம் இல்லாமல் தியானத்தைப் பற்றி எதுவும் தெரிந்து கொள்ள முடியாது. அதனால்தான் விலங்குகளுக்கு தியானம் பற்றித் தெரியாது. புத்தர்கள் அங்கே பிறப்பதில்லை. ஏன்? மனம் இன்னமும் அங்கு பிறக்கவில்லை.

மனம் இன்னமும் பிறக்கவில்லை என்றால் மனமற்ற நிலையை நீங்கள் எப்படித் தெரிந்துகொள்ள முடியும்? மனம் இருக்க வேண்டும்; அப்படியானால்தான் நீங்கள் சில சமயங்களில் மனதைத் தள்ளி வைத்துவிட்டு மனம் இல்லாத நிலையில் மெய்மைக்குள் பார்க்க முடியும். அதற்கு மனம் வேண்டும் அது அத்தியாவசியமானது

ஆதாம் பற்றி விவிலியம் கூறுவது :

"ஏடன் தோட்டத்தை விட்டு ஆதாம் புறப்பட்டவுடன் என்ன செய்தான்? அவன் மனதை உருவாக்கத் தொடங்கினான். எனவேதான் அடையாள குறியான 'அறிவு விருட்சம்'. அறிவு விருட்சம் தரும் கனியை உண்ண ஆதாமிற்கு தடை. ஏன் அது தடை செய்யப்பட்ட ஒன்று ? ஏனென்றால் அவனை ஈர்த்து சாப்பிட வைக்க அது ஒன்றே வழி.

ஆதாம் கடவுளுக்குக் கீழ்ப்படிய மறுத்தான் என்று இல்லை. கீழ்ப்படியாததால் அவன் கடவுளின் விருப்பத்தைப் பூர்த்தி செய்தான். அறிவு விருட்சத்தின் கனியை ஆதாம் சாப்பிட வேண்டும் என்று கடவுள் விரும்பினார். அதற்காகத்தான் தடை. எனவேதான் "அதிலிருந்து சாப்பிடாதே" என்று கட்டளை இட்டார்.

ஏடன் தோட்டம் என்பது பெரிய தோட்டம். முழு இயல் உலகமும் ஏடன் தோட்டமாகும். லட்சக்கணக்கான மரங்கள் இருந்தன. ஆதாமை தன்னிச்சையாக விட்டு இருந்தால் அவனால் அறிவு விருட்சத்தைக் கண்டுபிடித்து இருக்க முடியாது. லட்சக்கணக்கான மரங்களுக்கிடையே ஒரு மரத்தைக் கண்டுபிடிப்பது கிட்டத்தட்ட நடவாத காரியம்.

ஆனால் கடவுள், "இந்த மரத்திலிருந்து உண்ணாதே" என்று தெளிவாக்கி விட்டார். ஆதாமிற்குள் ஆசையை உண்டாக்கினார். பாம்பு அவனைத் தவறாகத் தூண்டவில்லை. அதைச் செய்தது கடவுளே!

ஏன் இந்தத் தூண்டுதல்? காரணம் மனம் உருவாக்கப்பட வேண்டும். இல்லையென்றால் ஆதாம் ஒரு விலங்கைப் போல வாழ்ந்திருப்பான். மகிழ்ச்சியாக, ஆனால் விழிப்புணர்வற்று வாழ்ந்திருப்பான்.

விழிப்புணர்வு இல்லாத மகிழ்ச்சி என்ன மாதிரியானது? நீங்கள் உலகத்திற்கே அரசனாக இருக்கலாம். ஆனால் அதை உணர்ந்திருக்கவில்லை என்றால் அதில் என்ன அர்த்தம் இருக்கிறது ? ஒரு வகையான மகிழ்ச்சியில் விலங்குகள் வாழ்கின்றன, ஆனால் உணர்வின்றி தங்கள் மகிழ்ச்சி பற்றி அறியாமல் வாழ்கின்றன.

நீங்கள் மகிழ்ச்சியில் உள்ளீர்கள் என்பது தெரியாமல் இருந்தால், அந்த மகிழ்ச்சியில் அர்த்தமேயில்லை. அதற்கு பதிலாக சோகமாக இருக்கலாம். அறிதல் அவசியம். அதுவும் மனதை அறிதல் அவசியம்.

"மனம் அல்லது உள்ளம் பற்றிய கட்டமைப்பை நாம் விளக்கிக் கூறுவதைவிட படைத்த இறைவன் கூறும்போது அதன் சிறப்பு மிக அழகாக புரியும் ஆகவே அல்லாஹ் எவ்வாறு தனது அருள்மறை குர்ஆனில் மனம் அல்லது உள்ளம் பற்றிய கட்டமைப்பை தெளிவு படுத்தி பகுத்தறிவுப் பாடம் நடத்துகிறான் என்பதை காண்போம்

மேலும் நிச்சயமாக நாம் மனிதனைப் படைத்தோம், அவன் மனம் அவனிடம் என்ன பேசுகிறது என்பதையும் நாம் அறிவோம்; அன்றியும், (அவன்) பிடரி(யிலுள்ள உயிர்) நரம்பை விட நாம் அவனுக்கு சமீபமாகவே இருக்கின்றோம். (குர்ஆன்: 50:16)

இங்கு அல்லாஹ் மனிதனைப் படைத்தோம் என்று கூறும்போது அதனுடன் அவனது மனம் அவனிடம் என்ன பேசுகிறது என்பதையும் கூறுகிறான்.

இங்கு நாம் சிந்திக்க வேண்டியது மனிதனை அவனது மனதுடன் இணைத்துப் பார்ப்பதேயாகும்.

## வெளிப்படும் இரகசியங்கள் 7

( வெறுப்புணர்வு )




தான் ஞானம் அடைந்துவிட்டதை புத்தர் பிரகடனப்படுத்திய போது மக்கள் பெரிதும் புண்பட்டனர். வருத்தம் அடைந்தனர். கடந்த காலத்தில் ஞானம் பெற்றவர்களை அவர்களால் நம்ப முடிந்தது. ஆனால்,

தம்மோடு இருந்த ஒரு சமகாலத்தவரை, தங்களைப் போன்ற ஒரு மனிதர்தான் ஆனாலும் அவர் ஞானம் பெற்றார் என்ற போது அவர்களால் நம்பமுடியவில்லை.

ஆனால்,வருங்காலத்தில் மனிதர்கள் ஞானம் பெறுவர் என்பதை அவர்களால் நம்ப முடிகிறது. அதே நிகழ்காலத்தில் ? சமகாலத்தில் ? யாரோ ஒருவர் ஞானம் அடைந்துவிட்டார் என்பது அகங்காரத்தைக் காயப்படுத்துகிறது; "அப்படியானால் நான் மட்டும் இங்கே என்ன செய்துகொண்டிருக்கிறேன் ? இது என்னால் ஏற்றுக்கொள்ள முடியாதது "

அனைவருக்கும் நிறைவேறாத பல்வேறு ஆசைகள், பல்வேறு எதிர்பார்ப்புகள், ஏக்கங்கள் நிரம்ப உள்ளன. அவை அனைத்தையும் இந்த உலகில் நிறைவேற்ற முடியாமல் பல்வேறு தடைக்காரணிகள் அவர்களைச் சூழ்ந்துள்ளன.

இதனால் அவர்களின் ஆழ்மனதில்(sub concious mind) சொல்லவொண்ணாத கோபம் குடிகொண்டுள்ளது. வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் அது கோரமாக வெளியே வரும். இப்படிப்பட்ட எண்ணங்களால் ஆட்பட்டவர்கள் வெறுப்புணர்வை வெளிக்காட்டும் செயல்பாடுகள் மீது அதிக அளவில் ஆர்வம் காட்டுவர். மக்கள் திரளில் அதிகமானோர் இப்படிப்பட்டவர்களே.

"பிதாவின் சித்தத்தின்படி செய்ய என் சித்தத்தின்படியல்ல, என்னை அனுப்பினவருடைய சித்தத்தின்படி செய்யவே நான் வானத்திலிருந்திறங்கி வந்தேன்.( யோவான் 6:38 )

“அப்பொழுது நான், ‘தேவனே, புத்தகச் சுருளில் என்னைக் குறித்து எழுதியிருக்கிறபடியே உமது சித்தத்தைச் செய்ய வந்தேன்’ என்றேன்.” ( எபிரெயர் 10:7 )

"இதோ நான் வந்துவிட்டேன். நீங்கள் யாருக்காக காத்துக் கொண்டிருந்தீர்களோ அது நான்தான்" என்கிறார் ஏசுபிரான்.

காத்திருப்பதில் மக்களுக்கு மகிழ்ச்சிதான். ஆனால் நீங்கள் வரக்கூடாது. அவர்களைத் தொந்தரவு செய்யக்கூடாது. அவர்கள் காலங்காலமாய் காத்திருப்பார்கள். ஆனால் நீங்கள் வந்துவிட்டால் பலவற்றை அழிக்கின்றீர்கள்.

முதலில் அவர்களது நம்பிக்கையை தகர்த்துகின்றீர்கள். நீங்கள் வந்துவிட்டதினால் அவர்கள் எதிர்ப்பார்க்கும் நம்பிக்கை கொள்ள முடியாது. ஏதோ ஒன்றுக்காக காத்திருக்கவும் முடியாது. நீங்கள் அவர்களின் வரும் காலத்தை எடுத்துக்கொண்டு விட்டீர்கள்.

" தங்கள் இறைவனிடமிருந்து புதிதாக யாதொரு நல்லுபதேசம் வரும்போதெல்லாம் அதனை அவர்கள் நம்பாது பரிகாசம் செய்து கொண்டே கேட்கின்றார்கள். அவர்களுடைய உள்ளங்கள் உண்மையை சிந்திப்பதே இல்லை அன்றி இத்தகைய அநியாயக்காரர்கள் நம்முடைய தூதரைப் பற்றி, " இவர் உங்களைப் போன்ற ஒரு மனிதரேயன்றி வேறென்ன ? நீங்கள் பார்த்துக் கொண்டே அவருடைய சூனியத்தில் சிக்க வருகின்றீர்களா ? என்று தங்களுக்குள் ரகசியமாக பேசிக் கொள்கின்றனர். ( குர்ஆன் 21: 02, 03)

இதுபோன்று தீர்க்கதரிசிகளை மக்கள் நிராகரித்த குர்ஆன் வசனங்கள் நிறைய ( 36 :05 ), (23 : 47) (23:24)

இதே மக்கள்தான் உபநிடதங்களைப் படித்துக் கொண்டிருந்தனர். 'அஹம்பிரம்மாஸ்மி !' - (நானே கடவுள்) என்று ஞானிகள் உரைத்ததை மறுபடியும் மறுபடியும் படித்தார்கள்; தப்பர்த்தம் எடுத்துக் கொண்டார்கள். அதனால் அவர்களை ஏற்றுக்கொள்ளவில்லை.

மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் "அனல் ஹக் (நானே உண்மை) என்று கூறியதற்காக ,அனல் ஹக் (நானே இறைவன்) என்று தப்பர்த்தம் கொள்ளப்படுகிறது.

இந்தக் குற்றத்திற்காக அவர்களுக்கு மரண தண்டனையும் விதிக்கப்படுகிறது. அபூபக்கர் ஷிப்லீ (ரஹ்) அவர்களும், மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களும் , ஜுனைத்துல் பாக்தாதி (ரஹ்) அவர்களிடம் கல்வி பயின்றவர்கள்.

அபூபக்கர் ஷிப்லி அவர்கள் இப்பொழுது தம் பள்ளித் தோழரை நோக்கி, "ஹுசைன் இப்னு மன்சூரே ! இறை இரகசியங்களை மக்களிடம் வெளிப்படையாக எடுத்துரைக்க வேண்டாம் என்று நான் எவ்வளவு

கூறியும் நீர் கேட்கவில்லையே , நீரும் ஒரு வார்த்தைதான் கூறினீர் . நானும் ஒரு வார்த்தைதான் கூறினேன். நீர் "அனல் ஹக்கு " என்கிறீர். நானோ ''அன கைருன் " (நானே மேலானவன்) என்றேன்.

உன் மீது இறையருள் இறங்கியது என்மீது இறை முனிவு இறங்கியது என்று கூறுகிறார்களே அது ஏன் ? "

அதற்கு ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் , " நீர் 'அன கைருன்' என்று கூறியது உம்முடைய "நான் " என்ற அகங்காரத்தில் கூறியதாகும். நான் "அனல் ஹக் " என்று கூறியது என்னை, என்னுடைய " நான் " என்ற அகங்காரத்தை அழித்து விட்டுக் கூறியதாகும். இதுவே இரண்டிற்கும் இடையே உள்ள வேற்றுமை ஆகும். " நான் " என்ற அகங்காரத்தை நீக்குவதே மாண்புடையதாகும் என்று எடுத்துரைத்தார்கள்.

## வெளிப்படும் இரகசியங்கள் 8

( அகங்காரம் )



போதிதர்மரைப் பார்த்து ஒரு பெரிய அரசர் கேட்டார். "நான் ஒரே ஒரு விஷயத்தைத் தேடிக்கொண்டிருக்கிறேன்.' எப்படி அகங்காரம் இல்லாமல் ஆவது? எல்லா பெரிய குருக்களும் காலங்காலமாய் இதை சொல்லி வருகிறார்கள். அகங்காரமற்று இரு. நீ கடவுளை கண்டுபிடிக்க முடியும். அகங்காரமற்று போ. நிர்வாணம் அடையலாம்.

நானும் கடுமையாக முயற்சித்து விட்டேன். மனிதனால் இயன்றதை எல்லாம் செய்து விட்டேன். எனினும் இந்த அகங்காரத்தை விட்டொழிக்க முடியவில்லை. ஐயா தயவுசெய்து எனக்கு உதவ முடியுமா?" என்று கேட்டார்.

போதிதர்மர் அவரைப் பார்த்தார். கூரான, நெருப்பு போன்ற ஊடுருவும் பார்வை. அவர் சொன்னார், 'ஒன்று செய், இப்போது நிறைய செய்து விட்டாய். அது எனக்குத் தெரிகிறது. இதற்குமேல் எதுவும் செய்ய வேண்டாம். நான் அதைச் செய்கிறேன். நாளை காலை மூன்று மணிக்கு வா, அதை முழுவதுமாக முடித்து விடுகிறேன்" என்றார்.

அரசர் சற்றே குழப்பமானார். "என்ன அபத்தமான பேச்சு இது ? எப்படி என்றென்றைக்கும் என் அகங்காரத்தை அழித்துவிட முடியும்? ஆனால் முயற்சிப்பதில் அர்த்தம் இருக்கிறது ."

அரசர் திரும்பிப்போய்க் கொண்டிருக்கையில் போதிதர்மர் அவரை அழைத்தார். "கேள்! நாளை வரும்போது, உன் அகங்காரத்தைக் கொண்டு வா. மறந்துவிடாதே. கொண்டு வா அதை. நான் அதைக் கொன்றுவிடுகிறேன். நிச்சயமாக அதை முடித்துவிடுவேன்."

இப்போது அரசனுக்கு குழப்பம் அதிகமாகிவிட்டது. "என்ன சொல்கிறார்? அகங்காரத்தைக் கொண்டுவருவதா? நான் வரும்போது அதுவும் இருக்கத்தான் போகிறது. இந்த மனிதன் பைத்தியம் போல் உள்ளது. பார்ப்பதற்கு மட்டுமல்ல, இவர் பைத்தியமேதான்"

இரவு முழுவதும் அரசன் தூங்கவேயில்லை. சிந்தனைக்கு மேல் சிந்தனை. அதிகாலை காரிருளில் இந்த மனிதனிடம் செல்வது கூட முட்டாள்தனம் என்று நினைத்தார். அதுமட்டுமல்லாமல் "தனியாக வா, மெய்க்காவலர்கள் யாருக்கும் அனுமதி கிடையாது" என்று வேறு சொல்கிறார். "யாருக்குத் தெரியும், இந்த மனிதன் எதை வேண்டுமானாலும் செய்யக்கூடும். என்னை அடிக்கக்கூடச் செய்யலாம், பார்ப்பதற்கு ஆபத்தானவராய் தோன்றுகிறார்.

ஆனால் அரசர் தன் வாழ்நாள் முழுவதும் இதற்காக முயற்சித்துக் கொண்டிருக்கிறார். அதனால் போய் பார்க்கலாம், இடர் நேரலாம். வேறு வழியில்லை. மூன்று மணிக்கு ஆவலை அடக்க முடியாமல் போய்விட்டார். பயம் இருந்தது. போதிதர்மர் இருந்த குகையை அடைந்ததும்; போதிதர்மர் கேட்டார். "எங்கே உன் அகங்காரம், கொண்டு வரச்சொன்னேன் இல்லையா? மறந்துவிட்டாயா?"

அரசன் சொன்னான். "நீங்கள் பேசுவது அபத்தம். நான் இங்கே இருக்கும்போது என் அகங்காரமும் இங்கேதான் இருக்கும். அதை எப்படி நான் விட்டுவர முடியும். பிரச்சினையே அதுதான். அதை விட்டொழிக்க விரும்புகிறேன். என்னால் முடியவில்லை. நிழல்போல என்னைத் தொடர்கிறது."

போதிதர்மர் சொன்னார். "சரி பரவாயில்லை. உட்கார்ந்து கண்ணை மூடு, அது எங்கேயிருக்கிறது என்று கண்டுபிடி. கண்டவுடன் உடனே சொல் நீ கண்டுபிடிக்காமல் நான் அதை எப்படிக் கொல்வது ? உன் முன்னால் கையில் கழியோடு நான் உட்கார்ந்து கொள்கிறேன். நீ கண்டுபிடித்தவுடன் எனக்கு தலையசைத்து சைகை காட்டு, நான் அதை ஒரேயடியாக முடித்து விடுகிறேன்."

அரசனுக்கு பயம், கடும் குளிர். காலை நேரம், ஆனால் அவனுக்கு வியர்த்துக் கொட்டியது. ஆனால் முயற்சி செய்தான். தனக்குள் சென்றான். தன் உயிருருக்குள் உள்ள ஒவ்வொரு மூலைமுடுக்கிலும் தேடினான். ஆச்சரியமாக இருந்தது. அவனால் அகங்காரத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

மூன்று மணிநேரம் ஆயிற்று. அரசனின் முகம் மாறியது. பெரியதொரு அருள் அரசனின் மீது இறங்கத் தொடங்கியது. அவனது அதிர்வுகள் மாறத்தொடங்கின. ஆசீர்வதிக்கப்பட்டதாய் உணர்ந்தான். ஒரு அருளாசி சூழ்ந்து இருந்தது. சூரியன் எழத்தொடங்கியது, குகை ஒளிமயமாகிக் கொண்டிருந்தது.

போதிதர்மர் சிரித்துவிட்டு சொன்னார். "ரொம்ப நேரமாய் தேடுகிறாயே, கிடைக்கவில்லையா?" அரசன் கண்களைத் திறந்து, போதிதர்மரின் கால்களில் விழுந்தான். "நீங்கள் அதை அழித்து விட்டீர்கள். எப்படிச் செய்தீர்கள்?"

போதிதர்மர் சொன்னார். "அது எளிது. நீ அதைப் பார்க்காத வரையில் அகங்காரம் இருக்கும். அதற்கு புறமுதுகு காட்டும் வரை அது இருக்கும். நீ அதை திரும்பி எதிர்நோக்கினால்- எவருமில்லை."



"ஆணவம், அகங்காரம், பெருமையடிப்பது பற்றி இஸ்லாம் என்ன கூறுகிறது என்பதை இனி பார்ப்போம்.

'நரகவாசிகளைப் பற்றி உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா?' என்று நபிகள் நாயகம் கேட்டு விட்டு 'பெருமையும் ஆணவமும் கொண்ட ஒவ்வொருவனும் நரகவாசியே' என்று விளக்கமளித்தார்கள்.

அறிவிப்பவர்: ஹாரிஸா பின் வஹ்பு .புகாரி 4918, 6072,6657

'நீங்கள் அனைவரும் பணிவாக நடங்கள். சிலர் சிலர் மீது வரம்பு மீறக் கூடாது. சிலர் சிலரை விட பெருமையடிக்கக் கூடாது.' என்று இறைவன் கூறுவதாக நபிகள் நாயகம் அவர்கள் குறிப்பிட்டனர்.

அறிவிப்பவர்: ஹாரிஸா பின் வஹ்பு. முஸ்லிம் 5109

'ஒரு மனிதன் ஒரு கவள உணவை உட்கொண்டு இறைவனைப் புகழும் போதும், ஒரு மிடறு தண்ணீரை அருந்தி விட்டு அதற்காக இறைவனைப் புகழும் போதும் இறைவன் அந்த மனிதன் விஷயத்தில் திருப்திப்படுகிறான்' என்று நபிகள் நாயகம் அவர்கள் கூறியுள்ளனர்.

அறிவிப்பவர்: நபித்தோழர் அனஸ். முஸ்லிம் 4915

இது போன்று சிறிய விஷயங்களில் கூட நாம் இறைவனை நினைவு கூறுவதால் நமக்குள் மறைந்திருக்கும் ஆணவமும் அகங்காரமும் சிறிது சிறிதாக விலகும்.. இறைவனைப் புகழ்வதால் இறைவனுடைய தகுதி நம்மால் உயர்ந்து விடப் போவதில்லை. இதன் மூலம் நமது தகுதியை இவ்வுலகிலும் மறு உலகிலும் நாமே உயர்த்திக் கொள்கிறோம்."

## வெளிப்படும் இரகசியங்கள் 9

( அவசர நெருக்கடி )

எப்போதுமே நெருக்கடியில் இருப்பான். மனிதனே நெருக்கடிதான்..அதுவும் தொடர் நெருக்கடி. அது ஒரு விபத்தல்ல. அது அவனுக்கு அவசியமானது. மனிதனின் உயிருருவிலேயே நெருக்கடி இருக்கிறது. ஆகையால் மன இறுக்கம், துயரம், கவலை, நஷ்டம் எல்லாம்.

"காலத்தின் மீது சத்தியமாக. நிச்சயமாக மனிதன் நஷ்டத்தில் இருக்கின்றான்" குர்ஆன் (103 : 01)

ஜீவ விலங்குகளிலேயே மனிதன் மட்டும்தான் வளர்ந்து நகர்ந்து உருவாகின்றான். மனிதன்தான் முழுமையாகப் பிறக்காமல், வரையறுக்கப்படாமல் பிறக்கும் ஒரே விலங்கு; அவன் ஒரு படி முறையாகப் பிறக்கிறான். மனிதன் திறந்த நிலையில் இருக்கின்றான். அவன் உயிருருவே உருவாவதில் இருக்கின்றது. அதுதான் நெருக்கடியே.

அவன் மேலும் உருவாகையில் மேலும் அவ்வாறே இருக்கிறான். மனிதன் தன்னை சாதாரணமாக எடுத்துக் கொள்ளக் கூடாது. இல்லையென்றால் அவன் தேங்கிவிடுவான். செயலற்ற தாவரம் போன்று ஆவான். அதனால் அவன் வாழ்வே காணாமல்போகும். எனவே ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நகரும் போதே வாழ்க்கை நிலைத்து இருக்கும். இரண்டு இடங்களுக்கு இடையேயான நகர்வே வாழ்க்கையாகும்.

ஒரே இடத்தில் இருந்தவாறு நீங்கள் உயிரோட்டத்துடன் இருக்க முடியாது. இதுதான் ஒரு உயிரற்ற பொருளுக்கும் உயிரோட்டத்துடன் இருக்கும் ஒரு நிகழ்விற்கும் உண்டான வேறுபாடு. உயிரற்றது ஓரிடத்திலேயே அசைவற்று ( மலையைப் போல ) இருக்கும்.

உயிருள்ளது நகரும். நகர்வது மட்டுமல்லாமல், தாண்டும்,குதிக்கும். உயிரற்றது அறிந்ததிலேயே நிலை கொண்டிருக்கும். உயிருள்ளது அறிந்ததிலிருந்து அறியாததை நோக்கி தொடர்ந்து போய்க்கொண்டேயிருக்கும். இதனால் நெருக்கடி. இதுதான் நெருக்கடி. மனிதன் மிகவும் உயிரோட்டத்துடன் நெருக்கடியில் இருக்கிறான்.

"நிச்சயமாக வானங்களையும், பூமியையும், மலைகளையும் (நம் கட்டளைகளான) அமானிதத்தை சுமந்து கொள்ளுமாறு எடுத்துக் காட்டினோம்; ஆனால் அதைச் சுமந்து கொள்ள மறுத்தன;அதைப் பற்றி அவை அஞ்சின;ஆனால் மனிதன் அதைச் சுமந்தான்;நிச்சயமாக மனிதன் (தனக்குத்தானே) அநியாயம் செய்பவனாகவும், அறிவிலியாகவும் இருக்கின்றான்". (குர்ஆன் : 33:72)

நம்மைப் படைத்து போஷித்து வரும் எல்லாம் வல்ல அல்லாஹ்வின் வாக்குகளே திருக்குர்ஆன் என்பதை நாம் உளப்பூர்வமாக நம்புகிறோம்; வெளிப்படையாகச் சொல்லுகிறோம்; இத்தகைய திருமறையில் அல்லாஹ் சத்தியம் செய்து கூற வேண்டியதன் காரணம் என்ன? உண்மையை எல்லாம் வல்ல அல்லாஹ் ஒருவனே அறிவான்.

அல்லாஹ் நம்மை சிந்திக்கும்படி ஏவுகிறான். மறதியும் பலஹீனமும் நிறைந்த நம்மைத் தட்டி எழுப்பி விழிப்புணர்ச்சி ஊட்டி செயல்படுவதற்காகவே அல்லாஹ் சத்தியம் செய்து கூறுகிறான் என்று எண்ணத் தோன்றுகிறது.

காலத்தின் மீது சத்தியம் செய்கிறான். சிறிதோ பெரிதோ சாதாரணமோ அசாதாரணமோ நல்லதோ கெட்டதோ மகிழ்ச்சிகரமோ துக்ககரமோ எத்தகையதாக இருந்தாலும் இந்த உலகில் நிகழ்கின்ற எண்ணிறைந்த சம்பவங்கள் யாவுமே கால விரயமில்லாமல் நிகழ்வதில்லை.

காரண காரியங்களின் தரமும் பலனும் நோக்கி காலம் கழிவது மாறுபடுவதில்லை. ஒரே கதியில் கடந்து கொண்டே இருக்கிறது. கடந்து செல்லும் ஒவ்வொரு வினாடியும் நம்மை மறுமையின் பக்கம் நெருக்கிக் கொண்டிருக்கிறது என்ற யதார்த்தத்தை நாம் உணரவேண்டும்.

ஆனால் மனித மனம் கடந்தகாலத்துடன் தொங்கிக் கொண்டிருக்கும். ஏனென்றால் மனமே கடந்தகாலம்தான். ஆனால் உங்கள் உயிருரு கடந்த காலத்தையும் தாண்டிப் போக விரும்புகிறது. அது ஆராய முற்படுகிறது.

உங்கள் உயிருருக்கு ஒரு உள்ளார்ந்த அதிருப்தி இருக்கிறது. அவசரப்பட்டு விட்டோமோ என்கிற அதிருப்தி. நான் அதை தெய்வீக அதிருப்தி என்றழைப்பேன். காரணம் அந்த தெய்வம்தான் அவனை அவனுக்கு அதிருப்தியாக படைத்தது.

وَيَدْعُ الْاِنْسَانُ بِالشَّرِّ دُعَآءَهٗ بِالْخَيْرِ وَكَانَ الْاِنْسَانُ عَجُوْلًا

மனிதன், நன்மைக்காக பிரார்த்தனை செய்வது போலவே (சில சமயம்) தீமைக்காகவும் பிரார்த்திக்கின்றான்; (ஏனென்றால்) மனிதன் அவசரக்காரனாக ( படைக்கப்பட்டு ) இருக்கின்றான். (குர்ஆன் : 17:11)

உங்களுக்கு என்ன இருக்கிறதோ அது முடிந்து போனது. நீங்கள் என்னவாக இருக்கின்றீர்களோ அதுவும் முடிந்து போன ஒன்று. எது இல்லையோ அது இப்போது உங்களுக்கு தேவை. நீங்கள் எதுவாக இல்லையோ அதுவாக இருப்பது உங்கள் விருப்பம். மனிதன் வளமான உயிருருவாக, இருப்பதற்காக ஒரு புதிய உயிருருவாக இருப்பதற்காக இருட்டில் துழாவுகிறான். அதனால் அவனுக்கு நெருக்கடி. அந்த அவசர நெருக்கடியில் ....

"உங்களில் எவர் செயல்களால் மிகவும் அழகானவர் என்பதைச் சோதிப்பதற்காக அவன், மரணத்தையும் வாழ்வையும் படைத்தான்; மேலும், அவன் (யாவரையும்) மிகைத்தவன்; மிக மன்னிப்பவன் " . (குர்ஆன் : 67:2)

## வெளிப்படும் இரகசியங்கள் 10

( பிரச்சனைகள் வேண்டும் )




இறைவன் எழுதிய அழகான மென் பொருள் தான் பிரச்னை.

பிரச்னை இல்லாவிட்டால் வாழ்வே இல்லை.

ஒரு ஜப்பானிய கதை. இது குளிர்சாதன பெட்டி இல்லாத காலத்து கதை.

கடலில் மிக நீண்ட தூரம் சென்று மீன் பிடித்து வந்தால் அங்கே பிடித்தமான மீன் வகைகள் நிறைய இருக்கும் என்று அவர்கள் அறிந்து கொண்டனர். பல மணி நேரம் படகில் பயணித்து நடுக்கடல் சென்று மிக அதிக அளவு மீன்களை மீனவர்கள் பிடித்தனர்.

பல நாட்கள் தங்கியிருந்து அதிகமான மீன்களை பிடித்து கொண்டு கரைக்கு வந்தால் அவர்களுக்கு ஒரு பிரச்னை இருந்தது பல மீன்கள் இறந்து இருந்தன. உலர்ந்திருந்தன. நாற்றம் பிடித்தன.

எனவே படகில் செயற்கை நீர் தேக்கம் உண்டாக்கி பிடிபட்ட மீன்களை அதில் இட்டு கரைக்கு கொண்டு வந்தனர். இந்த முறையில் சிறிய வெற்றி கிடைத்திருந்தது.

மீன்கள் சாகவில்லை.எனினும் முழு வெற்றி இல்லை.கரைக்கு கொண்டு வரப்படும் மீன்கள் சோர்ந்திருந்தன.எனவே வழக்கமான சுவை இல்லை.இதனால் விற்பனையிலும் தேக்க நிலை.

எல்லையற்ற கடல் நீரில் நீந்தி களித்திருந்த மீன்களுக்கு, நான்கு பக்கமும் எல்லை உள்ள சிறிய நீர்த்தொட்டியில் உயிர் வாழ்வது மிகப்பெரிய அலுப்பை ஏற்படுத்தி இருந்தன.

இந்த நிலையில், அவர்களில் ஒரு புத்திசாலி மீனவன் ஒரு வழியை கண்டுபிடித்தான். மீன்கள் அடைபட்டிருந்த நீர் தேக்கத்தில் ஒரு குட்டி சுறாவையும் இட்டு வைத்தான்.

அப்புறம் என்ன? சுறா மீனிடமிருந்து உயிர்பிழைக்க மற்ற மீன்கள் எப்போதும் ஓடிக்கொண்டே இருந்தன. பிழைப்பு என்பது அதன் வாழ்வின் அர்த்தம் ஆனது. எப்போதும் அலெர்ட்டாக இருந்ததால் கரைக்கு கொண்டு வரும் வரை அதன் சுவையும் குறைய வில்லை.

நம் வாழ்வும் அப்படித்தான்.

பிரச்னை தான் வலிமை. பிரச்னை தான் உயிர்.நமக்கு விருப்பமானது எல்லாம் நம் படுக்கைக்கு அருகில் வந்தால் நாம் சீக்கிரமே இறந்து விடுவோம். நம் ரத்த ஓட்டம் நின்று விடும். நம் உடலில் பல உறுப்புகள் இயங்காமல் செயல் இழந்துவிடும்

நடந்து பழக்கப்பட்டவனுக்கு ஒரு நாய் துரத்தினால் தான் எப்படி ஓடுவான் என்று தெரியும்.

புலி துரத்தினால்? அந்த ஓட்டத்தில் முள் குத்தினால் கவலைப்படுவோமா ? ஆணி குத்தினால் ஓட்டத்தை நிறுத்துவோமா

புலி துரத்தும்போது எதிரே ஒரு சுவர் இருந்தால்? அப்படி ஒரு சுவரில் ஏணி இல்லாமல் ஏறவே முடியாது என்று முன்தினம் வரை நம்பிய நாம், அன்று புலி துரத்தும்போது எந்த கருவியும் இன்றி ஏறி இருப்போம்.

சின்ன பிரச்னை சின்ன நாய். பெரிய பிரச்னை புலி. அவை துரத்தும்போது தான் நாம் பலம் பெறுவோம்.

பசி என்ற பிரச்னை வந்தபோது தான் முதல் மனிதன் ஆப்பிளை கடித்தான்

மிருகங்கள் தன்னை தாக்க வரும்போது தான் வேட்டைக்கான கருவிகளை உண்டாக்கினான்

வெயில் மழை என்ற பிரச்னைகளுக்கு தான் வீடு ஒன்றை மனிதன் உண்டாக்கினான்

பிரச்சனைகளைத் தீர்க்க நபி (ஸல்) அவர்கள்,

நபி (ஸல்) அவர்கள், முஆத்பின் ஜபல் (ரலி) அவர்களை ஏமன் தேச ஆளுநராக நியமித்து, வழியனுப்பும் போது, ஹஸரத் முஆதைப் பார்த்து," எதை அடிப்படையாக வைத்து மார்க்கத்தை மக்களுக்கு விளக்குவீர்கள் " என நபி (ஸல்) அவர்கள் கேட்கிறார்கள்.

ஹஸரத் முஆது இப்னு ஜபல் (ரலி) :

"நான் மக்களுக்கு மத்தியிலே அல்லாஹ்வுடைய ரசூலே இறைவனால் வழங்கப்பட்டிருக்கக் கூடிய திருமறையை அடிப்படையாக வைத்து மார்க்கம் சொல்லுவேன். தீனைச் சொல்லுவேன். சட்டங்களுக்கு

தீர்வை கொடுப்பேன். தீனுடைய அடிப்படை குர்ஆனுடைய அடிப்படையில் நான் எடுத்துச் சொல்லுவேன் "

நபி (ஸல்) அடுத்து கேள்வி கேட்கிறார்கள்.

"ஃபஇன்லம் தஜித் ஃபீ கிதாபில்லாஹ் இறை வேதத்திலே ஒரு விஷயத்திற்கு விளக்கத்தை நீ பெற்றுக் கொள்ள முடியாவிட்டால் என்ன செய்வீர் என்று கேட்கிறார்கள் ? "( இறை வேதத்திலே இல்லை என்று சொல்லவில்லை. இருக்கலாம் அதை நீ தேர்ந்தெடுக்க முடியாமல் போகலாம். உன்னுடைய விளக்கத்திற்கு வராமலும் போகலாம் இறை வேதத்திலே நீ தேடக் கூடிய பிரச்சனைக்கு தீர்வு நீ பெற்றுக் கொள்ளவிட்டால் பெற்றுக் கொள்ளாவிட்டால் ) என்ன செய்வீர் என்று கேட்கிறார்கள்.

முஆது இப்னு ஜபல் சொல்கிறார்கள் :

" நாயகமே உங்களுடைய வழி முறை முன்னால் இருக்கிறது நீங்கள் காட்டிக் கொடுத்த தெளிவுரைகள் என்னிடத்தில் இருக்கிறது. அதை அடிப்படையாக வைத்து மக்களுக்கு நான் எடுத்துச் சொல்லுவேன் என்று ஹஸரத் முஆது இப்னு (ரலி) எடுத்துச் சொல்லுகிறார்கள்.

" என்னுடைய வழி முறையிலும் உங்களுக்கு அந்த வழி காட்டுதல் கிடைக்காமல் போனால் என்ன செய்வீர்கள் ? "

"என்னுடைய ஆய்வை வைத்து அறிவை வைத்து சிந்தனையை வைத்து அந்த மார்க்கப் பிரச்சனைக்கு தீர்வு கூறுவேன். மார்க்கத்தை மக்களுக்கு மத்தியிலே எடுத்துச் சொல்லுவேன்.

முஆது இப்னு ஜபல் (ரலி) அவர்களுடைய நெஞ்சை தட்டிக் கொடுத்து சொன்னார்கள்.
அல்ஹம்துலில்லாஹ் அல்லதீ வப்பக லிரசூலி ரசூலில்லாஹ் மாயுஹிப்பு ரசூலுஹு அவ் கமா கால ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்.

"அல்லாஹ்வுடைய ரசூலாகிய நான் எந்த வழியை பிரியப்பட்டேனோ பொருந்திக் கொள்கிறேனோ அந்த வழியை விளக்கிக் கொடுத்த அந்த அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்.

ரசூலான தனது ரசூலுக்கு இந்த வழி முறைகளை விளக்கி கொடுத்து அல்லாஹ் இந்த தீனுடைய வழிமுறைகளை பூர்த்தி செய்வதற்குண்டான வழி முறைகளைச் சொல்லிக் கொடுத்தானே இப்படி ஒரு சிந்தனையை எனது சமுதாயத்தில் போட்டானே எனது ஸஹாபிக்கு இப்படி சரியான பதிலை சொல்லக் கூடிய வாய்ப்பை கொடுத்தானே அந்த அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும் என்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புகழ்ந்தார்கள்.

## வெளிப்படும் இரகசியங்கள் 11

( பொறாமை )



பொறாமை என்றால் உங்களுக்குப் பிடித்த ஆனால் உங்களிடம் இல்லாத ஒரு பொருள் மற்றவரிடம் இருக்கும்போது ஏற்படும் உணர்வு.

உங்களிடம் இருப்பதைவிட அதிகமாக மற்றொருவரிடம் இருக்கும்போது ஏற்படுவது அல்லது ...

உங்களுக்குள் இருக்கும் ஒருவித குறைபாட்டினால், இன்னொருவரைப் பார்த்தால் தன்னைப் பற்றிய போதாமை உணர்வு மேலோங்குவதுதான் எரிச்சல் அல்லது பொறாமை.

நீங்கள் ஆனந்தமான உணர்வில் இருந்தால் யாரையும் பார்த்து பொறாமைப்பட மாட்டீர்கள். உங்களை விட இன்னொருவரிடம் ஏதோ ஒன்று அதிகம் உள்ளது போலவும் நீங்கள் ஏதோ ஒருவிதத்தில் குறைந்தவர் போலவும் உணர்வதால்தான் இந்த பொறாமை உணர்வு வருகிறது.

உங்களைவிட உயர்ந்தவர் ஒருவர் இருக்கும் இடத்தில்தான் உங்களிடம் பொறாமை இருக்கும். இங்கு நீங்கள் மட்டும் இருந்தால் உங்களுக்கு பொறாமை உணர்வு இருக்காது."

முதல் பாவமே பொறாமையின் விளைவால் தான் ஏற்பட்டது என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். முதல் மனிதர் ஆதம் (அலை) அவர்களை இறைவன் படைத்ததும் அவருக்கு சிரசை தாழ்த்தி, மரியாதை செலுத்திட வேண்டும் என சைத்தானுக்கு இறைவன் உத்தரவிட்டபோது, சைத்தான் தனது பிடிவாத குணத்தாலும், தற்பெருமையாலும், பொறாமையாலும் அவன் கொட்டிய வார்த்தையால் அவன் கெட்டுப் போனான்.

‘நான் உனக்குக் கட்டளையிட்ட போது பணிவதை விட்டும் உன்னைத் தடுத்தது எது?’ என (இறைவன்) கேட்டான். ‘நான் அவரைவிடச் சிறந்தவன். என்னை நீ நெருப்பால் படைத்தாய். அவரைக் களிமண்ணால் படைத்தாய்’ என்று கூறினான். (திருக்குர்ஆன் 7:12)

இந்த பொறாமை, மற்றும் வஞ்சக வாதத்துக்காக இன்றுவரை சைத்தான் விரட்டப்படும் நபராக, சபிக்கப்படும் நபராக ஆகிவிட்டான்.

பொறாமை என்ற கொடிய எண்ணம் உடன் பிறந்தவரைக் கூட உண்டு, இல்லை என உருப்படாமல் ஆக்கிவிடும். இதற்கு சரியான சான்று நபி யூசுப் (அலை) அவர்களே ஆவார்கள்.

நபி யாகூப் (அலை) அவர்களுக்கு, நபி யூசுப் (அலை) உட்பட 12 ஆண் குழந்தைகள் உண்டு. தமது குழந்தைகளில் யூசுப் (அலை) மீது யாகூப் (அலை) அவர்களுக்கு அலாதி பிரியம். இதைத் தாங்கிக்கொள்ள முடியாத மற்ற குழந்தைகள் தமது தந்தைக்கு பிரியமான குழந்தை யூசுபை (அலை) கடத்தி கொலை செய்ய துணிந்து விடுவர்.

கடைசியில் அந்த முடிவை கை விட்டு விட்டு பாழடைந்த கிணற்றில் தள்ளிவிடுவர். இது குறித்து இறைவன் திருக்குர்ஆனில் :

“நாம் கூட்டமாக இருந்தும் யூசுபும், அவரது சகோதரரும் நம்மைவிட நமது தந்தைக்கு மிக விருப்பமாக உள்ளனர். நமது தந்தை பகிரங்க தவறில் இருக்கிறார்” என்று (அவரது சகோதரர்கள்) கூறியதை நினைவூட்டுவீராக.

“யூசுபைக் கொன்று விடுங்கள். அல்லது ஏதாவது நிலப்பரப்பில் அவரை வீசி எறிந்து விடுங்கள். உங்கள் தந்தையின் கவனம் உங்களிடமே இருக்கும். அதன் பிறகு நல்ல மக்களாக நீங்கள் ஆகிக் கொள்ளலாம்” (எனவும் கூறினர்).

“நீங்கள் (எதுவும்) செய்வதாக இருந்தால் யூசுபைக் கொலை செய்யாதீர்கள். அவரை ஆழ்கிணற்றுக்குள் போட்டு விடுங்கள். பயணிகளில் யாரேனும் அவரை எடுத்துக் கொள்வார்கள்” என்று அவர்களில் ஒருவர் கூறினார். (திருக்குர்ஆன் 12:8-10)

உலகில் நடந்த முதல் படுகொலை ஒரு பெண்ணை அடைவதற்காக பொறாமையாலும், வஞ்சகத்தாலும் அரங்கேறியது. ஆதம் (அலை) அவர்களுக்கு ஹவ்வா (அலை) மூலமாக முதல் பிரசவத்தில் ‘காபீல்’ எனும் ஆண் குழந்தையும், ‘இக்லிமா’ எனும் பெண் குழந்தையும் பிறந்தது.

இரண்டாவது பிரசவத்தில் ‘ஹாபீல்’ எனும் ஆண் குழந்தையும், ‘லுபூதா’ எனும் பெண் குழந்தையும் பிறந்தது. இனவிருத்திக்காக முதல் பிரசவத்தில் பிறந்த ஆண், இரண்டாவது பிரசவத்தில் பிறந்த பெண் குழந்தையை மணந்து கொள்ள ஆரம்பத்தில் அனுமதிக்கப்பட்டது. இவ்வாறே முதல் பிரசவத்தில் பிறந்த பெண் இரண்டாவது பிரசவத்தில் பிறந்த ஆணை மணந்து கொள்ள அனுமதிக்கப்பட்டது.

இதற்கு மாற்றமாக, மூத்த மகன் காபீல் தன்னுடன் முதல் பிரசவத்தில் பிறந்த பேரழகியான இக்லிமாவை மணந்து கொள்ள ஆசைப்பட்டு, அதற்கு தடையாக இருந்த தமது இளைய சகோதரரான ஹாபீலை பொறாமையால் படுகொலை செய்து விடுவார். இதுதான் உலகில் நடந்த முதல் படுகொலையாகும்.

‘தன் சகோதரரைக் கொல்லுமாறு அவனது மனம் தூண்டியது. அவரைக் கொன்றான். எனவே அவன் நட்டமடைந்தவனாக ஆகிவிட்டான்’. (திருக்குர்ஆன் 5:30)

இஸ்லாத்தை பொருத்த அளவில் பொறாமைக்கு இடமில்லை. ஒருவேளை பொறாமைப்பட அனுமதி இருக்குமானால் பின்வரும் நன்மைதரும் இரண்டு விஷயங்களில் மட்டுமே அனுமதிக்க முடியும் என்பதை நபி (ஸல்) அவர்கள் திட்டவட்டமாக தெரிவித்து விடுகிறார்கள்.

‘இரண்டு விஷயங்களைத் தவிர வேறு எதிலும் பொறாமை கொள்ளக்கூடாது.

1) ஒரு மனிதருக்கு இறைவன் வழங்கிய செல்வத்தை அவர் நல்வழியில் செலவு செய்தல்;

2) இன்னொரு மனிதருக்கு இறைவன் அறிவு ஞானத்தை வழங்கி, அதற்கேற்ப அவர் தீர்ப்பு வழங்குபவராகவும், கற்றுக் கொடுப்பவராகவும் இருப்பது. (அவரைப் போன்று நாமும் செய்ய வேண்டும் என்பதே அந்த இரண்டு விஷயங்கள்) என நபி (ஸல்) கூறினார்கள்’.

(அறிவிப்பாளர்: இப்னுமஸ்ஊத் (ரலி), புகாரி)

“ஒரு இறையடியாரின் உள்ளத்தில் இறைநம்பிக்கையும், பொறாமை எண்ணமும் ஒன்று சேரமுடியாது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.” (அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), நூல்: முஸ்லிம்

அனைத்து விதமான பாக்கியமும் வழங்கப்பட்ட பிறரைப் பார்த்து பொறாமைப்படுவது எந்தவகையில் நியாயம்?. தமக்கு வேண்டுமானால் அதை இறைவனிடம் கேட்டுப் பெறலாமே.

‘இறைவன் தனது அருளை இம்மக்களுக்கு வழங்கியதற்காக அவர்கள் பொறாமை கொள்கிறார்களா?’ (திருக்குர்ஆன் 4:54)

‘நான் உங்களையும், பொறாமைப்படுவதையும் எச்சரிக்கை செய்கின்றேன். நிச்சயமாக பொறாமை என்பது நெருப்பு விறகுகளை கரித்துவிடுவது போன்று, அது நன்மைகளை விழுங்கிவிடுகிறது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்’.(அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), நூல்: அபூதாவூத்)

பொறாமைக்கு உள்ளாக்கப்படுவோரின் கனிவான கவனத்திற்கு... ‘நீங்கள் பொறாமைக்காரர்களின் வஞ்சகத்திலிருந்து தப்பித்துக் கொள்ள சுலபமான வழி,

‘நீங்கள் உங்களின் தேவைகளை வெற்றியாக நிறைவேற்றுவதில் மறைத்து செய்வதைக் கொண்டு உதவி அடைந்து கொள்ளுங்கள். ஏனெனில், ஒவ்வொரு பாக்கியமும் பொறாமைப்படுவதற்கு உட்படுத்தப்படும் என நபி (ஸல்) கூறினார்கள்’. (அறிவிப்பாளர்: முஆத் (ரலி), நூல்:அல்பானீ)

மேலும் பொறாமைக்காரனிடமிருந்து பாதுகாப்பு தருமாறு இறைவனிடம் கோர வேண்டும். இதையேய திருக்குர்ஆன், ‘பொறாமைக்காரனின் தீங்கை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று கூறுவீராக’ என்று (திருக்குர்ஆன் 113:5) குறிப்பிடுகிறது.

## வெளிப்படும் இரகசியங்கள் 12

( பிரச்சனைகள் )

ஈராக் ஞானி ஒருவர் அந்த ஊருக்கு வந்திருந்தார். அந்த ஊரைச் சேர்ந்த ஒருவன், அவரிடம் வந்து, “ எனக்குப் பிரச்சனைகள் தொடர்ந்து கொண்டே இருக்கின்றன. வீட்டில் பல பிரச்னைகள், தெருவில், ஊரில், வேலை செய்யும் இடத்தில் எல்லா இடத்திலும் எனக்குப் பிரச்னைகள்தான். படுத்தால் என்னால் தூங்கவே முடியவில்லை. எனக்கு ஒரு நல்ல தீர்வு சொல்லுங்கள்" என்றான்.

அதைக் கேட்ட அந்த ஞானி, “மாலையில் வா...” என்றார்.

அவனும் மீண்டும் மாலையில் வந்து ஞானியின் முன்பு நின்றான்.

அவனைக் கண்ட ஞானி , "அதோ அந்தத் தோட்டத்திற்குச் சென்று அங்குள்ள நூறு ஒட்டகங்கள் என்ன செய்கின்றன என பார்த்து விட்டு வா" என்றார்.

தோட்டத்துக்குச் சென்றவன் திரும்பி வந்து, “நூறு ஒட்டகங்களும் நின்று கொண்டு இருக்கின்றன" என்றான்.

"சரி... நல்லது. அனைத்து ஒட்டகங்களும் தரையில் படுத்தவுடன் அங்கே இருக்கிற ஓய்வறையில் நீ படுத்து தூங்கி விட்டு காலையில் மீண்டும் வா” என்றார்.

“சரி ” என்று தோட்டத்திற்குப் போனவன், மறுநாள் காலையில் தூக்கம் இன்றி மிகவும் களைப்புடன் ஞானியிடம் வந்தான்.

வந்தவன், '‘பெரியவரே.! இரவு முழுவதும் நான் தூங்கவே இல்லை” என்றான்.

"ஏன்? என்னாச்சு?” என்றார் ஞானி .

"நீங்கள்தானே அனைத்து ஒட்டகங்களும் தரையில் படுத்தவுடன் அங்கே இருக்கிற ஓய்வறையில் நீ படுத்து தூங்கு என்றீர்கள்".

"ஆமாம். அனைத்து ஒட்டகங்களும் படுத்து தூங்கியதா ?"

இல்லை . சில ஒட்டகங்கள் தானாகவே தரையில் படுத்தன. சில ஒட்டகங்களை நான் கஷ்டப்பட்டு படுக்க வைத்தேன். ஆனால், நூறு ஒட்டகங்களையும் என்னால் படுக்க வைக்கவே முடியவில்லை. அதனால் நான் இரவு முழுவதும் தூங்கவே இல்லை” என்றான்.

ஞானியவர் சிரித்தபடியே, “இதுதான் வாழ்க்கை... வாழ்க்கையில் பிரச்சனையை முடிப்பது என்பது நூறு ஒட்டகத்தை படுக்க வைப்பது போன்றது. சில பிரச்னைகள் தானாக முடிந்து விடும். சிலவற்றை நாம் மெனக்கெட்டு முடித்து விடலாம்.

ஆனால், சில பிரச்னைகள் முடிந்தால் வேறு சில பிரச்னைகள் புதிதாக வந்து கொண்டுதான் இருக்கும். அனைத்து பிரச்னைகள் முடிந்தால்தான் நிம்மதியாக தூங்குவேன் என்றால் இந்த உலகில் யாராலும் தூங்கவே முடியாது.

பிரச்னைகள் அனைத்தும் எப்போது முடியும் என கவலைப்பட்டுகொண்டே இருக்காதே. தீர்க்க முடிந்தவற்றை தீர்த்து விட்டு மற்றவற்றை காலத்தின் கையில் ஒப்படைத்து விட்டு நிம்மதியாக இருந்தால் தூக்கம் தானாக வரும்” என்றார்.

வாழ்வில் பிரச்னைகள் என்பது நூறு ஒட்டகங்கள் போன்றது. அனைத்தும் ஒரே நேரத்தில் படுப்பதற்கான வாய்ப்பு குறைவு! ஒவ்வொன்றும் படுப்பதற்கான காலம் உள்ளது.

அதுபோல், நமக்கான பிரச்னைகள் தீர்வதற்கான காலமும் உள்ளது. ஆகவே சிலவற்றை காலத்தின் கரங்களில் ஒப்படைத்து விட்டு வாழ்வை அமைதியாக அனுபவியுங்கள்.

இறைவனின் தீர்ப்புப்படி எது நடந்தாலும் நடக்கட்டும் என்னும் உறுதி உங்களுக்கு இருக்க வேண்டும் என்று நாம் கூறுவதற்கு இரண்டு காரணங்கள் இருக்கின்றன.

முதற்காரணம் : உங்கள் வாழ்வில் தோன்றுகிற ஏற்றத் தாழ்வுகளை உங்களால் ஏற்றுக் கொள்ளமுடியவில்லை என்றால், இந்தப் பிரச்சினையில் உங்களுக்கு அமைதி ஏற்பட வழியே கிடையாது. உங்கள் உள்ளத்தைக் கவலையும் அச்சமும் அலைக்கழித்துக் கொண்டிருக்கும்.

கடந்த கால அனுபவம் நிகழ்கால சூழலோடு கலந்து எதிர்காலத்தில் நடக்கப்போகும் காரியத்தைக் குழப்பம் கொண்டதாகக் காட்டும். ‘அது ஏன் அப்படி நடந்தது?’ ‘இது ஏன் இப்படி நடக்கவில்லை?’, ‘இன்னது நிச்சயமாக இப்படி நடக்குமா?’ எனும் சிந்தனைகள் உங்கள் உள்ளத்தைவிட்டு என்றைக்கும் நீங்காது.

உங்கள் உள்ளத்தில் இப்படிப்பட்ட சிந்தனைகள், குழப்பங்கள் இருக்கும்போது, உங்களால் இறைவழிபாட்டில் எப்படி ஈடுபட முடியும்? இறைவன் உங்களுக்கு ஒரே ஒரு உள்ளத்தைத்தான் கொடுத்திருக்கிறான்.

நடந்த காரியத்தைப் பற்றிய கவலைகளையும் நடக்கப்போகும் காரியத்தைப் பற்றிய அச்சத்தையும் போட்டு அந்த ஒரே ஓர் இதயத்தையும் நீங்கள் நிரப்பிவிட்டீர்கள். அப்புறம், இறைவனைப் பற்றிய நினைவுக்கும் மறுமை பற்றிய சிந்தனைக்கும் உங்கள் இதயத்தில் இடம் ஏது?

ஷகீக் பல்கி அவர்கள் கூறிய கூற்று ஒன்று இக்கருத்தை நமக்குத் தெளிவாக படம் பிடித்துக் காட்டுகிறது. ’நடந்துபோன காரியங்களைப் பற்றிய வருத்தமும் நடக்கப் போகும் காரியங்களைப் பற்றிய ஆராய்ச்சியும் இந்த நேரத்தின் ‘பரக்கத்’தைக் கொண்டு சென்றுவிட்டன!’

இரண்டாம் காரணம் : வாழ்வில் தோன்றுகிற ஏற்றத் தாழ்வுகளை ஒரு மனிதனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை என்றால், அவன் இறைவனின் தீர்ப்பில் திருத்தம் செய்ய முற்படுகிறான் என்பதே பொருள். இதனால் அவன் இறைவனின் சினத்துக்கு இலக்காக வேண்டியிருக்கிறது.

ஒரு மனிதன் இறைத் தீர்ப்பை திருப்தியோடு ஏற்றுக் கொள்ளும்போது இறைவனின் சினத்திலிருந்து அவனுக்குப் பாதுகாப்பு கிடைக்கிறது. இறைவனின் தீர்ப்பை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று நான் கூறுகிறேனல்லவா? – இப்படி நான் கூறுவதற்கு இது இரண்டாம் காரணம்

வெளிப்படும் இரகசியங்கள் 13

( மன்னிப்பு )




மிக உயர்ந்த ஆறுதலையும், அமைதியையும் அளிக்கூடிய வாழ்க்கை தத்துவம்தான் மன்னிப்பு

இதை அவ்வளவு சுலபமாக எல்லோராலையும் தர முடியாது. நம்முடைய வாழ்வில் சிலரை நம்மால் மன்னிக்கவே முடியாது என்று சிலரை மனதில் வைத்திருப்போம்.

ஒருகாலத்தில் அவங்க நமக்கு ரொம்ப நெருங்கியவராக இருந்திருப்பார். சூழ்நிலை காரணமாக நமக்கு மனவேதனையோ, நம்பிக்கை துரோகமோ, துயரமோ இழைத்திருக்கலாம்.

அவங்களை நினைக்கும் போதெல்லாம் மனதில் ஒரு வலி வந்துவிட்டு போகும், பயங்கரமா கோபமும் வரும்.

அப்போது கண்ணை மூடி யோசிச்சி பாருங்க. அவங்க உங்க வாழ்க்கையில ஏதாவது ஒரு நல்லது பண்ணியிருப்பாங்க. அதனால தான அவங்களை மறக்கவும் முடியாமல் மன்னிக்கவும் முடியாமல் வேதனை பட்டுக்கிட்டிருப்பீங்க.

அவர் செய்த அந்த சின்ன நல்லதுக்காக அவர் செய்த மிக பெரிய துரோகத்தைக் கூட மன்னிக்குற குணம் அப்படிபட்டவர்களுக்கு நாம் தரும் மன்னிப்பு நமக்கு மிக உயர்ந்த ஆறுதலையும் மன நிம்மதியையும் தரும்.

இது நாம் அவருக்காக செய்யும் கைமாறு அல்ல. நம் மனதில் உள்ள காழ்ப்புணர்ச்சியை நீக்கவும். நமக்கு நாம் கொடுத்துகொள்ளும் மிக பெரிய ஆறுதலுமாகும்.

நாம ஒருத்தவங்க மேல கோவமாவோ இல்லை அவங்க பண்ணிய தவறை மன்னிக்க முடியாமல் மனதிலேயே வைச்சிருந்தோமேயானால் பாதிக்கப் பட போறது அவங்க அல்ல ; நாம தான். அதனால அதை பிடித்து வைத்துக்கொள்ளாமல் விட்டுவிடுவது நல்லது.

“எந்தத் தீங்கிழைக்கப்பட்ட நிலையிலும் ஒருவர் மன்னிக்க வேண்டும்,” என்று மகாபாரதம் கூறுகிறது. இனங்கள் தொடர்ந்து வாழ்வது மனிதனின் மன்னிக்கும் பண்பால் என்று கூறப்பட்டுள்ளது.

மன்னிப்பு புனிதமாகும்; மன்னிப்பின் மூலமே பிரபஞ்சம் ஒருசேர இணைக்கப்பட்டிருக்கிறது. மன்னிப்பே வலியோரின் வலிமை; மன்னிப்பு தியாகம் ஆகும்; மன்னிப்பு மனத்தின் அமைதி ஆகும். மன்னிப்பும் மென்மையும் ஆன்ம-அமைதி உடையோரின் பண்புகள் ஆகும். அவை நிலைபேறான நற்பண்பைக் குறித்துக் காட்டுகின்றன.

“பின்பு பீட்டர் இயேசுவை அணுகி, "ஆண்டவரே ! என் சகோதர சகோதரிகளுள் ஒருவர் எனக்கு எதிராகப் பாவம் செய்துவந்தால் நான் எத்தனை முறை அவரை மன்னிக்க வேண்டும்? ஏழு முறை மட்டுமா” எனக் கேட்டார்.

அதற்கு இயேசு அவரிடம் கூறியது: “ஏழு முறை மட்டுமல்ல, எழுபது தடவை ஏழு முறை என நான் உனக்குச் சொல்கிறேன்.

(நபியே!) நீர் இவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோரினாலும் அல்லது இவர்களுக்காகப் பாவ மன்னிப்புக் கோராவிட்டாலும் சரியே! இவர்களுக்காக நீர் எழுபது தடவை பாவ மன்னிப்புக் கோரினாலும் - நிச்சயமாக அல்லாஹ் இவர்களை மன்னிக்க மாட்டான். ஏனென்றால் இவர்கள் அல்லாஹ்வையும், அவன் தூதரையும் நிராகரித்தார்கள் - இத்தகைய பாவிகளின் கூட்டத்தை அல்லாஹ் நேர்வழியில் செலுத்த மாட்டான். (குர்ஆன் : 9:80)

ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது: " நயவஞ்சகர்களின் தலைவர் அப்துல்லா பின் உபை மரணப்படுக்கையில் கிடந்த போது அவருக்கு அவருடைய புதல்வர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "என் தந்தை இறக்கும் தருவாயில் இருக்கிறார் நீங்கள் அவரிடம் வரவேண்டும் என்றும், அவருக்கு இறுதி தொழுகை நடத்த வேண்டும் என்றும் நான் விரும்புகிறேன் என்றார்.

உடனே அவருடன் புறப்பட்டு சென்ற நபி(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் பின் உபையிடம் வந்து அவருக்குத் தமது சட்டையை அணிவித்தார்கள். அவருக்கு இறுதி தொழுகையை நடத்தினார்கள்.

அப்போது நயவஞ்சகராகிய அவருக்காக நீங்கள் தொழுகையை நடத்துகிறீர்கள் என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது.

அதற்கு நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ் நீர் அவர்களுக்காக 70 முறை பாவ மன்னிப்பு கூறினாலும் என்று குறிப்பிட்டுள்ளான் எனவே நான் நிச்சயமாக அந்த நயவஞ்சகர்களுக்காக 70 முறை பாவமன்னிப்பு கோருவேன். கூடுதலாக இன்னொரு 70 முறையும் அதைவிட கூடுதலாக மற்றொரு 70 முறையும் நான் பாவமன்னிப்பு கோருவேன் என்றார்கள்." ( நூல் தப்ஸீர் தபரீ )

"நன்மையும் தீமையும் சமமாகிவிடாது. (ஆதலால் நபியே! தீமையை) நீர் நன்மையைக் கொண்டே தடுத்துக் கொள்ளும். அவ்வாறாயின், உம்முடைய கொடிய விரோதியை அதே சமயத்தில் உம்முடைய மெய்யான, மிக்க நெருங்கிய சினேகிதனைப்போல் காண்பீர். பொறுமையுடையோர்களைத் தவிர மற்றெவரும் இதனை அடைய மாட்டார்கள். அன்றி பெரும் பாக்கியம் உடையவர்களைத் தவிர மற்றெவரும் இதனை அடையமாட்டார்கள். (அல்குர்ஆன் 41:34,35)

ஒரு தீமையை எப்போதும் தீமையால் எதிர்கொண்டால் மனித மனங்கள் குரோதங்களுக்கும், பகைமைக்கும் ஆளாகிவிடும். அதே தீமையை நன்மையால் எதிர்கொண்டால் கோப ஜுவாலைகள் அணைந்து, மனம் கொதிப்படைவதிலிருந்து அமைதியாகி, குரோதமெனும் அழுக்குகளிலிருந்து தூய்மையாகிவிடும்.

அதன்மூலம் கொடும் விரோதிகளான இருவர் ஒருவரையொருவர் நேசிக்கும் நண்பர்களாக மாறிவிடுவார்கள். இது தீமைகளைத் தடுத்துக்கொள்ள மிக அழகிய வழியாகும். ஆனால் இப்பண்பு பெரும் பாக்கியசாலிக்கே சாத்தியமாகும். அதையே அல்குர்ஆன் சுட்டிக் காட்டுகிறது.

## வெளிப்படும் இரகசியங்கள் 13

( மனித வாழ்வு )

**முதல் பாகம் சிரிப்பதற்கும்,இரண்டாம் பாகம் சிந்திப்பதற்கும்**

கடவுள் ஒருமுறை பூமி வந்து, கழுதையைப் படைத்து, நீ ஒரு கழுதை. காலை முதல் மாலை வரைக்கும் நீ உழைக்க வேண்டும். உன் மேல் சுமைகள் இருக்கும். நீ புல்லைத்தான் சாப்பிட வேண்டும். உனக்கு அவ்வளவாக அறிவு இருக்காது. நீ 50 வருடங்களுக்கு வாழ்வாய்.

இதற்கு கழுதை சொன்னது: “நான் கழுதையாக இருக்கிறேன். ஆனா 50 வருடம் ரொம்ப அதிகம். எனக்கு 20 வருடம் போதும்.” கடவுள் கழுதையின் ஆசையை நிறைவேற்றினார்.

அடுத்து ஒரு நாயை படைத்து அதனிடம் சொன்னார்: “நீ மனிதனின் வீட்டைகாக்கும் காவலன். அவனுடைய அன்பு தோழனாக இருப்பாய். மனிதன் உண்ட பிறகு உனக்கு கொடுப்பான். நீ 30 வருடங்களுக்கு வாழ்வாய்.”

இதற்கு நாய் கூறியது,: “கடவுளே, 30 வருஷம் ரொம்ப அதிகம். எனக்கு 15 வருஷம் போதும்” கடவுள் நாயின் ஆசையை நிறைவேற்றினார்.

அடுத்து கடவுள் குரங்கை படைத்து அதனிடம் சொன்னார் : “நீ ஒரு குரங்கு. மரத்திற்கு மரம் தாவ வேண்டும். நீ வித்தைகள் காட்டி மற்றவர்களை மகிழ்விப்பாய். நீ 20 வருடங்களுக்கு வாழ்வாய்.”

இதற்கு குரங்கு கூறியது: “20 வருஷம் ரொம்ப அதிகம். 10 வருஷம் போதும்” கடவுளும் குரங்கின்ஆசையை நிறைவேற்றினார்.

கடைசியாக மனிதனை படைத்து அவனிடம் சொன்னார் ” நீ ஒரு மனிதன். உலகில் உள்ள ஆறு அறிவு ஜீவன் நீ மட்டுமே. உன் அறிவை கொண்டு மற்ற மிருகங்களை ஆட்சி செய்வாய். உலகமே உன்கையில். நீ 20 வருடங்களுக்கு வாழ்வாய்.”

இதற்கு மனிதன் கூறினான்: “20 வருஷம் ரொம்ப குறைவு. கழுதை வேண்டாம் என்ற 30 வருடங்களையும், நாய் வேண்டாம் என்ற 15 வருடங்களையும், குரங்கு வேண்டாம் என்ற 10 வருடங்களையும் எனக்கு கொடுத்து விடு” கடவுள் மனிதனின் ஆசையை நிறைவேற்றினான்.

அன்று முதல்....

மனிதன் முதல் 20 வருடங்களை ஜாலியாக வாழ்கிறான் மனிதனாக.

கல்யாணம் செய்து கொண்டு அடுத்த 30 வருடங்களை கழுதை போல் எல்லாம் சுமைகளை தாங்கி கொண்டு, அல்லும் பகலும் உழைக்கிறான்.

குழந்தைகள் வளர்ந்தபிறகு, அடுத்த 15 வருடங்களுக்கு அவன் வீட்டின் நாயாக இருந்து, அனைவரையும் பாதுகாத்து கொள்கிறான். மிச்ச மீதி உள்ளதை சாப்பிடுகிறான்.

வயதாகி, Retire ஆன பிறகு குரங்கு போல் 10 வருடங்களுக்கு மகன் வீட்டிலிருந்து மகள் வீட்டிற்கும், மகள் வீட்டிலிருந்து மகன் வீட்டிற்கும் தாவி, தன் பேரகுழந்தைகளுக்கு வித்தைகள் காட்டி மகிழ்வித்து மரணிக்கின்றான்.



இரண்டாம் பாகம் :

இந்த வாழ்க்கை என்பது பயணம்தான், யாரும் இவ்வுலகில் தங்கி வாழ்பவர் அல்ல. வழிப்போக்கன் போல், சில காலம் தங்கி மறுபடியும் மறுமை நோக்கி பயணிப்பதுதான் நம் வாழ்வின் நோக்கமாகும்.

இம்மை வாழ்வை விட மறுமை வாழ்வு நிலையானது என்கிறது இஸ்லாம். மறுமை வாழ்விற்கான முன்னோட்டம்தான் இவ்வாழ்க்கை. இது, நிரந்தரமற்றது என்பதில் உறுதியாக இருக்கிறது இஸ்லாம். இதனை குர்ஆன் மற்றும் நபி மொழிகள் கோடிட்டுக் காட்டுகின்றன.

`என்னுடைய சமூகத்தாரே! இவ்வுலக வாழ்க்கையெல்லாம் அற்ப சுகம்தான்; அன்றியும் நிச்சயமாக, மறுமையோ - அதுதான் (என்றென்றுமிருக்கும்) நிலையான வீடு. (திருக்குர்ஆன் 40:39).

உலகில் நீ (தாய் நாடு அல்லது சொந்த ஊர் அல்லாத ஓரிடத்தில் வாழும்) ஓர் அந்நியனைப் போல் அல்லது ஒரு வழிப்போக்கனைப் போல் வாழ்வாயாக!’ மண்ணறைவாசிகளை போல் உன்னை நினைத்துக்கொள்.

உமரின் மகனே! நீ காலைப் பொழுதை அடைந்தால் மாலையை எதிர்பார்க்காதே. நீ மாலையை அடைந்தால் காலையை எதிர்பார்க்காதே. நோயின் பாதிப்புகளுக்கு முன்னால் ஆரோக்கியத்தையும், மரணத்தைச் சந்திப்பதற்காக வாழ்வையும் பயன்படுத்திக் கொள்.

ஓ அப்துல்லாஹ், நாளை உன் நிலை என்ன என்பது நீ அறியமாட்டாய்’’ என்றார்கள் நபி (ஸல்). (நூல்: திர்மிதி)

உலகத்தின் மையக்கரு என்ன என்பதை இந்த நபிமொழி தெள்ளத் தெளிவாகப் பேசுகிறது. இதனை புரிந்து கொண்டோர்களுக்கு அமைதியான நதியில் மிதக்கும் இலை போன்று வாழ்க்கை அமையும்.

இந்த உலகத்தின் சாராம்சத்தை அறிய முற்படாமல் மன இச்சைக்கு அடிமையானால், அலையில் சிக்கிய படகு போல் நிம்மதியின் கயிறு அறுந்து நிறம் மாறிப்போகும்.

“அவர்கள் இந்த உலக வாழ்விலிருந்து (அதன்) வெளித்தோற்றத்தையே அறிகிறார்கள் - ஆனால் அவர்கள் மறுமையைப் பற்றி அலட்சியமாக இருக்கிறார்கள்”. (திருக்குர்ஆன்: 30:7.)

இந்த உலகம் வெறும் அலங்காரம் என்பது, வாழும் காலத்தில் நமக்கு புலப்படாது. மரணிக்கும் நேரத்தில் முழுமையாகப் புலப்படும். அப்போது அது பயன் தராது.

அறிந்து கொள்ளுங்கள்: “நிச்சயமாக இவ்வுலக வாழ்க்கை விளையாட்டும், வேடிக்கையும், அலங்காரமுமேயாகும்; மேலும் (அது) உங்களிடையே பெருமையடித்துக் கொள்வதும்; பொருள்களையும், சந்ததிகளையும் பெருக்குவதுமேயாகும்; (இது) மழையின் உதாரணத்துக்கு ஒப்பாகும்;

(அதாவது:) அது முளைப்பிக்கும் பயிர் விவசாயிகளை ஆனந்தப்படுத்துகிறது; ஆனால், சீக்கிரமே அது உலர்ந்து மஞ்சள் நிறம் ஆவதை நீர் காண்கின்றீர்; பின்னர் அது கூளமாகி விடுகிறது; (உலக வாழ்வும் இத்தகையதே; எனவே உலக வாழ்வில் மயங்கியோருக்கு) மறுமையில் கடுமையான வேதனையுண்டு;

(முஃமின்களுக்கு) அல்லாஹ்வின் மன்னிப்பும், அவன் பொருத்தமும் உண்டு - ஆகவே, இவ்வுலக வாழ்க்கை ஏமாற்றும் சொற்ப சுகமே தவிர (வேறு) இல்லை’’. (திருக்குர்ஆன் 57:20)

ஜனனம், மரணம் இவை இரண்டிற்கும் மத்தியில் உள்ள பயணமே வாழ்க்கை. தீமையான காரியங்களை விட்டு நம் மனதைத் தூரம் போகச் செய்யவேண்டும். இங்கு எதுவும் நிரந்தரமில்லை என்பதை அறிவதில், இம்மை மற்றும் மறுமையின் சந்தோஷங்கள்

தொடர்கின்றன.

## வெளிப்படும் இரகசியங்கள் 14

( தாடி )

உளவியல் ரீதியாக தாடி வளர்ப்பது உங்கள் மனதைத் திடப்படுத்துகிறது. முகக் கண்ணாடியில் பார்க்கும் போது, ஒரு வித கம்பீரத்தை வழங்குவதால், உன்னால் முடியும் என்பதை சொல்லிக் கொண்டேயிருக்கிறது.

நாம் அறிந்த வகையில் தாடி வளர்ப்பதானது மத அனுஷ்டானம் மட்டும் இன்றி மனிதனுக்கு நிறைய நன்மை பயக்கக்கூடியதாகவுள்ளது.

எல்லாவற்றுக்கும் மேலாக ஆண்கள் ஆரோக்கியமாக இருக்க வேண்டும் என எண்ணும் இரண்டு விஷயங்கள் இருக்கின்றன. இன்று ஆண்மை, மற்றொன்று நன்கு தாடி வளர வேண்டும்.

ஆண்மையில் கோளாறு ஏற்படும் போதுதான் பெரும்பாலான ஆண்கள் மனமுடைந்து போகின்றனர்.தாடி வளர்ப்பது அறிவாற்றல் திறனையும், தன்னம்பிக்கையையும் மேம்படுத்தும் என்பது ஆய்வில் நிரூபிக்கப்பட்டுள்ளது.

தாடி என்பது தமிழ்நாடு போன்ற மாநிலங்களில் ஆண்களின் வீரத்தின் அடையாளமாகவும், ஆண்மையின் அடையாளமாகவும் திகழ்கிறது.

இதைதான் இன்றைய மருத்துவர்களும் கூறுகின்றனர். ஆம், ஆண்மையை ஊக்குவிக்கும் சுரப்பியான டெஸ்டோஸ்டிரோன் மற்றும் தாடி வளர்ச்சி இரண்டும் ஒன்றுடன், ஒன்று இணைந்துள்ளனவாம்.

முகத்தை சூரிய கதிர்களில் இருந்து தாடி பாதுகாக்கிறது. வயது அதிகரிக்கும்போது முகத்தில் சுருக்கங்கள் விழும். அப்படி விழும் சுருக்கத்தை மறைப்பதற்கு தாடி உதவுகிறது. அதனால் முகம் இளமையாகவும், சுருக்கம் இல்லாமலும் காட்சி அளிக்க வேண்டும் என்று விரும்புபவர்கள் தாடி வளர்க்கலாம்.

தாடி சருமத்தை மூடி காணப்படுவதால் sebaceous சுரப்பிகளின் மூலம் பாக்டீரியா தொற்றுக்களிலிருந்து பாதுகாக்கப்படுவதால், முகப்பருக்கள், புள்ளிகள் ஏற்படுவது தடுக்கப்படும்.

தாடி முகத்தை குளிர்ச்சியாக வைத்திருப்பதுடன் நாடியையும் அபாயங்களிலிருந்து காப்பாற்றும்.

அத்துடன் தாடி வைப்பதனால் சுவாசக் கோளாறுகள் ஏற்படுவதும் தடுக்கப்படும்.நீண்ட தாடியானது மனிதனின் கழுத்துப் பகுதியை குளிர்த்தாக்கங்களிலிருந்து பாதுகாக்கின்றது.

நன்றாக ஷேவிங் செய்து முகத்தை மொழுமொழுவென்று வைத்திருக்கும் ஆண்களை விட தாடி வளர்க்கும் ஆண்களைத்தான் பெண்கள் விரும்புவதாக குயின்ஸ்லாந்து பல்கலைக்கழகம் நடத்திய ஆய்வில் தெரியவந்துள்ளது.

தனது வாழ்க்கை துணை தாடி வளர்ப்பவராக இருக்கும் பட்சத்தில் அவருடனான இல்லற பந்தம் நீண்ட நாட்கள் நீடிக்கும் என்றும் ஒருபகுதி பெண்கள் கருதுகிறார்கள். தாடி வளர்க்கும் ஆண்கள் மற்றவர்களை விட எளிதில் பெண்களின் கவனத்தை ஈர்த்து விடுகிறார்கள்.

குறைந்தபட்சம் தினமும் உங்கள் உணவில் 50 கிராம் அளவாவது புரதச்சத்து உணவுகள் இருக்க வேண்டும். ப்ரோக்கோலி, மீன், வால்நட், கேரட் மற்றும் சிட்ரஸ் உணவுகளை எடுத்துக் கொள்ளுங்கள். இவையும் தாடியின் வளர்ச்சியை ஊக்குவிக்கும்.

பொதுவாகவே ஆண்களுக்கு தாடி வளர்ப்பது என்றால் ஓர் தனி கெத்து இருக்கும். மேலும், இப்போது ஆரோக்கியம் என்பதால் நீங்கள் தாராளமாக தாடியை வளர்க்கலாம்.

தாடி வைப்பதனால் ஏற்படும் மருத்துவ நன்மைகள்…

மருத்துவ ஆய்வுகளின்படி தாடி வளர்ப்பதானது ஒரு மனிதனை தொண்டை, பல்ஈறு சம்பந்தமான நோய்களிலிருந்து தடுக்கின்றது.

சமீபத்திய ஆய்வுகளில் தாடி முகத்தில் அலர்ஜி, சரும தொற்று ஏற்படாமல் இருக்கவும், சருமத்தை ஆரோக்கியமாக பாதுகாக்கவும் உதவுகிறது என கண்டறியப்பட்டுள்ளது. ஆம், தாடியில் இருக்கும் நல்ல பாக்டீரியாக்கள் தீய பாக்டீரியாக்களை அழிக்க உதவுகிறது.

மேலும், தாடியானது முகத்தின் சருமத்திற்கு கெடுதி விளைவிக்கக்கூடிய இரசாயன வகைகளிலிருந்தும், மாசுள்ள வளிமண்டலத்திலிருந்தும் கெடுதி ஏற்படாமல் பாதுகாக்கும்.

இதனால் முகத்தில் ஏற்படும் சுருக்கங்கள் குறைந்து வயதான தோற்றம் ஏற்படுவதற்கான வாய்ப்புக்கள் குறைவாகக் காணப்படும்.

முன்னைய காலத்து மருத்துவர்கள், தத்துவஞானிகள் கூட தாடி வளர்த்திருக்கிறார்கள். உதாரணமாக சார்ள்ஸ் டார்வின், லுயிஸ் பெஸ்டர், ஆபிரகாம் லிங்கன்,இன்னும் பலர். இப்போதைய முன்னணி நடிகர்கள் பலரும் தாடி வைத்திருக்கிறார்கள்.

எகிப்து நாட்டில் 4000 வருடங்களுக்கு முன் இறந்த போன அரசர் ராணி போன்றவர்களின் உடல்களை மம்மிகளாக பாடம் செய்யப்பட்டு பிரமிடுக்குள் வைக்கப்பட்டு பாதுகாக்கப்படும்

மம்மிகளைப் பற்றி ஒரு சுவாரசியமான தகவல்கள் வெளியாகி இருக்கிறது. அதாவது ஒவ்வொரு மம்மியிலும் தவறாமல் இறந்தவருக்கு உண்மையில் தாடி இருந்திருந்தாலும் இல்லாவிட்டாலும் தாடி இணைக்கப்பட்டது

ஏனென்றால் தாடி என்பது மன்னர்களின் அடையாளம் இதில் இன்னுமொரு வேடிக்கை என்னவென்றால் இந்தத் தாடி வீரம் அதிகாரம் ஆகியவற்றின் அடையாளமாகவும் கருதப்பட்டதால் ராணி ஹேட்ஷிப்சுட் ( Queen Hat Shepsut ) இறந்தபோது அந்த மம்மிக்கும் தாடி ஒட்டப்பட்டு அவள் ஒரு மகாராணி என்பது உறுதி செய்யப்பட்டது

ஹவ்வா (அலை) அவர்கள் நபி ஆதம் (அலை) அவர்களின் விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டபோது, அவர்களின் மிக நீண்ட அழகிய கூந்தலைக் கண்டு ஆதம் (அலை) அவர்கள் இறைவனிடத்தில் தனக்கும் இது போன்ற அழகிய அம்சம் கேட்க, இறைவன் ஆதமுக்கு அழகான தாடியைக் கொடுத்தான் அந்த தாடியின் அழகில் ஹவ்வா சொக்கி போனார்கள்

நபி மூஸா அலை அவர்கள் தூர்ஸீனா மலைக்கு தனியாக போகும் போது பனீ இஸ்ரவேலர்களை தன் தம்பி நபி ஹாரூன் அலை அவர்களிடம் ஒப்படைத்து விட்டு போய் தவ்ராத் வேதத்தை வாங்கிக் கொண்டு வரும் போது பனீ இஸ்ரவேலர்கள் மாட்டை இறைவனாக வணங்கினார்கள். இதனால் கோபடைந்து தன் தமபியின் தாடியைப் பிடித்து இழுக்க…

(இதற்கு ஹாரூன்:) “என் தாயின் மகனே! என் தாடியையோ என் தலை (முடி)யையோ பிடி(த்திழு)க்காதீர்கள்; “பனீ இஸ்ராயீலிடையே நீங்கள் பிரிவினையை உண்டாக்கி விட்டீர்கள்; என் வார்த்தைக்காக நீங்கள் காத்திருக்கவில்லை!” என்று நீர் கூறுவீரோ என நிச்சயமாக நான் அஞ்சினேன்” என்று கூறினார். (குர்ஆன் 20 : 94 ) வசனத்தில் குறிப்பிடுகின்றான்.

சுவனத்தில் யாருக்குமே தாடி இருக்காது. ஆனால் குர்ஆனில் சொல்லப்பட்ட நபி ஆதம் (அலை) அவர்களுக்கும் மற்றும் ஹாரூன் (அலை) ஆகிய இவ்விருவருக்கும் மட்டுமே தாடி இருக்கும்

## வெளிப்படும் இரகசியங்கள் 15

(**மஹ்ஷரின்** காலம் )




"பூமி தன்னைத் தானே சுற்றிக் கொள்ள 24 மணி நேரம் அதாவது ஒரு நாளாகிறது. சூரியனைச் சுற்றி முடிக்க 365 .25 நாட்களாகிறது. நமக்கும் ஒரு வயது பூர்த்தியாகிவிடுகிறது.

நம் சூரிய மண்டலத்தில் நம் சக கிரகமான வியாழன் கிரகம், சூரியனைச் சுற்றி முடிக்க சுமார் 12 பூமி ஆண்டுகளாகிறது. நாமெல்லாம் வியாழன் கிரகத்தில் வாழ்ந்தால் 12 ஆண்டுக்கு ஒரு முறைதான் ஒரு வயது பூர்த்தியாகும். உங்களுக்கு இப்போது 60 வயதென்றால் வியாழன் கிரகப்படி 5 வயதுதான்.

பூமியின் காலத்தோடு மஹ்ஷரின் காலத்தை ஒப்பிட்டால் …

முதலில் பூமிக்காலத்தைப் பற்றி பேசுவோம்.

ஆதி பிதா ஆதம் (அலை) அவர்கள் தொட்டு இன்று வரையான காலப்பகுதியில் ஒவ்வொரு மனித சமுதாயத்தினரினதும் வாழ்க்கைக் காலங்கள் மாறுபட்டவையாகும்.

உதாரணமாக ஆதம் (அலை) அவர்கள் ஆயிரம் வருடங்கள் வாழ்ந்தார்கள். நூஹ் (அலை) 950 வருடங்கள் அவர்களுக்குப் பின்னால் வந்த சமுதாயத்தினர்கள் ஒவ்வொருவரினதும் வாழ்க்கைக் காலங்கள் குறைந்து குறைந்து தற்போது 60 முதல் 70 ஆக அதிகப்பட்சம் 100 வயதில் வந்து நிற்கின்றது.

ஆக ஆதம் (அலை) அவர்களின் வாழ்நாள் மற்றும், இன்று நாம் வாழக்கூடிய வாழ்நாள் வரை மறுமையின் பார்வையில் நமது வாழ்நாள் எவ்வளவு காலங்கள் என்பதை உணர்த்துவதற்காகவே இது ஒரு படிப்பினைக் கட்டுரையாகும்.

மேலும் உம்முடைய இறைவனிடம் ஒரு நாள் என்பது, நீங்கள் கணக்கிடுகிற ஆயிரம் ஆண்டுகளைப் போலாகும். (குர்ஆன் : 22:47)

ஒரு மனிதன் இவ்வுலகில் 1000 வருடங்கள் வாழ்ந்தால் அவன் மறுமையின் பார்வையில் அதாவது ஒரு நாள் வெறும் 24 மணி நேரம். அதாவது ஒரு நாள் வாழ்வதற்கு சமமானதாகும். ஆக ஒவ்வொரு மனித சமுதாயத்தினரும் வாழ்ந்த காலங்களைப் பின்வருமாறு நோக்குவோம்.

பூமி காலம் - மஹ்ஷர் காலம்

1000 வருடங்கள் = 24 மணி ( 1 நாள் )

500 வருடங்கள் = 12 மணி

250 வருடங்கள் = 06 மணி

125 வருடங்கள் = 03 மணி

62.5 வருடங்கள் = 1.5 மணி

31.25 வருடங்கள் = 1 மணி

ஏறக்குறைய 32 வயதுக்காரர்களுக்கு மஹ்ஷரில் 1 மணி நேரம்தான் கழிந்திருக்கும். அப்படியானால் உங்கள் தற்போதைய வயதுப்படி மஹ்ஷரில் எத்தனை மணி நேரம் என்று கணக்கிட்டுக் கொள்ளுங்கள்.

இன்று நாம் உலகில் 60, 70 வருடங்கள் வாழ்வது என்பது அல்லாஹ்வின் பார்வையில் அதாவது மறுமையின் பார்வையில் வெறும் ஒன்றரை மணி நேரங்கள் மாத்திரம் தான். அதாவது வெறும் 90 நிமிடங்கள்.

ஆக உண்மையாக நமது வாழ்க்கை வெறும் 90 நிமிடங்கள் மாத்திரம் தான்.

யா அல்லாஹ் ! இந்த 90 நிமிட வாழ்க்கைக்குத் தானா மனிதர்கள் இவ்வளவு ஆட்டம் போடுகின்றார்கள். பேராசைக் கொள்வதும், பொருள் சேர்ப்பதும், அடுத்தவர்களோடு போட்டி, பிறன்மனை நோக்கல், செல்போனில் நூல் விடுவது , பொறாமை, சண்டை போடுவதும் இந்த அற்பமான 90 நிமிட வாழ்க்கைக்குத் தானா ? யோசித்துப் பாருங்கள். நினைப்பதற்கே வெட்கமாக இருக்கின்றது.

நம்மை மறுமையில் எழுப்பி இறைவன் கேட்கும் கேள்விகள் ஞாபகம் இருக்கின்றனவா ? எவ்வளவு காலம் நீங்கள் பூமியில் வசித்தீர்கள் என்று இதைத்தான் அல்லாஹ் கேட்பான்.

எத்தனை ஆண்டுகள் நீங்கள் பூமியில் தங்கி இருந்தீர்கள்?

( குர்ஆன் 23:112)

இதற்கு நாம் அளிக்கப்போகும் பதில் என்ன தெரியுமா?

ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் நாங்கள் தங்கியிருந்திருப்போம். (குர்ஆன் : 23:113) என்று தான் கூறுவோம்.

இதுதான் அந்தக் கேள்வியிலும், அதற்கான பதிலிலும் இருக்கும் ஆழமான செய்தி. இப்பொழுது புரிகிறதா? உலக வாழ்க்கை எவ்வளவு அற்பமானது என்று.

இன்னும் கொஞ்சம் ஆழமான சிந்தித்தால்..நம்மில் யாரும் இதற்குப் பிறகு முழுமையாக ஒன்றரை மணி நேரம் வாழப்போவது கிடையாது. ஏனென்றால் 60 வயதை மூன்றாகப் பிரிக்கும் பொழுது 20, 20, 20 ஆகும். அதேபோன்று ஒன்றரை மணி நேரத்தை 3 ஆகப் பிரிக்கும் பொழுது அரை மணி நேரம் 3 வருகின்றது.

ஆக ஒருவருக்கு 20 வயது பரிபூர்ணமாகும் பொழுது அவருடைய அரைமணிநேரம் முடிந்து விட்டது என்று அர்த்தம். ஒருவருக்கு 40 வயது பரிபூரணமாகும் பொழுது அவருடைய ஒரு மணி நேரம் முடிந்தது என்று அர்த்தம்.

எனவே இப்பதிவை வாசித்துக் கொண்டிருக்கும் உங்களில் அதிகமானவர்களுக்கு உங்கள் ஆயுட்காலத்தில் அரை மணி நேரமோ அல்லது ஒரு மணி நேரமோ முடிவடைந்து தான் இருக்கும்.

கவனித்தீர்களா?... இந்த உலக வாழ்க்கை என்பது மிகவும் அற்பமானது. நிஜமான மரணமே இல்லாத வாழ்க்கை மரணத்திற்கு அடுத்தபடியாகத் தான் உள்ளது. அதனால் தான் அல்லாஹ் தனது குர்ஆனில் மரணத்தை முன்னாடியும் வாழ்க்கையைப் பின்னாடியும் கூறியிருப்பதன் நோக்கம் இதுதான்.

உங்களில் எவர் செயல்களால் மிகவும் அழகானவர் என்பதைச் சோதிப்பதற்காக அவன், மரணத்தையும் வாழ்வையும் படைத்தான். (குர்ஆன் : 67:2)

இந்த உலகம் நிரந்தரமானதல்ல. இதனால் தான் நபிகள் நாயகம் அவர்கள் கூறிக்காட்டினார்கள்; "இந்த உலகில் நீ ஒரு அந்நியனைப் போன்றோ அல்லது ஒரு வழிப்போக்கனைப் போன்றோ வாழ்ந்துவிடு.

- மனிதன் இந்த மண்ணுலகில் வாழ்வதும் ஒரு காலம் தான்

- மனிதன் மரணித்து மண்ணறைகளில் வாழ்வதும் ஒரு காலம்தான்

- மனிதன் மறுமையில் அல்லாஹ்வின் முன் நிற்பதும் ஒரு காலம்தான்

-மனிதன் சுவனம் மற்றும் நரகம் செல்வதும் ஒரு காலம்தான்

- அல்லாஹ் நாடினால் எல்லாவற்றையும் அழித்தாலும் ஒரு காலத்தில் அவன் மட்டும் உயிருடனிருப்பான். அதுவும் காலம்தான். இப்போது தெரிகிறதா... அல்லாஹ் காலமாக உள்ளான் என்பது!

ஆகவே நமது வாழ்க்கையை அற்பமான இவ்வுலகத்திற்காக இல்லாமல் மறு உலகத்திற்காக வேண்டி அமைத்துக் கொள்வதற்கு எல்லாம் வல்ல அல்லாஹ் கிருபை செய்வானாக..

## வெளிப்படும் இரகசியங்கள் 16

(**ஹவானா** சின்ட்ரோம் )

கேளா ஒலியினை கேட்கும் திறன் மனிதனுக்கு வாய்க்கும் என்றால் என்ன நடக்கும்?

நம் உடலின் மேல் ஒரு எறும்பு ஊர்ந்தால் கூட கண்டு பிடித்து விடுவோம். ஆனால் உடலில் தொடர்ந்து ஓடிக் கொண்டிருக்கும் இரத்த ஓட்டத்தை நாம் உணர மாட்டோம்.

வரக் கூடிய பூகம்பத்தின் சப்தத்தை ஊர்வன, பறவைகள், மிருகங்கள் கேட்டு தூர விலகி ஓடிவிடும். மனிதனால் இந்த சப்தத்தை கேட்க முடியாது.

எங்கோ ஒலிக்கும் ஹாரன் ஒலி கூட கேட்கும் நமக்கு , நம் இருதயத்தின் சப்தம் கேட்பதே இல்லை .

மிக உயரத்தில் பறக்கும் விமானத்தின் சப்தம் நமக்கு கேட்கும். நம்மோடு சேர்ந்து சுற்றும் பூமியின் சப்தம் நமக்கு கேட்பதில்லை.

ஏதேதோ காரணங்களுக்காக இயற்கை சில விஷயங்கள் நமக்கு தெரிய வேண்டாம், புரிய வேண்டாம் என்று தடுத்து வைத்துள்ளது. கேட்கும் ஒலியினை மட்டும் சரியாகக் கேட்போம். கேளா ஒலியினை கேட்டு கஷ்டப்பட வேண்டாம் என்றுதான் விஞ்ஞானம் நமக்கு அறிவுரை கூறியது.

ஆனால், அதே விஞ்ஞானம் அமெரிக்காவின் சிஐஏ உளவு நிறுவனத்தின் அதிகாரிகளை குறிவைத்து தொடுக்கப்படும் கேளா ஒலியலைகளைக் கொண்டு மர்மத் தாக்குதல்கள் நடத்தப்படுகிறது.

இதனால் அமெரிக்கர்களை பெரும் அதிர்ச்சியில் ஆழ்த்தியிருக்கின்றன.இந்த கேளா ஒலியலையை "ஹவானா சின்ட்ரோம்" என்கிறார்கள்.

காரணம், அமெரிககாவின் நீண்ட கால எதிரியான கியூபாவின் தலைநகர் ஹவானாவில் முதன் முதலாக இந்த நோயின் அடையாளம் காணப்பட்டதால், இந்த நோய்க்கு ஹவானா சின்ட்ரோம் என்று பெயரிட்டார்கள்.

பாதிக்கப்பட்ட உளவாளிகள் மற்றும் அவர்களின் குடும்பத்தாரின் நலனுக்காக தனியாகச் சட்டம் நிறைவேற்றும் அளவிற்கு ,அங்கே நிலைமை மோசமாகி இருக்கின்றது.

2016 ஆம் ஆண்டில் ஹவானா, கியூபாவில் உள்ள அமெரிக்க மற்றும் கனடிய தூதரக ஊழியர்களுக்கு தென்பட்டது. தொடர்ந்து அமெரிக்க உளவுத்துறை மற்றும் ராணுவ வீரர்கள் மற்றும் அவர்களது குடும்பத்தினர் உட்பட பலருக்கு இந்த அறிகுறிகள் தென்பட்டன.

இன்று நேற்றல்ல சுமார் ஐந்தாண்டுகளுக்கு மேலாக அமெரிக்க உளவாளிகளை அலைக்கழிக்கும் பாதிப்பு இது! மறைந்திருக்கும் எதிரி தொடுக்கும் கண்ணுக்குத் தெரியாத ஒலியலைகள் மூளை மற்றும் மத்திய நரம்பு மண்டலத்தைத் தாக்கி நிலைகுலையச் செய்கின்றன.

சிலர் மனப் பிறழ்வு ஏற்பட்டு ஏதேதோ உளறவும், சிலர் நம்மூர் சிண்ட்ரோமான பேய்யாடியும் இருக்கிறார்கள். சிறிது நேரத்திற்கு பிறகு எதுவும் நடக்கவில்லை என்பது போல் நடந்து போகிறார்கள்.

ஆனால், அந்த கேளா ஒலி அலைகளை உருவாக்கும் அந்த நபருக்கு எவ்வித தாக்குதலுக்கும் உள்ளாவதில்லையாம்.

தீராத தலைவலி, கண்பார்வை மங்குதல், தொடர் குமட்டல், காதுகளில் லீங்கலிக்கும் கொடும் இரைச்சல், மண்டைக்குள் குரல்கள், இயல்பான சிந்தனை ஓட்டத்தை மூளை இழப்பது, மன அழுத்தம், தீவிர மனக்குழப்பம் என்று பல்வேறு பாதிப்புகள் பீடித்துள்ளன. அமெரிக்கா எதிர்நோக்கும் சவால்களில் இந்த ஹவானா சின்ட்ரோம் முதலிடத்தைப் பிடித்துள்ளது.

இந்த கேளா ஒலியலைகளைக் கொண்டு கியூபா நடத்தும் கண்ணுக்குத் தெரியாத யுத்தமாகத்தான் அமெரிக்கா கியூபாவை சந்தேகப்படுகிறது.

கத்தியின்றி ரத்தமின்றி

யுத்தமொன்று வருகுது

நாமக்கல் கவிஞர் பாடிய பாடல்தான் நம் ஞாபகத்திற்கு வருகிறது.

அடுத்தடுத்த ஆண்டுகளில் இன்னும் வீரியமாக வெவ்வேறு நாடுகளில் இருநத அமெரிக்க தூதரக அதிகாரிகள் மற்றும் உளவாளிகளைக் குறிவைத்து துரத்த ஆரம்பித்தது ஹவானா சின்ட்ரோம் !

போலந்து, தைவான், ஆஸ்திரியா, கிர்கிஸ்தான், கொலம்பியா, சீனா, உஸ்பெகிஸ்தான் , பிரிட்டன் ஆகிய சில நாடுகள் தாக்குதல்களுக்கு உள்ளாயின.

அமெரிக்க அதிகாரிகள், அல்ட்ரா சவுண்ட் மற்றும் மைக்ரோவேவ் ஆயுதங்கள் உட்பட பல்வேறு அறியப்படாத மற்றும் அறியப்படாத தொழில்நுட்பங்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன என்பதை மட்டும் கண்டுப் பிடித்திருக்கிறார்கள்.

பூச்சிக் கொல்லிகள் மற்றும் பிற நச்சுகள் போன்றவற்றின் நெடியைக் கூட ஒலியலைகளில் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். ஆனால் அதற்குரிய ஆதாரங்கள் எதுவும் தாக்கப்பட்டவர்களின் உடலில் கண்டுபிடிக்கப்படாததால் அனைத்தும் ஊகமாகவே இருந்தன.

அடுத்த கட்டமாக மனிதர்களை மட்டும் அல்ல டிஜிட்டல் சாதனைங்களை இந்த ஒலிஅலைகள் குறிவைக்கலாம் என்ற பயப்பிராந்தி எழுந்து அமெரிக்க அதிகாரிகளின் தூக்கத்தைக் கெடுத்துள்ளது. .ராஜாங்க அதிகாரிகள், உளவாளிகள் கையாளும் ஸ்மார்ட் போன் முதல் லேப்டாப் வரையிலான டிஜிட்டல் சாதனங்கள் ஊடுருவப்படலாம்.

இந்த இரகசிய உண்மைகள் எப்போது வெளிப்படும் என்பது யாருக்குமே தெரியாத உண்மைகள்.

சப்தத்தைக் கொண்டு உயிர்களை அழிக்க முடியுமா என்றால் முடியும் என்கிறது குர்ஆன்

ஒரே ஒரு சப்தம் என்பது முதன்முறையில் இஸ்ராஃபீல் (அலை) என்னும் வானவர் மலக்கு சூர் ஊதுவதை குறிக்கிறது. இதனை ஊதிய உடன் யாவரும் மடிந்து விடுவர்.

مَا يَنْظُرُوْنَ اِلَّا صَيْحَةً وَّاحِدَةً تَاْخُذُهُمْ وَهُمْ يَخِصِّمُوْنَ

"அவர்கள் ஒரே ஒரு பேரொலிக்காகக் காத்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறில்லை; அவர்கள் வழக்காடிக் கொண்டிருக்கும் நிலையிலேயே அது அவர்களைப் பிடித்துக் கொள்ளும்.

(குர்ஆன் : 36:49)

## வெளிப்படும் இரகசியங்கள் 17

**(தரிசனம் )**

தரிசனம் என்பது உங்கள் கனவு அல்ல. தரிசனம் உங்கள் கனவுகள் அனைத்தும் கலைந்த பிறகு ஏற்படுவது. கனவு காணும் மனம் இல்லாதபோது ஏற்படுவதே தரிசனம். ஆனால் அதற்குத் தேவை உள்நோக்கு.

அந்த உள்நோக்கு என்பது, ஒருவர் பூ ஒன்றை எடுத்து ஒரு வார்த்தைகூட பேசாமல், தன்னைச் சுற்றி இருந்தவர்களிடம் காட்டினார். ஒவ்வொருவரும் பூவைப் பற்றித் தங்கள் கருத்து, பொருள் விளக்கம் மற்றும் அது அடையாளப்படுத்துவது எல்லாம் கூறினர்.

கடைசியாக இருந்தவர் மட்டும் ஏதும் சொல்லாமல் புன்னகைத்தார். பூவைக் காட்டியவரும் புன்முறுவல் செய்து எதும் பேசாமல் பூவை அவரிடம் கொடுத்தார்.

ஆனால் நீங்கள் விளக்கங்களால் நிறைந்து இருக்கிறீர்கள் பூவை என் கையில் பிடித்தவாறு உங்கள்முன்னே நான் நிற்கிறேன் ஆனால் உங்களால் பூவை பார்க்க முடியாது. ஏனென்றால், நீங்கள் விளக்கங்களால் நிறைந்திருக்கின்றீர்கள் கேள்விகளாலும் பதில்களாலும் தத்துவங்களினாலும் நிறைந்திருக்கிறீர்கள்.

ஒவ்வொருவரும் பூவைப் பற்றி தாங்கள் கருத்து பொருள் விளக்கம் மற்றும் அது அடையாளப்படுத்துவதெல்லாம் கூறினர்

பூ விளக்கப்பட வேண்டிய ஒன்றல்ல; பூ தன்னியிலேயே தானாக இருக்கிறது. மற்ற எல்லா பொருளுரைகளும் அதன் மெய்மைக்குள் ஊடுருவல் தான்.

ஒரு ரோஜா என்னவென்று சொல்வீர்கள் ? ஒரு ரோஜா ஒரு ரோஜா ஒரு ரோஜாதான் ! நீங்கள் என்ன சொன்னாலும், அது தவறாக இருக்கும் ஏனென்றால் ஒரு ரோஜா இது போன்றது என்று சொல்வதானால், நீங்கள் ரோஜாவை ஒரு ரோஜா அல்லாததோடு அடையாளப்படுத்துகிறீர்கள்.

யாரோ ஒருவர் இது என்ன என்று கேட்டால்? நீங்கள் வேறு எதையாவது கொண்டு அதை விளக்க முற்படுவீர்கள். அந்த வேறு ஏதோ ஒன்று கேட்கப்பட்ட பொருள் அல்ல. இதனால் எல்லா விளக்கங்களும் வழி தவறி விடுகின்றன. எல்லா விளக்கமும் விளக்குவதில்லை அதை விளக்கம் தராமல் போகின்றன. காரணம் அவை மனத்தின் தந்திரங்கள்.

"விளக்கம் " என்ற சொல் உண்மைப் பொருளைக் கண்டறிய முன்னேறும் ஒவ்வொரு படியிலும் சுருங்கிக் கொண்டே வருகிறது.அதாவது,உண்மையை அதிகமாக அறிய, அறிய அதை விளக்கிச் சொல்வது கடினமாகிக் கொண்டே போய் இறுதியில் உண்மைப் பொருளின் தரத்தை பாதித்துவிடுகிறது.

"உண்மை" என்பதே வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டது என்பதுதான்.

ஆக உள்நோக்கு என்பது எப்படி இருக்க வேண்டும் என்று நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். எப்படிப் பார்க்க வேண்டும், கேட்க வேண்டும், எப்படி முகர வேண்டும், சுவைக்க வேண்டும். எப்படித் தொட வேண்டும் என்பதை எல்லாம் நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். பிறகு நீங்களே ஆச்சரியப்படுவீர்கள். இறைவன் எல்லாப் புலன்கள் வழியாகவும் அவனே வருவான்.

நுண் உணர்வு கொண்டு இருங்கள். நம்பிக்கையுடன் தலையினால் குறைவாகவும், உணர்வினால் அதிகமாகவும் இருங்கள். துடிப்புணர்வுடன் இருக்கும் உங்களுக்கு திடீரென ஒரு நாள் காண்பீர்கள் உங்களுக்கு வருவது வெறும் வெளிச்சமல்ல. அது இறைவனே வெளிச்ச ரூபமாய் வருகிறான்.

உங்கள் முன் நிற்பது மரமல்ல. அது இறைவன்; வெறும் கற்பாறையல்ல அது இறைவன் ; உங்கள் மீது மையல் கொண்டது பெண் அல்ல. இறைவனே !. அந்த ஆண் அல்ல. இறைவன்தான். உள்நோக்கு மேகமூட்டமாக இல்லாவிட்டால் திடீரென எல்லா இடங்களிலும் இறைவனைக் காண்பீர். ஏனென்றால் எல்லாமே இறைவன்.

"அவர் (நெருப்பின்) அருகே வந்த போது “மூஸாவே!” என்று அழைக்கப் பட்டார்.நிச்சயமாக நான்தான் உங்களது இறைவன். (குர்ஆன் : 20:11,12)

என்றதும், நபி மூஸா (அலை) அவர்களுக்கு இறைவனுக்கு முன்னிருக்கும் 70 ஆயிரம் திரைகள், அர்ஷ், குர்ஷ் எதுவுமே ஞாபகத்திற்கு வரவில்லை. அழைத்த அந்த நெருப்புதான் இறைவனின் தரிசனம் என்பதை பரிபூரணமாக நம்பினார்கள்.

கண்ணியமும் உடைய உம் இறைவனின் முகமே நிலைத்திருக்கும். (குர்ஆன் : 55: 27)

இப்படி பார்க்கப்படும் எல்லாமே இறைவனின் திருக்காட்சி என்னும் தரிசனத்தை நம்பும் அடியானுக்கு இறைவனே அந்த அடியானாக மாறி

விடுகிறான்.

"எனது அடியான் நஃபிலான வணக்கங்களை விருப்பத்துடன் செய்து, என்னுடைய நெருக்கத்தைபெற விரும்பி, என்னை நெருங்கினால் நான் அவனை நேசிக்கும் அளவுக்கு ஆகிவிடுகிறான். நான் அவனை நேசித்து விட்டால், அவன் கேட்கும் காதாகவும், பார்க்கும் கண்ணாகவும், பிடிக்கும் கையாகவும், நடக்கும் காலாகவும் நான் ஆகிவிடுகிறேன்." (ஸஹீஹுல் புகாரி)

அந்த தரிசனமே அவன் அவனாகி விடுகிறான்.

வெளிப்படும் இரகசியங்கள் 18

( ஜீவராசிகளின் சொர்க்கம் )

எல்லா மதங்களிலும் சொர்க்கம்- நரகம் பற்றி விபரம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அவைகளின் வர்ணனைகள் அந்தந்த மனிதர்கள் சார்ந்த மதங்களில் சொல்லப்பட்ட சுக துக்கங்களை சார்ந்து இருக்கின்றன.

எல்லா மதத்திலும் நரகம் என்பது சாசுவத நெருப்பில் எறிவது எரிவது. சொர்க்கம் என்பது சாசுவத தேவ கானங்கள் சந்தோஷங்கள் எல்லாம் பூமியில் உள்ள சந்தோஷங்களைச் சார்ந்து இருக்கின்றன. வேறு வடிவ சந்தோஷத்தையோ துக்கத்தையோ நம்மால் நினைத்துப் பார்க்க முடியவில்லை இவைகளை மீறி நமக்கு தெரியாத சந்தோஷங்கள் இருக்கின்றனவா என்றால் இஸ்லாம்

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "என் நல்லடியார்களுக்காக எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் உள்ளத்திலும் தோன்றியிராத இன்பங்களை நான் (சொர்க்கத்தில்) தயார்படுத்தி வைத்துள்ளேன்" என்று கூறினான்.

எனினும், (சொர்க்கத்தின் இன்பங்கள் குறித்து) அல்லாஹ் உங்களுக்கு அறிவித்துள்ளது சொற்பமே! - இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.( முஸ்லிம் 5438)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

சொர்க்கவாசி(களில் கீழ்த் தட்டில் இருப்பவர்)கள் மேல்அறை(களில் உள்ளவர்)களை, வானில் நீங்கள் நட்சத்திரங்களைப் பார்ப்பதைப் போன்று பார்ப்பார்கள்.இதை சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். முஸ்லிம 5445

முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை) மக்கள், "சொர்க்கத்தில் அதிக எண்ணிக்கையில் இருப்பவர்கள் ஆண்களா, அல்லது பெண்களா?" என்று பெருமையுடன் பேசிக்கொண்டிருந்தனர்; அல்லது விவாதித்துக் கொண்டிருந்தனர்.

அப்போது அபூஹுரைரா (ரலி) அவர்கள், "அபுல்காசிம் (ஸல்) அவர்கள், "சொர்க்கத்தில் நுழைகின்ற முதல் அணியினர்,பௌர்ணமி இரவில் ஒளிரும் சந்திரனைப் போன்று தோற்றமளிப்பார்கள்.

அவர்களுக்குப் பின்னே நுழைபவர்கள்,வானில் பேரொளி வீசும் நட்சத்திரத்தைப் போன்றிருப்பார்கள். அவர்களில் ஒவ்வொருவருக்கும் இரு துணைவியர் இருப்பர். அப்பெண்களின் காலின் எலும்பு மஜ்ஜை அவர்களது (கால்) சதைக்கு அப்பாலிருந்து (அவர்களது பேரழகின் காரணத்தால்) வெளியே தெரியும். சொர்க்கத்தில் துணைவி இல்லாத எவரும் இருக்கமாட்டார்" என்று கூறவில்லையா?" எனக் கேட்டார்கள். ( முஸ்லிம் 5449)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

சொர்க்கத்தில் (மக்கள் ஒன்றுகூடும்) சந்தை ஒன்று உண்டு. அங்கு ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் சொர்க்கவாசிகள் வருவார்கள். அப்போது வட பருவக் காற்று வீசி அவர்களுடைய முகங்களிலும் ஆடையிலும் (கஸ்தூரி மண்ணை) வாரிப்போடும். உடனே அவர்கள் மேன்மேலும் அழகும் பொலிவும் பெறுவார்கள். பிறகு அழகும் பொலிவும் அதிகமாகப் பெற்ற நிலையில் அவர்கள் தங்கள் துணைவியரிடம் திரும்பிச் செல்வார்கள்.

அப்போது அவர்களிடம் அவர்களுடைய துணைவியர், "எங்களிடமிருந்து சென்ற பின்னர் கூடுதலான அழகும் பொலிவும் பெற்றுவிட்டீர்களே!" என்று கூறுவர்.

அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் சென்ற பிறகு நீங்களும்தான் கூடுதலான அழகும் பொலிவும் பெற்றிருக்கிறீர்கள்" என்று கூறுவர். இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். முஸ்லிம் 5448

சொர்க்கத்தில் அவர்கள் மலஜலம் கழிக்கமாட்டார்கள். மூக்குச் சிந்தவுமாட்டார்கள். எச்சில் துப்பவுமாட்டார்கள்.

அவர்களின் சீப்புகள் தங்கத்தாலானவை. அவர்களது வியர்வையில் கஸ்தூரி மணம் கமழும். அவர்களுடைய (நறுமணப் புகையிடும்) தூபக் கலசங்கள் அகிலால் எரிக்கப்படும்.

அவர்களுடைய துணைவியர் கண்ணழகுக் கன்னியர் (அல்ஹூருல் ஈன்) ஆவர். அவர்கள் அனைவரது குணமும் ஒரே மனிதரின் குணமாகவே அமைந்திருக்கும். அவர்கள் தம் தந்தை ஆதம் (அலை) அவர்களின் தோற்றத்தில் வானத்தில் (முட்டும் விதத்தில்) அறுபது முழம் உயரம் கொண்டவர்களாயிருப்பார்கள். ( முஸ்லிம் 5450 )

இதேப் போன்று சுவனம் செல்லும் பத்து உயிர் பிராணிகள் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளின் சொர்க்கத்தின் வர்ணனைகளை உங்கள் யூகிக்க முடிகிறதா ?

1. நபி (ஸல்) அவர்களின் ஒட்டகம்.

2. நபி ஸாலிஹ் (அலை) அவர்களின் ஒட்டகம்.

3. நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் காளைக் கன்று.

4. நபி இஸ்மாயீல் (அலை) அவர்களின் ஆடு.

5. நபி மூஸா (அலை) அவர்களின் நிகழ்வில் இடம்பெற்றுள்ள பசுமாடு.

6. நபி யூனுஸ் (அலை) அவர்களின் மீன்.

7. நபி உஜைர் (அலை) அவர்களின் கழுதை.

8. நபி சுலைமான் (அலை) அவர்களோடு பேசிய எறும்பு.

9. நபி சுலைமான் அவர்களின் ஹுத்ஹுத் பறவை.

10. குகைவாசிகளுடன் தங்கியிருந்த நாய்.

( நூல்: ஷரஹு அஷ்பாஹு வன்னளாயிர் )

இந்த ஜீவராசிகளின் சொர்க்கம் எப்படி இருக்கும் என்பதை உங்களால் யூகிக்க முடிகிறதா ?

## வெளிப்படும் இரகசியங்கள் 19

( காப கௌஸைனி )

இறைவனைப் பற்றி உபநிஷதுகள் சிந்திக்கின்றன.

'உப' - என்றால் அருகில், 'நி'- என்றால் கீழே, 'சத '- என்றால் உட்கார்வது. அருகே உட்கார்ந்துகொண்டு மாணாக்கர்கள் குருவிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொள்ளும் ஞானம் என்று பொருள் சொல்கிறார்கள்.

"உபநிஷதுகள்" என்பது வேதம் அல்ல; அது வேதங்களிலிருந்து தோன்றிய ஞான உபதேசம் ஆகும். அதாவது ஒருவர் வேதத்தில் உள்ளதை விளக்கி கூற, மற்றவர் அதனை கேட்டு ஞானம் பெறுவது

மதராஸாக்களில் உஸ்தாத் முன்னாடி மாணவர்கள் மண்டியிட்டு பாடம் பயிலுவதை உபநிஷதுகள் எனப்படுகிறது.

திருக்குர்ஆனிலும் அருகே உட்கார்ந்து பாடம் கேட்பதுப் பற்றி விவரிக்கப்படுகிறது.

ஒருநாள் நபி (ஸல்) அவர்கள் ஹஜ்ரத் ஜிப்ரியல் (அலை) அவர்களை அடிவானத்தில் கண்டார்கள். இது பற்றி பெருமானார் (ஸல்) அவர்கள் வர்ணிப்பதாவது :

"என்முன் முதன் முதலாக ஹிரா குகையில் வஹீயைக் கொண்டு வந்த வானவர் திரும்பவும் தோன்றினார். அவர் வானுக்கும் பூமிக்கும் மத்தியில் ஒரு நாற்காலியின் மீது அமர்ந்து கொண்டு அந்தரத்தில் இருப்பவராக அவரை நான் கண்டேன். இதனால் நடுக்குற்று அஞ்சி பூமியில் வீழ்ந்து விட்டேன்" - ஜாபிர் பின் அப்துல்லாஹ் - முஸ்லிம்

பின்னர் அவர் நெருங்கி அப்பால் அந்தரத்தில் தொங்கி நின்றார்.

அவர் அடி வானிலிருந்து மனித உருவில் இறங்கி வந்து

பெருமானார் (ஸல்) அவர்களுக்குச் சமீபமாகத் தோன்றினார்.

சமீபித்த அந்நிலையானது இரண்டு (புருவ) வில்களின் (இடை) அளவாக அல்லது இன்னும் நெருக்கமாக இருந்தது. 'இருவருடைய முட்டுக்கால்களும் தொட்டுக்கொண்டு இருந்தன' என்றுகூட சொல்லலாம்.

அந்த ஜிப்ரீலின் வாயிலாக அவ்விறைவன் தனது அடியாருக்கு அறிவிக்க வேண்டியவற்றை அறிவித்தான்.

அவர் உன்னதமான அடி வானத்தில் இருக்கும் நிலையில்-

பின்னர், அவர் நெருங்கி, இன்னும், அருகே வந்தார்.

(வளைந்த) வில்லின் இரு முனைகளைப் போல், அல்லது அதினும் நெருக்கமாக வந்தார்.

அப்பால், (அல்லாஹ்) அவருக்கு (வஹீ) அறிவித்ததையெல்லாம் அவர், அவனுடைய அடியாருக்கு (வஹீ) அறிவித்தார். (குர்ஆன் : 53: 7- 10)

(முஹம்மத்-ஸல்-அவர்களின்) இதயமானது அவர் கண்டவற்றைப் பொய்யெனக் கூறவில்லை.

இதன் கருத்துப் பற்றிப் பெருமானாரின் நெருங்கிய தோழரான ஹஜ்ரத் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள், இவ்வாறு கூறுகிறார்கள்.

"பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களது புறக்கண்களால் ஜிப்ரீலை இரு தடவைகள் பார்த்தது போன்று இறைவனையும் இரு தடவைகள் இதயக் கண்களால் பார்த்துள்ளார்கள்.

"ஆகவே, இரண்டு வில்களுடைய அளவுக்கு அல்லது அதினும் நெருக்கமானார். ( குர்ஆன் 53 : 09) என்பதன் விளக்கம்

அரபு நாட்டிலுள்ளவர்கள் தங்களுக்கிடையில் நேச ஒப்பந்தங்கள் செய்து கொள்ளுங் காலத்தில், இரு கட்சியின் பிரதிநிதிகளும் தங்கள் கரங்களில் வில்லை எடுத்து இரண்டையும் ஒன்றோடொன்று நெருக்கி ஒட்டி விடுவர்.

இவ்விரு வில்களும் ஒட்டி இருப்பது போன்று, தங்களுடைய நேசமும் இணை பிரியாமல் ஒட்டி இருக்கும் என்பதை இச்செய்கையின் மூலம் அவர்கள் தெரிவித்து, தங்கள் கட்சியின் சார்பாக ஏற்றுக் கொண்டனர் என்பது இதன் கருத்து:

வில்லின் இரு ஓரங்களை வளைத்து இழுத்துக், கயிறு கட்டப்பட்டிருக்கும் பாகத்தைத்தான் அவர்கள் இவ்வாறு சேர்த்து இணைப்பார்கள். ஆகவே, 'காப கௌஸைனி' என்பதற்கு மிகவும் நெருங்கி இணைந்தே விட்டார் என்பது கருத்து.

"காப கௌஸைனி'' - என்பதற்குரிய மெஞ்ஞான விளக்கத்தை மெஞ்ஞானிகள் கூறுவதை இங்கு பதிய முடியாது. தெரிந்தவர்களிடம் கேட்டு தெரிந்து கொள்ளுங்கள்.

## வெளிப்படும் இரகசியங்கள் 20

( வேத இரகசியங்கள் )




இந்துக்களின் சமயப் புனித நூல்களிலேயே மிகவும் சிறப்பானது வேதங்கள். வேதங்கள் நான்கு என்பது அனைவருக்கும் தெரிந்ததே,

வேதங்கள் வேத மொழி என்னும் மொழியில் ஆக்கப்பட்டுள்ளது. இம்மொழி சமஸ்கிருத மொழியின் முன்னோடி ஆகும்.வேதங்கள் வழிபாடு, சமயக் கிரியைகள் முதலியவற்றைச் சுலோகங்களால் எடுத்துக் கூறப்படுகின்றன.

வேதம் என்றால் அறிவு, ஞானம் எனப் பொருள்படும். மற்ற எல்லா யுகங்களிலும் வேதங்கள் ஒரே நூலாக இருந்தாலும், கலியுகத்தில் மட்டும் வேதங்கள் நான்கு பகுதிகளாக உள்ளன.

அவை ரிக், யஜூர், சாம, அதர்வண ஆகிய நான்கு வேதங்கள் ஆகும். வேதங்களை “மறை” என தமிழில் கூறுவர். இவை நான்மறை என்றும் கூறப்படுகிறது.

வேதங்களிலிருந்து தோன்றிய உபநிஷதுகளின் எண்ணிக்கையை 232, 108, 180 என்று வேறு வேறு கணக்கு சொல்கிறார்கள்.

ஆனால், பத்து உபநிஷதுகள் முக்கியமானவை. அவை ஈசோ, கேனோ, முண்டக, மாண்டுக்ய, தைத்ரேய, ஐதரேய, சாந்தோக்ய, பிருகதாரண்ய, ப்ரச்ன, கடோபதி நிஷதுகள். இவைகள் சிலவற்றில் இன்றைய விஞ்ஞானிகள் பிரபஞ்சத்தைப் பற்றி கேட்கும் கேள்விகள் கேட்கப்பட்டிருக்கின்றன.

' கேன ' என்றால் யாரால் என்பது பொருள். கேனோபநிஷது சாம வேதத்தைச் சேர்ந்தது. அது இப்படி துவங்குகிறது...

யாரால் விதிக்கப்பட்டு மனம் அதன் இலக்கை அடைகிறது?

யாரால் முதல் பிராணன் அதன் பாதையில் செல்கிறது?

யாரால் செலுத்தப்பட்டு வார்த்தை இயங்குகிறது?

கேட்பதையும் பார்ப்பதையும் யார் அமைத்தது?" என்று கேட்டுவிட்டு..,

கேட்பதின் கேட்பது, மனதின் மனது, வார்த்தை கடந்த வார்த்தை, உயிரின் உயிர், பார்வையின் பார்வை இதைத் தெரிந்தவர்கள் சாவதில்லை என்று தொடரும்போது கேட்பது, பார்ப்பது, சிந்திப்பது இவைகளுக்கெல்லாம் அப்பால் உள்ளதை எண்ணத் தூண்டுகிறது.

....அங்கு பார்வை செல்வதில்லை. வார்த்தை செல்வதில்லை. மனமும் செல்வதில்லை. அதை எப்படி அறிந்து போதிப்பது எதுவும் நமக்குத் தெரியாது, காரணம் அது தெரிந்ததல்ல தெரியாததுமல்ல. அதற்கும் மேற்பட்டது அப்பாற்பட்டது. வார்த்தைகளால் அறியப் படாதது விவரிக்கப் படாதது. வார்த்தைகளை அறிவது அதுதான் பிரம்மன்.

அது மனதால் நினைப்பதில்லை அது மனதை நினைக்கிறது. கண்ணால் பார்ப்பதல்ல பார்வையைப் பார்ப்பது. காதால் கேளாதது கேட்பதைப் கேட்பது. சுவாசத்தை செலுத்துவது- இதுதான் பிரம்மம் என்கிறது கேனோபநிஷது.

வார்த்தைகளுக்கும், சம்பிரதாய எண்ணங்களுக்கும், புலன்களுக்கும் அப்பாற்பட்டதை, அதை புலன்களை கொண்டு அறியும் முயற்சிகள் இவை.

திருக்குர்ஆனில் ...

لَا تُدْرِكُهُ الْاَبْصَارُ وَهُوَ يُدْرِكُ الْاَبْصَارَ وَهُوَ اللَّطِيْفُ الْخَبِيْرُ

பார்வைகள் அவனை அடைய முடியாது. அவனோ பார்வைகள் அனைத்தையும் அறிந்து கொள்கின்றான். அவன் (எவரின் பார்வைக்கும் அகப்படாத) மிக நுட்பமானவன்; மிக்க அறிந்தவன்.

(குர்ஆன் : 6:103)

"லாதுத்ரிக்குஹு" அதாவது அவனைப் பார்வைகள் அடையாது என்ற வாக்கியத்திலுள்ள 'துத்ரிக்' என்ற பதம் "இத்ராக்" என்ற பதத்திலிருந்து பிறந்தது.

இத்ராக் என்பதற்கு ஒரு பொருளின் அந்தரங்க நுட்பத்தை உணர்ந்து கொள்ளல் என்பது பொருள். ஆகவே, இத்ராக் என்பதும் ரூயத் அதாவது பார்த்தல் என்பதும் ஒன்றல்ல. ஒரு மனிதன் ஒன்றையும் உணராமலும் கிரகிக்காமலும் ஒரு பொருளைத் தனது புறக்கண்ணால் பார்க்க முடியும்.

ஆகவே, அல்லாஹுத்தஆலாவின் குன்ஹு தாத்தை எவரும் பார்த்து உணர்ந்து கொள்ள முடியாது, ஆனால், அவன் எல்லாவற்றையும் பார்த்து அவற்றின் அகமியங்களைத் தெரிந்துகொள்வான்.

மனிதர்கள் தங்கள் புறக்கண்ணால் சடப்பொருள்களைப் பார்க்க முடியும், முகக்கண்ணாடியின் மூலமாகத் தங்கள் கண்களையும் கூடப் பார்க்க முடியும். ஆனால், தங்களது பஸர்களை அதாவது பார்வைகளைப் பார்க்க முடியாது. ஆகவே, இந்த ஆயத்தில் அப்ஸார் என்ற பதத்திற்குப் புறக்கண்கள் என்று அர்த்தஞ் செய்வதைப் பார்க்கினும், பார்வை என்று பொருள் செய்வதுதான் சிறந்தது.

கியாமத்து நாளில் மூமினானவர்கள் அல்லாஹுத் தஆலாவைப் பார்க்க முடியும் என்ற விபரம் குர்ஆன், ஹதீஸ்களில் இருந்து தெரியவருகிறது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிஅராஜுடைய இரவில் இறைவனைத் தங்கள் புறக் கண்ணால் பார்த்திருப்பதாக ஹதீஸ்களிலிருந்து தெரியவருகிறது.

ஆனால், அவனை இத்ராக் செய்ததாக வரவில்லை. ஆகவே அல்லாஹுத் தஆலாவுடைய குன்ஹு தாத்தை நேத்திரக்கண்களின் மூலமாக (அசல் தாத்தை) முற்றிலும் உணர்ந்து கொள்ள முடியாது என்பது பிரத்தியட்சம்

வெளிப்படும் இரகசியங்கள் 21

( குர்ஆன் வசனத்தை மெய்ப்பிக்கும் சம்பவம் )




حُنَفَآءَ لِلّٰهِ غَيْرَ مُشْرِكِيْنَ بِهٖ‌ وَمَنْ يُّشْرِكْ بِاللّٰهِ فَكَاَنَّمَا خَرَّ مِنَ السَّمَآءِ فَتَخْطَفُهُ الطَّيْرُ اَوْ تَهْوِىْ بِهِ الرِّيْحُ فِىْ مَكَانٍ سَحِيْقٍ

அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்காது அவனுக்கு முற்றிலும் வழிப்படவர்களாக இருங்கள்; இன்னும் எவன் அல்லாஹ்வுக்கு இணை வைக்கிறானோ, அவன் வானத்திலிருந்து விழுந்து பறவைகள் அவனை வாரி எடுத்துச் சென்றது போலும் அல்லது பெருங் காற்றடித்து, அவனை வெகு தொலைவிலுள்ள ஓரிடத்திற்கு அடித்துக் கொண்டு சென்றது போலும் ஆகிவிடுவான். (குர்ஆன் : 22:31)

மேற்கண்ட வசனத்தில் அல்லாஹ்வுக்கு இணை வைப்பவன் பூமியில் இருக்கும்போது எப்படி அவன் வானத்திலிருந்து விழுந்து பறவைகளால் வாரி எடுத்துச் செல்லமுடியும் ?

அல்லது பூமியில் இருக்கும் பெருங்காற்று அவனை மட்டும் எப்படி வெகுதொலைவிற்கு வீசியெறிய முடியும் ? என்றெல்லாம் சிந்தனை நமக்கு வந்திருக்கலாம்.

பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஒரு ஹதீஸில் (பின் வருமாறு) வந்துள்ளது:

"உயிரைக் கைப்பற்றும் வானவர் (ஏக இறையை) மறுக்கும் அடியார் ஒருவரின் உயிரைக் கைப்பற்றியவுடன் மற்ற வானவர்கள் அந்த உயிருடன் மேலே வானத்திற்கு ஏறுவர்.

அப்போது அவருக்காக வானத்தின் கதவுகள் திறக்கப்படமாட்டா. மாறாக, அவரது உயிர் அங்கிருந்து வேகமாக வீசியெறியப்படும் என்று நபி (ஸல்) வது அவர்கள் கூறினார்கள்; பின்னர் இந்த வசனத்தை ஓதினார்கள்". - ( நூல் முஸ்னது அஹ்மத் )

ஆனாலும் இணைவைப்பான் வானத்திலிருந்து விழுந்து பறவைகள் அவனை வாரி எடுத்துச் சென்றது போலும் அல்லது பெருங் காற்றடித்து, அவனை வெகு தொலைவிலுள்ள ஓரிடத்திற்கு அடித்துக் கொண்டு சென்றது போலும் ஆகிவிடுவான் என்ற வசனத்திற்கு தோதுவாக ஒரு சம்பவம் நடந்துள்ளது.

வாஷிங்டன்: நடுவானில் பறந்து கொண்டிருந்த விமானத்தின் மேற்கூரை அப்படியே பறந்த நிலையில், அடுத்து யாருமே எதிர்பார்க்காத சம்பவங்கள் அதில் நடந்துள்ளது.

பொதுவாக மற்ற அனைத்து போக்குவரத்தைக் காட்டிலும் விமான போக்குவரத்து என்பது ரொம்பவே பாதுகாப்பானது. விமானத்தில் ஏகப்பட்ட பாதுகாப்பு நெறிமுறைகள் இருப்பதால் இதில் விபத்துகள் ஏற்பட வாய்ப்புகள் மிக மிகக் குறைவு.

இருப்பினும், சிறு விபத்து ஏற்பட்டாலும் கூட அது மோசமான பாதிப்பை ஏற்படுத்தும். ஆனால், இங்கே அமெரிக்காவில் யாராலும் நம்பவே முடியாத ஒரு சம்பவம் நடந்துள்ளது.

அங்கே அலோஹா ஏர்லைன்ஸ் நிறுவனத்திற்குச் சொந்தமான விமானத்தின் மேற்கூரை நடுவானில் பறந்த போதிலும், அந்த விமானம் பாதுகாப்பாகத் தரையிறங்கிய அதிசயம் நடந்துள்ளது.

இந்தச் சம்பவம் 1988ஆம் ஆண்டு ஏப்ரல் 28ஆம் தேதி நடந்துள்ளது. இந்த விமானத்தில் 89 பயணிகளும் ஆறு பணியாளர்களும் இருந்துள்ளனர். அப்போது இந்த ஜெட் விமானத்தின் மேற்கூரையின் ஒரு பெரிய பகுதி நடுவானில் அப்படியே பறந்துவிட்டது.

இதனால் உள்ளே இருந்த பயணிகள் மட்டுமின்றி, விமானியும் கூட அதிர்ச்சி அடைந்தார். ஏனென்றால் அவர்கள் தங்கள் வாழ்நாளிலேயே இதுபோன்ற ஒரு சம்பவத்தைப் பார்த்ததே இல்லை. இரட்டை எஞ்சின், 110 இருக்கைகள் கொண்ட போயிங் 737-200 என்ற வகை விமானத்தில் தான் இந்தச் சம்பவம் நடந்துள்ளது.

அன்றைய தினம் விமானத்தின் பயண நேரம் 40 நிமிடங்களாகவே இருந்தது. அப்போது நடுவானில் திடீரென விமான கேபின் அழுத்தத்தை இழந்தது. விமானத்தின் மேற்கூரையும் அப்படியே பறந்த நிலையில், மேலே எந்தவொரு பகுதியும் இல்லாமல் விமானம் இருந்துள்ளது.

அப்போது விமானத்தில் பணிப்பெண்ணாக இருந்த கிளாராபெல் லான்சிங் என்ற பெண் அப்படியே பறந்து போனார். இதையெல்லாம் பார்த்த பயணிகளும் மற்ற பணிப் பெண்களும் அதிர்ச்சியில் உறைந்து போனார்கள். பசிபிக் பெருங்கடலுக்கு மேலே 24,000 அடி உயரத்தில் இந்தச் சம்பவம் நடந்ததால் யாருக்கும் என்ன செய்வதென்றே புரியவில்லை. அதன் பிறகு நடந்தது தான் அனைவருக்குமே ஆச்சரியமாக இருந்தது.

அந்த விமானம் 24,000 அடியில் பறந்து கொண்டிருந்த நிலையில், பைலட் கஹுலுய் ஏர்போர்ட்டில் விமானத்தைப் பாதுகாப்பாகத் தரையிறக்கினார். அப்போது விமானத்தின் என்ஜினில் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது குறிப்பிடத்தக்கது. விமானி திறமையாகச் செயல்பட்டு விமானத்தைப் பாதுகாப்பாகத் தரையிறக்கியதால் பெரும் விபத்து தவிர்க்கப்பட்டது.

விமானத்தில் மொத்தம் 95 பேர் இருந்த நிலையில், அதில் ஒருவர் பரிதாபமாக உயிரிழந்தார். எட்டு பேர் படுகாயம் அடைந்தனர். இந்தச் சம்பவம் நடந்த போது அனைத்து பயணிகளும் சீட் பெல்ட் அணிந்திருந்ததால் அவர்களுக்கு எந்தவொரு ஆபத்தும் ஏற்படவில்லை. அந்த நேரத்தில் அந்த ஒரு பணிப் பெண் மட்டும் சீட் பெல்ட் அணியாமல் இருந்ததே அவர் உயிரிழக்கக் காரணமாக இருந்தது. இதுவரை அவரது உடல் கண்டுபிடிக்கப்படவில்லை.

விமானத்தில் கட்டமைப்பில் ஏற்பட்ட தோல்வியும் திடீரென ஏற்பட்ட டிகம்ப்ரஷனும் தான் இந்த மோசமான விபத்திற்குக் காரணம் என்று அமெரிக்கத் தேசிய போக்குவரத்து பாதுகாப்பு வாரியம் தெரிவித்துள்ளது. இதனால் இடதுபுற என்ஜின் தோல்வியடைந்த நிலையில், இந்த விபத்து ஏற்பட்டுள்ளது.

மேலும், இந்த விமானத்தில் ஏறும் போது விமானத்தின் உடல் பகுதியில் விரிசல் இருப்பதைப் பயணி ஒருவர் கவனித்துள்ளார். இருப்பினும், அதைப் பெரிதாக அவர் எடுத்துக் கொள்ளாததால் அதை விமான ஊழியர்களிடம் கூறவில்லை. அவர் கூறியிருந்தால் கூட இந்த விபத்து தடுக்கப்பட்டிருக்கும்.

பணிப்பெண்ணாக இருந்த கிளாராபெல் லான்சிங் உடலை தேடிப் பார்த்தும் கிடைக்க வில்லை.

வானத்திலிருந்து விழுந்து பறவைகள் அவனை வாரி எடுத்துச் சென்றோ அல்லது பெருங் காற்றடித்து, அவளை வெகு தொலைவிலுள்ள ஓரிடத்திற்கு அடித்துக் கொண்டு சென்றோ இருக்கலாம் என்றோ மரண ரிப்போர்ட்டில் எழுதி பைலை முடித்திருப்பார்கள்.

## வெளிப்படும் இரகசியங்கள் 22

( காலத்தைக் கண்ட விஞ்ஞானம்)






'நம் பேரண்டத்தின் ஆரம்பம், பிக்பாங் பெருவெடிப்புத்தானா?' என்னும் கேள்விக்கு, 'இல்லை' என்று, சமீபத்தில் நோபல் பரிசைப்பெற்ற 'ரோஜர் பென்ரோஸ்' (Roger Penrose) அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள்.

ரோஜர் பென்ரோஸ் மிகச் சிறந்த சிந்தனையாளர்.இவர்தான் ஸ்டீபன் ஹாக்கிங்குடன் இணைந்து பிரபஞ்சம் ஆரம்பமான ஒருமித்த கணத்தை சிந்தித்தவர்.

"மிகப்பெரிய அண்டமொன்றில் நடைபெற்ற பல பெருவெடிப்புகளில் இதுவும் ஒன்றாகலாம். ஏதோவொன்றின் முடிவே, நம் பேரண்டத்திற்கான ஆரம்பம்" என்று சிந்திக்க வைத்திருக்கிறார் அவர்.

வானங்களும், பூமியும் இணைந்திருந்தன என்பதையும், அவ்விரண்டையும் நாமே பிரித்தோம் என்பதையும், உயிருள்ள ஒவ்வொரு பொருளையும் தண்ணீரிலிருந்து அமைத்தோம் என்பதையும் (நம்மை) மறுப்போர் சிந்திக்க வேண்டாமா? அவர்கள் நம்பிக்கை கொள்ள வேண்டாமா?* (அல்குர்ஆன் 21:30)

13.8 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர், நம் பேரண்டத்திற்கான பெருவெடிப்பு நடந்ததில் யாருக்கும் கருத்து வேறுபாடு இல்லை. ஆனால், அதுதான் முதலாவதும், ஒரேயொரு பெருவெடிப்பு என்றால், இல்லை என்பதையே பல இயற்பியலாளர்கள் இப்போது ஏற்றுக்கொள்ள விரும்புகிறார்கள்.

பேரண்டத்தின் நேரம் (காலம்) ஆரம்பித்த கணம், பிக்பாங் பெருவெடிப்புக் கணம்தான். ஆனால், அந்த வெடிப்பும் வேறு பெரிய அண்டத்தில் நடந்தது என்றால், நேரம் (காலம்) முன்னரே ஆரம்பித்திருக்க வேண்டும்.

அப்படியென்றால், பெருவெடிப்பின் முன்னரான நேரத்தை எப்படிக் கணிப்பது? கி.மு, கி.பி போல, நேரத்தையும் பெருவெடிப்பில் பூச்சியமாக இருந்து இன்றுவரை வளர்ந்ததாகவும், அதற்கு முன்னர் எதிர்மறை நேரமாகவும் எடுத்துக் கொள்ளலாம் என்று இப்போது யோசிக்கிறார்கள்.

அதாவது பிக்பாங் கணத்தில் பூச்சியமாக ஆரம்பிக்கும் நேரம், இன்றுவரை 13.8 பில்லியன் ஆண்டுகளைக் கடந்திருக்கிறது. பிக்பாங்கிற்கு முன்னர் நேரமிருந்திருந்தால், அவை மைனஸ் (-) அளவீட்டில் கொள்ளப்படும்.

"அட! நேர்மறை நேரத்தையெல்லாம் கணக்கிடுவதற்கு இப்போது என்ன அவசியம் ஏற்பட்டது" என்கிறீர்களா? அதற்கான சாத்தியம் இப்போது உருவாக்கியிருக்கிறது. பிக்பாங் கணத்திலிருந்து சில மில்லியன் ஆண்டுகள் வயதான பால்வெளி அண்டத்தையே இதுவரை ஹப்பிள் தொலைநோக்கிகளால் நாம் பார்த்திருக்கிறோம்.

இப்போது, அதிநவீனமான ஒரு தொலைநோக்கி ஜேம்ஸ் வெப் (James Webb Space Telescope) கடந்த ஆண்டு 2021 டிசம்பர் மாதம் பிரஞ்ச் கயானாவில் இருந்து 5 ராக்கெட்டுகள் உதவியுடன் இந்த 'ஜேம்ஸ் வெப்' தொலைநோக்கி விண்ணில் ஏவப்பட்டது.

இந்த தொலைநோக்கி சூரியனை சுற்றிய புவி வட்டப்பாதையில் இருந்து 15 லட்சம் கிலோமீட்டர் தொலைவில் நிலைநிறுத்தப்பட்டுள்ளது.

7 பில்லியன் டாலர் (சுமார் ரூ. 7 ஆயிரத்து 950 கோடி) செலவிலும், 20 ஆண்டுகள் கடுமையான உழைப்புக்கும் பிறகும் இந்த ஜேம்ஸ் வெப் தொலைநோக்கி உருவாக்கப்பட்டது. மிக நவீன அம்சங்களுடன் வடிவமைக்கப்பட்ட இந்த தொலைநோக்கி படம் பிடித்த பிரபஞ்சத்தின் துவக்க காலங்கள் குறித்த புகைப்படங்கள் வெளியிடப்பட்டன.

சிவப்பு, நீலம், மஞ்சள் ஆகிய நிறங்களில் ஒளிரும் பிரபஞ்சத்தின் இந்த புகைப்படம் ஒட்டுமொத்த அறிவியல் உலகத்தை ஆச்சர்ய பட வைத்தது. ஜேம்ஸ் வெப் தொலைநோக்கி அனுப்பியிருக்கும் புகைப்படம் சுமார் 1,300 கோடி ஆண்டுகளுக்கு முன்பு இருந்த பிரபஞ்சத்தின் தோற்றம் என்று நாசா விஞ்ஞானிகள் தரப்பில் சொல்லப்படுகிறது.

தனித்தோனாகிய அல்லாஹுத்தஆலா தான் மட்டும் தனித்து இருந்த போது தான் அறியப்பட வேண்டும் என்று தேட்டம் கொண்டு தன் பேரொளியில் இருந்து ஒரு ஒளியை வெளிப்படுத்தினான்.

அந்தப் பேரொளிக்கு நூரே கரீம் முஹம்மது ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்று பெயரிட்டான்.

பேரொளி என்பது தானும் வெளிப்பட்டு தான் அல்லாத மற்றவர்களையும் வெளிப்படுத்தி காட்டுவதாகும்.அந்தப் பேரொளியில் இருந்து பல ஒளிகள் வெளியாகி இருக்கிறது.

உதாரணமாக மலக்குமார்கள் சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் இன்னும் அண்ட சராசரங்கள் மற்றும் அதில் உள்ளவைகளையும் அந்த நூரே முஹம்மத் ரசூலே கரீம் என்னும் பேரொளியிலிருந்து படைத்தான். படைத்துக் கொண்டும் இருக்கின்றான். இன்னும் படைப்பான்.

كنت كنزا مخفيا فاحببته ان اعرف وخلقت الخلق

நான் மறைந்த பொக்கிஷமாக இருந்தேன் நான் அறியப்பட வேண்டும் என விரும்பி படைப்பை படைத்தேன் என அல்லாஹுத்தஆலா கூறுகிறான்

அல்லாஹுதஆலா தன்னுடைய நூரில் இருந்து நேரடியாக படைக்கப்பட்ட முதல் படைப்பும் ஒரே படைப்பும் நூரே முஹம்மத் ரசூல் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மட்டும் தான் மற்ற படைப்புகள் எல்லாம் அந்த நூர் என்னும் நூரில் இருந்தே படைக்கப்பட்டன.

மற்ற படைப்புகள் படைக்கப்படுவதற்கு காரணமாக இருந்த நூரே முஹம்மத் அவர்களைப் பற்றி அல்லாஹ் ஹதீஸே குத்ஸியில் கூறியிருக்கிறான்

"நபியே உண்மை படைத்திடா விட்டால், இந்த வானத்தையும் இன்னும் நான் எனது ருபூபிய்யத்தை இரட்சிப்பு தன்மையையும் வெளிப்படுத்தி இருக்க மாட்டேன்.

இவ்வாறு இறைவன் கூறும்போதும் காலம் இருந்திருக்க வேண்டும். காரணம் காலமாக அவனே இருக்கிறான்.

"ஆதமுடைய மகன் காலத்தைத் திட்டுகிறான். நானே காலமாக இருக்கிறேன். என்னுடைய கைகளில் இரவும் பகலும் உள்ளது'. அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரி

பேரண்டத்தின் நேரம் (காலம்) ஆரம்பித்த கணம், பிக்பாங் பெருவெடிப்புக் கணம்தான். ஆனால், அந்த வெடிப்பும் வேறு பெரிய அண்டத்தில் நடந்தது என்றால், நேரம் (காலம்) முன்னரே ஆரம்பித்திருக்க வேண்டும் என்பதை இப்போதுதான் விஞ்ஞானம் கண்டுபிடித்திருக்கிறது.

## வெளிப்படும் இரகசியங்கள் 23

( கோபத்தைப் பற்றி உளவியல் உண்மை )




கோபம் என்பது யாருக்கும் அது தனியாக வருகின்ற உணர்வு அல்ல. ஒரு கோபம் இன்னொன்றை, இன்னொன்று மற்றொன்றை, என அது ஒரு சங்கிலித் தொடர் போல உருவாகிறது. அமைதியான குளத்தில் கல் எறிவது போல ஏற்படும் அலைகள் போன்றது கோபம். ஒருமுறை கல் எறிவதுடன் நிறுத்திக் கொண்டால் அதுவாகவே அடங்கிவிடும். திரும்பத் திரும்ப கல் எறிந்தால் அடங்கவே அடங்காது.

எனவே கோபப்படும் வகையில், ஒரு நிகழ்வு நடந்த பின்பு திரும்பவும் அதையே நினைக்காதீர்கள். நினைக்க நினைக்க கோபம் தனக்கான நியாயத்தை கற்பித்துக் கொண்டு மேலும் அது தன்னை வளர்கவே செய்யும். அப்படியும் அந்த நிகழ்வை மறக்க முடியவில்லையா?

உடனே கிளம்புங்கள் உல்லாச சுற்றுலாவுக்கு. ஆனால், இந்த சுற்றுலாவுக்கு பைசா செலவு கிடையாது. பஸ் பிடிக்கவும் தேவையில்லை. இது மனவெளியில் மேற்கொள்ளப்படும் பயணம். (Mental tour) ரெடியா ?

இளமையில் நீங்கள் செய்த குறும்புத்தனங்கள், முட்டாள் தனமாக நீங்கள் செய்த நகைச்சுவைகள், உங்கள் குழந்தையின் முதல் முத்தமோ, உங்களின் சந்தோச தருணங்களையோ அப்போது நினைத்துக் கொள்ளுங்கள். அல்லது_

கோபம் வருவதை தடுக்க ஒரு செய்முறை. கண்ணாடி முன்பு நின்று கோபப்படுங்கள். உங்கள் முக பாவனைகளை பாருங்கள் பயந்து பதறி விடுவீர்கள். காரணம் முகக் கண்ணாடி காட்டியது உங்களை அல்ல.

கோபம் ஷைத்தானின் தூண்டுதலால் வரக்கூடியது’ என்று நபிகளார் தெரிவித்துள்ளதாக அபூதாவூத் நூலிலே அத்தியா அஸ் ஸஅதி (ரலி) அவர்கள் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்கள்:

“கோபம் ஷைத்தானியப் பாதிப்பின் விளைவாகும். ஷைத்தான் நெருப்பால் படைக்கப்பட்டு இருக்கின்றான். நெருப்பு நீரால் மட்டுமே அணைகின்றது. எனவே, உங்களில் ஒருவருக்கு கோபம் வந்துவிட்டால் அவர் ‘ஒளூ’ (அங்கசுத்தி) செய்துகொள்ளட்டும்”.

கோபம் நடந்த இடத்தில் இருந்து உடனே கிளம்பி விடுங்கள். ஆனால், நண்பருடன் அல்ல, தனியாக. ஏனெனில் உடன் வருபவர் உங்களுக்கு வக்காலத்து வாங்கி உங்கள் கோபத்துக்கு எண்ணை வார்க்கலாம். அதனினும் மீறி கோபத்தை கட்டுப்படுத்த முடியவில்லையா? ஜோராாக ஒரு நடை பயிற்சி மேற்கொள்ளலாம். மற்றும் தண்டால் எடுப்பது, பளு தூக்குவது, போன்ற உடற்பயிற்சிகளை மேற்கொள்ளலாம்.

உங்களுக்கு பிடித்தமான விளையாட்டுக்களை விளையாடலாம். இதுபோன்ற சமயங்களில் கோபத்தின் காரணமாக வெளியேறும் மன சோர்வுக்கான ஹார்மோன்கள் குறைந்து, மகிழ்ச்சிக்கான என்டோர் பின்கள் சுரக்கத் தொடங்கும். அதோடு கோபத்திற்கு பதிலடியான உங்கள் செயல்களை தாமதப்படுத்துங்கள்.

“உங்களில் ஒருவருக்கு நின்று கொண்டிருக்கும்போது கோபம் வந்தால் அவர் உட்கார்ந்து கொள்ளட்டும். இப்படி செய்து கோபம் மறைந்து விட்டால் சரி, இல்லாவிட்டால் அவர் படுத்துக்கொள்ளட்டும்” அபூதர் (ரலி) - மிஷ்காத்

கோப உணர்வை காட்டத் துடிப்பதில் நீங்கள் காட்டும் ஒரு நிமிட தாமதம் கூட உங்கள் வாழ்க்கையின் போக்கையே மாற்றக்கூடும். இதை நிரூபிக்க பெரியதாக அறிவியல் ஆய்வுகள் ஏதும் தேவையில்லை. அடுத்த முறை யார் மீதும் உங்களுக்கு கடும் கோபம் ஏற்படுகையில் உடனடியாக அவரை மனதுக்குள் திட்டுங்கள். ஒரு நிமிடம் உங்களை நீங்களே ஆசுவாசப்படுத்திக் கொண்டு, முடிந்தால்.. மனவெளி பயணம் போய்விட்டு அவரை அழைத்து திட்டுங்கள். கோபம் பாதியாக குறைந்திருப்பதை நீங்களே உணர்வீர்கள். அதோடு

எதிராளியின் மன நிலையில் நின்று யோசியுங்கள். சாமானியர்களும் மகான்கள் ஆகும் வாய்ப்பு இது. அடிப்படை மனித பண்பு, மனித நேயம் இது. ஒவ்வொரு முறையும் கோபப்படும் போது-எதிராளியின் இடத்தில் நின்று சிந்திக்கும் போது-ஒன்று அவரது செய்கையின் நியாயம் புரியும். அல்லது நீங்களும் அதுபோல நடந்து கொண்ட சந்தர்ப்பங்கள் நினைவுக்கு வரும். இதனால் உங்கள் கோபமும் காணாமல் போகும்.

அல்லது எதிராளியின் தவறு பிடிபடும். மன்னிப்பு எதிராளிக்கு மட்டுமல்ல. உங்களுக்கே கூட அது ஓர் அருமருந்து. எனவே உங்களை கோபப்படுத்தியவர்களை மன்னியுங்கள்!!

‘ஒருவர் தனக்கு ஏற்படும் கோபத்தை தடுத்துக்கொண்டால் அல்லாஹ் அவனது மறுமைநாளின் வேதனையை அகற்றிவிடுவான்’ என்று நபிகளார் குறிப்பிட்டுள்ளார்கள். அனஸ் (ரலி) மிஷ்காத்.

வெளிப்படும் இரகசியங்கள் 24

( சுன்னத்தின் உன்னதம் )



"ஜென்" என்றால் என்ன என்பதைப் பற்றி அறிய ஆவலுடன் ஜென் தத்துவப் புத்தகம் படித்துக் கொண்டிருந்தேன்.

ஸென் மனிதர் ஸென்னில் நடக்கிறார், ஸென்னில் உட்காருகிறார். அவர் பேசினாலும் அல்லது செயல் புரிந்தாலும் அமைதியாய் இருந்தாலும் அல்லது செயலற்றிருந்தாலும், அவரது உடல் எப்போதும் சமாதானமாய் இருக்கிறது.

தன் உயிரை எடுக்கும் வாளை நேராக நோக்கும் போதும் ஸென் அவர் புன்னகைக்கிறார். மரணத் தருவாயிலும் அவர் தன் நடுநிலை பேணுகிறார்.

"ஸென் மனிதர் ஸென்னில் நடக்கிறார், ஸென்னில் உட்காருகிறார்" என்னும் வாசகம் எனக்குப் பிடித்தது. அதற்கான எளிய காரணம் தியானம் என்கிறர் ஓஷோ.

தியானம் என்பது உங்கள் வாழ்வின் ஒரு பகுதியாக மட்டும் இருக்க முடியாது. உங்கள் வாழ்வில் ஒரு பாகத்தை மட்டும் தியான மயமாக்க உங்களால் முடியாது.

ஒரு மணி நேரம் தியானத் தன்மையோடும் மீதி 23 மணி நேரம் தியானத்தன்மை இல்லாமலும் இருப்பது சாத்தியமில்லை. அது முற்றிலும் அசாத்தியமாகும். அப்படி நீங்கள் செய்கிறீர்கள் என்றால் உங்கள் தியானம் பொய்யானது என்றே பொருள்.

தியானம் ஒன்றே 24 மணி நேர காரியமாக இருக்கமுடியும். அல்லது அது இருக்கவே முடியாது. அது மூச்சு விடுவதைப் போன்றது ஒரு மணி நேரம் சுவாசித்துவிட்டு மற்ற 23 மணி நேரம் அதை ஒதுக்கி வைக்க உங்களால் இயலாது. அப்படிச் செய்தால் நீங்கள் இறந்து போவீர்கள்

நீங்கள் தொடர்ச்சியாக சுவாசித்தபடியே இருந்தாக வேண்டும். தூங்கும் போதும், ஆழ்ந்த மயக்க (கோமா) நிலையிலும் கூட நீங்கள் தொடர்ச்சி யாக சுவாசித்தபடியே இருந்தாக வேண்டும்.

தியானம் உங்கள் ஆன்மாவின் சுவாசம் ஆக இருக்கிறது. உடம்புக்கு சுவாசம் எப்படி உயிராக இருக்கிறதோ அப்படியே ஆன்மாவுக்கு தியானம் உயிராக இருக்கிறது.

தியானத்தை அறிந்திராத மக்கள் ஆன்மிக ரீதியாக இறந்தவர்கள் ஆவார்கள்.

....இப்படியே ஜென் தத்துவம் பேசிக் கொண்டேயிருந்தது. அதன் முனைப்பு எனக்கு நபிகளார்களின் சுன்னத்தை ( நடைமுறை ) எனக்கு ஞாபகம் மூட்டியது.

ஜின்களையும், மனிதர்களையும் (எனக்கு வழிப்பட்டு) என்னை வணங்குவதற்கன்றி (வேறெதற்காகவும்) நான் படைக்க வில்லை.(குர்ஆன் : 51:56) குர்ஆனும் இறைவனை சதா வணங்குவதையே முக்கியமாக அறிவுறுத்துகிறது. எப்படி 24 மணி நேரமும் இறைவனை வணங்க வேண்டுமா என்றால் ஆம் 24 மணி நேரமும் இறைவனை வணங்க வேண்டும்.

இதற்கு மிக எளிதான வழி இறைவன் ஒருவன் அவனின் திருத்தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் என்று ஏற்றுக்கொள்ளும் ஒவ்வொரு முஸ்லிமும் கட்டாயம் கடைபிடிக்க வேண்டிய கடமைகள் ஈமான், தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் ஆகிய ஐந்தும். அவைகளுக்கு பர்லு என்று பெயர்.

நபிகளார் உலக மக்கள் உண்மையாய் உயரிய நெறியில் துயரின்றி தூய்மையாய் வாய்மையை பேணி வாழ வழி காட்டினார்கள். நபி (ஸல்) அவர்கள் செய்ததுபோல் ஒவ்வொரு செயலையும் செவ்வனே செய்வது சுன்னத். இதுவே வணக்கமாகும்.

சுன்னத்தைப் பற்றி பிடித்து உன்னதமாய் வாழ உரைக்கிறது உயர் குர்ஆனின் 3-31 -ஆவது வசனம். "" நபியே, நீங்கள் சொல்லுங்கள். நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள், அல்லாஹ் உங்களை நேசிப்பான். இன்னும் அல்லாஹ் உங்களை மன்னிப்பான்''.

சுன்னத்தை எண்ண சுத்தியோடு செய்தால் அல்லாஹ்வின் நேசத்தைப் பெறுவதோடு, அறிந்தோ, அறியாமலோ, தெரிந்தோ, தெரியாமலோ, மறந்தோ செய்யும் தவறுகளுக்கும் அல்லாஹ்வின் மன்னிப்பு கிடைக்கும். அதனால் நபி தோழர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நடைமுறைகளைக் கவனித்து அதன்படி ஒழுகினர்.

ஒருமுறை பெருமானார் (ஸல்) அவர்கள் குழம்பில் இருந்த சுரைக்காய்த் துண்டுகளைத் தேடி எடுத்து சாப்பிட்டதைப் பார்த்ததும் அன்றிலிருந்து நபி தோழர்கள் சுரைக்காயை விரும்பி சாப்பிட்டதாக அனஸ் (ரலி) அவர்கள் அறிவிப்பது புகாரி, முஸ்லிம், முஅத்தா,

சுரைக்காய் நீர்த் தாவரம். பாலைவனப் பகுதியில் நீர்த்தாவரங்கள் உடலுக்கு உகந்தது. நபி தோழர்கள் நபி வழி நடந்து சுன்னத்தைக் கடைப்பிடித்ததால் எண்ணற்ற பயன்களையும் பெற்றனர்.

செங்கிஸ்கானின் வழி தோன்றல்கள் பலரும் இஸ்லாமின்பால் வந்தனர். தைமூர், பாபர் என இந்த லிஸ்ட் பெரியது என்பதும், மிகப்பெரிய நிலப்பரப்புகளை அவர்கள் ஆண்டனர் என்பதும் நாம் எல்லாம் நன்கறிந்த வரலாறு.

தைமூர் பரம்பரை தார்த்தாரிய சமூக தலைவர் தைமூர் சமர்கந்த் ஆட்சியைக் கைப்பற்றும் முதல் முயற்சியில் தோல்வியுற்று ஒரு கிழவியின் குடிசையில் ஒளிந்தார்.

அந்த குடிசையில் வாழ்ந்த கிழவி தைமூருக்கு ஒரு தட்டில் கூழ் கொடுத்தாள். பசியில் பரிதவித்த தைமூர் தடாலடியாய் தட்டின் நடுவில் கையை வைத்தார், சூடு தாங்காமல் அலறி கையை உதறினார்.

இதைப் பார்த்து பதறாமல் பாட்டி சொன்னாள், "தட்டின் நடுவில் கை வைத்தால் சுடாமல் சுகமாகவா இருக்கும்? ஓரத்திலிருந்து சாப்பிட வேண்டும் என்பது கூட தெரியாதா ?"

கூழைக் குடித்தபின் தைமூர் அமைதியாய் அமர்ந்து அல்லாஹ்விற்கு நன்றி நவின்று ஆற அமர யோசித்தார்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சாப்பாட்டிற்குள் விரல் முழுவதையும் நுழைக்கமாட்டார்கள் என்ற நினைவு வந்தது. பசியில் பத்தும் பறந்து போகும் என்றபடி எத்தனை சுன்னத்துகளைப் பின்பற்றாமல் விட்டுவிட்டோம் என்ற எண்ணமும் எழுந்தது.

"அல்லாஹ்வைப் புகழ்ந்து துதித்து உணவு உண்ண வேண்டும்'' அறிவிப்பவர்- ஹுதைபா (ரலி) நூல்- முஸ்லிம், அபூதாவூத்.

"உணவின் நடுவில் அபிவிருத்தி (பரக்கத்) இறங்குகிறது. எனவே, உணவின் இரு ஓரங்களில் கீழ்ப்பகுதியிலிருந்து உண்ணுங்கள், உணவின் நடுப்பகுதிலிருந்து உண்ணாதீர்கள்'' அறிவிப்பவர்- இப்னு அப்பாஸ் (ரலி) நூல்- அபூதாவூத், நஸஈ.திர்மிதி , இப்னுமாஜா

இந்த நபி மொழிகள் சாப்பாட்டிற்கு மட்டுமல்ல சகல காரியங்களுக்கும் பொருந்தும் என்று தைமூர் எண்ணினார்.

அட ,சண்டித்தனமாக சட்டென்று அரண்மனைக்குள் அடாவடியாக புகுந்து ஆட்சியைக் கைப்பற்ற முடியாது என்பதை உணர்ந்த தைமூர் கைக்கருகில் உள்ள கீழ்ப்புறத்திலிருந்து சாப்பிட துவங்குவது போல எந்த ஓரத்திலிருந்து எந்த பகுதியைத் தாக்கத் துவங்கினால் எளிதாக வெற்றி கிட்டும் என்று திட்டமிட்டு சமர்கந்தைப் பிடித்து ஆட்சியில் அமர்ந்து, பின்னர் தோல்வி காணாது 35 ஆண்டுகளில் 27 நாடுகளை பரக்கத்தாக வென்றார்.

பாரசீக நாட்டின் பேரரசரான தைமூர் ஒரு பொழுதும் தன்னைப் பேரரசர் என்று சொன்னதே இல்லை. பெருமானார் நபி (ஸல்) அவர்கள் வழியில் அல்லாஹ்வின் அடிமையாகிய தைமூர் கூறுவதாக அனைத்து ஆவணங்களிலும், கட்டளைகளிலும் கடிதங்களிலும் எழுதினார் தைமூர்.

ஜென் குறிப்பிடும் தியானம் உங்கள் ஆன்மாவின் சுவாசம் ஆக இருக்கிறது. உடம்புக்கு சுவாசம் எப்படி உயிராக இருக்கிறதோ அப்படியே ஆன்மாவுக்கு தியானம் உயிராக இருக்கிறது.

ஜென்னுக்கு தியானம் எப்படியோ அப்படியே இஸ்லாத்திற்கு நபிகளாரின் சுன்னத் முக்கியமாகிறது.

இஸ்லாத்தின் ஆணி வேராக நபிகளாரின் நடைமுறை என்னும் மிக எளிதான சுன்னத்தை இஸ்லாம் பேணச் சொல்கிறது.

நாமும் நபி வழியை நன்கறிந்து சுன்னத்தின் உன்னதத்தை உணர்ந்து நடந்து உயர்வு பெறுவோம்.

## வெளிப்படும் இரகசியங்கள் 25

( அமேசான் காட்டில் 40 நாட்கள் காணாமல் போன குழந்தைகள் ... குழந்தைகளைக் காப்பாற்றிய பாட்டியின் அறிவுரைகள் ! )

கொலம்பியா நாட்டில் கடந்த 2023 மே 1-ம் தேதி சிறிய ரக விமானத்தில் ஒரு தாய் தன் நான்கு குழந்தைகளுடன் பயணித்திருக்கிறாள். அந்தப் பெண்ணின் பெயர் மக்டலினா மூகுடியு வலன்சியா (Magdalena Mucutui Valencia) அந்த விமானத்தில் பைலட் உடன் ஒரு ஆணும் பயணித்துள்ளார்.

அந்த விமான விபத்துக்குள்ளானது. இதில் 13 வயதுச் சிறுமி லெஸ்லி தன் மூன்று சகோதரர்களுடன் அடர்ந்த காட்டில் சிக்கிக்கொண்டாள். முதல் சிறுவனின் வயது 9, அடுத்தவனின் வயது 4, கடைசி பையன் பிறந்து 11 மாதமே ஆகிறது. இவர்கள் அடர்ந்த மற்றும் பயங்கரமான விலங்குகள் வாழும் காட்டில் 40 நாள்கள் தனியாகத் தாக்குப் பிடித்துள்ளனர்!

அமேசான் காடுதான் உலகில் மிகப் பெரியது. இந்தக் காடு தென் அமெரிக்கக் கண்டத்தில் உள்ளது. இந்தக் காடு 67,00,000 சதுர கிலோமீட்டர் பரப்பளவு கொண்டது. இதைச் சுற்றி எட்டு நாடுகள் உள்ளன! இந்தக் காடு மொத்த இந்தியப் பரப்பளவை விட இரண்டு மடங்கு பெரியது! இது அதிகம் மழை பொழியும் காடு. ஜாக்குவார் என்ற சிறுத்தைகள், கொரில்லா மற்றும் அனகோண்டா போன்ற கொடிய உயிரினங்கள் சுதந்திரமாகச் சுற்றித்திரியும் காடு இது.

பயணத்தில் ஏற்பட்ட விபத்தில் இவர்கள் இருவரும் உடனடியாக உயிரிழந்தனர். படுகாயமடைந்த நிலையில், குழந்தைகளின் தாய் நான்கு நாட்கள் உயிருக்குப் போராடிய நிலையில் இறந்துள்ளார். மீட்புக்குழு நான்கு நாள்கள் கழித்தே இவர்களின் உடலைக் கைப்பற்றியுள்ளனர். அப்போது விமானம் தலைகீழாக ஒரு மரத்தில் தொங்கியபடி இருந்துள்ளது.

மீட்புக்குழுவினர் குழந்தைகள் உயிருடன் இருப்பதற்கான தடயங்களைக் கண்டறிந்தனர். பொதுமக்கள், பழங்குடி மக்களுடன் ராணுவ வீரர்களும் குழந்தைகளை அந்த அடர்ந்த காட்டில் தேட ஆரம்பித்தனர்.

இவர்களுடன் ராணுவத்தில் பயிற்சி பெற்ற நாய்களும் தேடும் படலத்தில் இணைந்துள்ளன. அதில் ஒரு நாயின் பெயர் வில்சன். தேடும் பணியில் இந்த நாய் காணாமல் போகிறது.

இந்தக் குழு 40 நாள்கள் ஆகியும் சிறுவர்களை மீட்க முடியவில்லை. இந்தக் குழந்தைகள் சிக்கிக்கொண்ட இடம் யாரும் இதுவரை நுழையாத அடர்ந்த காடு... அதனால் தேடும் பணி சவால் நிறைந்ததாகவே இருந்துள்ளது.

இந்தக் குழந்தைகள் யார் ஆதரவும் இன்றி 40 நாள்கள் அந்த அடர்ந்த காட்டில் உயிர் வாழ்ந்துள்ளனர். இவர்கள் காடுகளில் வாழும் பழங்குடி மக்களைச் சார்ந்தவர்கள் என்பது முக்கியமான தகவல்.

நாம் உயிர் வாழ அவசியத்தேவை சுவாசிக்கக் காற்று, குடிக்க நீர், சாப்பிட உணவு, வசிக்கப் பாதுகாப்பான வீடு ஆகியன. அந்த அடர்ந்த காட்டில் சுவாசிக்கச் சுத்தமான காற்றுக்குப் பஞ்சமில்லை.

ஆனால், அவ்வளவு எளிதாகக் குடிக்கத் தண்ணீர் அங்கு கிடைக்க வாய்ப்பில்லை. அந்தச் சிறுவர்கள் காட்டில் இயற்கையாக அமைந்துள்ள குளம் மற்றும் ஆற்றைக் கண்டுபிடித்துதான் தாகத்தைத் தீரத்துக்கொள்ள வேண்டும்.

பாவம் 9 வயது பையன் நான்கு வயது சிறுவனைக் கவனித்துக் கொண்டான் என வைத்துக்கொள்வோம். அடுத்து 13 வயதுச் சிறுமி அந்தக் கைக்குழந்தையை எடுத்துக்கொண்டே தண்ணீர் இருக்கும் இடத்துக்கு நடந்தே தேடி செல்ல வேண்டும்.

மேலும், இந்தக் காட்டை மழைக் காடு (rain forest) என்றும் அழைப்பார்கள். இங்கு மழை அடிக்கடி பொழிந்தால் குளம் மற்றும் ஆற்றில் கலங்கிய தண்ணீர்தான் இருக்கும். அதாவது, கிட்டத்தட்டப் பால் காபி நிறத்தில்தான் தண்ணீர் இருக்கும். இந்தத் தண்ணீரை அப்படியே குடிக்க முடியாது. அந்தத் தண்ணீரைக் குடிநீராக்க வேண்டும்.

அதற்காக இந்த நாட்டில் உள்ள பழங்குடி மக்கள் சில வகையான இலைகளைப் பயன்படுத்துகின்றனர். இந்த இலையின் சாற்றைக் கலந்தால் தண்ணீரைத் தெளிய வைத்து விடுமாம். பின்னர், இந்த தண்ணீரைக் குடிக்கலாமாம். இத்தகைய பண்டைய முறைகளை அந்தச் சிறுமி தன் பாட்டியிடமிருந்து கற்றுத் தேர்ந்தவளாம்.

தேத்தான் மரத்தை Strychnos potatorum என ஆங்கிலத்தில் அழைக்கின்றனர். இந்த மரத்தில் விளையும் பழத்தின் கொட்டையைத் தண்ணீர் உள்ள பானையில் தேய்க்கின்றனர். கொட்டையின் தூள் தண்ணீரில் கலந்த சில நிமிடங்களில் கலங்கிய தண்ணீர் தெளிந்துவிடும். பின்னர், இந்தக் நீரைக் குடிக்கலாம். தமிழகத்தில் தஞ்சாவூர் மற்றும் ராமநாதபுரத்தில் இந்தப் பழக்கம் இன்றும் உள்ளது

இந்தக் கொட்டை கலந்த தண்ணீர் வயிற்றுப்போக்கு மற்றும் சிறுநீரக நோய்க்குச் சிறந்த மருந்து எனவும் கருதப்படுகிறது !

பழங்குடி மக்கள் தம் பெற்றோர்களை தங்களுடன் வைத்து பராமரித்ததால் அவர்களிடமிருந்து நல்ல பல விஷயங்களை குழந்தைகள் கற்றிருக்கிறாள்.

ஆனால் நாம் ஈன்றெடுத்த விலைமதிப்பில்லாத நம் பெற்றோரை எங்கேயோ கொண்டு போய் தங்க வைப்பது சரியல்ல. அது பெரியவர்களுக்கு செய்யும் வன்கொடுமையாகும். அவர்களை உடல் அளவிலும் சரி, மனதளவிலும் கொடுமைக்கு உள்ளாக்கக் கூடாது.முதியோருக்கு நல்லது செய்யாவிட்டாலும், பரவாயில்லை தீங்கு ஏற்படுத்தாமல் இருக்க வேண்டும்.

முதியோரை நல்ல நிலையில் வைத்து, வீட்டுக்கு வருவோரிடத்தில் அறிமுகப்படுத்தி, அவர்களது பெருமையை சொல்ல வேண்டும். அதற்கான சூழலை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். இது ஒவ்வொருவரின் கடமை.

(நபியே!) உங்களது இறைவன் தன்னைத் தவிர (மற்றெவரையும்) வணங்கக்கூடாதென்று (கட்டளையிட்டி ருப்பதுடன்) தாய் தந்தைக்கு நன்றி செய்யும்படியாகவும் கட்டளை யிட்டிருக்கிறான். உங்களிடம்

இருக்கும் அவர்களில் ஒருவரோ அல்லது இருவருமோ முதுமையை அடைந்து விட்டபோதிலும் அவர்களை வெருட்டவும் வேண்டாம்; அவர்களை (நிந்தனையாகச்) "சீ" என்றும் சொல்ல வேண்டாம். அவர்களிடம் (எதைக் கூறியபோதிலும்) மிக்க மரியாதையாக(வும் அன்பாகவுமே) பேசுங்கள். (குர்ஆன் : 17:23)

தமிழகத்தில் இருக்கும் இத்தகைய பண்டைய நுட்பங்களைப் போல் கொலம்பியாவிலும் தாவரங்களை வைத்து தண்ணீரைச் சுத்தப்படுத்தும் நுட்பம் இருக்கிறது. இந்த நுட்பங்களை லெஸ்லி கற்றுத் தேர்ந்ததால் இவர்கள் 40 நாள்கள் காட்டில் தாக்குப்பிடிக்க முடிந்துள்ளது.

தண்ணீர் குடிக்காமல் ஒருவரால் மூன்று நாள்களுக்கு மேல் உயிர் வாழ முடியாது. ஆனால், இவர்கள் 40 நாட்கள் காட்டில் தாக்குப்பிடித்துள்ளனர். தேவையான அளவு தண்ணீர் அருந்தி உயிரைத் தக்கவைக்க அவர்களின் பாரம்பர்ய அறிவும் பாட்டி கொடுத்த தன்னம்பிக்கையும் உதவியாக இருந்திருக்கிறது என்றால் மிகையாகாது.

உயிர் வாழ அடுத்து முக்கியமானது உணவு. நம் ஊரில் கோடையில் நிறைய மாம்பழம் கிடைக்கின்றன. இது மாதிரி அந்தக் காட்டில் மே மாதம் பழங்கள் நிறைய கிடைக்குமாம். அதனில் முக்கியமானது நட்சத்திர பழங்கள். இவை குற்றாலத்தில் அதிகம் கிடைக்கின்றன.

நீர்ச் சத்து அதிகம் உள்ள சுவையான பழமிது. இந்தப் பழங்கள் மஞ்சள் மற்றும் ஆரஞ்சு நிறத்தில் இருக்கும். இந்த வகைப் பழங்களே இவர்கள் சிக்கியுள்ள காட்டுப்பகுதியில் நிறைந்திருந்துள்ளன. இவையே இவர்களின் பசியாற்றியுள்ளது. மேலும் அங்கு கிடைத்த கிழங்குகளை உண்டும் இந்தக் குழந்தைகள் உயிர் வாழ்ந்துள்ளனர்.

இத்துடன் இத்தொடர் நிறைவு பெறுகிறது.

## காலத்தின் சுவடுகள் 1

( காலத் தடயங்கள் )




திருக்குர்ஆனின் 103 வது அத்தியாயம் சூராத்துல் அல்அஸ்ரி (காலம்) எடுத்த எடுப்பிலேயே " காலத்தின் மீது சத்தியமாக. நிச்சயமாக மனிதன் நஷ்டத்தில் இருக்கின்றான்"(குர்ஆன் : 103:1, 2) என்கிறது.

காலம் பற்றி கூறும் போது மனிதன் நஷ்டத்தில் இருப்பதற்கு என்ன காரணம் ?

கடந்துவந்த மனித வரலாற்றில், எத்தனையோ நாகரீகங்கள் தோன்றியிருக்கின்றன. எத்தனையோ வல்லரசுகள் தோன்றி இருக்கின்றன. நாகரீகத்தின் உச்சாணிக் கொம்பில், எண்ணிக்கையில் அதிகமான

நாடுகள் இருந்திருக்கின்றன. கலாசாரங்கள், சமுதாயங்கள், ஆட்சிகள், கூட்டாட்சிகளெனப் பல்லாயிரக்கணக்கில் இதுவரை காலமும் இருந்திருக்கின்றன. அவை இருந்ததை வரலாறு பதிவும் செய்திருக்கிறது.

ஆனால், அவையெல்லாம் இப்போ எங்கேயென்று தெரியாமல் அழிந்துவிட்டன. எகிப்தின் பிரமிட்டாகவோ, ரோமின் கொலோசியமாகவோ, சீனாவின் பெருஞ்சுவராகவோ, பெருவின் மச்சுபிச்சுவாகவோ, அங்கொன்றும், இங்கொன்றுமாக மிச்சமாக விடப்பட்ட ஓரிரு அடையாளங்கள் பூமியில் காட்சி தந்தாலும், அவற்றுடன் சேர்ந்து கட்டப்பட்ட கட்டடங்கள் எல்லாமே மண்ணோடு மண்ணாக ஒன்றுமே இல்லாமல் அழிந்துவிட்டன.

உதாரணமாகப் பிரமிட்டுகள் கட்டப்பட்டபோது, எகிப்தில் மாபெரும் சாம்ராஜ்யமே இருந்திருக்கிறது. 'பாரோ' (Pharoah) மன்னர்களின் வாழிடம் முதல், மக்களின் வாழிடம் வரை எத்தனையோ கட்டடங்களும், அரண்மனைகளும் இருந்திருக்கின்றன. ஆனால் அவற்றில் எஞ்சியிருப்பவை விரல் விட்டு எண்ணிவிடக்கூடிய பிரமிட்டுகளும், சில ஆலயங்களும் மட்டும்தான். ஏனைய அனைத்துமே மறைந்துவிட்டன. எகிப்தும், ரோமும், சீனாவும் சில உதாரணங்கள்தான். அனைத்து நாடுகளிலும் அதன் எச்சங்கள் இருக்கின்றன.

ஆனால் உலகம் முழுவதும் பார்த்தால், சரித்திரங்களைச் சொல்லிய எத்தனையோ அடையாளங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய்விட்டன. தமிழ்நாட்டை எடுத்துக்கொண்டால்,ராஜராஜசோழன் கட்டிய தஞ்சைப் பெருங்கோவில் மட்டுமிருக்க, அவன் வாழ்ந்த அரண்மனையிலிருந்து, கோட்டை கொத்தளங்கள் எவையும் முழுமையாக எங்குமில்லை.

இவையெல்லாம் நம்முன்னே இல்லாமல் மண்ணோடு மண்ணாகி மறைந்து போனதற்கான முக்கியமான காரணம், 'காலம்'. கடந்து செல்லும் 'காலம்' மெல்லமெல்ல, நடந்து வந்த சுவடுகளை அழித்துச் செல்லும் கடல்லை போன்றது. எதையுமே அது முழுமையாக விட்டு வைப்பதில்லை.

சில நூறு ஆண்டுகளிலேயே இருப்பவற்றைச் சுத்தமாய் அழித்துவிடும் தன்மையுடைய காலம், ஆயிரக்கணக்கான ஆண்டுகளென்றால், அடையாளங்களை அடியோடு தெரியாமலாக்கிவிடும். நான் மேலே சொன்ன பிரமிட்டுகளும், கொலோசியமும், சீனப் பெருஞ் சுவரும்கூட, அதிகப்படியாக ஆறாயிரம் ஆண்டுகளுக்கு உட்பட்டவைதான்.

பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தவையென்று, பூமியின் எந்த மூலையிலும், எதுவும் முழுமையானதாக மிச்சமில்லை. அப்படி அவற்றைத் தேடவேண்டுமென்றால், பூமிக்கடியில் புதைபொருள் ஆராய்ச்சிமூலம் தோண்டியெடுத்தால்தான் உண்டு. அதுவும் உடைந்து சிதறிய சிதிலங்களாகத்தான் கிடைக்கும்.

பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த கட்டடங்கள் மட்டுமில்லை. அதற்கு முன்னர் இருந்த மொழிகள் கூடப் பூமியில் இப்போதில்லை. பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த மனிதனின் மொழி, இனம், கலாச்சாரம், அடையாளம், வாழ்விடம் அனைத்துமே எப்படி இருந்தன என்று, ஒரு கோட்பாட்டு ரீதியிலான கற்பனையாகவே நம்மால் ஒரு முடிவுக்கு வர முடியும்.

இதே பத்தாயிரம் ஆண்டுகளை, இருபதாயிரம் ஆண்டுகளாகவோ, முப்பதாயிரம் ஆண்டுகளாகவோ எடுத்துக் கொண்டால் நிலைமை இன்னும் சிக்கலாகிவிடும். மனித இனத்தின் வடிவங்களில், தோற்றங்களில் கூட மாற்றங்களைக் கொண்டுவந்துவிடும்.

அதுவே ஒரு இலட்சம் ஆண்டுகளுக்கு முன்னர் என்றால்...? கற்பனை பண்ணிப் பாருங்கள்? ஒரு இலட்சம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த மனிதர்களால், அவர்களுக்குப் பின்னர் வந்த சந்ததியினரான நமக்கு, எதையாவது அடையாளமாக விட்டுச் செல்ல முடிந்ததா? அதற்குச் சாத்தியங்கள்தான் உண்டா? முடியவே முடியாதல்லவா?

وَكَمْ اَهْلَكْنَا قَبْلَهُمْ مِّنْ قَرْنٍ هَلْ تُحِسُّ مِنْهُمْ مِّنْ اَحَدٍ اَوْ تَسْمَعُ لَهُمْ رِكْزًا

இதற்கு முன்னர் எத்தனையோ கூட்டத்தினரை நாம் அழித்திருக்கின்றோம். அவர்களில் ஒருவரையேனும் நீங்கள் காண்கின்றீர்களா? அல்லது அவர்களுடைய சிறிய சப்தத்தையேனும் நீங்கள் கேட்கின்றீர்களா? (குர்ஆன் : 19:98)

காலத்தின் சுவடுகள் கனிவானதாக எப்போதுமே இருந்ததில்லை. அவை ஈவு இரக்கமற்ற கணக்கடூரமானவை.

## காலத்தின் சுவடுகள் 2

(திமிங்கல வேட்டை)




"விஞ்ஞான ஆராய்ச்சிக்காகவேதான் 333 திமிங்கிலங்கள் கொல்லப்பட்டன!" - ஜப்பான் சொல்கிறது

ஜப்பானில் ஒவ்வொரு வருடமும் டிசம்பர் 8 முதல் பிப்ரவரி 28 வரை கோடை ஆராய்ச்சி நடத்துவது வழக்கம். இந்த வேட்டையில் "அண்டார்டிக் கடல் சுற்றுச்சூழல் கட்டமைப்பு மற்றும் இயக்கவியல்" அமைப்பானது உயிர் மாதிரிகளை எடுப்பது வழக்கம்.

இம்முறை ஜப்பானைச் சேர்ந்த ஐந்து கப்பல்கள் திமிங்கில ஆராய்ச்சிக்காக தனது வேட்டையைத் தொடங்கின. வேட்டையைத் தொடங்கிய 83 நாட்களுக்கு பின்னர், முதல் இரண்டு கப்பல்கள் முன்னர் வர, மூன்று கப்பல்கள் பின்னால் அணிவகுத்து ஜப்பானின் ஷிமோனோசேகி துறைமுகத்திற்கு சில நாட்களுக்கு முன்னர் வந்து சேர்ந்தது.

இந்த ஐந்து கப்பல்களிலும் சென்றவர்கள் 333 திமிங்கலங்களை வேட்டையாடி கரைக்குக் கொண்டுவந்தனர். 122 கர்ப்பிணித் திமிங்கிலங்கள் போக 114 திமிங்கிலக் குட்டிகளும் வேட்டையாடப்பட்டு இருந்தன என்பதாக சர்வதேச திமிங்கிலம் ஆணையம், இந்த மாதம் வெளியிட்ட அறிக்கையில் கூறியுள்ளது

மக்கள் இந்தச் செயலை 'கொடுமையான செயல்' என்று விமர்சித்தாலும், ஜப்பானிய ஆய்வாளர்கள் 'விஞ்ஞான ஆராய்ச்சிக்காக' எனவே வாதடுகின்றனர். இந்தியா உட்பட சர்வதேச அளவில் உள்ள அனைத்து விஞ்ஞானிகளும் மக்களுக்கு எதிராக வைக்கும் பொதுவான வாதம்தான் இது.

இந்நிகழ்வைப் பற்றி ஜப்பான் கடல் ஆய்வாளர்கள் " திமிங்கிலங்கள் கொல்லப்படுவது அவசியமானது. திமிங்கலங்களின் வயதினை அதன் உள்காதுகளில் இருந்து மட்டுமே அறிந்து கொள்ள முடியும். இதற்காக திமிங்கிலங்களைக் கொல்வது மட்டுமே சரியான செயல். மிங்கே வகை திமிங்கிலத்தின் இனப்பெருக்கம் மற்றும் ஊட்டச்சத்து சுழற்சி உள்ளிட்ட ஆராய்ச்சிக்காக மட்டுமே வேட்டையாடுகிறோம்.

மேலும் வேட்டையாடப்பட்ட திமிங்கலங்கள் அனைத்தும் வயதில் முதிர்ச்சி அடைந்திருக்கின்றன. அதனால் அவற்றின் இனப்பெருக்கம் மற்றும் எண்ணிக்கையில் எந்த மாற்றமும் நிகழாது" என்று

பதிலளித்திருக்கிறார்கள். இவர்களின் பதில் கடல்வாழ் ஆர்வலர்கள் மத்தியில் கொந்தளிப்பை ஏற்படுத்தியுள்ளது.

வெடி மருந்துகளை திமிங்கலங்களின் உடலில் செலுத்தி வெடிக்கச் செய்து மிகவும் மோசமான வகையில் திமிங்கிலங்கள் கொல்லப்பட்டுகின்றன. ஜப்பான் நெடுங்காலமாக இந்த முறையைத்தான் கையாண்டு வருகிறது. சர்வதேச அளவில் இதற்காக பல கண்டனங்கள் எழுந்தும் ஜப்பான் இந்த முறையில் தொடர்ந்து ஈடுபட்டு வருகிறது.

அவர்கள் காலநிலை மாற்றம் பற்றி புரிந்து கொள்ளவோ, கடலுயிரினங்களின் இனச்சேர்க்கை பற்றி ஆராயவோ செல்வதாக தெரியவில்லை. அறிவியல் ஆராய்ச்சிக்காக இவை கொல்லப்படுகிறது என்று சொல்லப்பட்டாலும், மீன் சந்தைகள் மற்றும் நட்சத்திர விடுதிகளில் திமிங்கலங்களின் கறி விற்பனைக்கு தாராளமாக கிடைக்கிறது.

எனவே திமிங்கிலங்கள் கறிகளுக்காக கொல்லப்படுகின்றன என்பதிலும் உண்மை இருக்கிறது" என கடல்வாழ் உயிரின ஆர்வலர்கள் குற்றம்சாட்டுகின்றனர்.

கடந்த 2014-ம் ஆண்டு திமிங்கில வேட்டை என்ற பெயரில் ஜப்பான் திமிங்கிலங்களை படுகொலை செய்வதை சர்வதேச நீதிமன்றம் கண்டறிந்தது. அதன்பின்னர் ஜப்பான் திமிங்கில வேட்டையில் ஈடுபடக்கூடாது என தீர்ப்பளித்தது. தீர்ப்பு வெளியான ஒரு வருடம் மட்டும் தனது வேட்டையை நிறுத்திக் கொண்ட ஜப்பான் அடுத்த ஆண்டிலிருந்து தனது வேட்டையைத் தொடங்கியது.

ஆஸ்திரேலிய திமிங்கில சரணாலயமானது, திமிங்கலங்கள், டால்பின்கள் மற்றும் சதுப்பு நிலங்களை பாதுகாக்கும் வேலையைச் செய்து வருகிறது. அண்டார்டிக் பகுதிகளிலும் ஆஸ்திரேலியாவின் திமிங்கில பகுதி பரவியுள்ளது. இதற்கு உரிமை கோரிய ஆஸ்திரேலியாவின் வாதத்தை ஜப்பான் ஏற்றுக் கொள்ளவில்லை.

எதையுமே ஏற்றுக் கொள்ளாத ஜப்பான், ஆராய்ச்சி நிகழ்விற்காக அடுத்த 12 ஆண்டுகளில் 4,000 திமிங்கலங்களை வேட்டையாடத் திட்டமிட்டுள்ளது. தற்போது நடந்திருக்கும் வேட்டைக்கு 'சர்வதேச மனிதாபிமான சொஸைட்டி' தனது கண்டனத்தை பதிவு செய்துள்ளது. திமிங்கலத்தை வேட்டையாடுவதில் எந்தவித வலுவான அறிவியல் காரணங்களும் இல்லை என அதன் நிர்வாகத் துணை தலைவர் கிட்டி பிளாக் கூறியிருக்கிறார்.

ஒவ்வொரு ஜீவராசிகளின் அழிவும் பிரபஞ்சத்தில் ஒரு தாக்கத்தை ஏற்படுத்துகிறது .

கியாமத் நாளின் அதாவது உலகம் இறுதி நாளின் அடையாளமாக ஒவ்வொரு ஜீவராசிகளும் அழிக்கப்படும் இதில் முதன் முதலில் அழிக்கப்படும் ஜீவராசி 'வெட்டுக்கிளி ' என்பதாக நபி (ஸல்) கூறினார்கள் .

ஒரு சமயம் தாங்கள் வாழும் பகுதியில் வெட்டுக்கிளியைப் பார்க்கவில்லை என்ற போது அதனை நபி (ஸல்) அவர்கள் தேடச் சொன்னார்கள் . மதீனாவில் எங்கோ ஒரு குக் கிராமத்தில் வெட்டுக்கிளியைக் கண்டதாக நபித்தோழர்கள் தெரிவித்த போதுதான் நபியவர்கள் நிம்மதியடைந்தார்கள்.

உயிரியல் வல்லுநர்கள் தயாரிக்கும் Red list 1400 வருடங்களுக்கு முன்பே நபி (ஸல்) அவர்களுக்கு இறைவன் அறிவித்துக் கொடுத்திருக்கிறான்.

கொஞ்சம் நிதானமாக யோசித்துப் பாருங்கள் வாழ்வியல் சூத்திரம் நமக்கு புரியும். அதாவது எந்த உயிரினமும், மற்றவற்றைச் சாராமல் வாழ முடியாது.

ஒரு காடு ஒரு குளம் அல்லது கடல் என எதை எடுத்துக் கொண்டாலும் எல்லா குழல் மண்டலங்களிலும் உணவுச் சங்கிலி ஒன்று தெரியும் .உணவுக்கான தொடர்பு கிளை விட்டு படரும் போது , அதுவே ஒரு மாய வலை போல் விரியும்.

இறுக்கமாக பின்னப்பட்ட இந்த வலையில் எங்கோ ஓரிடத்தில் ஒரு முடிச்சி அறுந்து போனால் எப்படி வலையின் அமைப்பு குலைந்து போகிறதோ அப்படித்தான் ஒவ்வொரு உயிரினத்தின் அழிவையும் கருத வேண்டும் .

مَا خَلَقْنٰهُمَاۤ اِلَّا بِالْحَـقِّ وَلٰـكِنَّ اَكْثَرَهُمْ لَا يَعْلَمُوْنَ .

"....நிச்சயமாக தக்க காரணத்திற்காகவே அன்றி, இவைகளை நாம் படைக்கவில்லை. எனினும், அவர்களில் பெரும்பாலானவர்கள் இதனை அறிந்துகொள்வதில்லை. (குர்ஆன் : 44:39)

திமிங்கலங்கள், டால்பின்கள் மற்றும் சதுப்பு நிலங்களை பாதுகாக்கும் வேலையைச் செய்து வருகிறது. திமிங்கலங்களை அழித்ததால் சதுப்பு நிலங்களை பாதிக்கும் பெரும் வெள்ளமோ, சுனாமியோ வரலாம். யாரறிவார் ?

" இயற்கையின் பேரழிவுகள் நம்மிடம் எதையோ சொல்கிறது. இயற்கையைப் பாடுபடுத்தினால், அது திருப்பி அடித்தால் நாம் தாங்கமாட்டோம் என்பது மட்டும் காலத்தின் சுவடுகளாக இப்போது நமக்கு புரிந்து இருக்கிறது

## காலத்தின் சுவடுகள் 3

(படைப்பாளன்)




படைப்பாளன் ஒருவன் இல்லாமல் எந்த படைப்பும் இருக்க முடியாது என்பதை நவீன விஞ்ஞானம் கடந்த காலத்தின் சுவடுகளையெல்லாம் அலசி ஆராய்ந்து படைப்பாளன் ஒருவன் உண்டு என்பதை ஒத்துக் கொண்டதுள்ளது

பிரெஞ்சு நாட்டின் மிகப்பெரிய கணித அறிஞரான லாப்லஸ், பிரபஞ்சத்தில் உள்ள என நட்சத்திரங்கள், கிரகங்கள், ஏன், அத்தனை சின்னச் சின்ன எறிகற்களை உன்னதப்படுத்தி விளக்கம் கொடுத்து, 'மெக்கானிக் ஸெலஸ்ட்' என்ற பிரம்மாண்டமான புத்தகத்தை எழுதி வெளியிட்டார்.

சக்கரவர்த்தி நெப்போலியனிடம் அந்தப் புத்தகத்தின் முதற்பதிப்பைக் காட்டியபோது, நெப்போலியன், "மான்ஷியர் லாப்லஸ்! பிரபஞ்சம் முழுவதும் இயங்கும் நியதிகளைப் பற்றி நீங்கள் எழுதியுள்ள இந்தப் புத்தகத்தில் ஒரு இடத்திலாவது பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவைப் பற்றி ஒரு வார்த்தைகூட இல்லையாமே?" என்று கேட்டபோது,

லாப்லஸ், "எனக்கு அந்த சித்தாந்தத்திற்கு தேவை இருக்கவில்லை" என்று அப்பட்டமாகப் பதில் அளித்தாராம்!

இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் மாக்ஸ் பிளாங்க் என்பவரின் கவாண்டம் தத்துவமும், 1905ல் மேதை ஐன்ஸ்டைனின் ரிலேட்டிவிட்டி தத்துவமும் பௌதிகத்தின் புதிய சிந்தனைகளைத் துவக்கி வைத்தன. இவை மூலம் விஞ்ஞானிகளால் பிரபஞ்சத்தின் புற நிலையில் நிகழும் பற்பல விஷயங்களைத் தெளிவாக விளக்க முடிந்தது.

இப்போது நீங்கள் இந்தக் கட்டுரையைப் ப் படிக்கிறீர்கள். இப்படிப் படிப்பதால் உங்களுக்கும் எனக்கும் ஒருவித மான தொடர்பு ஏற்படுகிறது. படிக்கும் செயல் மற்றவர்களையோ நம்முடைய சுற்றுபுறத்தையோ எந்த விதத்திலும் பாதிப்பதில்லை. இதுதான் பகுத்தறிவு.

நீங்கள் இந்தக் கட்டுரையைப் படிப்பது இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் ஏதோ ஒரு வகையில் மாற்றிவிடுகிறது என்று சொன்னால், அது நம் பகுத்தறிவுக்கு ஒத்துவராது. ஆனால் நவீன விஞ்ஞானத்தில் எந்த ஒரு தனிப்பட்ட செயலும் பிரபஞ்சத்தையே பாதிப்பதை நிரூபிக்க முடியும்.

அணுக்கருவின் உள்ளுக்குள் இருக்கும் துகள்களின் (ப்ரோட்டான், எலக்ட்ரான் போன்றவை) இயற்கைத் தன்மையை மேலும் மேலும் அவர்கள் கண்டறிய முயற்சித்த இந்த ஆச்சரியங்கள் அவர்களுக்கு அதிகரித்தன.

அணுவிற்குள்ளே உள்ள துகள்கள் சில சமயம் துகள்களாக , சில சமயம் அலைகளாக …இருக்கலாம் என்கிற இரண்டும் கெட்டான் முடிவுகள் விஞ்ஞானத்தின் பகுத்தறிவை உடைத்தெறிந்தது.

இதன் அடிப்படையில் படைக்கப்பட்ட பிரபஞ்சத்தின் உண்மை என்ன என்று அவர்கள் அறிய ஆசைப்பட்ட போது, ஒருவிதமான விளிம்புக்கு வந்து தவித்தார்கள். ஒரு எல்லைக்கு மேல் பிரபஞ்சத்தின் உண்மையைக் கண்டறிய முடியாது என்பதை அவர்கள் ஒப்புக்கொள்ளக் கஷ்டப்பட்டார்கள்.

அப்படி அறிந்து கொள்ள தம் அறிவுக்கும் ஞானத்திற்கும் ஒரு புதிய சுதந்திரம் தேவை எனபது வெளிப்படையாயிற்று. அந்த சுதந்திரம் வேதாந்த நூல்களில் காணக் கிடைப்பது பற்றி அவர்களுக்கு ஆச்சரியத்தை அளிக்கிறது. ஒரு எல்லையைக் கடந்தபின் விஞ்ஞானமும் வேதாந்தமும் (metaphysics) ஒரே இலக்கை நோக்கிச் செல்கின்றன.

ஞானம் என்பது புலன் அறிவிற்கு அப்பாற்பட்டது என்பதை பல மேற்கத்திய விஞ்ஞானிகள் இப்போது தயக்கத்துடன் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

தவ்ஹீதுர் ருபூபிய்யா (படைத்துப் பரிபாலிக்கும் இரட்சகனாகிய அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவது)

-அனைத்துப் பொருட்களையும் அவைகள் ஒன்றுமே இல்லாமலிருந்தபோது உருவாக்கியவன் அல்லாஹ்வே

-அவனே அனைத்துப் படைப்புகளுக்கும் அவைகளிடமிருந்து எந்தவித தேவைகளுமில்லாமல் உணவளித்து பாதுகாத்து வருபவன்

-அவனே இந்தப் பேரண்டத்திற்கும் மற்றும் அதிலுள்ள அனைவருக்கும் ஒரே இறைவன் அவனுடைய ஆட்சியதிகாரத்தில் யாருக்கும் எவ்வித பங்குமில்லை

-அனைத்துப் பொருட்களுமே அல்லாஹ்வின் வல்லமையைக் கொண்டே இயங்குகிறது

-அவன் அனுமதியில்லாமல் எதுவும் நடக்காது.என்பன போன்ற அடிப்படைக் கொள்கையைக் கொண்டதாகும்.

அரபியில் படைத்துப் பரிபாலிக்கும்தன்மைக்கு “ருபூபிய்யா”எனப்படும். இது “ரப்” என்ற மூலச் சொல்லில் இருந்து உருவானது.

தவ்ஹீது ருபூபிய்யாவுக்கான குர்ஆன் ஆதாரங்கள்: –

“அல்லாஹ்தான் அனைத்துப் பொருட்களையும் படைப்பவன்; இன்னும், அவனே எல்லாப் பொருட்களின் பாதுகாவலனுமாவான்” (குர்ஆன் 39:62)

“உங்களையும், நீங்கள் செய்த(இ)வற்றையும், அல்லாஹ்வே படைத்திருக்கின்றான்” (குர்ஆன் 37:96)

காலத்தின் சுவடுகள் 4

( பெண் சிசு )

உயிருடன் புதைக்கப்பட்ட பெண் குழந்தையானவளும் என்ன குற்றத்திற்காக அவள் கொல்லப்பட்டாள் என்று வினவப்படும் போது.. (குர்ஆன்: 81: 8,9)

தங்களுடைய பெண் மக்களை உயிருடன் பூமிக்குள் புதைத்து விடும் வழக்கம் அரபியர்களில் சில குடும்பத்தாரிடமிருந்து வந்தது. பெண் மக்களால் தங்களது கௌரவத்துக்குக் குறைவு நேரிடும் என்பதாலோ அல்லது தங்கள் குடும்பத்துப் பெண் இன்னொரு ஆடவருடன் கூடி வாழ்வதா என்ற கர்வத்தாலோ, வறுமைக்கு அஞ்சியோ இவ்வாறு செய்து வந்தனர்.

இவ்வழக்கம் அவர்களில் முதிர்ந்து திருமணம் நிகழும் காலத்திலேயே ''பெண் குழந்தை பிறந்தால் குழந்தையின் தாய் அக்குழந்தையை இவ்வாறு செய்ய வேண்டும். அவள் அவ்வாறு செய்யும் போது அவளுடைய உறவினர்களும் இருக்க வேண்டும். அல்லது தந்தை இவ்வாறு செய்ய வேண்டும். அவனுக்கு அப்பெண்ணின் தாய் உடந்தையாக இருக்க வேண்டும்" போன்ற ஒப்பந்தங்களையும்கூட அவர்கள் செய்து கொள்வார்களாம்.

பெண் கர்ப்பிணியானவுடனேயே ஒரு குழியைத் தோண்டி வைத்திருப்பதும், பின்னர் குழந்தை பிறந்தவுடன் ஆண் குழந்தையாக இருந்தால் அக்குழியை மூடி விடுவதும், பெண் குழந்தையாக இருந்தால் குழிக்குள் அக்குழந்தையைப் போட்டு மூடி விடுவதும் சில குடும்பங்களில் வழக்கமாக இருந்து வந்தது.

சில குடும்பத்தில் பெண் குழந்தை பிறந்தால் ஆறு வயது வரை, அக்குழந்தையை மிகச் செல்லமாக வளர்ப்பர். ஆறு வயதான பிறகு காட்டில் கிணற்றைப் போல ஆழமாகக் குழி தோண்டி வைத்துக் கொண்டு, குழந்தையை நன்கு அலங்கரித்து உறவினர்களுடன் அக்காட்டுக்கு அழைத்துச் செல்வார்கள்.

அக்கிணற்றின் அருகில் சென்றதும், அதில் தண்ணீர் இருக்கிறதாவென அதனை உற்று நோக்க அக்குழந்தையை சொல்வதும் குற்றமும் வஞ்சகமும் சுதுமில்லாத அக்குழந்தை, கிணற்றை உற்றுப் பார்க்கும்போது பின்னாலிருந்து அக்குழந்தையைத் தள்ளி விடுவதும்,

தான் தவறி விழுந்ததாக அக்குழந்தை நினைத்து உதவிக்கு தன் தந்தையை அழைத்துக் கதறுவதும், கதறலையும் கூட இலட்சியம் செய்யாமல் இரக்கமற்ற தந்தை, தன் குழந்தையின் மீது மண்ணையும், கல்லையும் மற்றவற்றையும் போட்டு மூடி சமதளமாக ஆக்கிவிட்டு, தனக்கு வர இருந்த பெரும் சிறுமையிலிருந்து தப்பி விட்டதாக மகிழ்ச்சி ஆரவாரத்துடன் திரும்ப வருவதும் அரேபியர்களின் வழக்கம்.

இந்த இரக்கமற்ற **#காலத்தின்சுவடுகள்** இன்னும் பூமியில் அழியவில்லை என்பதற்கு இன்றைய இன்னொரு நிகழ்வு

மதுரை மாவட்டம் சேடப்பட்டி காவல் நிலைய எல்லைக்குட்பட்ட பெரிய கட்டளையைச் சேர்ந்தவர் முத்துப்பாண்டி. விவசாய தொழில் செய்து வரும் இவருக்கும், கௌசல்யா என்பவருக்கும் திருமணமாகி 4 வயது பெண் குழந்தை மற்றும் 2 வயதில் பெண் குழந்தை என இரு பெண் குழந்தைகள் உள்ளனர்.

இந்நிலையில், கௌசல்யா கர்ப்பமாகி கடந்த 21 ஆம் தேதி சேடப்பட்டி ஆரம்ப சுகாதார நிலையத்தில் அவருக்கு மூன்றாவதாக பெண் குழந்தை பிறந்துள்ளது. இந்த குழந்தை உடல்நலக் குறைவு காரணமாக டிசம்பர் 26 ஆம் தேதி இரவில் உயிரிழந்ததால் வீட்டின் அருகிலேயே பெற்றோர் புதைத்து விட்டதாகக் கூறப்படுகிறது.

இந்த நிலையில், குழந்தையை பரிசோதிக்க சேடப்பட்டி ஆரம்ப சுகாதார நிலையத்திலிருந்து செவிலியர் தேவி பெரிய கட்டளை கிராமத்திற்கு வந்து தடுப்பூசி போடுவதற்காக குழந்தையைக் கேட்டார். அப்போது அது உடல்நிலை சரியில்லாமல் இறந்து விட்டதாகவும், அதனால் அதை பெற்றோர்

புதைத்து விட்டதாகவும் பக்கத்து வீட்டில் இருந்தவர்கள் கூறியுள்ளனர். இது குறித்து செவிலியர் தேவி கிராம நிர்வாக அதிகாரி முனியாண்டியிடம் கூறினார்.

இதைத்தொடர்ந்து, சந்தேகம் அடைந்த கிராம நிர்வாக அதிகாரி முனியாண்டி, சேடப்பட்டி காவல் நிலையத்தில் புகார் அளித்தார். அதன், பேரில் காவல்துறையினர் வழக்குப்பதிவு செய்து விசாரணை நடத்தினர்.

இந்த நிலையில், கணவன்-மனைவி இருவரும் வீட்டை பூட்டிவிட்டு தலைமறைவாகினர்.

இதனால் குழந்தை இறப்புக்குக் காரணம் சிசு கொலையா? அல்லது வேறு ஏதும் காரணமா என காவல்துறையினர் விசாரித்தனர். இந்த விவகாரத்தில், மாவட்ட காவல் கண்காணிப்பாளர் உத்தரவின்பேரில் குழந்தையின் சடலத்தை உடல்கூராய்வு செய்ய காவல்துறையினர் நடவடிக்கை எடுத்தனர்.

குழுந்தை புதைக்கப்பட்ட இடத்தில் பேரையூர் தாசில்தார் ரவிச்சந்திரன், காவல் ஆய்வாளர் காந்தி தலைமையிலான அதிகாரிகள் முன்னிலையில், மதுரை அரசு மருத்துவர் நடராஜன் தலைமையிலான மருத்துவக் குழுவினர் சிசுவின் உடலை தோண்டி எடுத்து அங்கேயே உடல்கூராய்வு செய்தனர்.

அதில், சிசுவின் தலையின் மீது ஏற்பட்ட காயத்தால் அது இறந்து விட்டதாக தெரியவந்தது.

இதையடுத்து, சிசுவை கொன்றதாக அதன் பெற்றோரை காவல்துறையினர் தேடி வந்தனர். இந்த நிலையில், பேரையூர் அருகே உறவினர் வீட்டில் இருவரும் பதுங்கியிருந்த தகவல் கிடைத்ததும் அங்கு சென்று அவர்களை காவல்துறையினர் கைது செய்தனர்.

அவர்களிடம் நடத்திய விசாரணைக்குப் பிறகு முத்துப்பாண்டி மற்றும் கௌசல்யா மீது இந்திய தண்டனைச் சட்டப்பிரிவுகள் 302, 201,344 ஆகியவற்றின் கீழ் வழக்குப் பதிவு செய்தனர். பிறகு நீதிமன்றத்தில் ஆஜர்படுத்திய இருவரையும் நீதிமன்ற காவலில் வைக்க உத்தரவிடப்பட்டது.

இது குறித்து, உசிலப்பட்டி காவல் நிலைய தரப்பில் விசாரித்தபோது, "போலீஸ் விசாரணையில் முத்துப்பாண்டியும் கௌசல்யாவும் தங்களுக்கு ஏற்கெனவே இரண்டு பெண் குழந்தைகள் உள்ளதால் மூன்றாவதாக பிறந்த பெண் குழந்தையை சரியாக வளர்க்க முடியாது என்பதால், அதன் தலையை சுவற்றில் பலமாக மோதச் செய்து கொலை செய்ததாக ஒப்புதல் வாக்குமூலம் அளித்தனர்," என்று தெரிவித்தனர்.

இது குறித்து, மதுரை மாவட்ட காவல் கண்காணிப்பாளர் பாஸ்கரன் பிபிசி தமிழிடம் கூறும்போது, "சிசுவின் தலையை சுவற்றில் மோத வைத்து கொலை செய்து வீட்டின் அருகே புதைத்ததாக பெற்றோர் வாக்குமூலம் அளித்துள்ளனர்.

மதுரை மாவட்டத்தில் இதுபோன்று பெண் சிசுக்கொலை செய்வோர் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும். பெண் குழந்தைகளை வளர்க்க முடியாத பெற்றோர்கள் தங்களுடைய பிள்ளைகளை அரசு காப்பகத்தில் வைத்து வளர்த்துக் கொள்ளலாம்," என்று கூறினார்.

"பெண் சிசு வதை என்பது ஒரு கொடூர செயல், பெண் சிசுவை பாதுகாப்பது நம் கடமை. இதுபோன்று இனி ஒரு பெண் சிசுக்கொலை மதுரை மாவட்டத்தில் நிகழக்கூடாது. இதுபோன்று வளர்க்க முடியாத நிலையில் யாரேனும் குழந்தைகளை வைத்திருந்தால் உடனடியாக காவல்துறைக்கு தகவல் தெரிவிக்க வேண்டும்," என அவர் கேட்டுக் கொண்டார்.

குர்ஆனில் அல்லாஹ்....

‘நீங்கள் வறுமைக்குப் பயந்து உங்களுடைய குழந்தைகளைக் கொலை செய்யாதீர்கள்; அவர்களுக்கும் உங்களுக்கும் நாமே உணவை (வாழ்க்கை வசதிகளையும்) அளிக்கின்றோம் – அவர்களைக் கொல்லுதல் நிச்சயமாகப் பெரும் பிழையாகும்’ (அல்-குர்ஆன் 17:31)

காலத்தின் சுவடுகள் 5

( நம்மை விழுங்கப்பார்க்கும் அரக்கன் )




ஒன்கலோ' (Onkalo) என்பது பின்லாந்து (Finland) மொழியில் உள்ள ஒரு சொல்லாகும். இதன் அர்த்தம் குகை, குழி, மறைக்கப்பட்டது என்பவையாகும். பின்லாந்து நாட்டின் தலைநகரான ஹெல்சிங்கியிலிருந்து (Hel- sinki) இருநூறு கிலோமீட்டர் தூரத்தில் இருக்கும் 'Súng' (Eurajo- ki) என்னுமிடத்திலேயே இந்த 'ஒன்கலோ' அமைக்கப்பட்டிருக்கிறது.

உலகிலேயே முதன்முதலாக, மிகமோசமான முன்னுதாரணமாகப் பின்லாந்து நாட்டில் 'ஒன்கலோ' அமைக்கப்படுகிறது.

நிலத்துக்கு 420 மீட்டர் கீழே, கிட்டத்தட்ட ஐந்து கிலோமீட்டர் நீளமாக அமைக்கப்பட்ட சுரங்கம்தான் 'ஒன்கலோ'. 'இவ்வளவு ஆழத்திலும், நீளத்திலும் சுரங்கம் வெட்டி, நிலக்கரியையோ, பெட்ரோலையோ, தங்கத்தையோ எடுக்கப் போகிறார்கள்' என்றா நினைக்கிறீர்கள்? இல்லை,

இந்தச் சுரங்கத்தை வெட்டி அதிலிருந்து எதையும் எடுக்கப் போவதில்லை. அதற்கு மாறாக அங்கே எதையோ அடுக்கி வைக்கப் போகிறார்கள். புதைக்கப் போகிறார்கள். எதைப் புதைக்கப் போகிறார்கள் தெரியுமா?

பின்லாந்து நாட்டில், அமைக்கப்பட்டிருக்கும் ஏழு அணு உலைகளினாலும் வெளிவந்த அணுக்கழிவுகளை இந்த ஒன்கலோவில் புதைத்து வைக்கப் போகிறது பின்லாந்து அரசு.

420 மீட்டர் ஆழத்தில் வரிசையாகக் குழாய் போன்ற அமைப்பில் குழிகள் தோண்டி, அதனுள் அணுக்கழிவுகளையிட்டு, மேலும் கீழும் காங்கிரீட் நிரப்பிப் பாதுகாக்கப் போகிறது பின்லாந்து. எவ்வளவு காலத்துக்குப் பாதுகாக்கப் போகிறது தெரியுமா? ஒரு இலட்சம் வருடங்களுக்கு.

இப்போது வாழும் மனித இனத்துக்கு இந்தப் பாதுகாப்புப் போதுமானதுதானா... சொல்லப்போனால் இன்னும் ஆயிரம் ஆண்டுகளுக்குக்கூடப் போதுமானதுதான். ஆனால் ஒரு இலட்சம் ஆண்டுகளுக்கு இவை பாதுகாப்பானவையா? மேலே நான் சொன்னவற்றை இப்போது மீண்டும் யோசித்துப் பாருங்கள்? எவ்வளவு முட்டாள்தனமான ஒரு திட்டம் இது.

பத்தாயிரம் ஆண்டுகளிலே எல்லாமே அழிந்து போய்விடும் நிலை இருக்கும்போது, ஒரு இலட்சம் ஆண்டுகள் வரை பாதுகாப்பதற்குத் திட்டம் போடுவதில் உள்ள முட்டாள்தனம் புரிகிறதா?

எல்லாமே தடம் இல்லாமல் அழிந்து போகக்கூடிய நிலையில், பல ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் வரும் நம் சந்ததி மனிதன், ஏதோ ஒரு காரணத்துக்காக நிலத்தைத் தோண்டும்போது, இந்தக்

கட்டடங்கள் தென்பட்டால், 'அட! நம் மூதாதையர்கள் வாழ்ந்த ஏதோ ஒரு கட்டடம்' என்று நினைத்து, உடைத்துப் பார்ப்பான் அல்லவா? அப்போது அவன் நிலை என்ன?

அப்படித்தானே நாம் நிலத்துக்குக் கீழே உள்ள கட்டடங்களையும், பாஸில்களையும் இப்போது கிண்டி ஆராய்கிறோம். அதுபோல, ஏதோ ஒரு விதத்தில் தப்பிப் பிழைத்து வாழும் தம் சந்ததி மனிதனும் இந்தக் கட்டடங்களைத் தோண்டிப் பார்ப்பான். அப்போது அவனை இந்த அணுக்கழிவுகள் அடியோடு அழித்துவிடும் அல்லவா? கண்ணுக்குத் தெரியாத, மூக்கினால் நுகர முடியாத, வாயினால் ருசி அறியமுடியாத, உடலினால் உணர முடியாத கொடிய விஷமல்லவா அது.

இப்போது நீங்கள், "ஒரு இலட்சம் ஆண்டுகளாகவா அது ஆபத்தாக இருக்கப் போகிறது? சில ஆயிரம் ஆண்டுகள் ஆபத்து இருக்கலாம். அதை இவர்கள் பெரிதாக்கி, ஒரு இலட்சம் ஆண்டுகள் என்கிறார்கள். அவ்வளவு ஆண்டுகளுக்கு ஆபத்தாகவா இருக்கப் போகின்றன இந்த அணுக்கழிவுகள்?" என்று நினைக்கலாம்.

ஆனால், அணு உலைகளில் பயன்படுத்தப்படும், 'அதியுயர்க் கதிர்வீச்சுத் (High level radioactive waste) இழப்பதற்கு ஒரு இலட்சம் ஆண்டுகள் தேவை என்பதுதான் இங்கு வேதனையான உண்மை.

ஒரு இலட்சம் ஆண்டுகள் என்றதும் வியப்பில் ஆழ்ந்து போகும் நீங்கள், சில அணுக்கதிர் தனிமங்களின் அரை வாழ்வுக் காலத்தை அறிந்து கொண்டால் ஆச்சரியப்படுவீர்கள்.

'புளுட்டோனியம் 239' தனிமத்தின் அரை வாழ்வுக் காலம் எண்பதாயிரம் (80,000) வருடங்களாகும். இதுபோல, 'யுரேனியம் 233' மூலகத்தின் அரை வாழ்வுக் காலம், 159,000 வருடங்களும், 'யுரேனியம் 235' மூலகத்தின் அரை வாழ்வுக் காலம், 704 மில்லியன் வருடங்களுமாக இருக்கின்றன.

அதன் அர்த்தம், அத்தனை ஆண்டுகளுக்கு அந்த மூலகங்கள் அணுக்கதிர்களை வெளியிட்டுக் கொண்டே இருக்கும். இப்போது புரிகிறதா, ஏன் ஒரு இலட்சம் ஆண்டுகளுக்கு இந்தத் திட்டம் தீட்டப்பட்டதென்று?

இப்படியொரு இலட்சம் வருடங்களுக்குப் பாதுகாப்பதாகச் சொல்லப்படும் இந்தத் திட்டம் முடிவடைய நமது மூவாயிரமாவது சந்ததியினன் உயிருடன் இருப்பான். மூன்றாவது சந்ததியின் பெயரையே சரிவரத் தெரிந்து கொள்ளாத மக்கள் நாம். மூவாயிரமாவது சந்ததிகள்பற்றி எதுவுமே தெரியாமல் இப்படித் திட்டமிடுகிறோம்?

பின்லாந்து நாடு வெளிப்படையாகச் செய்யும் இந்தச் செயலை அமெரிக்கா, சுவிஸ், பிரான்ஸ், ஜப்பான், சுவீடன், கனடா, பெல்ஜியம் போன்ற நாடுகளும் செய்வதற்காகச் சுரங்கங்களை அமைத்தன. ஆனால், புக்குஷிமாவில் நடந்த அணு உலைப் பயங்கரத்தினால், பின்லாந்து தவிர்த்த ஏனைய நாடுகள் தங்கள் திட்டங்களைத் தள்ளிப்போட்டுக் கொண்டுள்ளன. அதுவும் மக்களின் பாரிய போராட்டங்களுக்கு மத்தியில்.

உலகம் பூராவும் இதுவரை இரண்டு இலட்சத்து ஐம்பதினாயிரம் (250,000) டன்கள் அணுக்கழிவு சேர்ந்து போயிருக்கின்றன. அவற்றை எங்கே, எப்படிப் பாதுகாப்பது என்று தெரியாமல் முழி பிதுங்கிப் போய் இருக்கின்றனர்.

'ஒன்கலோ' போலப் புதைக்கப்படாமல் இருந்தால், தினமும் மில்லியன் கணக்கான டாலர் செலவழிந்து கொண்டே இருக்கும். 'அட! அதற்காகப் பின்லாந்து நாடு, 'ஒன்கலோ' அமைப்பதற்காகச் செல்வழிக்கும் தொகை சாதாரணமானதென்று நினைத்துவிட வேண்டாம். மொத்தமாக 818 மில்லியன் யூரோக்களைப் பின்லாந்து இந்தத் திட்டத்திற்கு செலவிடுகின்றது.

இறுதியாக ஒன்றை மட்டும் சொல்லிவிடுகிறேன். 'அணு உலை ஒன்றின்மூலம், ஒரு மணி நேரத்துக்குத் தேவையான மின்சாரத்தை ஒரு நாடு உருவாக்கும்போது, அதேயளவு அணுக்கழிவையும் உருவாக்குகின்றது. ஒரு மணி நேரத்துக்குத் தேவையான அந்த ஒரு மணி நேரத்தில் செலவழிந்த பின் மாயமாகிவிடும்.

ஆனால் அதனால் உருவாக்கப்பட்ட அணுக்கழிவு, ஒரு இலட்சம் வருடங்களுக்கு அந்தக் **#காலத்தின்சுவடுகள்** நம்முடனும், நமது மூவாயிரம் சந்ததிகளுடனும் சேர்ந்தே இருந்து

கொண்டிருக்கும். அருகிலிருந்து வாயைப் பிளந்து, நம்மை விழுங்கப் பார்க்கும் அரக்கனாகக் காத்திருந்து, என்றாவது ஒருநாள் அது நம்மை விழுங்கிவிடும்.

ஏன் கனமான இந்த தனிமங்களுக்கு மட்டும் எப்படி அணுக்கதிர் வீச்சி ஏற்பட்டது ?

இவைகள் வானம் பூமி சூரியன் படைக்கப்படும்போது கூடவே படைக்கப்பட்டு, Big Bang -ல் வெடித்து சிதறியபோது சிதறி பூமியில் இதுகாலம் வரை காத்துக் கிடந்தது.

மனிதன் அற்ப மின்சக்திக்கு பெரிய பூதத்தை தட்டியெழுப்பிவிட்டு அடக்க முடியாமல் திணறுகிறான்.

பின் ஏன் இவைகள் படைக்கப்பட்டது ?

அவைகளை பயன்படுத்தும் அறிவியல் இன்னும் வளரவில்லை. இதுதான் உண்மை

மனித, ஜின் கூட்டத்தார்களே! நீங்கள் வானங்கள் பூமியின் எல்லையைக் கடந்து சென்றுவிட உங்களால் கூடுமாயின் அவ்வாறு சென்று விடுங்கள். ஆயினும், (அவைகளை ஆட்சி புரியக்கூடிய) மிகப்பெரும் ஆற்றலைக் கொண்டே தவிர நீங்கள் செல்ல முடியாது.

(அல்குர்ஆன் : 55:33) இந்த ஆற்றல் இந்த கனமான துகள்களில் புதைந்திருக்கலாம்.

மனிதர்களில் சிலர், “எங்கள் இறைவனே! இவ்வுலகிலேயே (எல்லாவற்றையும்) எங்களுக்குத் தந்துவிடு” என்று கூறுகிறார்கள்; இத்தகையோருக்கு மறுமையில் யாதொரு நற்பாக்கியமும் இல்லை.(குர்ஆன் : 2:200)

ظَهَرَ الْفَسَادُ فِى الْبَرِّ وَالْبَحْرِ بِمَا كَسَبَتْ اَيْدِى النَّاسِ لِيُذِيْقَهُمْ بَعْضَ الَّذِىْ عَمِلُوْا لَعَلَّهُمْ يَرْجِعُوْنَ

மனிதர்களின் கைகள் தேடிக்கொண்டதன் காரணமாகக் கடலிலும் தரையிலும் அழிவு வேலைகள் (அதிகமாகப்) பரவி விட்டன. அதிலிருந்து அவர்கள் விலகிக் கொள்வதற்காக, அவர்களின் தீய செயல்களில் சிலவற்றின் தண்டனையை அவர்கள் (இம்மையிலும்) சுவைக்கும்படி அவன் செய்ய வேண்டியதாகிறது.(குர்ஆன் : 30:41)

## காலத்தின் சுவடுகள் 6

( அண்டங்கள் )



நவீன இயற்பியல் (Modern Physics) நம்பவே முடியாத பல கோட்பாடுகளைச் சமீபகாலமாகச் சொல்ல ஆரம்பித்திருக்கிறது. இருபதாம் நூற்றாண்டின் இயற்பியல் மற்றும் கணிதவியல் மேதையான 'அல்பர்ட் ஐன்ஸ்டைன்' (Albert Einstein) 1920 காலங்களில், 'ஒருங்கமைக் கோட்பாடு' (Theory of Every- thing) என்னும் கோட்பாடொன்றை விவரித்துச் சொன்னார்.

அவர் உயிருடன் இருக்கும்வரை அந்தக் கோட்பாட்டை, ஒரு கணிதச் சமன்பாட்டினுள் உள்ளடக்கிச் சமன்படுத்த முயன்றார். ஆனால் அவரால் அது முடியவில்லை. அணுமுதல் அண்டம்வரை அமைந்துள்ள அனைத்தும் நான்கு அடிப்படை விசைகளால்தான் இயங்குகின்றன.

அதாவது ஒட்டுமொத்தப் பிரபஞ்சமே நான்கு விசைகளுக்குள் உள்ளடங்கிவிடுகின்றது. இப்போதுள்ள அண்டம் (Universe) அந்த நான்கு விசைகளையும் கொண்டுதான் உருவாக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லப்பட்டாலும், 13.7 பில்லியன் வருடங்களுக்கு முன் அவையெல்லாம் ஒன்றாகச் சேர்ந்து ஒரு சிறிய புள்ளியாக இருந்திருக்கின்றன.

அதன் பின்னர்தான் ஏதோவொரு தூண்டல் கணம் ஏற்படுத்திய சலனத்தால் அது வெருவெடிப்பாக வெடித்து ( Big Bang) இப்போதுள்ள அண்டமாக விரிவடைந்திருக்கிறது. பிக்பாங் பெருவெடிப்பின் முன்னர் நான்கு விசைகளும் சமநிலையில் இருந்ததை அடிப்படையாகக் கொண்டு, ஐன்ஸ்டைன் அதற்கென ஒரு கணிதச் சமன்பாட்டை உருவாக்கப் பார்த்தார். அப்படி அவர் உருவாக்க நினைத்த கோட்பாட்டின் பெயர்தான் 'ஒருங்கமைக் Gam (Theory of Everything we

ஐன்ஸ்டைனால் எவ்வளவோ முயன்றும் கண்டுபிடிக்க முடியாத அந்தக் கோட்பாட்டைக் கண்டுபிடித்தே தீர்வது என்று அவருக்குப் பின்னர் வந்த இளம் விஞ்ஞானிகள் தீவிரமாக ஆய்வு செய்தனர். அந்த ஆய்வுகளின் மூலமாக அதிர்ச்சிகரமானதும், ஆச்சரியகரமானதுமான பல புதிய கோட்பாடுகளையும் வெளியிட்டனர்.

நவீன இயற்பியல் நம்பவே முடியாத ஒரு ஆச்சரியமான பாதையில் பயணிக்கத் தொடங்கியது. 'ஸ்ட்ரிங் தியரி' (String Theory), எம் தியரி (M Theory), சமாந்தர அண்டம் (Parallel Tinivers), பல அண்டங்கள் (Multy universe), பல் பரிமாணங்கள் (Dimensions) என்று மனிதனால் நம்பவும், நினைத்தும் பார்க்கவும் முடியாத முடிவுகளை நவீன இயற்பியல் சொல்ல ஆரம்பித்தது.

நவீன இயல்பியல் சொல்லும் அண்டங்கள் காணொளியை முழுமையாக பார்க்கவும் :

**https://fb.watch/qAiMpsi2y9/?mibextid=Nif5oz**

சமயத்தில் மந்திரவாதியின் கதைகள் போலவும், அம்புலிமாமா கதைகள் போலவும் அவையிருந்தன. நம் முன்னோர்கள் சொல்லியிருந்த பல கதைகளும் இவற்றோடு ஒத்துப் போவதுதான் மிகவும் ஆச்சரியமான ஒன்று அப்படி ஒத்துப் போகும் கதையொன்றைப் பற்றி விவரிப்பதே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

அண்டம் (Universe) என்பது ஒன்று என்றுதான் நாம் இதுவரை நம்பி வந்தோம். ஆனால், இன்றுள்ள நவீன இயற்பியல் கோட்பாடுகள், அப்படி இல்லை என்கிறது. இருப்பது ஒரு அண்டம் அல்ல, நமது அண்டம்போலக் கோடிக்கணக்கான அண்டங்கள் இருக்கின்றனவென்று அது சொல்கின்றது.

ஒவ்வொரு அண்டமும் ஒன்றுக்கொன்று மிக அருகே காணப்படுகின்றன என்றும் சொல்கிறது. அருகே என்றால், மிகமிக மெல்லிய ஒரு தோல் போன்ற ஒரு படைதான் ஒவ்வொரு அண்டத்தையும் பிரிக்கின்றது என்று சொல்லும் அளவுக்கு மிக அருகில் நவீன இயற்பியல் இதைக் கோட்பாட்டளவில் கண்டுபிடித்திருக்கிறது. இதைப் பற்றி விளக்கமாகவும் சொல்லியிருக்கிறது.

படைக்கப்பட்ட அண்டங்களைப் பற்றிய காலத்தின் சுவடுகள் நவீன விஞ்ஞானம் கண்டுபிடிக்கும் முன்பே அண்டங்களில் பதிந்திருப்பதை விஞ்ஞானிகள் கண்டுகொண்டுள்ளனர்.

இப்படிச் சொல்லப்பட்ட கோட்பாட்டையும் நம் நபிமொழி ஹதீஸ்களிலும் காணக்கிடக்கிறது.

மிஹ்ராஜ் விண்ணேற்றத்தின் போது, ஓரிடத்தில் ஒட்டகங்கள் சாரி சாரியாகச் செல்லவும் ,ஒட்டகங்கள் ஒவ்வொன்றின் மீதும் அதை ஓட்டுபவர் அமர்ந்திருக்கவும் அதன் இரு பக்கங்களிலும் தொங்கிக் கொண்டிருந்த இரு பொதிகளையும் பற்றி நபி (ஸல்) அவர்கள், அது பற்றி வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் கேட்க,

"எனக்கு இது பற்றி யாதொன்றும் தெரியாது .நான் இங்கு வந்த காலத்திலிருந்து இவ்வாறுதான் சென்று கொண்டுள்ளது. தாங்கள் விரும்பின் இது பற்றி இறைவனிடமே கேளுங்கள்" என்று பதிலுரைத்தார்கள் .

அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் இறைவனிடம் அதுபற்றி வினவ, இறை ஆணைப்படி அவ் ஒட்டகம் ஓட்டி தம் ஒட்டகத்தை நபி (ஸல்) அவர்களின் அருகே ஓட்டிச் சென்று அதன் இரு பக்கங்களில் தொங்கிக் கொண்டிருந்த பொதியில் ஒன்றை திறக்க அதில் ஒரு கோள வடிவ கிரகம் தென்பட்டது .

அக்கோளத்தை நபி (ஸல்) அவர்கள் முன் வைக்கப்பட்டு அதன் திறவுகோலையும் அவர்களின் கையில் கொடுக்க, நபி (ஸல்) அவர்கள் அதனைத் திறந்து கொண்டு உள்ளே சென்றனர்.

அங்கு குதிரையுடன் நின்று கொண்டிருந்த வீரர் ஒருவர் நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் உரைத்து, அக்குதிரையையும் அவர்களிடம் ஒப்படைத்தார்.

அதன் மீது ஏறி சென்ற நபி(ஸல்) அவர்கள் அங்கு நாடுகளும் கண்டங்களும், நகரங்களும் ,காடுகளும், கழனிகளும் இருப்பதையும், அங்கு மக்கள் இறைவனைத் துதித்துக் கொண்டும் , தம் மீது ஸலாவாத்து ஓதிக் கொண்டும் இருப்பதைக் கண்டு பெரும் வியப்பெய்தினர்.

இதிலிருந்து எண்ண முடியாத அண்டகோளங்களும் அவற்றில் மனிதர்களும் உள்ளனர். அவர்களுக்கும் நபி (ஸல்) அவர்களே நபியாகவும் ரஸூலாகவும் இருக்கிறார்கள் .

விஞ்ஞானிகளும் பிரபஞ்சத்திலுள்ள எண்ணிலடங்கா கோலங்களில் நம் பூமியை போன்று தட்ப வெப்ப நிலையை பெற்றுள்ள கோலங்கள் எத்தனை எத்தனையோ உள்ளன என்றும் அவற்றிலெல்லாம் நிச்சயம் மனித உற்பத்தி தோன்றியிருக்க வேண்டும் என்றும் அதில் மனிதர்கள் வாழ்ந்து கொண்டிருப்பார்கள் என்றும் கூறுகின்றனர்.

அண்ணலெம் பெருமானார் (ஸல் ) அவர்கள் அகில உலகங்களுக்கும் அருளப்பெற்ற அருட்பெருங்கொடை அன்றி வேறென்ன ?

وَمَاۤ اَرْسَلْنٰكَ اِلَّا رَحْمَةً لِّـلْعٰلَمِيْنَ

(நபியே!) உங்களை அகில உலகத்தாருக்கு ஓர் அருளாகவேயன்றி நாம் அனுப்பவில்லை." (குர்ஆன் : 21:107)

ஆதாரம் : நபி ஸலவாத்தின் நற்பலன்கள் - அப்துற் றஹீம்

وَ السَّمَآءَ بَنَيْنٰهَا بِاَيْٮدٍ وَّاِنَّا لَمُوْسِعُوْنَ

(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசால மாக்கியும் வைத்திருக்கின்றோம்.

(அல்குர்ஆன் : 51:47)

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 1

( உள்ளங்களை மாற்றியமைத்தல் )

கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் மக்களின் உள்ளங்களைத் தங்களின் உள்ளங்கையில் வைத்து விளையாடவும் செய்தார்கள்.

ஹிஜ்ரி 550 - ஆம் ஆண்டு, ஜமாதில் ஆகிர் மாதம், பதினைந்தாம் நாள் வெள்ளிக்கிழமை யன்று, அவர்கள் பள்ளிவாயிலுக்குச் சென்ற பொழுது, ஒருவரும் அவர்களை ஏறிட்டுப் பார்க்கவுமில்லை, அவர்களுக்கு ஸலாம் கூறவுமில்லை.

இதற்கு முன்பெல்லாம், அவர்கள் ஜும் ஆத் தொழப் பள்ளிக்குச் சென்றால், மக்கள் முண்டியடித்துக் கொண்டு முன் வந்து, அவர்களுக்கு 'ஸலாம்' கூறவும், அவர்களின் கைகளைப் பிடித்து முத்தமிடவும் செய்ய, இன்று ஒருவரேனும் அவ்வாறு செய்யாததைக் கண்டு, அவர்களுடன் சென்றவருக்குப் பெரிதும் வியப்பாக இருந்தது.

இதனை உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட ஆண்டகை அவர்கள், அவரை நோக்கிப் புன்முறுவல் பூத்தார்கள். அதன் பின் என்ன ? மக்கள் முண்டியடித்துக் கொண்டு, முன் வந்து ஆண்டகை அவர்களுக்கு

ஸலாம் கூறவும், அவர்களின் கைகளை முத்தமிடவும் செய்தனர். இதனால் அவர்கள் பள்ளிவாயிலுக்குள் நுழைவதே பெரிதும் சிரமமாகி விட்டது.

அப்பொழுது ஆண்டகை அவர்கள் தம்முடன் வந்தவரை நோக்கி "உமரே! நீர் தாமே இதனை விரும்பினீர் ? மக்கள் என்னை ஏறிட்டுப் பாரா நிலையிலேயே, நான் பள்ளிவாயிலுக்குள் புக விரும்பினேன். எனவே, அவ்வித நிலையை உருவாக்கிப் பள்ளிவாயிலுக்குள் நுழைந்தேன்.

அறிந்து கொள்ளும்! மக்களின் இதயங்களெல்லாம் என் கைவசம் இருக்கின்றன. அவற்றை நான் விரும்பிய வண்ணம் திருப்புவேன்" என்று கூறினார்கள்.

உண்மையில் மக்களின் உள்ளங்களெல்லாம், அவர்களுக்குத் திறந்த புத்தகம் போன்றிருந்தன. எவரும் அவர்களைக் காண முன்னோக்கிவரின், அவர் நல்லவராயிருப்பின், அவர் தொலைவில் வரும் பொழுதே மர்ஹபன் பிஹபீபில்லாஹ்" (அல்லாஹ்வின் நேசருக்கு நன்மாராயம்) என்று கூறுவார்கள்.

தீயவராயிருப்பின் அவர் தொலைவில் வரும் பொழுதே, "லா மர்ஹபன் பித்தரீதில்லாஹ்" (அல்லாஹ்வால் வெருட்டப்பட்டவனுக்கு நன்மாராயமில்லை) என்றுக்கூறுவார்கள். பின்னர் பார்க்கும்பொழுது அவர்கள் கூறியது சரியாகவே இருக்கும்

இறைவன்தான் மனிதர்களின் உள்ளங்களை அவன் விரும்பியவாறு புரட்டுவான் என்பதாக நபிமொழி

"மனிதனின் உள்ளங்கள் அல்லாஹ்வின் இரண்டு விரல்களுக்கிடையே உள்ளன. அவன் விரும்பியவாறு அந்த உள்ளங்களைப் புரட்டுகிறான்'' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அம்ரு பின் ஆஸ் (ரலி) முஸ்லிம்

ஆனால் கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களும் அவ்வாறு செய்ய முடிகிறது.

காரணம்....

"எனது அடியான் நஃபிலான வணக்கங்களை விருப்பத்துடன் செய்து, என்னுடைய நெருக்கத்தைபெற விரும்பி, என்னை நெருங்கினால் நான் அவனை நேசிக்கும் அளவுக்கு ஆகிவிடுகிறான். நான் அவனை நேசித்துவிட்டால், அவன் கேட்கும் காதாகவும், பார்க்கும் கண்ணாகவும், பிடிக்கும் கையாகவும், நடக்கும் காலாகவும் நான் ஆகிவிடுகிறேன்". (ஸஹீஹுல் புகாரி)

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 2

( உள்ளங்களை அறிதல்)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

"அல்லாஹ், உங்கள் தோற்றங்களையோ உங்கள் செல்வங்களையோ பார்ப்பதில்லை. மாறாக, உங்களுடைய உள்ளங்களையும் செயல்களையுமே அவன் பார்க்கிறான். அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்."ஸஹீஹ் முஸ்லிம் : 5012

(நபியே!) நீர் கூறும்: “உங்கள் உள்ளத்திலுள்ளதை நீங்கள் மறைத்தாலும், அல்லது அதை வெளிப்படையாகத் தெரியப்படுத்தினாலும் அதை அல்லாஹ் நன்கறிகின்றான்"

( குர்ஆன் : 3:29 )

ஒருவரின் உள்ளத்தில் உள்ளதை இறைவன்தான் அறிவான். இந்த தன்மையை தன்னுடைய இறைநேசர்களுக்கும் இறைவன் வழங்கியுள்ளான் என்பதற்காக ஒரு நிகழ்வு

ஒரு நாள் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் தம் நண்பர் ஒருவருடன் கடலோரமாகச் சென்று கொண்டிருந்தார்கள். அவரோ இறைநேசச் செல்வர்கள் அற்புதம் நிகழ்த்துவதை நம்பாதவர்.

வழியில் ஒரு பாழடைந்த பள்ளியைக் கண்டு, அதில் அவர்கள் தொழச் சென்றார்கள். அங்கு தொழுவதற்காக சூஃபிகளின் கூட்டம் ஒன்று வந்தது. அதில், இப்னு அரபி (ரஹ்) அவர்களைக் கடலில் கிடந்த கப்பலில் சந்தித்து உரையாடியவரும், கிள்ரு (அலை) அவர்கள் என்று பின்னர் தெரிய வந்தவருமான மனிதரும் இருந்தார்.

தொழுது முடித்ததும், அவர் மிஹ்ராபில் விரிக்கப்பட்டிருந்த தொழுகை விரிப்பை எடுத்துத் தரையிலிருந்து ஏழடி உயரத்தில் விரித்து அதன் மீது நின்று நஃபீல் தொழுகை தொழத் தொடங்கினார்.

இதனை இப்னு அரபி (ரஹ்) அவர்கள் தம் நண்பரிடம் கட்டிக் காட்டினார்கள். அப்பொழுது அவர், அது பற்றி அவரிடம் வினவுமாறு கூறினார்.

அவ்வாறே அவர் தொழுது முடித்ததும், "ஏன் தாங்கள் தரையிலிருந்து ஏழடி உயரத்தில் விரித்து அதன் மீது தொழுதீர்கள்?" என்று இப்னு அரபி (ரஹ் ) அவர்கள் விளவினார்கள்.

அதற்கு அவர், "உம்முடைய நண்பர், இறைநேசச் செல்வர்கள் அற்புதம் நிகழ்த்துவதை நம்பாதிருக்கிறாரல்லவா? அவர் அதனை நம்புவதற்காகத்தான் அவ்வாறு செய்தேன்" என்று பதில் கூறினார்கள்.

ஏழடி உயரத்தில் நின்று தொழுதது மட்டும் அற்புதம் அல்ல ; அவரின் உள்ளத்தில் உள்ளதை அறிந்து அதற்கு தக்க விளக்கமாக செயல்முறையில் அதை செய்து காட்டியதுதான் அற்புதத்திலும் அற்புதம்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 3

( ஜீவ காருண்யம் )



சுல்தானுல் ஆரிஃபீன் சையிது அஹ்மதுல் கபீர் ரிஃபாயீ (ரஹ்)அவர்கள் குளிர்காலம் ஒன்றில் உளுச் செய்து கொண்டிருக்கும் பொழுது, நெடுநேரம் வரை நீட்டிய கையை, நீட்டிய வண்ணமே இருந்தார்கள். இதற்குக் காரணம், ஒரு கொசு வந்து அவர்களின் கையில் அமர்ந்து, அவர்களின் இரத்தத்தை உறிஞ்சி உண்டு கொண்டிருந்ததேயாகும்.

அப்பொழுது முஅஸ்ஸின் யாஃகூப், ஆண்டகை அவர்களின் கரங்களை முத்தமிட அங்கு ஓடோடி வந்தார். அதுகண்டு கொசுவும் வெருண்டோடிவிட்டது.

அப்பொழுது கபீர் ரிஃபாயீ (ரஹ்) ஆண்டகை அவர்கள், யாஃகூப்பை நோக்கி, "என்ன யாஃகூப்! ஒரு சின்னஞ்சிறு பிராணியை வீணே விரட்டிவிட்டீரே" என்று கூறினார்கள்.

''என்ன, என்ன"என்று ஏக்கத்துடன் வினவினார் யாஃகூப்.

அதற்கு கபீர் ரிஃபாயீ (ரஹ்)அவர்கள், "ஒரு கொசு வந்து என் கையில் அமர்ந்து, தனக்குரிய உணவை அருந்திக் கொண்டிருந்தது. நீர் வந்ததும் அது வெருண்டோடி விட்டது" என்று வருத்தத்துடன் கூறினார்கள்.

அவர்கள் மீது கொசு வந்து அமரின், அதனைத் தாமும் விரட்டு வதில்லை. பிறரையும் விரட்ட அனுமதிப்பதில்லை."இறைவன் என்னுடைய இரத்தத்தில் அதனுடைய இரணத்தை வைத்திருக்கிறான். நீங்கள் ஏன் அதனை விரட்டுகின்றீர்கள்?" என்று அவர்கள் கூறிப் பிறரைத் தடுத்துவிடுவார்கள்.

அவர்கள் வெளியில் செல்லும்பொழுது, வெட்டுக்கிளி முதலியவை அவர்கள் மீது வந்து அமரின், அவை பறந்து போகா வண்ணம் அசையாது நிழலில் போய் நிற்பார்கள். "என்னைக் கொண்டு அது நிழல் தேடுகிறது. அதனை அது நன்கு அனுபவிக்கட்டுமே" என்று அவர்கள் கூறுவார்கள்.

ஒருமுறை தரையில் கிடந்த தம் சட்டையின் கைக்குள் பூனைக்குட்டி அயர்ந்து படுத்துறங்குவதைக் கண்ட அவர்கள், அப்பூனைக் குட்டியின் உறக்கத்தைக் கலைக்க விரும்பாது, அப்பகுதியை மட்டும் கத்திரியால் வெட்டித் துணித்து மீதிப் பகுதியை மட்டும் எடுத்து அணிந்து கொண்டு, வைகறைத் தொழுகை தொழ வேகமாகப் பள்ளி சென்றார்கள்.

பின்னர் தொழுதுவிட்டு, தவமடம் திரும்பிய பொழுது, பூனைக்குட்டி சட்டைக் கையை விட்டு அகன்று விட்டதைக் கண்டு, அந்தச் சட்டைக் கையை எடுத்துத் தம்முடைய சட்டையில் இணைத்துத் தைத்துக் கொண்டார்கள்.

ஃபதாயிஹ்வில் சிரங்கு பிடித்த நாய் ஒன்று அங்குமிங்கும் அலைந்து திரிந்தது. அதனை எவர் எங்கு காணினும் விரட்டியடித்தனர். இதைக் கண்ட ஆண்டகை அவர்களின் அருள் உள்ளம் இரங்கியது. அதனைப் பிடித்துக் கொண்டு கானகம் சென்று, அங்குக் குடிசை ஒன்றை அமைத்து, அதில் வைத்து அதற்கு மருந்து, எண்ணெய் ஆகியவை தடவி மருத்துவம் செய்தார்கள். இறையருளால் நான்கு நாட்களில் அது நலன் பெற்றதும், அதனைக் குளிப்பாட்டி ஊருக்குக் கொண்டு வந்தார்கள்.

அப்பொழுது மக்கள் அவர்களை நோக்கி, "ஏன் இந்த நாயின் பொருட்டு இவ்வளவு துன்பங்களை மேற்கொண்டீர்கள்?" என்று வினவிய பொழுது, "நீர் ஏன் அந்நாய் மீது இரங்கவில்லை? அந்நாய் மீது ஏற்பட்ட நோயால் நீர் சோதிக்கப்படுவதைக் கொண்டு, நீர் பயப்படவில்லையா?" என்று இறைவன் என்னிடம் கேட்பின், நான் என்ன பதிலுரைப்பது ? எனவே தான் அவ்வாறு செய்தேன்" என்ற அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

சில பொழுது அவர்கள் நோயுற்ற அல்லது காயமுற்ற நாய்களுக்குப் பின்னே சுற்றிக் கொண்டு திரிவார்கள். அவர்களைக் கண்டு அவை வெருண்டோடுமானால், “ஏ முபாரக்! சற்று நில்! நான் உன் உடலிலுள்ள புண்ணுக்கு மருந்து தடவ விரும்புகிறேன்" என்று அவர்கள் கூறுவார்கள்.

மனிதர்களுக்கு மட்டுமின்றித் தாம் சந்திக்குக்கும் ஆடு,மாடு, ஒட்டகம், நாய் முதலான அனைத்துப் பிராணிகளுக்கும் அவர்கள்'ஸலாம்' கூறுவார்கள். பன்றியைக் கண்டால், 'அன் இம் ஸபாஹ்!' (நல்ல

விடியற்காலை; குட் மார்னிங்) என்று சொல்வார்கள்.

இதைப் பற்றி அவர்களிடம் வினவப் பட்ட பொழுது, "என் ஆன்மாவுக்கு நல்ல பேச்சுக்களை பழக்கமாக்கி வைத்திருக்கிறேன் " என்று கூறுவார்கள்.

“(படைப்பினங்களின் மீது) கருணை காட்டாதவர், (படைத்தவனால்) கருணை காட்டப்படமாட்டார்”. (அறிவிப்பாளர்: ஜரீர் இப்னு அப்தில்லாஹ் (ரலி), நூல்: புகாரி)

“பூமியில் உள்ளவை மீது அன்பு காட்டுங்கள், வானத்தில் உள்ளவன் உங்கள் மீது அன்பு காட்டுவான் (திர்மிதி)

இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் உலகம் போற்றும் ஒரு மாமேதை அவர்கள் எழுதிய நூற்கள் அனந்தம்..அனந்தம். அவர்களது வஃபாத்திற்குப் பிறகு அவர்களை ஒரு நண்பர் கனவில் கண்டு கேட்டார்:

"இமாம் அவர்களே தங்களின் நிலை எவ்வாறு உள்ளது? தங்களை ரப்பு எவ்வாறு நடத்தினான்.?

"அல்லாஹ் என்னை மன்னித்தான். சுவனத்தில் உயர்ந்த இடத்தில் வைத்து சிறப்பித்தான். யா அல்லாஹ் ! இந்த சிறப்பு எனக்கு எப்படிக் கிடைத்தது? என்று கேட்டேன்.

அவன் கூறினான்: "நீங்கள் ஒருநாள் இரவில் கண்விழித்து கிதாபு எழுதிக் கொண்டிருந்தீர்கள். ஒரு ஈ பசியுடன் பறந்து வந்து உங்கள் எழுதுகோலின் நுனியில் அமர்ந்தது மைக்குடித்து பசியைத் தீர்த்துக் கொள்வதற்காக. இதைக் கண்ட நீங்கள் அது அமைதியாகக் குடிக்கும் வரை சிறிது நேரம் அந்த எழுதுகோலை அசைக்கவில்லை. இந்த ஒரு சிறிய கருணை என்னைக் கவர்ந்தது. அதனால் உங்களுக்கு நான் என் கருணையைக் காட்டினேன்" என்றான்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 4

(படைத்தவனுக்கு நாம் அடிபணிந்தால், படைப்பினங்கள் நமக்கு அடிபணியும் )

ஒருநாள் ஒரு கிழவி கைருன் நஸ்ஸாஜ் (ரஹ்) அவர்களிடம் வந்து தமக்கு "ஒரு மஸ்லிமின் துணிநெய்து தர வேண்டும்" என்று கூறினாள்.

( நஸ்ஸாஜ் என்றால் நெசவாளர் )

"நல்லது நெய்து தருகிறேன்" என்று கூறினார் அவர்.

"அதன் கிரயம் என்ன ?" இது கிழவியின் அடுத்த கேள்வி,

"நீயோ கிழவி. ஏழை, உன்னிடம் அதன் கிரயமாக என்ன கேட்பது என்றே எனக்குப் புரியவில்லையே. சரி; நூல் கிரயம் ஒரு திர்ஹம் வரும். அதைக் கொண்டு வந்து கொடுத்தால் போதும், அதைக் கொண்டு நூல் வாங்கி இலவசமாக உ னக்குத் துணி நெய்து தந்துவிடுகிறேன்" என்றார் அவர்.

'சரி. அப்பா! அவ்விதமே செய்கிறேன்" என்று கூறிச் சென்ற அக்கிழவி, சற்றுத்தொலை சென்றதும் மீண்டும் வந்து, "நாளை இங்கு நான் வரும்பொழுது, நீ இங்கு இல்லாவிட்டால் எவரிடம் பணத்தைக் கொடுப்பது?" என்று வினவினாள்.

"நான் இங்கு இல்லாவிட்டால், எதிரிலுள்ள தஜ்லா ஆற்றில் அதனை எறிந்து விட்டுச் செல்" என்றார் அவர்.

"அடுத்தநாள் அக்கிழவி அங்கு வந்தபொழுது, கைருன் நஸ்ஸாஜ் அவர்களை அங்குக் காணவில்லை. எனவே அவர் கூறிய வண்ணம் தஜ்லா நதிக்குச் சென்று அதனை அந்நதியில் வீசி எறிந்து விட்டுச் சென்றாள். அது ஆற்றில் விழுந்ததும், அதனைத் தம் வாயில் கௌவியது ஒரு மீன்.

சற்று நேரம் கழித்து கைர் தஜ்லா நதியின் கரையோரம் வந்து உலாவிக் கொண்டிருந்தார். அவரைக் கண்டதும் அந்த மீன், கிழவி வீசிய அந்த திர்ஹத்தைக் கொண்டு வந்து, அவரின் காலடியில் வைத்துவிட்டுச் சென்றது.

அடுத்தநாள் கிழவி தன் தறிக்குழி வந்ததும், அவளுக்காகத் தான் தயாரித்து வைத்திருந்த துணியை எடுத்து அவளிடம் கொடுத்தார் அவர்.

அதனைப் பெற்றதும், தம் பொக்கை வாயில் புன்னகை மின்ன, "நூல் வாங்க என்ன செய்தாய் அப்பா... நீ கூறிய வண்ணம் ஒரு திர்ஹத்தை முன்பின் யோசியாது தஜ்லா ஆற்றிலல்லவோ வீசி எறிந்துவிட்டேன்" என்று கூறினாள் அவள்.

"அதைப்பற்றிக் கவலைப்படாதே, அம்மா! பணம் கிடைத்துவிட்டது. அதைக் கொண்டுதான் நூல் கற்றை வாங்கி நெய்தேன்" என்றார் அவர்.

"எவ்வாறு?" என்று வியப்புடன் வினவினாள் அவள்.

"அல்லாஹ் தந்தான்" என்று சுருக்கமாகப் பதில் கூறினார் அவர்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 5

( புறம் பேசுவது மட்டும் அல்ல, நினைத்தாலே அது புறம்தான் )

ஒரு நாள் ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்கள் ஷூனிஸியா பள்ளியில் ஒரு ஜனாஸாவை (பிரேதத்தை ) எதிர்பார்த்துக் காத்திருந்த பொழுது, ஓர் ஏழை அங்கிருந்த ஒவ்வொருவரிடமும் சென்று பிச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

அப்பொழுது அவர்கள் "இவர் இவ்வாறு பலரிடமும் சென்று இரந்துண்பதைவிட, ஏதேனும் தொழில் செய்து பிழைக்கலாமே" என்று எண்ணினர். இதன் பின் ஜனாஸாவும் வந்துவிடவே. அவர்கள் ஜனாஸாத் தொழுகையில் கலந்து, அவரை நல்லடக்கம் செய்துவிட்டு இல்லம் திரும்பினர்.

அன்றிரவு அவர்கள் களவொன்று கண்டார்கள். அக்கனவில் ஜனாஸா ஒன்று அவர்களின் முன் கொண்டு வந்து வைக்கப்பட்டது. அப்பொழுது அவர்களை நோக்கி "இதனை உண்ணும்" என்று எவரோ கூறுவது போல் இருந்தது.

"தான் மனிதர்களின் இறைச்சியை உண்பவனல்லவே" என்று அவர்கள் பதில் கூறினார்கள்.

"நேற்றுத் தான் இவருடைய இறைச்சியைத் தின்றீரே" என்று மீண்டும் ஒலி முழங்கியது.

யார் இவர் என்பதை அறிய அவர்கள் அந்தப் பிரேதத்தை நெருங்கிப் பார்த்தபொழுது, முந்திய நாள் பள்ளிவாயிலில் பிச்சை கேட்ட அந்த ஏழையின் பிரேதமாக அது தென்பட்டது.

அப்பொழுதும் அவர்களின் வாய் "நான் அவரைப்பற்றி யாதொன்றும் புறம் பேசவில்லையே" என்று முணுமுணுக்க,

"உம் போன்றோர் மனத்தால் பிறரைப் பற்றித் தவறாக எண்ணுவது கூட பாமரர்கள் நாவால் பிறரைப் பற்றிப் புறம் பேசுவதற்கு நிகராகும். இருவருக்கும் ஒன்று தான்" என்று மீண்டும் அவ்வொலி முழங்கியது.

உடனே திகிலுற்று விழித்தெழுந்த அவர்கள், இரண்டு 'ரகஅத்' தொழுது இறைவனிடம் தம் பாவம் பொறுத்தருளுமாறு இறைஞ்சிவிட்டு இறைவனை வழுத்திக் கொண்டிருந்தனர்.

பொழுது புலர்ந்ததும் அந்த ஏழையைத் தேடிப் புறப்பட்ட அவர்கள் அவரை ஆற்றோரத்தில் கீரைகளைப் பறித்துக் கொண்டிருப்பதைக் கண்டனர்.அவர் அவர்களைக் கண்ணுற்றதும்,

"ஜூனைத்! நீர் செய்த பாவத்திற்கு இறைவனிடம் மன்னிப்பு இறைஞ்சி விட்டீரல்லவா?" என்று வினவினார் அந்த ஏழை.

"ஆம்" என்று அவர்கள் மறுமொழி பகர்ந்ததும்,

وَالَّذِيْنَ اِذَا فَعَلُوْا فَاحِشَةً اَوْ ظَلَمُوْۤا اَنْفُسَهُمْ ذَكَرُوا اللّٰهَ فَاسْتَغْفَرُوْا لِذُنُوْبِهِمْ وَمَنْ يَّغْفِرُ الذُّنُوْبَ اِلَّا اللّٰهُ وَلَمْ يُصِرُّوْا عَلٰى مَا فَعَلُوْا وَهُمْ يَعْلَمُوْنَ

தவிர, மானக் கேடான ஏதேனும் ஒரு செயலை அவர்கள் செய்துவிட்டாலும், அல்லது (ஏதேனும் பாவத்தினால்) தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்டாலும் உடனே அவர்கள் (மனப்பூர்வமாக) அல்லாஹ்வை நினைத்து தங்கள் பாவங்களுக்காக மன்னிப்புத் தேடுவார்கள்; அல்லாஹ்வைத் தவிர வேறு யார் பாவங்களை மன்னிக்க முடியும்? மேலும், அவர்கள் அறிந்து கொண்டே தங்கள் (பாவ) காரியங்களில் தரிபட்டிருந்து விடமாட்டார்கள். (குர்ஆன் : 3:135)

என்ற திருவசனத்தை ஓதி, போம். இனிமேல் உம் உள்ளத்தைத் தீய எண்ணங்களை விட்டும் பாதுகாத்துக் கொள்ளும்” என்று கூறினார் அந்த ஏழை சூஃபி

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 6

( நீங்கள் சிறைக் கைதி, நான் இறைக் கைதி )



"அனல் ஹக் அனல் ஹக்" - நானே இறைவன் என்று கூறுவதாக ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கு விரோதமான விஷமிகளின் கிளர்ச்சி நாளுக்கு நாள் வலுப்பட்டுக் கொண்டு வந்தது. "அவரைக் கொன்றொழிக்குமாறு ஃபத்வா கொடுங்கள் இல்லையேல் நாங்கள் உம்மைக் கொன்றொழித்து விடுவோம்' என்று அவர்கள் கூக்குரலிட்டார்கள்.

அப்பொழுது மார்க்க விற்பன்னர்கள், அவர்களை நோக்கி "அவர் ஷரிஅத்துக்கு விரோதமாக எழுதிய ஏதாவதொன்றைச் சான்றாகக் காட்டாத வரையில், நாங்கள் அவர் மீது கொலைத் தண்டனை விதியோம்" என்று கூறினார்கள்.

இப்பொழுது சிறையிலே நூதன சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. ஓரிரவு ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் ஆங்குச் சிறை வைக்கப்பட்டிருந்த முந்நூறு கைதிகளையும் நோக்கி, "நான் உங்களை விடுதலை செய்யவா?" என்று வினவினர்.

அது கேட்ட கைதிகள், "எங்களை விடுதலை செய்வதாகக் கூறும் நீங்கள் ஏன் முதலில் உங்களையே விடுதலை செய்துகொள்ளக் கூடாது ?" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர்கள், "நானோ இறைவனின் கைதி, நீங்களோ கலீபாவின் கைதிகள். நீங்கள் விரும்பின் உங்களை விடுதலை செய்து விடுகிறேன்" என்று கூறினர்.

"எவ்வாறு?" என்று அவர்கள் வினவினார்கள்.

"இவ்வாறு தான்" என்று கூறி அவர்கள் தம் கட்டு விரலால் சாடை செய்தனர். அடுத்த கணம் அவர்களைப் பிணைத்திருந்த தளைகளெல்லாம் சுக்கு நூறாகத் தெறித்துச் சிதறின. அது கண்டு கைதிகளுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

"நல்லது, கதவு பூட்டப்பட்டுள்ளதே. நாங்கள் எவ்வாறு வெளியே செல்வோம்?" என்று அவர்கள் வினவினார்கள்.

ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் தங்களின் சுட்டுவிரலை மீண்டும் அசைத்தார்கள். சிறைச் சுவர் ஒன்று மெதுமெதுவாகப் பிளந்தது. அதனை அவர்கள் சுட்டிக்காட்டி, "இதன் வழியே செல்லுங்கள்!" என்று கூறினர்.

''தாங்களும் வரவில்லையா?" என்று கைதிகள் வினவினார்கள்.

"இல்லை, எனக்கும் இறைவனுக்கும் இடையே ஓர் இரகசியம் இருக்கிறது. அதனை நான் தூக்குமேடையில் வைத்து வெளியிட வேண்டும். நான் இறைவன் கைதி. அவனே என்னுடைய எசமானன். நான் அவனுடைய வேதக்கட்டளைகளுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும்" என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

இதன்பின் அச்சிறையிலிருந்து முந்நூறு கைதிகளும் அப்பிளவின்

வழியே வெளியேறி ஓடினார்கள்.

கைதிகள் அனைவரும் தப்பி ஓடிய செய்தி விடிந்தபின் தான் சிறைக்காவலர்களுக்குத் தெரியவந்தது. அவர்கள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை அணுகி "எங்கே கைதிகள்?" என்று வினவினர். அவர்களை நான் விடுதலை செய்துவிட்டேன்' என்று ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் அமைதியாகப் பதிலிறுத்தார்கள்.

"அவ்விதமாயின் தாங்கள் ஏன் செல்ல வில்லை?" என்று அவர்கள் வினவினர். அதற்கு அவர்கள், "என் எசமானன் என்னோடு கோபமாக இருக்கிறான். எனவே தான் எனக்கு இத்தண்டனை விதித்துள்ளான். எனவேதான் நான் எங்கும் போகாது இங்கேயே இருக்கிறேன்" என்று பதில் மொழிந்தார்கள்.

இச்செய்தி கலீபாவுக்கு எட்டியதும், அவருக்குக் குலைநடுக்கம் ஏற்பட்டது. "இனிமேல் நாடெங்கணும் அராஜகம் நிலவுமே, என் செய்வது? என்று அவர் அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸுடன் ஆலோசனை கலந்தார். "ஹல்லாஜைக் கொன்றொழிப்பதே இனிச் செய்ய வேண்டிய வேலை" என்று கட்டளையிட்டார் கலீபா.

விரைவில் மார்க்க விற்பன்னர்களின் பேரவை கூட்டப்பட்டது. அதிலே மார்க்க விற்பன்னர்கள் தங்கள் தங்களின் கருத்துக்களை வன்மையுடன் எடுத்துரைத்தார்கள். ஹல்லாஜ் (ரஹ்) அவர்களும் ஆங்குக் கொணரப்பட்டு விசாரிக்கப்பட்டார்கள்.

அப்பொழுது அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸ் தம் சட்டைப் பையிலிருந்து ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் தம் கைப்பட்டு எழுதிய கடிதம் ஒன்றை எடுத்து "இது நீர் எழுதியது தானா?" என்று வினவினார்.

அதனை வாங்கிப் பார்த்த ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், "ஆம்; அது நான் எழுதியது தான்" என்று திடமாக மறுமொழி பகர்ந்தார்கள்.

அதிலே அருளாளனும் அன்புடையோனுமாகியவனிடமிருந்து இன்னாருக்கு எழுதப்பட்டது என்று குறிப்பிட்டுள்ளீரே, அவ்விதமாயின் இறைத்துவம் உமக்கு உண்டு என்று கூறுகிறீரா?" என்று வினவினார் அமைச்சர்.

"அவ்விதம் நான் கூறவில்லை. ஆன்மீக நிலையின் சாரமே அதுதான். எழுதுகின்றவன் இறைவன் தானே. மனிதனின் கை இறைவன் பயன்படுத்தும் ஒரு கருவியைத் தவிர வேறென்ன?" என்று பதிலிறுத்தார்கள் அவர்கள்.

"உம்முடைய இக்கருத்தை ஏற்றுக் கொள்வார் எவரேனும் உண்டா?" இது அமைச்சரின் அடுத்த கேள்வி.

"ஏன் இல்லை? இப்னு அதா இருக்கிறார். அபூ முஹம்மது அல் ஜூரைரீ இருக்கிறார். அபூபக்ர் ஷிப்லீ இருக்கிறார். ஆனால் முதலாமவர் என் கருத்தை முழுக்க முழுக்க ஏற்றுக் கொள்வார். மற்ற இருவரும் மனத்திற்குள் என் கருத்தை ஏற்றுக் கொண்ட போதினும், வெளியிலே எடுத்துரைக்கத் தயங்குவர்" என்று கூறினர்.

இதன்பின் அல் ஜூரைரி ஆங்கு வரவழைக்கப்பட்டு இது பற்றி விசாரிக்கப்பட்டார்.

"இவ்விதம் கூறுபவர் ஓர் இறை மறுப்பவர் (காஃபிர்) ஆவார். அவர் கொல்லப்பட வேண்டும்" என்று கூறினார் அல் ஜூரைரி.

பின்னர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் அழைத்து வரப் பெற்று விசாரிக்கப்பட்டார்கள்.

"இவ்வாறு கூறாது தடுத்து நிறுத்தப்பட வேண்டும்" என்று அவர்கள் பட்டும் படாதது போல் பதிலுரைத்தார்கள்.

இப்னு அதாவை விசாரித்த பொழுது, ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் கூறியதை ஒப்பினார் அவர்.

இறுதியில் மரண தண்டனை நிறைவேற்றப்பட வேண்டும் என தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 7

( தன் வினை தன்னைச் சுட்டது )



ஒருநாள் நத்ஹர் வலி (ரஹ்) அவர்கள், பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களை அருகழைத்து, அவர்களுக்குக் கிலாஃபத் நல்கி, தங்களின் பல்துலக்கும் குன்னிமரக்குச்சியையும் அவர்களிடம் கொடுத்து ''இதனை எடுத்துக் கொண்டு பயணம் புறப்படும். இராத் தங்குமிடத்தில் இதனை மண்ணில் ஊன்றி வையும். வைகறையில் இது எந்த இடத்தில் முளைத்திருக்கிறதோ அதனையே உம்முடைய தங்குமிடமாக ஆக்கி, தீன் சுடர்கொளுத்தி வாரும்' என்று கூறினர்.

அவ்விதமே அவர்கள் புறப்பட, அவர்களுடன் இருநூறு பக்கீர்களும் சேர்ந்து கொண்டார்கள்.

ஊர், ஊராக அவர்கள் தங்கிக் கொண்டே சென்றார்கள். தங்குமிட மெல்லாம் அக்குச்சியை ஊன்றி வைத்தார்கள்.ஒன்றிலேனும் அது தளிர்க்கவில்லை.

ஓரிரவு அவர்கள் ஒரூரை அடைந்து, அங்கு இராத் தங்கினர், வழக்கம் போல் தம்குருநாதர் தந்த குன்னிமரப் பல்குச்சியை அவ்விடத்தில் நட்டிவிட்டுத் துயில் கொண்டனர். வைகறைத் தொழுகைக்கு எழுந்த அவர்களின் பார்வை, அந்தப் பற்குச்சியின் மீது எதிர்பாரா வண்ணம் பட அது தளிர்த்திருந்தது அவர்களுக்குத் தெரிய வந்தது.

உடனே அவர்கள் தம்முடன் வந்திருந்த பக்கீர்களை அழைத்து அந்த அற்புதத்தைக் காட்டினர். அவர்களும் தங்களின் கண்களைத் துடைத்துக் கொண்டு அதனை உற்று உற்றுப் பார்த்து."ஆம், ஆம்'' என்று கூறியவண்ணம் மகிழ்ச்சித் கூத்தாடினார்கள். இதுவே தங்களின் தங்குமிடம் என்பதை உணர்ந்து கொண்ட அவர்கள்,'இவ்வூரின் பெயர் என்ன? இவ்வூரின் பெயர் என்ன?" என்று ஒருவர் மற்றொருவரைக் கேட்டுக் கொண்டார்கள்.

ஒருவருக்குமே அவ்வூரின் பெயர் என்னவென்று தெரியவில்லை. அப்பொழுது அவ்வழியே சில வழிப்போக்கர்கள் செல்ல, அவர்களிடம் அந்த ஊரின் பெயர் யாது என்று வினவினர். 'பில்குண்டா' என்று பதி லுரைத்து விட்டுச் சென்றார்கள் அவர்கள். அப்பொழுது பக்கீர்களுடைய வாய்களும் பில்குண்டா, பில்குண்டா என்று முணுமுணுத்தன. இப்பொழுது ஆந்திர மாநிலத்தில் அனந்தப்பூர் மாவட்டத்தில் பெனு கொண்டா என்று வழங்கப் பெறும் ஊரே அது.

அடுத்த நாள் இரவு அவர்கள் அங்குள்ள கோயிலின் முற்றத்தில் தங்கித் துயில் புரிந்தனர். இது அரசனுக்குத் தெரியவரவே அவன் ஆட் களை அனுப்பி அவ்விடத்தை விட்டும் அகலுமாறு அவர்களுக்கு ஆணையிட்டான். அன்றிரவு மட்டும் அங்குத் தங்கிவிட்டுச் செல்வதாக அவர்கள் கூறினர்.

இந்த நியாயமான கோரிக்கை அவனுக்கு அவமதிப்பு போன்று தோன்றியது. அவர்களைப் பட்டினி போட்டுத் தண்டிக்க எண்ணிய அவன் தம் படையினரை அனுப்பி, அக்கோயிலைச் சூழ்ந்து கொள்ளுமாறும், எவரையும் வெளியே செல்ல அனுமதிக்க வேண்டா மென்றும் கண்டிப்பாக உத்திரவிட்டான், அவ்வாறே அவர்கள் செய்தார்கள்.

கோயில் முற்றத்தில் தங்கியிருந்த பக்கீர்கள் விடிந்தெழுந்ததும், தொழுது விட்டு அவ்விடத்தை விட்டும் நீங்க முற்பட்ட பொழுது அவர்கள் இராணுவ வீரர்களால் தடுத்து நிறுத்தப்பட்டார்கள். காரணம் வினவப்பட்ட பொழுது, அவர்கள் 'அரச ஆணை' என்று மட்டும் பதில் கூறினார்கள். பக்கீர்களுக்கோ இந்த அரச ஆணை புரியாத புதிராக இருந்தது.

முற்றுகை பல நாட்கள் நீடித்தது. பக்கீர்கள் கொண்டு வந்திருந்த

உணவுப் பொருள்களெல்லாம் முடிந்துவிட்டன. இனி யாது செய்வதென

அறியாது அவர்கள் கலங்கினார்கள். பசி அவர்களின் வயிற்றைக் கிள்ளியது. அப்பொழுது கொழுத்த கோயில் காளை ஒன்று அவர்களின் முன் எதிர்ப்பட அதனைப்பிடித்து அறுத்துக் கறி சமைத்துத் தாமும் உண்டு தம் குருநாதர் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களின் முன்பும் அக்கறியைக் கொண்டு போய் வைத்து 'உண்ணுக' என்று வேண்டி நின்றனர்.'

"கறி ஏது? என்று வினவிய அவர்களிடம், விவரத்தைக் கூறினார்கள் பக்கீர்கள். அது கேட்டு மகிழ்ந்து பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களும் அதனை உண்டு பசி தீர்ந்து அமர்ந்திருந்தனர்.

கோயில் காளையைப் பக்கீர் கூட்டத்தினர் அறுத்துச் சமைத்து உண்ட செய்தி அரசனின் செவிப்பட்டதும் அவனுக்கு ஏற்பட்ட சினத்திற்கு அளவே இல்லை. உணர்ச்சி மீக்குற்ற அவன் தானே சென்று அவர்களைத் தண்டித்து வரக் கிளம்பினான்.

நேரே பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களின் திருமுன் வந்த அவன், தன்வாய் அம்புகளை அவர்களின் முன் வீசி எறிந்தான். அவற்றால் சிறிதேனும் அமைதி குலையாது அவன் கூறுவது அனைத்தையும் புன்முறுவலுடன் கேட்டுக் கொண்டிருந்த அவர்கள்,

"நல்லது; உமக்குக் காளை தானே வேண்டும்?" என்றார்கள். "ஆம்; காளைதான் வேண்டும். அதே காளை தான் வேண்டும்” என்று, 'அதே' என்ற சொல்லை அழுத்தமாகக் கூறினான் அவன்.

உடனே பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள் தாம் உண்ட பின், அங்கு சிதறிக் கிடந்த அந்தக் காளையின் எலும்புகளைத் தம் திருக்கரத்தால் ஒருங்கு கூட்டி, 'காளையே எழுந்திரு' என்று பணித்தார்கள். என்ன வியப்பு! கணம் அந்தக் பொலிகாளை பொலிவுடன் எழுந்து நின்றது.

அதைக் கண்டதும் அரசனுக்கு ஏற்பட்ட வியப்பிற்கும், அச்சத்திற்கும் அளவில்லை. தாம் சாதாரண பக்கீர் என்று எண்ணிய அவர், மாபெரும் மகானாக இருப்பதைக் கண்டதும், அவனை ஒருவித நடுக்கம் ஆட்கொண்டது. உள்ளமும் உடலும் சேர்ந்து உதற, அவர்களின் தாள்களில் வீழ்ந்து மன்னிப்புக் கோரினான் அவன். பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள் அவனைப் பெருமனத்துடன் மன்னித்தார்கள்.

அரண்மனை திரும்பிய அரசனின் உள்ளத்தில் என்னவென்னவோ தீய எண்ணங்களெல்லாம் ஒன்றின் பின் ஒன்றாகப் படையெடுத்தன. அவர்களைக் கொன்றொழித்தால் தான், தாம் சுதந்திர மன்னனாக வாழ இயலுமென்றும், இல்லையேல் என்றென்றும் அவர்களின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டிய துர்ப்பாக்கிய நிலையே தமக்கு ஏற்படும் என்றும் கருதிய அவன், அவர்களைக் கொன்றொழிக்க சதி சூழ்ந்தான்.

நஞ்சிட்ட தின்பண்டங்களைத் தயார் செய்து அவர்களுக்குக் காணிக்கையாக அனுப்பி வைத்தான்.

அவனின் உள்ளத்தின் ஒவ்வோர் அசைவையும் தம் உள்ளுணர்வால் விளங்கி வந்த பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள், தம்முன் அரசனின் காணிக்கையான தின்பண்டக் கூடை வந்து இறங்கியதும், புன்முறுவல் பூத்தார்கள்.

பின்னர் அதில் தம் திருக்கரத்தை இட்டு ஐந்து பண்ணியங்களை எடுத்துத் தம் முன் வீற்றிருந்த ஐந்து பக்கீர்களுக்கு ஆளுக்கு ஒன்று வீதம் கொடுத்தார்கள். அவர்கள் அவற்றைப் பெற்றுச் சுவைத்துச் உண்டார்கள். அந்நஞ்சால் அவர்களுக்கு யாதொன்றும் செய்ய இயலவில்லை. ஆனால், அவர்கள் அவற்றைச் சுவைத்துத்தின்னத் தின்ன அந்நஞ்சு அரசனின் வயிற்றிற்குள் இறங்கினாற் போன்று அவனுக்குத் தாங்கவொண்ணா வலியை உண்டு பண்ணியது.

அவர்களின் தாடை அசைய,அசைய அவனின் வயிற்றை வலி கௌவிப்பிடித்துப் பிசையலாயிற்று. வலிதாங்க இயலாது அலறினான் அவன். அரண்மனை மருத்துவர்கள் ஓடோடி வந்து மருந்து கொடுத்தும், அதனால் யாதொரு பயனுமில்லை. மந்திரவாதிகள் வந்து மந்திரித்தும் வலி தீரவில்லை.

தன் வினை தன்னைச் சுட்டது என்பதை விளங்கிக் கொண்ட அரசன், தம் மனைவியை பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களிடம் அனுப்பித் தம் தவற்றை மன்னிக்குமாறும், தன் வயிற்று வலி நீங்க இறைஞ்சுமாதும். வேண்டிக் கொண்டான்.

அரசி அவ்வாறே செய்ய அவர்கள் அரசன் அனுப்பிய பண்ணியங்களில் ஒன்றை எடுத்து, அரசியின் கையில் கொடுத்து அதனைத் தன் கணவனுக்குக் கொடுக்குமாறும், அதனை அவர் உண்டதும் வயிற்று நோய் நீங்கப் பெறுவார் என்றும் நன்மாராயம் மொழிந்தனர்.

தான் அனுப்பிய பண்ணியங்களில் ஒன்றே தன் பிணிதீர்க்கும் அரு மருந்தாக அனுப்பி வைக்கப்பட்டிருப்பதைக் கண்டதும், அரசனின் உள்ளத்தில் ஆயிரம், ஆயிரம் ஐயங்கள் தோன்றி மறைந்தன. எனினும் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களின் கூற்றில் நம்பிக்கை வைத்து அதனை உண்டான். உண்ட சில நிமிடங்களில், அவனைப் பீடித்திருந்த வயிற்று நோய் பஞ்சாய்ப் பறந்து விட்டது.

இதன்பின் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள் மீது அரசனுக்கு அளவற்ற பக்தி ஏற்பட்டது. இதன்பின் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள், அவ்விடத்திலேயே தங்கி ஆன்மீகச் செங்கோல் செலுத்தி வந்தார்கள். ஆண்டுதோறும் திருச்சி சென்று தம் குருநாதரைத் தரிசித்து வருவதைத் தங்களின் நீங்கா வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

அவர்களின் அடக்கவிடம் பெனுகொண்டாவில் இருக்கிறது. அங்கு அவர்களின் குருநாதரின் பற்குச்சி முளைத்துப் பெருமரமாக நிற்பதை இன்றும் காணலாம். பஞ்சுத் தொழிலாளர்கள் அவர்களைத் தங்களின் மகானாகக் கருதி, ஆண்டுதோறும் அவர்கள் நிர்யாணமடைந்த நாளாகிய ஜமாதில் ஆகிர் 11 ஆம் நாள் விழாவெடுத்து மகிழ்கின்றார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 8

( குத்பு )

தொண்டி அப்பா அப்பா ஷைகு அபூபக்ர் வலி (ரஹ்) அவர்கள் அவர்களின் மாண்பினைப் பற்றிக் கேள்வியுற்ற நவாப் முஹம்மது அலீ வாலாஜா, அப்பா அவர்களைத் தரிசிப்பதற்காகத் தொண்டி வந்தார்கள்.

வரும் பொழுது அவர்கள், உண்மையான மகானாய் அவர் இருப்பின் தாம் சென்றதும், தமக்குத் தாக சாந்திக்கு இளநீர் வெட்டித் தர வேண்டும் என்றும், அவ்விதம் வெட்டித் தரும் பொழுது, அவ்இள நீரிலிருந்து ஒரு மீன் துள்ளிக் குதிக்க வேண்டும் என்றும் எண்ணினார். அவ்விதமே நிகழ்ந்தது.

அதுகண்டு அவர்கள் உண்மையான மகான்தான் இவர் என்று உறுதிகொண்டு அவர்களிடம் தீட்சை பெற்றார் அவர்.

நவாப், அப்பா அவர்களை நோக்கி, "ஒரு காலத்தில் உலகில் நான்கு குத்புகள் இருப்பார்கள் என்று கூறப்படுகிறதே அவர்கள் யார், யார்?" என்று வினவினார்.

அதற்கு அப்பா அவர்கள், "இன்ன ஊரில் ஒருவர் வண்டி ஓட்டிக் கொண்டிருக்கிறார். அவர் ஒரு குத்பு. இன்ன ஊரில் இன்ன பெயருடைய ஒருவர் மாட்டுக்கு லாடம் அடித்துக் கொண்டிருக்கிறார். அவர் ஒரு குத்பு. இதோ தங்களுக்குப் பின்னால் நின்று தங்களுக்கு விசிறிக்கொண்டிருக்கிறாரே, அவர் ஒரு குத்பு," என்று கூறினர்.

உடனே நவாப் வியப்புடன் திரும்பிப் பார்க்க விசிறிக் கொண்டிருந்த அவர் நவாபிடம் , "தங்களின் முன் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கிறாரே, அவர் ஒரு குத்பு" என்று அப்பா அவர்களைச் சுட்டிக்காட்டிக் கூறிவிட்டு மறைந்து விட்டார் என்று கூறப்படுகிறது

நாகூரில் அடங்கப் பெற்றிருக்கும் ஷாஹுல் ஹமீது பாதுஷா நாயகத்தின் மீது அளப்பரும் மதிப்பும் மரியாதையும் கொண்டிருந்த அப்பா ஷைகு அபூபக்ர் வலி (ரஹ்) அவர்கள், அவ் ஆண்டகையின் அடக்க இடத்தைத் தரிசிக்க, தொண்டி யிலிருந்து கால்நடையாகவே நாகூர் சென்று வரும் வழக்கத்தை மேற் கொண்டிருந்தனர்.

நாகூர் தர்காவில் ஒரு சங்கிலி தொங்க விடப்பட்டிருந்தது. அதனைப் பிற்காலத்தில் குத்புஸ் ஸமானாக வருவோர் தாம் தொடுவர் என்று கூறப்பட்டு வந்தது. எத்தனையோ வலிமார்கள் அதனைத் தொட முயன்றும் அவர்களால் இயலாது போய்விட்டது.

நாகூர் வந்த அப்பா அவர்கள், இதைப் பற்றிக் கேள்வியுற்று, அச்சங்கிலியை நோக்கித் தம் அருட்கரத்தை நீட்ட, அது அவர்களின் கையில் வந்தமர்ந்தது.

இதனை கீழக்கரை தோன்றிய மேதகு ஞானியும், இறைநேசச் செல்வருமான கல்வத்து நாயகம் அவர்கள் தாம் எழுதிய சதக்கத்துல்லாஹ் அப்பா அவர்களின் வரலாற்றில் குறிப்பிடுகின்றார்கள்.

ஒருதடவை நோயால் வருந்திய புதுச்சேரி ஆளுநர் ஒருவர், தம் படையினருடன் நாகூர் வந்து, ஷாஹுல் ஹமீது பாதுஷா நாயகத்தின் அடக்க இடத்தைத் தரிசித்தார்.

அப்பொழுது சாஹிபுமார்கள் ஆண்டகை அவர்களின் பாதக் கட்டைகளை அவரின் தலைமீது வைக்க, அடுத்த கணமே அவரைப் பல்லாண்டுகளாகப் பீடித்திருந்த நோய் நீங்கியது. அது கண்டு பெரிதும் மகிழ்ந்த அவர், அப் பாதக் கட்டைகளை எடுத்துக் கொண்டு புதுச்சேரி புறப்பட்டு விட்டார். சாஹிபுமார்கள் எவ்வளவோ வருந்திக் கேட்டும் அவர் அவற்றைக் கொடுக்கவில்லை.

இதனை சாஹிபுமார்கள் ஆண்டகை அவர்களின் அடக்க இடத்தின் முன் நின்று முறையிட, அவர்கள் சாஹிபுமார்களில் ஒருவரின் கனவில் திருத்தோற்றம் வழங்கி,

"அவசரப்படாதீர்கள்! ஒருவர் வந்து, அதனை வாங்கித் தருவார்" என்று கூறி மறைந்தனர்.

அவர்கள் கூறியதற்கேற்ப சின்னாட்களில் நாகூர் வந்த அப்பா அவர்கள், அச்செய்தியைக் கேள்வி யுற்று புதுச்சேரி சென்று, அவ் ஆளுநரிடம் அப்பாதக் கட்டைகளைக் கேட்க, அவர் மறுவார்த்தை' பேசாது அவற்றை எடுத்து அவர்களிடம் கொடுத்து விட்டார். இதுவே அவர்களின் மௌலிதில்,

" வரத்த மின் புதுச்சேரி

கத்கா குத்பின் கபீரி

ஷாஹுல் ஹமீது ஷஹீரி

மஃசூப லந்தல் ஹராமி " - என்று குறிப்பிட்டுள்ளது.

## ஏகாந்த நிலையில் ஸூஃபியாக்கள் 9

( ஸூஃபியாக்களை சந்தித்த அனுபவம் பற்றி ஸூஃபி ஷகீக் பல்கி (ரஹ் )



"ஒரு தடவை நான் ஹஜ்ஜுச் செய்ய மக்கமா நகர் நோக்கிச் செல்லும் பொழுது காதிஸிய்யா என்ற இடத்தில் ஓர் ஆணழகரைக் கண்டேன். அவர் தூய்மையான வெண்ணாடை அணிந்திருந்தார். போர்வையைப் போர்த்திய வண்ணம் அவர் ஓரிடத்தில் அமர்ந்திருந்தார். அவர் ஒரு ஸூஃபியாக இருப்பாரோ என்று எண்ணிய நான் அவரைப் பார்க்க அவரின் அருகில் சென்றேன்.

அவர் என்னைப் பார்த்ததும் "ஷகீகே! ஒருவரைப் பற்றி வீணே ஐயம் கொள்வதை விட்டும் தங்களைக் காத்துக் கொள்ளுங்கள். சில வீண் ஐயங்களே பாவங்களாகின்றன " என்று கூறி விட்டு அவ்விடத்தை விட்டும் அகன்று விட்டார்.

முன்பின் அறியாத அவர் என் பெயரை உரைத்ததனாலும், உள்ளத்திலுள்ளதைக் கூறியதனாலும் அவர் இறையருள் பெற்ற நல்லடியாராகத் தான் இருப்பார் என்று எண்ணி அவரிடம் கேட்டுச் சில ஐயங்களைத் தெளிவுபடுத்திக் கொள்ள விரும்பி அவரின் பின்னே சென்றேன். ஆனால் அவரோ விறுவிறுவென நடந்து என் பார்வையை விட்டே மறைந்து விட்டார்.

நான் வாக்ஸாவை அடைந்த பொழுது அவர் அங்குத் தொழுது கொண்டிருப்பதைக் கண்டேன். அப்பொழுது அவருடைய உறுப்புகள் அனைத்தும் நடுங்கிக் கொண்டிருந்தன! அவரின் கண்களிலிருந்து நீர் தாரைதாரையாக வழிந்தோடிக் கொண்டிருந்தது. அவர் தொழுது முடிக்கும் வரை நான் அங்கேயே காத்திருந்தேன்.

தொழுது முடித்ததும் அவர் என்னை நோக்கி, ''ஷகீகே! இன்னீ ல கஃப்பாருன் லிமன் தஅப" (எவர் தௌபா (பாவமன்னிப்பு) செய்து திரும்பி விடுகிறாரோ அவரின் பாவத்தை நான் மன்னித்து விடுகிறேன்) என்ற திருவசனத்தை ஓதுவீராக!'' என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டும் புறப்பட்டு விட்டார்கள்.

அது கண்ட நான் "நிச்சயமாக இவர் ஓர் இறை நேசச் செல்வரே (அப்தாலே) யாவார். என் மனத்திலுள்ளதை இவர் இருமுறை கூறிவிட்டார்" என்று எண்ணினேன்.

இதன்பின் நான் மினாவை அடைந்த பொழுது அங்கே அவரை மீண்டும் கண்டேன். அவர் தம் கையிலே கூஜா ஒன்றை வைத்துக் கொண்டு கிணற்றருகே நின்று கொண்டிருந்தார். அவருடைய கையிலிருந்த கூஜா தவறி கிணற்றிலே வீழ்ந்துவிட்டது.

அப்பொழுது அவர் விண்ணை நோக்கிய வண்ணம் "இறைவனே! என்னிடம் அந்தக் கூஜாவைத் தவிர்த்து வேறொன்றுமில்லை என்பதை நீ நன்கு அறிவாய். எனவே அதனை என்னை விட்டும் பிரித்து விடாதே " என்று இறைஞ்சினார்.

அடுத்த கணம் கிணற்றின் நீர் பொங்கியது. அதன் மீது மிதந்து கொண்டு அந்தக் கூஜா வந்தது. அதனை எடுத்துத் தண்ணீர் மொண்டு அவர் 'உளு'ச் செய்து தொழுதார். அதன் பின் ஒரு மணல் மேட்டை நோக்கிச் சென்று சிறிது மணல் அள்ளி அந்தக் கூஜாவில் போட்டு அதனைக் கலக்கிக் குடித்தார்.

அப்பொழுது நான் அவரை அணுகி அவருக்கு 'ஸலாம்' உரைத்து,"தாங்கள் அருந்தியதில் எனக்கும் சிறிது தாருங்கள்" என்று கூறினேன்.

"ஷகீகே! இறைவனின் அருட்கொடை வெளிப்படையாகவும் அந்தரங்கமாகவும் உள்ளது. எப்பொழுதும் இறைவன் மீது நன்னம்பிக்கையே கொள்வீராக!" என்று கூறிவிட்டு அதில் சிறிது எனக்குத் தந்தார்.

இறைவனின் மீது ஆணையாக, நான் அதற்கு முன் அது போன்ற ஒரு பானத்தை அருந்தியதில்லை. அது அத்துணை மணமாகவும், ருசியாகவும் இருந்தது. அதனை அருந்திய பின் எனக்குப் பசியே ஏற்படவில்லை. பின்னர் அவர் அங்கிருந்தும் அகன்றார். அவரை நான் காணவில்லை.

இறுதியாக, நான் மக்கமா நகர் போய்ச் சேர்ந்தேன். ஒரு நள்ளிரவில் கஃபாவின் அருகில் ஓர் இளைஞர் தொழுது கொண்டிருப்பதைக் கண்டு அவர் தாம் முன்னர் பார்த்த அந்த இளவலாக இருப்பாரோ என்று எண்ணி அவரை நெருங்கி உற்று நோக்கினேன்.

ஆம்; அவர், அவரே தான். அந்த இளவலே தான். அவர் மிகவும் தாழ்மையுடன் தொழுது கொண்டிருந்தார். அவர் தொழுது முடித்ததும் அவருடன் உரையாடலாம் என்று எண்ணி நானும் காத்திருந்தேன்; காத்திருந்தேன்; வைகறை வரைக் காத்திருந்தேன். அதன்பின் வைகறைத் தொழுகை தொழச் சென்றேன். அவரும் வைகறைத் தொழுகை தொழுதார். தொழுது முடிந்ததும் கஃபாவை 'தவாப்' செய்யத் துவங்கி விட்டார். தவாப் செய்து முடிந்ததும் வெளியே வந்தார்.

அப்பொழுது மக்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு அவருக்கு 'ஸலாம்' உரைத்தார்கள். நான் அவர்களில் ஒருவரை நோக்கி அவர் எவரென விசாரித்தேன். அவர்கள் நபி திருப்பெயரர் ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களாவர் என்று அவர் பதிலுரைத்தார். அது கேட்டு எனக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை" என்று கூறி முடித்தார்கள் அவர்கள்

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 10

( கருவிலே வலியுல்லாஹ் )

ஹிஜ்ரி 470 ம் ஆண்டு ரமலான் மாதம் முதல் பிறையன்று (கி.பி 1078 மார்ச் 19 திங்கட் கிழமை இரவு ) அபூசாலிஹ் பின் மூஸா – பாத்திமா தம்பதியருக்கு ஹழ்ரத் கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி ரலியல்லாஹு அன்ஹு மகனாகப் பிறந்தார்கள். இவர்கள் பிறக்கும்போது இவர்களின் தாயாருக்கு வயது அறுபது.

இந்த மகான் பிறந்தபோது பல்வேறு அற்புதங்கள் நிகழ்ந்தேறின. இவர் பிறந்த தினத்தன்று அவர் தந்தையின் கனவில் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தோன்றி,

"அபூசாலிஹே! உமக்கு அல்லாஹுத் தஆலா அருந்தவப்புதல்வரை அளித்திருக்கிறான். அவர் எனக்கும் அல்லாஹ்வுக்கும் மிகப் பிரியமானவர். வலிகள், குதுபுகள் ஆகியோரிடையே அந்தஸ்து மிக்கவர்''என அறிவித்தார்கள்.

இவர்கள் கருவிலிருக்கும் போது இவரது அன்னையின் கனவில் ஹழ்ரத் கிலுறு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தோன்றி ''உமது கர்ப்ப அறையில் இருப்பவர் எல்லா வலிமார்களுக்கும் தலைவரான முஹ்யித்தீன் என்பவராவார் " என்று நன்மாராயம் கூறிச் சென்றனர்.

இவர்கள் பிறந்த இரவில் ஜீலான் நகர் முழுவதும் ஆயிரத்திற்கும் அதிகமான ஆண் குழந்தைகள் பிறந்தன. பெண்குழந்தைகள் ஒன்றுகூட இல்லை. இக்குழந்தைகள் யாவும் பிற்காலத்தில் பரிபூரணமான வலிகளாகவே திகழ்ந்தார்கள்.

ஒருமுறை ரமலான் பிறை ஒன்று அன்று இவர்கள் பால் அருந்தாதினால் அன்றுதான் ரமலான் பிறை ஒன்று என்று கணித்தார்கள். பின்னர் மார்க்கச் சட்டப்படி ரமலான் பிறை ஒன்று அன்றுதான் என்பதற்குரிய ஆதாரங்கள் கிடைத்தன.

மாண்பார் ரமலானின் முதல் நாள் பிறந்த அம் மாமகனார் கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி (ரஹ்) பகலிலே பால் அருந்தாது, இரவிலே மட்டும் பால் அருந்தியதும், அந்த ரமலான் மாதம் முடியும் வரை, அவர்கள் அவ்வாறே செய்து வந்ததும், அவர்களை ஈன்ற அன்னை தந்தையருக்கு மட்டற்ற வியப்பையும், மகிழ்ச்சியையும் நல்கின.

உண்மையில் தம் மகன் இறைவனின் பேரருள் பெற்றவரே என்பதை அவர்கள் எண்ணியபொழுது, அவர்களின் உள்ளத்தில் களி பேருவகை பொங்கித் துளும்பியது.

அடுத்த ஆண்டு ரமலான் முதல் பிறையைக் காண இயலா வண்ணம் கார்முகில் மறைத்த பொழுது, மக்கள் பிறை காணாது நோன்பு நோற்கயங்கினர்.விடிந்ததும் அவர்கள் ஆண்டகை அவர்களின் அன்னை யாரிடம் வந்து இதுபற்றி வினவியபொழுது,

அவர், தம் மகன் அன்று வைகறையிலிருந்து பால் அருந்தவில்லை என்றும், எனவே அன்று நான் முதற் பிறையாக இருக்கும் என்றும் கூறினார். அவர் கூறியது உண்மையாகவே இருந்தது. பக்கத்து ஊர்களில் அன்று பிறை கண்டதாகப் பின்னர் செய்தி வந்ததைச் செவியுற்றதும், மக்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

இவர்களின் இயற் பெயர் அப்துல் காதிர். சிறப்புப் பெயர் முஹ்யித்தீன். காரணப் பெயர் அபூ முஹம்மது. மக்கள் அழைப்பது கௌதுல் அஃலம் எனும் பெயர். இவர்கள் பிறந்த ஊர் ஜீலான் என்பதாக பொதுவாகச் சொல்லப்படுகிறது.

இவர் பிறந்த இடம் 'நீப்' என்றும் வேறு பலர் 'புஷ்தீர்' என்றும் கூறுகின்றனர். இந்த இரண்டும் ஒரே பெயராக இருக்கக் கூடும். என்றாலும், இவ்வூர்கள் ஜீலான் நகரைச் சார்ந்தவை என்பதில் சந்தேகமில்லை.

குத்பு நாயகம் அவர்களின் தாய், தந்தை ஆகிய இருவழிகளிலும் செய்யிதினா இமாம் ஹஸன், இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹுமா ஆகியோரின் வம்சத்தைச் சார்ந்தவர்கள்.

**Rahmath Rajakumaran**

கௌது நாயகம் அவர்கள் நீண்டநாள் வரை (50 வயது வரை ) திருமணம் செய்யாமல் இருந்தார்கள். இல்லற வாழ்க்கையில் ஈடுபடுவது ஆன்மீகத் துறையில் பிரவேசிப்பதற்குத் தடையாக இருக்கலாம் என்று அவர்கள் எண்ணியதே இதற்கு காரணம். ஒரு நாள் நபிகள் நாயகம் கனவில் தோன்றி, மணவாழ்க்கையில் ஈடுபட்டு சுன்னத்தை நிறைவேற்றுமாறு கட்டளையிட்டதற்குப் பின் அக்கட்டளைக்குப் பணிந்து நான்கு மனைவியரை மணந்தார்கள். இந்நால்வரிலிருந்து இறைவன் நாற்பத்தொன்பது பிள்ளைகளை இவ்வுலகில் தோற்றுவித்தான்.

மனைவியர்:

1. மீர் முஹம்மது ரஹிமஹுல்லாஹ் அவர்களது புதல்வியான ஹழ்ரத் மதீனா ஸாஹிபா ரஹிமஹுல்லாஹ்

2. ஸெய்யிது முஹம்மது ஷப்பி ரஹிமஹுல்லாஹ் அவர்களது புதல்வியான பீபீ ஸாதிக்கா ஸாஹிபா ரஹிமஹுல்லாஹ்

3. பீபீ ஹழ்ரத் மூமீனா ஸாஹிபா ரஹிமஹுல்லாஹ்

4. பீபீ ஹழ்ரத் மஹ்பூபா ஸாஹிபா ரஹிமஹுல்லாஹ்

புதல்வர்கள்:

1. ஸெய்யிது ஸைபுத்தீன் ரஹிமஹுல்லாஹ்

2. ஸெய்யிது ஷர்புத்தீன் ரஹிமஹுல்லாஹ்

3. ஸெய்யிது ஈஸா ரஹிமஹுல்லாஹ்

4. ஸெய்யிது அப்துர் ரஜ்ஜாக் ரஹிமஹுல்லாஹ்

5. ஸெய்யிது அப்துல் அஜீஸ் ரஹிமஹுல்லாஹ்

6. ஸெய்யிது அப்துல் வஹ்ஹாப் ரஹிமஹுல்லாஹ்

7. ஸெய்யிது ஸிராஜுத்தீன் ரஹிமஹுல்லாஹ்

8. ஸெய்யிது அப்துல் ஜப்பார் ரஹிமஹுல்லாஹ்

9. ஸெய்யிது ஷம்சுத்தீன் ரஹிமஹுல்லாஹ்

10. ஸெய்யிது தாஜுத்தீன் ரஹிமஹுல்லாஹ்

11. ஸெய்யிது அப்துல் முஇஸ்ஸி ரஹிமஹுல்லாஹ்

12. ஸெய்யிது இப்றாஹீம் ரஹிமஹுல்லாஹ்

13. ஸெய்யிது அபுல் பஜ்ல் ரஹிமஹுல்லாஹ்

14. ஸெய்யிது முஹம்மது ஜாஹித் ரஹிமஹுல்லாஹ்

15. ஸெய்யிது அபூபக்கர் ஜக்கரிய்யா ரஹிமஹுல்லாஹ்

16. ஸெய்யிது அப்துர் ரஹ்மான் ரஹிமஹுல்லாஹ்

17. ஸெய்யிது முஹம்மது ரஹிமஹுல்லாஹ்

18. ஸெய்யிது அபுன் நஸ்ரு மூஸா ரஹிமஹுல்லாஹ்

19. ஸெய்யிது ஜியாவுத்தீன் ரஹிமஹுல்லாஹ்

20. ஸெய்யிது யூசுப் ரஹிமஹுல்லாஹ்

21. ஸெய்யிது அப்துல் காலிக் ரஹிமஹுல்லாஹ்

22. ஸெய்யிது ஸைபுர் ரஹ்மான் ரஹிமஹுல்லாஹ்

23. ஸெய்யிது முஹம்மது சாலிஹ் ரஹிமஹுல்லாஹ்

24. ஸெய்யிது ஹபீபுல்லாஹ் ரஹிமஹுல்லாஹ்

25. ஸெய்யிது மன்சூர் ரஹிமஹுல்லாஹ்

26. ஸெய்யிது அப்துல்லாஹ் ரஹிமஹுல்லாஹ்

27. ஸெய்யிது யஹ்யா ரஹிமஹுல்லாஹ்

புதல்வியர்கள்:

1. ஆஃபியா பீ

2. யாசீன்பீ

3. ஹலிமா பீ

4. தாஜ்பீ

5. ஸாஹிதாபீ

6. தாஹிராபீ

7. உம்முல் பஸல்

8. ஷரீபாபீ

9. ஆபிதாபீ

10. கதீஜாபீ

11. ரஜிபீ

12. உம்முல்பத்ஹு

13. ஸஹராபீ

14. ஜமால்பீ

15. கைருன்னிசா

16. ஷாஹ்நாஸ்பீ

17. ஷாஹ்பீ

18. பாக்கிராபீ ரஹ்மத்துல்லாஹி அலைஹிம் அஜ்மஈன்

இருபத்திரண்டு பேரில் நான்கு பேர்களின் பெயர்கள் மட்டும் தெரியவில்லை.

நூல்: கலாயிதுல் ஜவாஹிர். தாரிக் பக்தாத்.

கௌதுல் அஃலம் இயற்றிய நூல்கள்

1. குன்யத்துத் தாலிபீன் 2. புத்தூஹுல் கைப் 3. பத்ஹுர் ரப்பானீ 4. கஸீதா கௌதிய்யா 5. பஷாயிருல் கைராத் 6. அல்பவாயிது வல் ஹிந்து 7.அழ்ழயூலாதுர் ரப்பானிய்யா 8. அல் மவாஹிபு ரஹ்மானிய்யா.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 11

( சூஃபியாக்களின் அழுகை )



வலிமார்களின் தன்னிகரில்லா தக்வாவை யாராலும் தரம் பிரித்து பார்த்திடவோ- சொல்லி முடித்திடவோ முடியாத – உயர்வான, ஒப்பற்ற, உன்னத இடத்தில் இருப்பதுதான் அவர்களின் இறையச்சம்.

ஹாத்திம் அஸம் (ரஹ்) அவர்களோ ஒரு மகான். இறைவனின் நல்லடியார். தம் காலத்தின் ஸித்தீக் (உண்மையாளர்) என்று ஜுனைத் (ரஹ்) அவர்களால் புகழப்பட்டவர்கள்.

ஒருநாள் அவர்கள் தம்மையே தாம் நோக்கி,

"மனமே! நீ உயரிய இடத்தில் அமர்ந்திருப்பதை எண்ணி மருளாதே. ஆதம் (அலை) அவர்கள் சுவனத்தில் தான் இருந்தார்கள். அவர்களுக்கு என்ன நேர்ந்தது என்பதைச் சிந்தித்துப் பார்.

நீ உன்னுடைய வணக்கத்தைப் பற்றிப் பெருமையுறாதே; இபுலீஸ் ஆயிரம், ஆயிரம் ஆண்டுகள் வணக்கம் நிகழ்த்தியவன் தான். எனினும் அவனுடைய கதி என்னதாயிற்று என்பதை நினைத்துப் பார்.

நீ அளவற்ற கல்விகளைப் பயின்றிருப்பதாகக் கர்வம் கொள்ளாதே. பல்கம் இப்னு பாகூர் கற்ற கல்விகளை விடவா நீ அதிகம் கற்று விட்டாய். அவன் தானாகவே இஸ்முல் அஃலத்தைக் கூட அறிந்து கொண்டானே. அவனைப் பற்றித் தானே, "அவனுக்கு உவமையாக ஓர் ஓநாயைக் கூறலாம். அதன்மீது பாரத்தை ஏற்றினாலும் அது இளைக்கும். ஏற்றாவிடினும் அது இளைக்கும்" என்ற திருவசனம் இறங்கியது. ( குர்ஆன் 7:176 )

மேலும் நீ சான்றோர் பலரைச் சந்தித்திருப்பதை எண்ணிப் பெருமையுறாதே. அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் உறவினர்களில் சிலர் அண்ணல் அவர்களைச் சந்தித்துக் கொண்டும் அவர்களுடன் உரையாடிக் கொண்டும்தான் இருந்தார்கள். எனினும் அவர்கள் இஸ்லாத்தைத் தழுவி நேர்வழி பெறவில்லையே" என்று கூறி அழுதனர்.

ஜனாஸாவை அடக்கம் செய்து விட்டு மக்களெல்லாம் சென்றபின்னும் ஹஸனுல் பஸரீ ( ரஹ்) அவர்கள் அந்த மண்ணறையில் உட்கார்ந்து அழுது கொண்டிருந்தார்கள். ஏன் அழுகிறீர்கள் என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "துன்யாவின் முடிவும், மறுமையின் ஆரம்பமும், இந்த மண்ணறைதான்" அப்படியிருக்க எப்படி உங்களால் சிரிக்க முடிகிறது என்று சொல்ல, அதைக் கேட்ட மக்களும் அழுததாக வரலாறு சான்று பகர்கிறது.

ஃபுழைல் இப்னு இயாழ் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், கொள்ளைக் கூட்டத்தின் தலைவராக இருந்த போது திருடுவதற்காக ஒரு வீட்டின் முகட்டில் ஏறி உள்ளே குதிக்கின்றார்கள். அந்த வீட்டில் ஒரு மங்கை மாமறையை ஓதிக் கொண்டிருக்கிறார்கள்.

أَلَمْ يَأْنِ لِلَّذِينَ آمَنُوا أَنْ تَخْشَعَ قُلُوبُهُمْ لِذِكْرِ اللَّهِ

“அவர்களுடைய இதயங்கள் அல்லாஹ்வையும், இறங்கியுள்ள உண்மையான வேதத்தையும், நினைத்து அஞ்சி நடுங்கும் நேரம் வரவில்லையா? குர்ஆன் (57:16) என்று அந்த பெண் ஓதிய திருவசனம் ஃபுழைல் இப்னு இயாழ் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் கல்பையே திசை திருப்பியது, மாபெரும் வலியுல்லாஹ்வாக மிளிர்ந்தார்கள்.

செய்யிது தாயிஃபா ஹழ்ரத் ஜுனைதுல் பஃதாதி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தான் வளர்த்த கிளிக்குக் கூட “அல்லாஹ் அல்லாஹ்” என்று திக்ரு செய்யக் கற்றுக் கொடுத்திருந்தார்கள். ஒரு சமயம் இவர்களும், கிளியும், திக்ரில் ஆழ்ந்திருக்கும் போது பூனை ஒரு ஒரு பூனை கிளியை கவ்விக் கொண்டு செல்ல, கிளியானது “அல்லாஹ்” என்ற திக்ரை மறந்து தன் கீ கீ என்று அதன் இயற்கை சப்தத்தில் அலறியது.

இதை கண்ணுற்ற ஜுனைதுல் பஃதாதி ( ரஹ்) அலைஹி அவர்கள் 'ஓ' என்று அழுதார்கள் , கிளி இறந்ததற்காகவா அழுகின்றீர்கள் என்று மக்கள் கேட்டபோது,

"இல்லை நிச்சயமாக இல்லை. நானும் மரணிக்கும் போது இந்த கிளியைப் போன்று அல்லாஹ்வை மறந்தவனாக, கலிமா வராமல் என் நிலை இருந்து விடுமோ என்ற அச்சத்தினால் அழுகிறேன்” என்றார்களாம்.

பொதுக் கழிப்பறைக்குச சென்ற இப்ராஹீம் இப்னு அத்ஹம் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை வாயிற் காப்பாளன் தடுத்து நிறுத்தினான். ஏன் தடுக்கின்றீர் என்று கேட்ட போது,

கூலி தராமல் உள்ளே போகமுடியாது என்று வாயிற் காப்பாளன் சொன்னபோது,

அதைக்கேட்ட இப்ராஹீம் இப்னு அத்ஹம் ( ரஹ்) அவர்கள் அழுத வண்ணமாக இருந்தார்கள். மக்களெல்லாம் அழுகைக்கு என்ன காரணம் என்ற போது ,

“ஷைத்தான்கள் குடியிருக்கும் இடத்திற்கு கூலி கேட்கப்படுகிறது ஆனால் “மறுமையில் நபிமார்களும், ஷுஹதாக்களும், குடியிருக்கும் அந்த சுவனத்தில் நுழைய இறைவன் என்ன கூலி கேட்பானோ தெரியவில்லையே” அதை நினைத்து அழுதேன் என்று சொன்னார்கள்.

ஸுப்யானுத் ஃதவரீ ( ரஹ் ) அவர்கள் இமாமாக நின்று தொழ வைக்கும்போது “ இய்யாக நஃபுது வஇய்யாக நஸ்தயீன்” என்ற ஆயத் வரும் போது அப்படியே மயக்கம் போட்டு கீழே விழுந்து விடுவார்களாம். இது பற்றி காரணம் வினவப்பட்ட போது,

“உன்னையே வணங்குகிறோம் உன்னிடமே உதவி தேடுகிறோம்” என்று ஓதி விட்டு ஏன் அதிகாரியிடத்திலும், ஆட்சியாளர்களிடத்திலும், உதவி கேட்டீர்கள் என்று நாளை மறுமையில் இறைவன் கேட்பானோ என்ற பயத்தில்" என்று சொன்னார்களாம்.

ஹாத்தமுல் அஸம்மு ( ரஹ்) அவர்களிடம் ஆஸிம் இப்னு யூஸுப் அவர்கள் கவலையுடன் வந்து 'அல்லாஹ்' என்று பெருமூச்சு விட்டார்கள். உடனே அருகில் இருந்த ஹாத்தமுல் அஸம்மு அவர்கள் 'என்ன நடந்தது என்று கேட்க, ஆஸிம் அவர்கள்

'ஹஜ்ஜுடைய பாக்கியம் கிடைக்காமல் போய் விட்டதே அதை நினைத்து நான் கவலையடைந்தேன் என்று சொல்ல,

உடனே ஹாத்தமுல் அஸம்மு அவர்கள் “என்னுடைய முப்பது வருட ஹஜ்ஜுடைய நன்மையை தருகிறேன் அதற்கு பதிலாக நீங்கள் இப்போது விட்ட கவலை தோய்ந்த 'அல்லாஹ்' என்ற பெருமூச்சை தாருங்கள்” என்று கூறி இருவரும் அமல்களை மாற்றிக் கொண்டார்கள்.

அந்த நேரம் ஒரு அசரீரி, “ஹாத்தமே ! நீங்கள் அழகிய வாணிபம் செய்தீர்கள். இதன் பலன் என்ன தெரியுமா ? ஹஜ் செய்த அனைவருக்கும் இதன் நன்மையை பங்கிட்டால் அத்துணை பேரும் சுவர்க்கம் சென்று விடுவார்கள் என்று அசரீரி மூன்று முறை ஒலித்தது.

ஹஸனுல் பஸரீ ( ரஹ் ) அவர்களின் விலாயத் மீது பொறாமைக் கொண்ட ஹஜ்ஜாஜ் இப்னு யூஸுப் , ஹஸனுல் பஸரீ அவர்களை தன்னுடைய அவையில் ஒரு நாயுடன் நிறுத்தி வைத்து,

நீர் சிறந்தவரா ?அல்லது இந்த நாய் சிறந்ததா ? என்று கேட்டார்.

உடனே ஹஸனுல் பஸரீ அவர்கள், “ஹஜ்ஜாஜ் ! இது பெரிய ஆச்சரியக் கேள்வி ஒன்றுமல்ல. சக்ராத் நேரத்தில் என் நாவு கலிமா சொன்னால் இந்த நாயை விட நான் சிறப்பானவன். ஒருவேளை அந்த பாக்கியம் இல்லையென்றால் நானல்ல என்னைப் போன்று ஆயிரம் ஹஸனுல் பஸரிகள் இருந்தாலும் அவர்களையெல்லாம் விட இந்த நாயே சிறந்தது என்று சொன்னார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 12

( இறைவனின் முன் எல்லாம் நாணமுறுகிறது )

மஃரூஃபுல் கர்கீ (ரஹ்) அவர்கள் வெளியில் நின்று கொண்டிருந்த ஒரு நாயின் அருகில் அமர்ந்து அதன் வாயில் ஒரு ரொட்டித் துண்டும் தம் வாயில் ஒரு ரொட்டித் துண்டுமாக வைத்து உண்டு கொண்டிருந்தனர்.

இதனை அவ்வழியே குதிரை மீது இவர்ந்து வந்த அவர்களின் மாமாவான அந்நகர ஆளுநரின் கண்கள் கண்டதும் அவருக்கு அடங்காச் சினம் ஏற்பட்டது.

"நான்கு பேர் நடமாடக்கூடிய இடத்தில் இவ்வாறு நீர் வீற்றிருந்து நாயுடன் உணவருந்திக் கொண்டுள்ளீரே. இது உமக்கு நாணமாக இல்லையா?" என்று அவர்களை நோக்கி ஆத்திரத்துடன் வினவினார்.

அதுகேட்ட மஃரூஃ புல் கர்கீ (ரஹ்) அவர்கள், "ஆம்; மாமா. நாணத்தின் காரணமாகவே நான் உணவின்றி வாடுகின்றவைகளுக்கு உணவளித்துக் கொண்டு வருகிறேன்" என்று பதிலிறுத்தனர்.

இதன்பின் தம் தலையை உயர்த்தி விண்ணிலே பறந்து சென்ற பறவை ஒன்றை அவர்கள் அழைத்தார்கள். அது அவர்களின் கையிலே வந்தமர்ந்து, தன் தலையையும், கண்களையும் தன் இறக்கைகளால் மூடிக் கொண்டு நாணிக்கோணிக் கொண்டு அமர்ந்திருந்தது.

அப்பொழுது மஃரூபுல் கர்கீ (ரஹ்) அவர்கள் தம் மாமாவை நோக்கி, "பார்த்தீர்களா, மாமா. இறைவனுக்கு முன் எல்லாப் பொருள்களும் நாணமுறுவதை" என்று கூறினார்கள்.

அதுகண்ட அவர் யாது கூறுவதென அறியாது திக்பிரமையுற்று அவ்விடத்தை விட்டும் அகன்றார் அவரின் மாமா.

**Rahmath Rajakumaran**

மஃரூபுல் கர்கீ (ரஹ்) அவர்கள் தங்களையே தாங்கள் சவுக்கால் அடித்துக் கொள்வர். அப்பொழுது அவர்கள், "நப்ஸே! நீ தூய்மையுடன் செயலாற்றுவாயாக! அவ்விதம் செய்தால்தான் நீ ஈடேற்றம் பெறுவாய்" என்று கூறுவார்கள்.

அவர்களை எவரேனும் அடித்தாலும் ஏசினாலும் அவர்கள் சினமுறாது அவை இறைவனால் தமக்கு நிகழ்ந்ததென எண்ணி அவற்றைப் பொறுமையுடன் ஏற்றுக் கொள்வார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 13

( ஷாதிலி அல்ல; ''ஷாஃத்துலீ '' )

ஷாதிலா நகரில் வந்து வாழ்ந்த இமாம் அபுல் ஹஸன் ஷாதலி (ரஹ்) ஆண்டகை அவர்களை, அவர்களின் திருப்பெயரோடு ஷாதிலி என்பதையும் சேர்த்த மக்கள் அழைக்கலாயினர். இது கண்டு ஆண்டகை அவர்களுக்குப் பெரு வியப்பாக இருந்தது.

'நான் பிறந்த ஊர் கிமாரா என்பதாக இருக்க, கிமார் என்றல்லவா மக்கள் என்னை அழைக்க வேண்டும். அதற்கு மாறாக ஷாதிலி என்று அழைக்கிறார்களே. இதுவென்ன வேடிக்கை!' என்று ஆண்டகை அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கும் பொழுது,

ஒரு நாள் இறைவனும் அவர்களை 'ஷாஃத்துலீ' என்று அன்போடு அழைத்தான். அப்பொழுது ஆண்டகை அவர்கள் இறைவனை நோக்கி, "இறைவ எம்பெரும! நான் ஷாதிலாவில் பிறக்காதிருக்க நீயும் என்னைப் பாமர மக்கள் போன்று, ஷாதிலி என்று அழைக்கக் காரணம் என்ன ?" என்று வினவினார்கள்.

அப்பொழுது இறைவன் "நான் உம்மை ஷாதிலி என்று அழைக்கவில்லையே" என்று பதிலிறுத்தான்.

"அவ்விதமாயின் நீ என்னை எவ்வாறு அழைத்தாய் ?" என்று ஆண்டகை அவர்கள் திடுக்கத்தோடு வினவினார்கள்.

இறைவன் சிரித்துக் கொண்டு. "நான் உம்மை 'ஷாஃத்துலி' என்று அழைத்தேன். அது பாமரர்கள் உம்மை அழைப்பது போன்று, நீர் வாழும் ஊரின் பெயரை ஒட்டியல்ல. என்னுடைய தனிப்பெரும் அன்பிற்கும், ஊழியத்திற்கும் உரியவர் என்ற பொருளில் ஃதாலுக்கு 'ஸத்' இட்டு ஷாஃத்துலீ என்று அழைத்தேன்" என்றான் இறைவன்.

அப்பொழுது ஆண்டகையின் உள்ளம் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கித் திளைத்தது.

இமாம் அபுல் ஹஸன் ஷாதலி (ரஹ்) அவர்கள், தம் ஆன்மீக மாணவர் அப்துல்லாஹ் இப்னு ஸலாமா (ரஹ்) அவர்களுடன். 'ஜபல் ஜப்ரான்' சென்று,இலை, தழைகளைக் கொண்டு நோன்பு திறந்து கடும்தவம் செய்து வந்தார்கள்.

இச்சமயத்தில் ஒரு நாள் அவர்கள், அம் மலை மீது வைத்து,'சூரத்துல் அன்ஆமை' ஓதிவரும் பொழுது, 'வ இன்தகுதில் குல்ல அதுலின்... யக்ஃபுரூன்" (சாத்தியமான) யாவற்றையும் (பாலிகள் தங்கள் வேதனைக்குப்) பிரதியாகக் கொடுத்த போதிலும், அது ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. இவர்கள் தங்கள் (தீய) செயல்களின் காரணமாகவே ஆபத்திற்குள்ளானவர்கள். இவர்களின் நிராகரிப்பின் காரணமாக, மிகத் துன்புறுத்தும் வேதனையுடன் (குடிப்பதற்குக்) கொதிக்கும் பானமே இவர்களுக்குக் கிடைக்கும் - குர்ஆன் (6:70) என்ற திருவசனம் வந்ததும், அதனை உணர்ச்சி மீக்குற்றுத் திரும்பத் திரும்ப ஓதினார்கள்.

அவர்கள் அதனை அசைந்து அசைந்து, ஓதும்பொழுது, அம்மலையும் அவர்களுடன் சேர்ந்து அசைந்தது. நிறுத்தினால் அம் மலையும் அசையாது நின்றது. இவ்வாறு அங்கு வீற்றிருந்து தவம் செய்து, ஓர் ஆண்டைக் கழித்த பின், ஆண்டகை அவர்கள் தூனிஸ் மாநகரம் புறப்பட்டார்கள்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 14

( ஹுமைதராவில் சந்திப்போம் )

இமாம் அபுல் ஹஸன் ஷாதலி (ரஹ்) அவர்களின் இறுதி அண்மிய பொழுது, அவர்கள் கனவொன்று கண்டார்கள். அக்கனவு பற்றிய விவரத்தை தம் மாணவர் அபுல் அஜாயிம் அவர்களிடம்,

"ஓரிரவு நான் கனவொன்று கண்டேன். இதில் நான் இறந்துவிட்டது போன்றும் என்னை ஒரு கிணற்றருகில் அடக்கம் செய்யப்பட்டது போன்றும், அக்கிணற்றில் சிறிதளவு தண்ணீரே இருந்தது போன்றும், அதுவும் கைப்பாக இருந்தது போன்றும், கண்டேன்.

அக்கனவு கண்டதிலிருந்து, அது பற்றியே எனக்கு நினைவாக இருந்து வந்தது. அப்பொழுது, எனக்கு அக்கிணறு மதுரமான நீரால் நிரம்பிவிடும் என்று அறிவிக்கப்பட்டது.'' அந்த இடம் எது என்று அறியாது இமாம் அபுல் ஹஸன் ஷாதலி (ரஹ்) ஆண்டகை அவர்கள் திணறிக் கொண்டிருக்கும் பொழுது,

இறைவனை நோக்கி, "இறைவ எம்பெரும! நாம் இருவரும் எப்பொழுது சந்திப்போம்?" என்று வினவினார்கள்.

அதற்கு இறைவன். "ஹுமைதராவில்" என்று பதிலிறுத்தான்.

இதிலிருந்து தம் அடக்கவிடம் ஹுமைதரா என்பதை உய்த்துணர்ந்து கொண்ட இமாம் அபுல் ஹஸன் ஷாதலி (ரஹ்) அவர்கள், அங்குப் புறப்பட ஆயத்தமானார்கள்.

இதன் பின் மண்வெட்டியும் கடப்பாறையும் எடுத்துக் கொள்ளுமாறு, ஆண்டகை அவர்கள் என்னிடம் கூறினார்கள்.

ஏன் என்று நான் விளவினேன் 'நம்மில் எவரேனும் இறந்துவிடின் கப்ர் தோண்டிக் கொள்ளமல்லவா ? என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

இதற்கு முன் எப்பயணத்தின் போதும், இவ்வாறு கூறாத அவர்கள் இப்பொழுது இவ்வாறு கூறுவது கண்டு, அங்கு அவர்கள் இறந்து அடங்கப் பெறப்போகின்றார்கள் என்பதை நாங்கள் உய்த்துணர்ந்து கொண்டு அவ்விதமே செய்தோம்.

ஹுமைதராவிற்கு பயணம் செய்தோம். அவர்கள் பொழுதுபட்ட பின் என்னை அழைத்து, 'இன்ன கிணற்றிற்குப் போய், ஒரு பாத்திரத்தில் தண்ணீர் மொண்டு வாரும்!' எனப் பணித்தார்கள்.

'அந்தக் கிணற்று நீர் உப்பு நீராயிற்றே. நம்மிடம் மதுரமான நீர் உள்ளதே' என்று நான் கூறினேன்.

அதற்கு அவர்கள் அந்தக் கிணற்று நீர் தான் வேண்டுமென்று கண்டிப்பாகக் கூறினார்கள்.

நான் அக்கிணற்றிற்குப் போய் ஒரு பாத்திரத்தில் தண்ணீர் மொண்டு கொண்டு வந்து அவர்களிடம் கொடுத்தேன். அதில் சிறிதை அருந்திவிட்டு, சிறிதை அப்பாத்திரத்திலேயே கொப்பளித்து, 'இதைக் கொண்டு போய் அந்தக் கிணற்றில் ஊற்றிவிடும்!' என்று கூறினார்கள்.

அவ்விதமே நான் செய்தேன். பின்னர் நான் அக்கிணற்றில் நீர் அள்ளி வாயில் வைத்துச் சுவைத்துப் பார்த்தேன். மதுரமாக இருந்தது.இன்றும் அந்தக் கிணற்று நீர் மதுரமாக உள்ளது. எக்காலத்திலும் அது கொஞ்சம் கூட வற்றியதில்லை.

"அன்றிரவு முழுதும் அவர்கள் படுத்திருந்த அறையிலிருந்து 'இலாஹீ, இலாஹீ' என்ற திக்ரின் சப்தம் வந்து கொண்டிருந்தது. பின்னர் ஸஹ்ரு நேரத்தில் அந்த சப்தம் ஓய்ந்தது. நாங்கள் உள்ளே நுழைந்து பார்த்தோம்.

ஆண்டகை அவர்கள் இறைவனின் திருச்சமூகத்திற்கு ஏகி விட்டார்கள். (இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்) இது நிகழ்ந்தது. ஹிஜ்ரி 656 ஷவ்வால் மாதம், பத்தாம் நாளிலாகும். அப்பொழுது அவர்களுக்கு வயது அறுபத்து மூன்று. அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அடி தழுவி அணுவத்தனை

விஷயத்திலும் நடந்த அவர்களின் மரணத்தின் வயதும் நபிகளாரின் 63 வயதை இனிதே ஞாகப்படுத்தியது.

படம் : ஹுமைதராவில் உள்ள இமாம் ஷாதிலி (ரஹ்) அவர்களின் அடக்கஸ்தலம்

பிறந்தது : 1196- மொராக்கோவின் டேன்ஜியர்ஸ் அருகில்

வபாத் : 1258- ஹுமைதாரா , எகிப்து

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 15

( உமர் வலி காஹிரி )

உமர் வலி காஹிரி இவர்கள் செய்கு அப்துல் காதிர் அவர்களின் மகனாக மாதிஹுர் ரஸூல் சதக்கத்துல்லாஹில் காஹிரி ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் மகளின் பேரராக பிறந்தார்கள்.

இவர்கள் முதலில் முஹம்மது நுஸ்கி என்ற பாலப்பா ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கல்வி கற்றார்கள். அவர்களிடம் பைஅத்தும் பெற்றார்கள்.

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களின் திருப் பேரரான ஸெய்யிது ஜிப்ரி தங்கள் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடமும் பைஅத்தும் கிலாபத்தும் பெற்றார்கள்.

ஒரு நாள் மொகுதூம் பள்ளியில் தொழ வைத்துக் கொண்டிருந்த போது, ஞான ஆசிரியர் ஸெய்யிது முஹம்மது புஹாரி தங்கள் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அழைப்பதைக் கேட்டார்கள். உடனே கண்ணூர் சென்றார்கள். அங்கு அவர்களிடம் பைஅத் பெற்றார்கள்.

மற்றொரு நாள் உமர் வலி அவர்கள் ஒருவழியே சென்று கொண்டிருக்கும் பொழுது ஆறு ஒன்று குறுக்கிட்டது. அதில் வெள்ளம் கரை புரண்டோடிக் கொண்டிருந்தது. எனினும் அவர்கள், அதனைப் பொருட்படுத்தாது. அதன்மீது வெகு எளிதாக நடந்து சென்று அக்கரை சேர்ந்தார்கள்

இந்த அற்புதத்தை இமை கொட்டாது பார்த்துக் கொண்டு நின்ற ஓர் இந்துத் தம்பதிகள், அவர்களை மகான் என உணர்ந்து, அவர்களை அணுகித் தமக்கு நீண்ட நாட்களாக மகப்பேறில்லாத குறையைக் கண்களில் நீர் ததும்ப எடுத்துரைத்தனர்.

அவர்கள் மீது இரங்கிய உமர் வலி அவர்கள் தம் வாயிலிருந்து. வெற்றிலையை அவர்களிடம் எடுத்துக் கொடுத்து, 'இதனை நீங்கள் அருந்துங்கள் உங்களுக்கு இறைவனருளால் ஓர் அழகிய ஆண் மகவு பிறக்கும். அதற்கு நானே வந்து என் பெயரைச் சூட்டுவேன்" என்று கூறினர்.

இதன்பின் பத்து மாதங்கள் சென்றன. உமர் வலி அவர்கள் கொச்சி சென்று, தம் ஞான குருவாம் சையிது முஹம்மது புகாரீ தங்கள் அவர்களின் திருமுன் கால்மடித்து அமர்ந்திருந்தனர். அப்பொழுது தாம் வெற்றிலை கொடுத்து தின்னச் செய்த இந்தத் தம்பதிகளுக்கு ஓர் ஆண் மகவு பிறந்த செய்தி உள்ளுணர்வு மூலம் அவர்களுக்குத் தெரிய வந்தது. உடனே அவர்கள் அவ் இடத்தை விட்டும் சற்று நகரலாயினர்.

இதனைப் பார்த்துக் கொண்ட அவர்களின் ஆசான் சையிது முஹம்மது புகாரீ தங்கள், அவர்களை நோக்கி,"என்ன, பிறந்த பிள்ளைக்கு உம் பெயர் சூட்டக் கிளம்பி விட்டீரோ?" என்று வினவினர்.

அதுகேட்டு பெரிதும் வியப்புற்ற அவர்கள், "ஆம்" என்று கூறித் தம் ஆசானிடம் விடைபெற்று அங்கிருந்து விரைவில் அந்த இந்துத் தம்பதிகள் வாழ்ந்த ஊரை அடைந்து, அவர்களின் இல்லம் சென்றபொழுது, அந்த இந்துத் தம்பதிகளுக்குத் தங்களின் கண்களையே தங்களால் நம்ப இயலவில்லை.

அவர்களின் காலில் வீழ்ந்து, அவர்களை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்று, தாம் பெற்றெடுத்த அன்புச் செல்வனை அவர்களின் மடிமீது வைத்தனர். அவர்கள் அக் குழந்தைக்கு உமரையன் என்று பெயர் சூட்டி கிழ்ந்தார்கள்.

உமரையன் வயது வந்த பின் அப்பா அவர்களின் அடக்க இடத்திற்கு வந்து ஆண்டுதோறும் காணிக்கை செலுத்தி வந்தார்

உமர் வலி காஹிரி இவர்கள் ஞானப் பாடல்கள் இயற்றி உள்ளார்கள். அரபி அகர வரிசைப் படி அல்லஃபுல் அலிஃப் எனும் அரபி கவிதையை இயற்றியுள்ளார்கள். இந்தக் கவிதை கேரளாவில் மிகவும் பிரபலமானது. அங்கு மத்ரஸாவில் பாடமாக போதிக்கப்படுகிறது.

இவர்கள் இயற்றிய 'இலாஹி கம் து பக்கினி' எனும் பைத் தமிழகம் மற்றும் இலங்கையில் பிரபலமானது.

இவர்களின் மறைவு ஹிஜ்ரி 1216 துல்கஃதா பிறை 14 (கி.பி.1804). அடக்கஸ்தலம் காயல்பட்டணம் ஸாஹிபு அப்பா தைக்கா.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 16

( "நீ மேன்மையுற வேண்டுமானால் உலகின் இன்ப சுகத்திற்கு விடை கொடுத்துவிடு" )

ஒரு நாள் தாவூத் தாயீ (ரஹ்) அவர்கள் கடைத்தெரு சென்று உயர்தர மான ரொட்டியும் காடியும் வாங்கி வந்தனர். அவற்றை அவர்கள் தம் முன் வைத்துக் கொண்டு

"நஃப்ஸே! நீ இவற்றை உண்பாயாயின் இறுதித் தீர்ப்பு நாளின் போது இறைவனின் திருமுன் இவற்றிற்கான கணக்கைக் கொடுக்க வேண்டும்," என்று கூறி, அவற்றை ஒதுக்கி வைத்து விட்டு, தம்மிடமிருந்த உப்புப் போடாது சுடப்பட்ட வரட்டு ரொட்டியை எடுத்து உண்டு பசி தீர்ந்தனர்.

மற்றொரு நாள் ஒருவர் அவர்களின் இல்லம் வந்த பொழுது நீர்க்குடம் ஒன்று வெயிலில் இருப்பதைக் கண்டதும் "அதனை ஏன் வெயிலில் வைத்துள்ளீர்கள்?" அதனை எடுத்து நிழலில் வைக்கக் என்று வினவிய பொழுது,

"நான் அதனை அங்கு வைத்த பொழுது நிழலாகத்தான் இருந்தது. இப்பொழுது அங்கு வெயில் வந்து விட்டது. குளிர்ந்த நீரைக் குடிக்க வேண்டும் என்பதற்காக அதனை நிழலில் எடுத்து வைப்பதற்கு இறைவன் முன்னிலையில் எனக்கு நாணமாக உள்ளது" என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.

வேறொரு நாள் அவர்கள் நோய்க்காக மருந்துண்டார்கள். அப்பொழுது அவர்களிடம் “வீட்டிற்குள் சென்று சற்று ஓய்வு கொள்ளுங்கள். அப்பொழுது தான் மருந்து நற்பயனளிக்கும்" என்று கூறப்பட்ட பொழுது

"மறுமை நாளில் இறைவன் என்னை "நீ ஏன் உன் சுய நலத்திற்காக வேண்டி அடியெடுத்து வைத்து நடந்தாய்?" என்று என்னிடம் கேட் பானோ என்று எனக்கு வெட்கமாக உள்ளது. எனவே உள்ளே போய் ஓய்வு கொள்ள மாட்டேன்' என்று அவர்கள் கூறி விட்டார்கள்.

ஒரு நாள் அபூஹனீஃபா (ரஹ்) அவர்களின் அருமைத் திருமகனார் ஹம்மாது அவர்கள் தாவூத் தாயீ (ரஹ்) அவர்களின் இல்லத்தின் அருகே நடந்து சென்ற பொழுது,

"நீர் ஒரு தடவை முள்ளங்கி வாங்கிக் கேட்டாய். வாங்கித் தந்தேன். இப்பொழுது பேரீத்தம் பழம் வாங்கித் திண்ண ஆசைப்பட்டு அதனை கேட்கிறாய். அதனை நான் ஒரு போதும் வாங்கித் தரமாட்டேன்" என்று அவர்கள் தமக்கே தாம் கூறிக் கொண்டிருப்பது அவர்களின் செவிப்பட்டதும் ஹம்மாது அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

அவர்கள் இறுதிவரை மணமுடிக்காது துறவறத்தையே மேற்கொண்டிருந்தனர். "தாங்கள் ஏன் மணமுடிக்கவில்லை" என்று ஒருவர் அவர்களிடம் வினவியபொழுது,

"என்னை நம்பிவரும் ஒருத்தியை நான் ஏமாற்ற விரும்பவில்லை " என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

'எவ்வாறு' என்று அவர் மீண்டும் வினவியபொழுது,

"நான் ஒரு பெண்ணை மணமுடித்துக் விரும்பி மணம் பேசினாலே நான் உன் அலுவல்களைக் கவனித்துக் கொள்கிறேன் என்று கூறுவதேயாகும்.

நான் என்னுடைய மதக் கடமைகளையும் உலகக் கடமைகளையும் ஒன்று சேர்த்துச் செய்ய இயலாதிருக்கும் நிலையில், நான் ஒருத்தியை மண முடித்துக் கொள்வதென்பது அவளை ஏமாற்றுவது. ஏமாற்றமுறச் செய்வது என்று பொருள்படுமேயன்றி வேறில்லை" என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.

நல்லது; தாங்கள் தங்களின் தாடியையாவது சிக்கறுத்துச் சீப்பால் சீவி விடக்கூடாதா? என்று அவர் மீண்டும் அவர்களை வினவியபொழுது,

"அவ்விதம் செய்வது அதனைச் செய்வதற்கு நான் ஓய்வைப் பெற்றிருக்கின்றேன் என்றல்லவோ பொருள்படும். அதன் மறு பொருள் நான் வேலையற்ற மனிதன் என்றல்லவோ ஆகும்" என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

ஒரு நாள் ஒருவர் அவர்களை அணுகித் தனக்கு அறிவுரை வழங்குமாறு வேண்டியபொழுது, நீ மேன்மையுற வேண்டுமானால் உலகிற்கு (இன்ப சுகத்திற்கு) விடை கொடுத்துவிடு" என்று அவர்கள் கூறினார்கள்

மற்றொரு நாள் ஒருவர் அவர்களிடம் இறையச்சத்தைப் பற்றி வினவியபொழுது,

"இறையச்ச உணர்வே மிகவும் மேலானதாகும். ஒருவன் உலக ஆதாயங்களுக்காகவே செய்லாற்றுவதாயிருந்தாலும் என்றாவது ஒரு நாள் அவனுடைய இறையச்ச உணர்வு அவனை நல்லவனாக்கி விடும். நல்லெண்ணத்தின் காரணமாக மூடன் அறிஞனாகவும் ஆகிவிடுவான் "

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 17

( ஒருவரை ஒருவர் சந்திக்காத இரு சூஃபியாக்கள் )

அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்களுக்கும் பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களுக்கும் வயதில் முப்பத்தொன்பது ஆண்டுகள் ஏற்றத்தாழ்வு இருந்தது. இருவரும் ஒருவர் மற்றொருவர் பார்த்தறியார்கள்.

ஆனால், அவர்கள் இருவரும், ஒருவர் மற்றொருவருக்கு அளித்து வந்த மரியாதையோ, அளவிட முடியாததாக இருந்தது. இருவரும் ஒருவர், மற்றவரின் மாண்பினை நன்கு உணர்ந்தவர்கள். எனவே ஒருவர், மற்றவருக்கு மரியாதை செலுத்தினார்கள்.

பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள், வஹிஸ்தானுக்குச் செல்லுங்கால் ஹர்கான் என்ற ஊர் வழியாகவே செல்வர். அவ்வூரின் எல்லையை அவர்கள் அடைந்ததும் அவர்கள் தங்களின் மூச்சை நன்கு இழுத்து விடுவார்கள். அதற்கான காரணம் வினவப்பட்ட பொழுது,

"திருடர்கள் நிரம்பிய இவ்வூரில், ஒரே ஒரு மனிதரின் வாடையையே நான் நுகர்கிறேன்.அவரின் பெயர் அலி என்பதாகும். ஆனால், அவர் என்னைவிட மூன்று படித்தரங்கள் மேலானவர். அவர் உழுதுண்டு வாழ்வார்" என்று கூறினார்கள்.

ஆனால் ஹர்கானில் பிறந்த அபுல் ஹஸன் (ரஹ்) அவர்களோ பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்தைத் தரிசித்து விட்டு, வெளியே வருங்கால், பின்னங்கால்களில் நடந்தே வெளியே வருவார்கள். வாயிலை அடைந்ததும், அங்குச் சற்று நேரம் நின்று,

"இறைவனே! பாயஸீதுக்கு நீ வழங்கிய அந்த ஆற்றலில் ஒரு பகுதியை அபுல் ஹஸனுக்கும் வழங்குவாயாக!" என்று இறைஞ்சிவிட்டே, அவ்விடத்தை விட்டும் அகல்வர்.

அப்பொழுது அவர்கள், "இவ்வுலகில் ஒரு மனிதர் உயிரோடிருக்கிறார் என்றால், அவர் பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் தாம்” என்று கூறுவர். இவ்வாறு பன்னிரண்டு ஆண்டு காலம் செய்து வந்தார்கள்.

ஒருதடவை அவர்கள் பாயஸீத் (ரஹ்) அவர்களின் அடக்க இடத்தின் முன் மரியாதையுடன் கைகட்டி நின்ற பொழுது, "அபுல் ஹஸன்! நேரம் வந்துவிட்டது. அமருங்கள்" என்று அடக்க இடத்திலிருந்து சப்தம்

வந்தது.

அது கேட்ட அவர்கள், "பாயஸீத் (ரஹ்) அவர்களே! எனக்கு உதவி வழங்குகள். ஷரீ அத்தின் இரகசியங்களை நான் விளங்கிக் கொள்ளவில்லை. அவற்றை விளங்கிக் கொள்ள எனக்கு அருள் கூறுங்கள்" என்று கூறினர்.

அப்பொழுது அவ் அடக்க இடத்திலிருந்து “நான் அடையப் பெற்ற இப்பதவி, தங்களின் பொருட்டால் எனக்குக் கிடைத்தது''என்று பதில் வந்தது.

அதுகேட்டுப் பெரிதும் வியப்புற்ற அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்கள்,"தாங்களோ எனக்கு முப்பத்தொன்பது வயதுக்கு மூத்தவர்களாயிற்றே, அது எவ்வாறு சாலும்?' என்று வினவினர்.

அப்பொழுது அவ் அடக்க இடத்திலிருந்து மீண்டும் பின்வருமாறு சப்தம் வந்தது:

"அபுல் ஹஸன்! நான் உயிரோடிருக்குங்கால், தங்களின் ஊர் வழியாகச் செல்லும் பொழுதெல்லாம், ஒரு பேரொளியைக் காண்பேன். அது விண்முகட்டை அளாவி நிற்கும். நான் மூன்றாண்டுகளாக இறை வனிடம் ஒன்றை வேண்டிக்கொண்டிருந்தேன். அப்பொழுது எனக்கு உள்ளுணர்வு மூலம், 'அந்தப் பேரொளியின் பொருட்டால் உம்முடைய விருப்பத்தை நிறைவேற்றித் தருமாறு இறைவனிடம் இறைஞ்சும்' என்று கூறப்பட்டது.

அவ்வாறே நான், அந்தப் பேரொளியைக் கண்டதும் இறைவனிடம் இறைஞ்சினேன். அதன் பின் நான் ஹர்கானுக்குள் நுழைந்த பொழுது, திருக்குர் ஆன் முழுவதும் எனக்கு மனனமாகி விட்டது. என் துன்பமும் தீர்ந்தது. எனவே தான் அவ்வாறு கூறினேன்."

பின்னர் ஒரு தடவை அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்கள், தம்முடைய முக்கிய சீடர் ஒருவரிடம் கூறும்பொழுது,மக்களுக்கு பாயஸீத் (ரஹ்) அவர்கள் இறந்து விட்டார்கள்தாம். ஆனால் எனக்கோ, அவர்கள் உயிரோடுதான் உள்ளார்கள். என் அனைத்துச் செயல்களையும் இதோ கவனித்து கொண்டுதான் உள்ளார்கள்" என்று இயம்பினர்.

ர.ரா

படம் : இறைக் காதலில் மூழ்கி திளைத்த பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) இவர்கள் ஹிஜ்ரி 261 ல் மறைந்தார்கள். அவர்களின் அடக்கவிடம் பிஸ்தாமில் உள்ளது. அவர்களின் அடக்கவிடத்தின் மீது மங்கோலிய அரசர் உல்ஜைத்து முஹம்மது குதாபந்தா என்பவர் ஹிஜ்ரி 713 ல் மணிமண்டபம் கட்டினார்.

அபூதுராப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒரு நாள் தம் மாணவரை நோக்கி, 'நீ அபூயஸீத் பிஸ்தாமி அவர்களை தரிசித்து வருவது நல்லது' என்று கூறினர்.

அவர் தமக்கு அதைவிட பெரிய அலுவல்கள் இருப்பதாகக் கூறினார். பலமுறை சொல்லியும் அவர் கேட்டாரில்லை.ஒரு நாள் அவர்கள் கூறிபோது, 'நான் அபூ யஸீதின் இறைவனையே பார்த்துக் கொண்டிருக்கும்போது, அவரைப் பார்த்து என்ன பயனடையப் போகிறேன்' என்று கூறினார்.

அதற்கு அபூ துராப் அவர்கள், 'நீ இறைவனை 7 முறை பார்ப்பதைவிட அபூ யஸீத் அவர்களை ஒரு முறை பார்ப்பது மேல்' என்று கூறினர்.

அது கேட்டு திடுக்குற்ற அவர், ';அது எவ்வாறு? என்று கேட்டனர்.

அதற்கு அவர்கள், ' நீ இறைவனை காணும்போது, அவன் உம் தகுதிக்குத் தக்கவண்ணம் தோற்றம் வழங்குவான். ஆனால், நீர், அபூ யஸீத் அவர்களை காணும்போது, இறைவனின் பெருமைக்குத் தக்கவண்ணம் அவனைக் காண்பீர். இறைவனைக் காண்பதிலும் பல படித்தரங்கள் இருக்கிறதல்லவா?' என்று பதிலுரைத்தனர்.

இதன்பின் அவர்களிருவரும் பாயஸீத் அவர்களை காண்பதற்காக அவர்கள் தவம் செய்து கொண்டிருந்து காடு நோக்கி சென்றார்கள். அங்குள்ள குகையிலிருந்து அவர்கள் நரித்தோலைப் போர்த்திக் கொண்டு வெளியே வந்தார்கள்.

அவர்களைக் கண்டதும், அபூதுராப் அவர்களின் மாணவர் பெரும சப்தமிட்டு அலறியவராக கீழே வீழ்ந்து உயிர் நீத்தார்.

அதுபற்றி கேட்ட போது, 'அவர் உண்மையாளராகயிருந்தார். அவரிடம் மறைந்திருந்த ரகசியம் என்னைக் கணடதும் வெளியானது. எனினும் அந்த ரகசியத்தை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. எனவே உயிர் நீத்தார். யூசுப் அலைஹிஸ்ஸலர் அவர்களைப் பார்த்த எகிப்துப் பெண்மணிகள், அவர்களின் அழகில் மயங்கித் தம்மையே மறந்த நிலையில் தங்களின் கைவிரல்களை நறுக்கிக் கொள்ளவில்லையா? என்று விளக்கம் சொன்னார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 18

( இறைவனை 7 முறை பார்ப்பதைவிட )

அபூதுராப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒரு நாள் தம் மாணவரை நோக்கி, 'நீ அபூயஸீத் பிஸ்தாமி அவர்களை தரிசித்து வருவது நல்லது' என்று கூறினர்.

அவர் தமக்கு அதைவிட பெரிய அலுவல்கள் இருப்பதாகக் கூறினார். பலமுறை சொல்லியும் அவர் கேட்டாரில்லை.ஒரு நாள் அவர்கள் கூறிபோது, 'நான் அபூ யஸீதின் இறைவனையே பார்த்துக் கொண்டிருக்கும்போது, அவரைப் பார்த்து என்ன பயனடையப் போகிறேன்' என்று கூறினார்.

அதற்கு அபூ துராப் அவர்கள், 'நீ இறைவனை 7 முறை பார்ப்பதைவிட அபூ யஸீத் அவர்களை ஒரு முறை பார்ப்பது மேல்' என்று கூறினர்.

அது கேட்டு திடுக்குற்ற அவர், ''அது எவ்வாறு?" என்று கேட்டனர்.

அதற்கு அவர்கள், ' நீ இறைவனை காணும்போது, அவன் உம் தகுதிக்குத் தக்கவண்ணம் தோற்றம் வழங்குவான். ஆனால், நீர், அபூ யஸீத் அவர்களை காணும்போது, இறைவனின் பெருமைக்குத்

தக்கவண்ணம் அவனைக் காண்பீர். இறைவனைக் காண்பதிலும் பல படித்தரங்கள் இருக்கிறதல்லவா?' என்று பதிலுரைத்தனர்.

இதன்பின் அவர்களிருவரும் பாயஸீத் அவர்களை காண்பதற்காக அவர்கள் தவம் செய்து கொண்டிருந்து காடு நோக்கி சென்றார்கள். அங்குள்ள குகையிலிருந்து அவர்கள் நரித்தோலைப் போர்த்திக் கொண்டு வெளியே வந்தார்கள்.

அவர்களைக் கண்டதும், அபூதுராப் அவர்களின் மாணவர் பெரும சப்தமிட்டு அலறியவராக கீழே வீழ்ந்து உயிர் நீத்தார்.

அதுபற்றி கேட்ட போது, 'அவர் உண்மையாளராகயிருந்தார். அவரிடம் மறைந்திருந்த ரகசியம் என்னைக் கணடதும் வெளியானது. எனினும் அந்த ரகசியத்தை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. எனவே உயிர் நீத்தார்.

யூசுப் அலைஹிஸ்ஸலர் அவர்களைப் பார்த்த எகிப்துப் பெண்மணிகள், அவர்களின் அழகில் மயங்கித் தம்மையே மறந்த நிலையில் தங்களின் கைவிரல்களை நறுக்கிக் கொள்ளவில்லையா? அது போல என்று விளக்கம் சொன்னார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 19

( கம்பளிக்குள் ஆன்மீக உலகங்கள் )



ஷைகு அலீ (ரஹ்) அவர்களின் தாளடியில் சில காலம் வீற்றிருந்து, பல்வேறு ஞான இரகசியங்களையெல்லாம் கற்றுத் தேர்ந்து, மெய்ஞ்ஞான சொரூபராய் விளங்கிய நத்ஹர் (ரஹ்) அவர்கள், பின்னர் தம் ஆசானின் அனுமதியைப் பெற்றுத் தம் சீடர்களான தொள்ளாயிரம் கலந்தர்களுடன், மக்கா சென்று 'ஹஜ்'ஜு செய்து பின்னர் மதீனா சென்று அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அடக்கவிடத்தைத் தரிசித்தனர்.

அங்கேயே ஓராண்டு காலம் தங்கியிருந்து, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மீது ஸலாவத்தையும் ஸலாமையும் அல்லும் பகலும் சொரிந்து கொண்டிருந்தார்கள்.

இக்காலை நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றை அவர்களின் சீடர் ஐயூப் கலந்தர் கூறுகின்றார் :

"ஒரு நள்ளிரவில் நானும், நத்ஹர் (ரஹ்) அவர்களும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் புனித ரௌளா ஷரீஃபின் முன் நின்று அவர்கள் மீது ஸலவாத்தும் ஸலாமும் கூறிக் கொண்டிருந்தோம்.

அப்பொழுது திடீரென நத்ஹர் (ரஹ்) அவர்களைக் காணவில்லை. அப்பொழுது எனக்கேற்பட்ட திகைப்பிற்கும் திடுக்கத்திற்கும் அளவில்லை. பின்னர் சற்று நேரம் கழித்துத் திடீரென அவர்கள் என் அருகே முன்புபோல் நின்று ஸலவாத்தும் ஸலாமும் கூறிக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது நான் அவர்களை வியப்புக் கண்களுடன் நோக்கி, "தாங்கள் இதுவரை எங்கு சென்றிருந்தீர்கள்?" என்று வினவினேன்.

அதற்கு அவர்கள், "நான் இங்கு நின்று 'அலம் நஷ்ரஹ்' சூராவை ஓதிக் கொண்டிருந்தேன். அப்பொழுது அதில் அண்ணல் நபி (ஸல்) அவர் களைப் பற்றிய குறிப்பு வரவே, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் என்முன் திருத்தோற்றம் வழங்கி, என்னை ஆரத்தழுவித் தங்களின் ரௌலா ஷரீஃபுக்குள் அழைத்துச் சென்று, தங்களின் உமிழ் நீரை என் வாயில் சொரிந்து, 'இன்று முதல் நீர் குத்புகளுக்கெல்லாம் குத்பாவீர். உம்முடைய உமிழ்நீர் எவர் வாயில் படுகின்றதோ அவர் 'வலி' ஆவார். நீர் எவரைப் பார்த்து 'வலி' என்று கூறுகிறீரோ அவர் 'விலாயத்' எய்தப் பெறுவார்" என்று நன்மாராயம் மொழிந்தார்கள் என்று இயம்பினர். "

இந்நிகழ்ச்சிக்குப் பின் நத்ஹர் (ரஹ்) அவர்களின் தகுதி நாளுக்கு நாள் அதிகப்பட்டுக் கொண்டே வந்தது. ஒரு வெள்ளிக்கிழமை ஜும் ஆ தொழுது முடிந்ததும், நத்ஹர் (ரஹ்) அவர்கள் மேடை மீதேறி ஒரு சொற் பொழிவு நிகழ்த்தினர். அத்திருச் சபையில் அஸீஸுல்லாஹ் (ரஹ்), ஜைனுத்தீன் மிஸ்ரி (ரஹ்), அப்துல் மஜீத்(ரஹ்) யூனுஸ் (ரஹ்), மஹ்மூத் கர்க்கி (ரஹ்) ஆகிய வலிமார்களும், இன்னும் சிரியா நாட்டைச் சேர்ந்த மற்றொரு வலியும் வீற்றிருந்தனர்.

அப்பொழுது நத்ஹர் (ரஹ்) அவர்கள் திடீரென மெஞ்ஞான உணர்ச்சி மீக்குற்றவர்களாய், "என் தகுதி மிகவும் மாண்புடைத்ததாகும். நான் இக்காலத்து குத்பு மார்களுக்கெல்லாம் கிரீடாதிபதியாக உள்ளேன். எத்தனையோ 'வலி' மார்கள் என்னுடைய ஆன்மீக ஆட்சியின் கீழ் உள்ளனர்" என்று கூறினர்.

அக்காலை ஆங்கு வீற்றிருந்த ஆறு வலிமார்களும் ஒருங்கு சேர்ந்து 'நத்ஹரே! நிறுத்தும் உம் பேச்சை. நாங்களும் எங்களுடைய தகுதியை உணர்வோம். உம்முடைய தகுதிக்கு எங்களுடைய தகுதி எவ்வகையிலும் இளைத்ததல்ல. வேண்டுமாயின் சோதித்துப் பார்த்துக் கொள்ளலாம்" என்று அறைகூவல் விடுத்தனர்.

உடனே நத்ஹர் (ரஹ்) அவர்கள், தங்களின் கம்பளிப் போர்வையைத் தம்மீதும் அவர்கள் மீதும் போர்த்த, அவர்கள் அனைவரும் தன்னுணர்வற்றார்கள். அவர்களின் கண்களுக்கு ஆலமெ நாஸூத், ஆலமே மலக்கூத், ஆலமே ஜபரூத், ஆலமெ லாஹூத் ஆகியவை தென்பட்டன.

இப்பொழுது நத்ஹர் (ரஹ்) அவர்கள், அவர்களை நோக்கி, ''நீங்கள் இப்பொழுது உங்களுடைய படித்தரங்களைக் காட்டுங்கள், பார்ப்போம்" என்று கூறினர்.

இவ்வாறு அவர்கள் கூறியதும், அந்த வலிமார்கள், தங்களின் 'விலாயத்'தைக் கொண்டு பறந்தார்கள். ஜைனுத்தீன் மிஸ்ரி (ரஹ்) அவர்களும் மஹ்மூத் கர்க்கி (ரஹ்) அவர்களும், முந்திய மகாமாகிய ஆலமெ நாசூத்தை எய்தினர். அதற்கு மேல் அவர்களால் பறக்க இயலவில்லை.

அஸீஸுல்லாஹ் (ரஹ்) அவர்களும், யூனுஸ் (ரஹ்) அவர்களும் அதற்கு அடுத்த மகாமாகிய ஆலமெ மலக்கூத்தை அடைந்தனர். அதற்கப்பால் ஓர் அங்குலம் கூட அவர்களால் நகர இயலவில்லை.

நத்ஹர் (ரலி) அவர்களின் ஆன்மீக மாணவராகிய ஜஹீருத்தீன் கலந்தர் (ரஹ்), அவர்கள் அதற்கு அடுத்த மகாமாகிய ஆலமெ ஜபரூத்தை அடைந்தார்கள். அதற்கப்பால் செல்ல அவர்களால் இயலவில்லை.

ஆனால் நத்ஹர் (ரஹ்) அவர்களோ, இவற்றிக்கெல்லாம் மிகமிகத் தொலைவிலுள்ள ஆலமெ லாஹூத்தை அடைந்து, அதற்கப்பால் உள்ள இறையண்மையை எய்தி நின்றனர்.

சற்று நேரம் கழித்து நத்ஹர் (ரஹ்) அவர்கள், அவர்கள் அனைவர் மீதிருந்தும் தம் போர்வையை எடுத்தனர். அடுத்த கணம் அவர்கள் அனைவரும் தன்னிலை எய்தப் பெற்றார்கள்.

ஆனால் நத்ஹர் (ரஹ்) அவர்கள் மட்டும், இறைக்காதலில் மூழ்கித் தன்னுணர்வற்றிருந்தார்கள். அவர்களின் முகம் பேரொளி மயமாய் இலங்கியது. அவர்களின் நாவிலிருந்து 'அனல் ஹக்' என்ற

சொற்கள் எழுபத்திரண்டு தடவைவெளி வந்தன. இதன்பின் மூன்று நாட்கள் கழித்தே அவர்கள் தன்னுணர்வு எய்தப் பெற்றார்கள்.

இதன் பின்னரே, அந்த ஆறு வலிமார்களும் அவர்களின் மாண்பினை உணர்ந்து, தங்களின் தவற்றை மன்னித்தருளுமாறு அவர்களின் தாள் பிடித்து வேண்டினர். நத்ஹர் (ரஹ்) அவர்களும் பெரு மனத்துடன் அவ்விதமே செய்தார்கள்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 20

( புரவலர் போர்த்திய பொன்னாடை )




அவர் ஒரு அரசாங்கத்தினுடைய அதிகாரி அரசாங்கத்தின் பதவியிலிருந்து ஓய்வு பெற்றுவிட்டார்கள் அவர்கள் மாபெரும் கவிஞரும் கூட இந்நிலையில் அவர்களுக்கு பக்கவாதம் ஏற்பட்டு ஒரு புறம் கை கால்கள் செயலிழந்து போய்விட்டது

இதனால் படுத்த படுக்கையாகிவிட்ட அந்த பெருந்தகை அவர்கள் மிகவும் கவலைப்பட்டார்கள் ஏனென்றால் பக்காவாதத்திற்கு அந்த காலத்தில் குணப்படுத்த முடியாது..

இவர்களை சோதித்த வைத்தியர்கள் கூட " நீங்கள் மரணிக்கும் வரை இந்த படுக்கையை விட்டு எழ முடியாது. இப்படியே தான் இருக்க வேண்டும். இந்த கையும் காலும் ஒருபோதும் செயல்படாது. ஏதேனும் அற்புதங்கள் நிகழ்ந்தால் ஒழிய " என்று சொல்லிவிட்டு சென்றுவிட்டார்கள்..

இந்நிலையில் தங்களுடைய வாழ்வை எண்ணி சிந்தித்த அந்த பெருந்தகை அவர்கள் நாம் இதுவரை பல்வேறு விதமான கவிதைகளை எழுதி இருக்கிறோம். நம் உள்ளத்திலே புதைத்து வைத்திருந்த கண்மணி நாயகத்தின் புகழ் பாவிதையை எப்படி எழுதி தருவது மக்களுக்குச் சொல்வது என்று சிந்தித்தவர்களாக உறங்கி போனார்கள்..

அவ்வாறு அவர்கள் உறங்கிய நிலையில் கண்மணி நாயகம் ரசூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அந்தப் பெருந்தகையின் கனவில் தோன்றி அவர்கள் தங்கள் மீது எழுதிய கவிதையை படிக்குமாறு கேட்டுக் கொண்டார்கள்.

இதனால் மகிழ்ச்சி மீக்குற்ற அந்த பெருந்தகை அவர்களும் கண்மணி நாயகம் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மீது எழுதிய அந்த கவிதை தொகுப்பை படித்துக் காட்டினார்கள்

இதனால் அகமகிழ்ந்த கண்மணி நாயகம் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பெருந்தகை அவர்களை வாழ்த்திவிட்டு அவர்களுக்கு தங்கள் மீது இருந்த மேல் பொன்னாடை அவர்கள் மீதும் போர்த்தினார்கள். இதனால் மகிழ்ச்சி மிகக் கூற்ற அந்த பெருந்தகை அவர்கள் கனவில் இருந்து விழிக்க அவர்களுக்கு விழங்காமல் இருந்த கையும் காலும் நன்கு செயல்பட துவங்கி விட்டது..

இதனால் மகிழ்ந்த அந்த பெருந்தகை அண்ணவர்கள் அடுத்த நாள் தொழுகைக்காக பள்ளிவாசல் சென்றார்கள் அப்படி அந்த பள்ளி வாயிலை அடையும் பொழுது அங்கு பக்கீர்கள் கூட்டத்திலே அமர்ந்திருந்த ஒரு பக்கீர் ஒருவர் இந்த இறை நேச பெருந்தகை அழைத்து இங்கே வாருங்கள் என்று கூப்பிட்டு அவர்கள் கேட்டார்கள்

நீங்கள் கண்மணி நாயகம் ரசூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது எழுதிய கவிதை தொகுப்பை எனக்கு தாருங்கள் என்று கேட்ட பொழுது,

அந்த இறைநேச பெருந்தகை அவர்களுக்கு மாபெரும் ஆச்சரியம் இன்னும் நாம் அந்த கவிதை தொகுப்பை எழுத்து வடிவில் கொண்டு வரவில்லையே அது நம் மனதிற்குள் தான் இருக்கிறது அதை கனவிலே தான் நம் கண்மணி நாயகம் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு வாசித்துக் காண்பித்தோம் இவர் எப்படி கேட்கிறார் என்று யோசித்துவிட்டு,

இந்த இறைநேசப் பெருந்தகை அவர்கள், " நான் கண்மணி நாயகத்தின் மீது எந்த கவிதை தொகுப்பையும் இன்னும் எழுதவில்லையே !" என்று சொன்ன பொழுது ,

அந்த பக்கீர் அவர்கள் : "நேற்று நீங்கள் கண்மணி நாயகத்திடம் ஓதி காண்பித்தீர்களே என்று சொல்லிவிட்டு அந்த கவிதை தொகுப்பின் ஆரம்ப வரிகளை ஓதி காட்டி இந்த கவிதை தொகுப்பு தான் என்று அவர்கள் கேட்க,

மாபெரும் ஆச்சரியம் கொண்ட அந்த இறைநேச பெருந்தகை தாங்கள் யார் நான் கண்மணி நாயகத்திடம் ஒதி காண்பித்த அதுவும் கனவிலே ஓதிக் காண்பித்த கவிதை உங்களுக்கு எப்படி தெரியும் ? என்று கேட்டார்கள்

அப்பொழுது அந்த இறை நேச பெருந்தகை பக்கீர் அவர்கள் : "நீங்கள் கண்மணி நாயகத்திடம் இந்த கவிதையை ஒதிக்காட்டும் பொழுது அவர்களுக்கு பின்னால்தான் நானும் இருந்தேன்" என்று கூற ,

இந்த ஆச்சரிய கவிதை தொகுப்பு தான் உலகப் புகழ்பெற்ற "புரவலர் போர்த்திய பொன்னாடை" என்று பெயர் பெற்ற கசிதத்துள் புர்தா ஷரீஃப் ஆகும்..

இதை இயற்றி நோய் நீக்குற்று மீட்சி பெற்றவர்கள் இறைநேசப் பெருந்தகை ஹழ்ரத் இமாம் ஷர்புத்தீன் பூஸரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அன்னவர்கள் ஆவார்கள்...

பள்ளிவாசலில் கவிதை தொகுப்பை கேட்ட அந்த பக்கீர் அவர்களுடைய பெயர் தெரியவில்லை.. (Sufi chiste பதிவிலிருந்து )

அடக்கஸ்தலம் : அலெக்ஸாண்டிரியா - எகிப்து

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 21

(அல்லாஹ்வின் வலி )




ஓர் நாள் இரவு ஹழ்ரத் மஹ்பூபே சுப்ஹானி கௌதுல் ஆலம் முஹையத்தீன் அப்துல் காதிர் ஜிலானி அவர்களின் கனவில் அவர்களின் அன்பு பாட்டியார் சொர்க்கத்தின் தலைவி பாத்திமா(ரலி) அண்ணவர்கள் திருத்தோற்றம் வழங்கி

"மகனே எனக்கு இறைவன் அளித்த நன்கொடையாக அளித்த என் கண்மணி மக்களாம் ஹஸன்,ஹுஸைன் ஆகிய இருவருக்கு பதிலாக இரண்டு நன்மணி மக்களை எனக்கு இறைவன் அன்பளிப்புச் செய்துள்ளான் அவற்றில் ஒருவர் நீர்;மற்றொருவர் உம் வழித்தோன்றல் சையது அப்துல் வஹ்ஹாபின் மகன் சையது அப்தூர் ரஹீமின் திருமகன் அலாவுத்தீன் அஹ்மது ஆவார் என்று அருள்வாய் மொழிந்து மறைந்தார்கள்.

இக்கனவை முஹையத்தீன் ஆண்டகை ஒரு குறிப்பேட்டில் எழுதிவிட்டு நிர்யாணம் அடைந்தார்கள். அதனை அவர்கள் மூரிதீன்கள் பார்த்ததும் என்று பிறப்பார் அலாவுத்தீன் அலீ அஹ்மது ஏங்கிக் கொண்டிருந்தனர்

ஆம்! ஹர்ராத் நகரில் சையது அப்துர் ரஹீமும் துணைவியார் பீபி ஹாஜராவின் வயிற்றிலே அந்த ஆன்மீக பேரொளி கருவாக உருவானது இதன் பின் ஒன்பது மாதங்கள் முடிந்து பத்தாம் மாதம் தொடங்கியதும் பீபி ஹாஜராவின் கனவில் அலீ (ரலி)அண்ணவர்கள் திருத்தோற்றம் வழங்கி உமக்கு நன்மகவு பிறக்கப் போகிறது. அதற்க்கு தம் பெயராகிய அலீ என்பதை சூட்டுமாறு கூறிவிட்டு மறைந்தனர்.

சிலநாட்கள் கழித்த பின் பீபி ஹாஜராவின் கனவில் அண்ணலெம் பெருமானார் நபி(ஸல்)அண்ணவர்கள் திருத்தோற்றம் வழங்கி உமக்கு பிறக்கப் போகும் குழந்தைக்கு அஹ்மது என்று பெயர் சூட்டுமாறு அருள்வாய் மொழிந்து மறைந்தார்கள்.

இதன் பின் சிலநாட்கள் கழித்து பீபி ஹாஜராவின் கனவில் முஹையத்தீன் ஆண்டகை அண்ணவர்கள் திருத்தோற்றம் வழங்கி தமக்கு அருமை பேரன் பிறக்க போவதை முன்னறிவிப்புச் செய்து அக்குழந்தைக்கு அலீ அஹமது ஸாபிர் என்று பெயர் சூட்டுமாறு கூறி மறைந்தார்கள்.

பிண்பு கனவில் நடந்த சம்பவங்களை பீபி ஹாஜரா அண்ணவர்கள் நினைத்துக் கொண்டிருக்கும் பொழுது அனஜீஹுருல்லாஹ்

(நான் அல்லாஹ்வின் வெளிப்பாடு) என்ற மெல்லிய குரல் அவர்களின் வயிற்றிலிருந்து வெளிவந்ததை எண்ணி பெரும் வியப்பில் ஆழ்ந்தார்கள்

அந்த மாபெரும் இறைநேசர் ரபிஉல் அவ்வல் மாதம் இந்த உலகில் அவதரித்தார்கள். அவர்கள் பிறக்கும் போதே ஜலாலியத் தன்மை பெற்றவர்களாக இருந்தார்கள் அவர்களின் தாயாருக்கு பிரசவம் செய்த

அந்த பெண் மருத்துவர் அந்த இறைநேசரை தொடும் பொழுது அந்த மருத்துவருக்கு சூட்டது போல் உணர்வு எற்பட்டது .

அந்த மருத்துவரிடம் பீபி ஹாஜரா அண்ணவர்கள் இக்குழந்தை நபிகளாரின் வழியில் வந்த இறைநேசர் நீர் உளூச் செய்துவிட்டு தொடும் உமக்கு அந்த சூடு உணர்வது எற்படாது என்று கூறினார்கள்

அதே போல் அந்த பெண்மருத்துவர் செய்தார் அந்த இறைநேசக் குழந்தையை தூக்கும் பொழுது அந்த சுடு உணர்வு எற்படவில்லை.

பின்பு அக்குழந்தையை காண ஹழ்ரத் ஹிள்ரு(அலை) அண்ணவர்கள் வந்து அந்த இறைநேசக் குழந்தையின் நெத்தியில் முத்தமிட்டு இக்குழந்தைக்கு அலாவுத்தீன் என்று பெயர் சூட்டுமாறு கூறினார்கள்.

இப்பெரும் பேற்றினை பெற்ற இந்ந இறைநேசப் பெருந்தகைக்கு அவர்களின் பெற்றோர் இவர்கள் கூறிய அனைத்து பெயரையும் ஒன்றாக சேர்த்து வைத்தார்கள்.

இவர்களை சிறு வயதில் தாயார் தன் சொந்த தமையனார் பாபா பரீதுத்தீன கஞ்செஷகர் (ரஹ்) அவர்களிடம் கொடுத்து வளர்த்து ஆன்மீக பாடங்களை கற்றுக் கொடுக்க ஒப்படைத்தார்கள்.

பாபா பரீதுத்தீன கஞ்செஷகர் (ரஹ்) அவர்கள் ஸாபிர் (ரஹ்) அவர்களைப் பற்றி, இதோ கூறுகின்றார்கள்.

"ஹிஜ்ரி 605-ஆம் ஆண்டு, ரமலான் பிறை 26-ஆம் இரவு, நாள் கனவொன்று கண்டேன். என் குருநாதர் குத்புத்தீன் பக்தியாரி (ரஹ்) அவர்கள் என்னிடம் வந்து, 'அலீ அஹ்மதை அழைத்துக் கொண்டு விரைந்து வாரும்' என்று கூறினர்.

அவ்விதமே நான் அலீ அஹ்மதை அழைத்துக் கொண்டு அவர்களின் பின்னே சென்றேன். நாங்கள் 'ஆலமெ மலக்கூத் 'திலிருந்து, 'ஆலமெ ஜபரூத்' என்ற ஒளி உலகத்திற்குச் சென்றோம். அங்கு அழகிய ஆசனம் ஒன்றில் அண்ணல்நபி (ஸல்) அவர்கள் அமர்ந்திருந்தார்கள்.

அவர்களின் இருமருங்கிலும், அணியணியாகப் பெரியோர்கள் பலர் அமர்ந்திருந்தனர். என் குருநாதர் அவர்கள், என்னையும் ஸாபிரையும், அண்ணல் நபி (ஸல் ) அவர்களின் திருமுன் அழைத்துச் சென்றனர்.

அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஸாபிரின் முதுகில் தம் கையை வைத்து, 'இவர் அல்லாஹ்வின் வலி' என்று கூறினர். அவ்விதமே நானும் அவரின் முதுகில் கை வைத்து, 'இவர் அல்லாஹ்வின் வலி' என்று கூறினேன். அவ்விதமே அங்கிருந்த அனைவரும் அவரின் முதுகில் கை வைத்து, 'இவர் அல்லாஹ்வின் வலி' என்று கூறினார்கள். இத்துடன் விழித்துவிட்டேன்.

''இதன்பின் நான் ஸாபிர் எந் நிலையில் இருக்கிறார் என்பதைப் பார்க்க விரும்பி, அவரின் அறைக்கு வந்தேன். அறையின் கதவு திறந் திருந்தது. ஸாபிர் தம்மை மறந்து தியானத்தில் இருந்தார். அவரைச் சூழ ஒரே ஒளிமயமாக இருந்தது. அப்பொழுது 'வலி'மார்களும், மற்றும் 'ரிஜாலுல் கைபு'களும், அவரின் முதுகின் மீது கை வைத்து, 'இவர் அல்லாஹ்வின் 'வலி' என்று கூறிக் கொண்டிருப்பதைக் கண்ணால் கண்டேன்.

ஆம் அந்த இறைநேசப் பெருந்தகை தான் ஹழ்ரத் ஷெய்கு அலாவுத்தீன் அலீ அஹ்மது ஸாபிரி(ரஹ்) அண்ணவர்கள் இவர்கள் அடக்கமாயிருக்கும் இடம் டில்லி கலியர் ஷெரிப்

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 22

( ஷைகு முஹம்மது சாலிஹ் வலி (ரஹ்)

காயல் தந்த ஞானமேதை தைக்கா சாஹிபு வலி அவர்கள் ஹஜ்ஜு செய்ய மக்கா சென்றிருந்த பொழுது, அங்கு வைத்து அவர்களுக்கு ஷைகுல் இஸ்லாம் முஹம்மது சாலிஹுல் மிஸ்ரியுல் மக்கிய்யீ (ரஹ்) அவர்களைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. நீண்டநேரம் அவர்களிரு வரும் ஆன்மீக நுட்பங்களையெல்லாம் அலசி ஆராய்ந்து கொண்டிருந் தார்கள்.

இறுதியாகத் தைக்கா சாஹிபு வலி அவர்கள் ஷைகுல் இஸ்லாம் அவர்களிடம் விடைபெறும் பொழுது ஷைகுல் இஸ்லாம் அவர்கள் தைக்கா சாஹிபு வலி அவர்களின் இருகரங்களையும் பிடித்துக் கொண்டு, "இறைவனருளால் தங்களுக்கு ஆண்மகவு ஒன்று பிறக்கும். அதற்கு என் பெயர் சூட்டுக!" என்று கூறினர். அதற்கு தைக்கா சாஹிபு வலி அவர் களும் இணங்கினார்கள்.

அவ்வாறே தைக்கா சாயிபு அவர்களுக்கும் அவர்களின் ஆரூயிர்த் துணைவியார் ஆமீனா அவர்களுக்கும் ஹிஜ்ரி 1242 ஆம் ஆண்டில் காயல்பட்டினத்தில் ஓர் ஆண் மகவு பிறந்தது. அதற்குப் பெற்றோர்கள் முஹம்மது சாலிஹ் என்னும் அழகிய பெயரிட்டுச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார்கள்.

ஒரு தடவை அவர்கள் கொழும்பு சென்ற பொழுது அவர்களுக்குக் கொழும்பு நகர முஸ்லிம்கள் ஒருங்கு திரண்டு மகத்தான வரவேற்பளித்துக் கௌரவித்தார்கள். அப்பொழுது அக்கூட்டத்தில் கலந்து கொண்ட ஒரு முஸ்லிமுக்கு ஷைகு முஹம்மது சாலிஹ் வலி (ரஹ்) அவர்கள் ஒரு காமிலான (சம்பூர்ணமான) ஷைகாக இருப்பாரா என்ற ஐயம் ஏற்பட்டது. இதனை அவர் தம் அருகே நின்று கொண்டிருந்த தம் நண்பரிடம் கூறினார்.

அவரோ ஷைகு முஹம்மது சாலிஹ் வலி (ரஹ்) அப்பா அவர்களின் ஆன்மீக மாணவர். அவர் அலறித் துடித்து, ''அப்பா அவர்கள் ஒரு காமிலான ஷைகுதாம். இல்லையெனில் நான் அவர்களின் கரம் பிடித்துத் தீட்சை பெற்றிருக்க மாட்டேன். ஷைகு என்று எண்ணி ஷைத்தானின் கரம் பிடிக்கும் அறிவிலி நானல்ல" என்று எவ்வளவோ எடுத்துரைத்தும் அவரின் ஐயம் நீங்கிய பாடில்லை.

அந்த நண்பர் அப்பா அவர்கள் தம் கனவில் தோற்றம் வழங்கித் தமக்கு தீட்சை தந்தால் தாம் அவர்களைக் காமிலான ஷைகாக ஏற்றுக்கொள்வதாகக் கூறினார்.

அன்றிரவு அப்பா அவர்கள் அவரின் கனவில் திருத்தோற்றம் வழங்கி அவருக்குத் தீட்சை வழங்கினர். திடுக்குற்று விழித்தெழுந்த அவர் தாம் செய்த தவற்றினையும் அப்பா அவர்களின் மாண்பினையும் நன்கு உணர்ந்து அவர்களிடம் மன்னிப்புக் கோரி தீட்சை பெறுவதற்காக அவர்கள் தங்கியிருக்கும் இடம் சென்றார்.

அவரைக் கண்டதும் அப்பா அவர்கள் புன்முறுவல் பூத்தவண்ணம், கனவில் தீட்சை வழங்கியது பற்றாதா ? என்று வினவினர்.

அப்பொழுது அவருக்கு ஏற்பட்ட நாணத்திற்கு அளவில்லை. அப்பா அவர்களின் கால்களைப் பிடித்துக்கொண்டு தம் தவற்றினை மன்னித்துத் தமக்குத் தீட்சை தந்தருளுமாறு நீர்மல்கும் கண்களுடன் வேண்டிக் கொண்டார்.

அப்பா அவர்களும் அவர் மீது இரங்கி அவருக்குத் தீட்சை நல்கி அவரைத் தம் ஆன்மீக மாணவர்களின் குழுவில் இணைத்துக் கொண்டார்கள்.

ஒரு தடவை அப்பா அவர்கள் கள்ளிக் கோட்டையின் அருகிலுள்ள மலம்புரத்தில் அடங்கப் பெற்றிருக்கும் ஷைகு ஜிப்ரிய்யி தங்கள் (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்தைத் தரிசிக்கச் சென்றனர். அப்பொழுது அங்கு ராத்திபு நடந்து கொண்டிருந்தது. அதில் அப்பா அவர்களும் கலந்து கொண்டார்கள். ராத்திபு முடிந்ததும் எல்லோருக்கும் வழக்கம்போல் பழங்கள் விநியோகிக்கப்பட்டன.

"பூக்கள் விநியோகிக்கப்பட வில்லையே, ஏன்?" என்று அப்பா அவர்கள் அந்த தர்கா நிர்வாகிகளை வினவினர்.

அதற்கு அவர்கள், "இது பூப்பூக்கும் காலமல்லவே" என்று மரியாதையுடன் பதிலிறுத்தார்கள்.

உடனே அப்பா அவர்கள் ஷைகு ஜிப்ரிய்யி தங்ஙள் (ரஹ்) அவர்களின் புனித உடல் அடக்கம் செய்யப்பட்டிருக்கும் அறைக்குள் சென்று கைநிறைய பூக்களை அள்ளிக் கொண்டு வந்தனர். அவற்றின் நறுமணம் அங்கிருந்தோரின் நாசியைத் துளைத்தது. அதுகண்டு அனைவருடைய புருவங்களும் மேலேறின. அவை அங்கிருந்தோர் அனைவருக்கும விநியோகிக்கப்பட்டன.

அப்பொழுது அங்கிருந்தோரில் ஒருவர் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு அப்பா அவர்களை அணுகி, "காலமில்லாத காலத்தில் இவ்வளவு பூக்கள் தங்களுக்கு எவ்வாறு கிடைத்தன? இவற்றின் நறுமணமோ நாங்கள் என்றுமே நுகராத நறுமணமாக இருக்கின்றதே" என்று கூறிய பொழுது,

அப்பா அவர்கள் புன்முறுவல் பூத்தவண்ணம், "ஷைகு ஜிப்ரிய்யி தங்கள் (ரஹ்) அவர்கள் அவற்றைத் தங்களின் அடக்கவிடத்திலிருந்து என்னிடம் கொடுத்தார்கள்" என்று பதிலிறுத்தார்கள்

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 23

( நீ அல்லாஹ்வின் அடிமையா ? )



பல்க் நாட்டின் அரசர் இப்ராஹீம் இப்னு அத்ஹம் அவர்கள் தமது ஆட்சியைத் துறந்து,கானகம் சென்று இறைவனைத் தேடி, தாமும் நேர்வழி அடைந்து, மற்றவர்களும் நேர்வழி அடைய போதிக்கும் ஒரு மன்னரின் அருந்தவ வாழ்க்கையின் அற்புத நிகழ்வுகள்

இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) அவர்களின் நாட்டம் இறைவன் தம்மைத் தன்னுடைய அன்பிற்குரிய நல்லடியானாக ஏற்று ஆட்கொள்ள வேண்டும் என்பதாகவே இருந்தது.

ஒருநாள் அவர்கள் குளிப்பதற்காகக் குளியலறை ஒன்றிற்குச் சென்ற பொழுது அக்குளியலறைக் காவலன் அவர்களின் கிழிந்த ஆடையைக் கண்டு அவர்களை உள்ளே அனுமதிக்க மறுத்துவிட்டான்.

அப்பொழுது அவர்கள் “ஷைத்தானுடைய வீட்டிற்குள்ளேயே கூலி கொடாமல் செல்ல இயலாதெனின், ரஹ்மானாகிய இறைவனின் இல்லத்திற்குள் எவ்வாறு நற்செயல் இல்லாமல் செல்ல இயலும்?" என்று தமக்குள் கூறிக் கொண்டார்கள்.

மற்றொரு நாள் அவர்கள் ஓர் அடிமையை விலைக்கு வாங்கினார்கள். அப்பொழுது அவர்கள் அவனை நோக்கி,

''உன் பெயர் என்ன?" என்று வினவினார்கள்.

அதற்கு அவன் ''உங்களுக்கு விருப்பமான பெயரைக் கொண்டு என்னை அழையுங்கள்" என்றான்.

பின்னர் "நீ என்ன உணவு உண்பாய்?" என்று அவர்கள் வினவினார்கள்.

"தாங்கள் தரும் உணவை உண்பேன்" என்றான் அவன்.

"என்ன உடை அணிவாய்?" என்று மறுவினா விடுத்தார்கள் அவர்கள்.

"தாங்கள் தரும் உடையை அணிந்து கொள்வேன்" என்றான் அவன்.

அதுகேட்ட அவர்கள் "என்ன வேலை செய்வாய்" என்று வினவினர்.

"தாங்கள் இட்ட பணியைச் செய்வேன்" என்று விடையிறுத்தான் அவன். '

'என்னிடமிருந்து ஏதேனும் விரும்புகின்றாயா?" என்று அவர்கள் மறுவினா விடுத்தார்கள்.

''ஓர் அடிமைக்குத் தன் எசமானனிடமிருந்து என்ன விருப்பம் உள்ளது? எசமானனின் விருப்பமே என் விருப்பம்' என்று பதில் கூறினான் அவன்.

அதுகேட்ட அவர்கள் கண்ணீர் வடித்தவர்களாய் தம்மை தாமே நோக்கி, "அல்லாஹ்வுடைய அடிமையாகிய நீ ஒரு கணமேனும் இவன் போன்று இறைவன் முன்னிலையில் நின்றதுண்டா?" என்று கூறித் தேம்பித் தேம்பி அழுதார்கள்.

அதன் காரணமாக அவர்கள் மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தனர். மயக்கம் தெளிந்து அவர்கள் எழுந்ததும் அவர்கள் அவ்வடிமையை விடுதலை செய்து விட்டார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 24

( தஸவ்வுப் ஸூஃபி )



ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் பதிவுத் தொடரில் சிலர் பதிவைக் கொச்சைப்படுத்தும் விதமாக பின்னூட்டங்களில் அநாகரிகமான வாசகங்களை வாரி இறைத்தனர். அதில் சிலரை Block செய்துள்ளேன். அவர்கள் யாருக்குமே தஸவ்வுப் என்பதும் இஸ்லாத்தின் அடிப்படை கோட்பாட்டின் ஆணிவேர் என்பது பற்றி விளக்கமில்லாததால், தஸவ்வுப் ஸூஃபி பற்றி இந்தப் பதிவு –

இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரங்களான குர்ஆன், ஸுன்னாவின் அடிப்படையில் தோன்றி வளர்ந்தது, ஹதீஸ், தப்ஸீர், பிக்ஹ் (சட்டம்) , இல்முல் கலாம் போன்ற ஏனைய இஸ்லாமிய கலைகள் போன்று இஸ்லாத்தின் நிழலில் உருவாகியதுதான் "தஸவ்வுப் "ஆனால் இக்கலை பலராலும் தவறாகப் புரியப்பட்ட ஒரு கலையாக விளங்குகின்றது.

சிலர் தஸவ்வுப் ஒரு இஸ்லாமியக் கலை என்பதை ஏற்க மறுத்து, இஸ்லாமிய நாகரிக வளர்ச்சியில் கிரேக்க தத்துவம், பாரசீகப் பண்பாடு ஆகியவற்றின் தாக்கம் காரணமாகத் தோன்றி வளர்ச்சியடைந்த ஒரு கலை என தஸவ்வுபை தவறாக குறிப்பிடுகின்றனர்.

‘தஸவ்வுப்’ என்ற கலைக்கான அடிப்படைகள் இஸ்லாத்தின் ஆரம்ப காலத்திலேயே காணப்பட்டன. இஸ்லாமிய வணக்கங்கள், கிரியைகள் அனைத்தும் இரண்டும் முக்கிய அம்சங்களை உள்ளடக்கியுள்ளன.

ஒன்று மனிதனின் புற உறுப்புக்களோடு தொடர்புடைய புலன்களுக்குப் புலப்படும் வகையில் புரியப்படும் புறக்கிரியைகள்.

மற்றுது உள்ளத்தோடும் ஆத்மாவோடும் தொடர்புடைய புலன்களுக்குப் புலப்படாத அகக் கிரியைகள் ஆகிய இரண்டுமே இந்த அம்சங்களாகும்.

குர்ஆனும் ஸுன்னாவும் இஸ்லாமிய வணக்கங்கள், கிரியைகள் அனைத்தையும் பொறுத்தவரை இந்த இரண்டு அம்சங்கள் பற்றியும் பேசுகின்றன.

உதாரணமாக தொழுகை பற்றிக் குறிப்பிடும் குர்ஆன், ருகூஃ, ஸுஜுது போன்று புறக்கிரியைகள் பற்றி மட்டுமன்றி உள்ளத்தோடு தொடர்புடைய இறையச்சம், பணிவு, உளத்தூய்மை ஆகிய அம்சங்கள் பற்றியும் குறிப்பிடுகின்றது.

நோன்பு, ஹஜ் போன்ற வணக்கங்களோடு தொடர்புடைய கிரியைகள் அனைத்தையும் பற்றிக் குர்ஆன் விளக்கும் போது அவற்றில் உள்ளடங்கியுள்ள, மனிதனின் உள்ளம் ஆத்மாவோடு தொடர்புடைய அம்சங்களையும் விளக்குகின்றது.

இது போன்ற அனைத்து வணக்கங்கள், கிரியைகள் பற்றி விளக்கும் போது அவற்றுடன் தொடர்புடைய உளநிலை பற்றியும் குறிப்பிடுகின்றது.

புகஹாக்கள் என்னும் சட்ட அறிஞர்கள் இந்தப் புறக் கிரியைகளோடு தொடர்புடைய சட்டவிதிகளை குர்ஆன் ஸுன்னாவின் அடிப்படையில் விளக்கிய கலையை பிக்ஹ் உள்-ளாஹிர் புறம் சார்ந்த அல்லது வெளிப்படையான பிக்ஹ் என நாம் அழைத்தால் அக்கிரியைகளோடு தொடர்புடைய உள்ளம் அதன் தன்மை, செயல்பாடுகள், உளத்தூய்மை, பரிசுத்தமான எண்ணம் ஆகியவற்றுடன் தொடர்புடைய விதிகளை விளக்கும் கலையை பிக்ஹுல் பாதின் – மறைவான பிக்ஹ் எனக் குறிப்பிடலாம். இந்த பிக்ஹ் பாதினையே நாம் தஸவ்வுப் என அழைக்கின்றோம்.

நபி (ஸல்) அவர்களின் நுபுவ்வத்தின் நோக்கம் பற்றிக் குறிப்பிடும் குர்ஆன், பின்வரும் வகையில் அதனை விளக்குகின்றது.

எழுத்தறிவில்லாத மக்களுக்கு அவர்களிலிருந்தே ஒரு தூதரைத் தெரிந்து அவன் அனுப்பி வைத்தான். அவர்கள் அதற்கு முன்னர் பகிரங்கமாக வழிகோட்டிலிருந்தனர். அவர் அவனுடைய வசனங்களை அவர்களுக்கு ஓதிக்காண்பித்து அவர்களைப் பரிசுத்தமாக்கி வைத்து, அவர்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கற்றுக் கொடுக்கின்றார். (அல்குர்ஆன் 62:2)

மக்களுக்கு அல்குர்ஆன் திருவசனங்களை ஓதிக் காண்பித்தல், அவர்களுக்கு அறிவையும் ஞானத்தையும் போதித்து நெறிப்படுத்தல், அவர்களது உள்ளங்களின் கறைபோக்கி மாசகற்றித் தூய்மைப்படுத்தல் ஆகிய மூன்று முக்கிய பணிகள் பற்றி இங்கு குறிப்பிடப்படுகின்றது.

இவற்றுள் உள்ளத்தை தூய்மைப்படுத்தல் – தஸ்கியதுந் நப்ஸ் என்ற பணியினடியாக வளர்ந்த ஒரு கலையே தஸவ்வுபாகும். எனவே, தஸவ்வுப் என்பது மக்களின் உள்ளங்களைப் பிடித்துள்ள கறைகள்

மாசுகளை அகற்றிப் புனிதப்படுத்தி இறை திருப்தியைப் பெறும் நிலைக்கு அதனை உருவாக்கும் தஸ்கியதுந் நப்ஸின் வழிமுறைகள் பற்றி விளக்கும் கலையாகும்.

நபி( ஸல் ) அவர்களின ஹதீஸ்களை அதிகம் தொகுத்த அபூ ஹுரைரா ( ரலி ) அவர்களிடம் நபி ( ஸல் ) அவர்களின் ஹதீஸ்களை நீங்கள் முழுமையாக தொகுத்துவீட்டீர்களா ? என்ற கேள்விக்கு,

"இல்லை பாதியைத்தான் உங்களிடம் கொடுத்துள்ளேன். மீதியை மறைத்துவிட்டேன்" என்று சொல்ல,

ஏன் நீங்கள் மறைக்க வேண்டும் ? என்று கேட்க,

சொன்னால் நீங்கள்தான் என் கழுத்தை அறுத்துவிடுவீர்கள் என்று அபூ ஹுரைரா ( ரலி ) கூறினார்கள்

நபி (ஸல்) அவர்களது சமூகத்திற்கு ஹஸ்ரத் ஜிப்ரீல் (அலை) அவர்கள் ஒரு மனிதரின் உருவில்வந்து, சன்மார்க்கம் பற்றிய மூன்று வினாக்களைக் கேட்க, அதற்கு நபிகளார் பதில் பகர்கின்றார்கள்.

முதலில் இஸ்லாம் பற்றியும், இரண்டாவது ஈமான் என்றால் என்ன என்பது பற்றியும் வினவ, நபியவர்கள் அது பற்றி விளக்குகிறார்கள். மூன்றாவதாக இஹ்ஸான் என்றால் என்ன என கேட்க, 'நீர் இறைவனைக் காணுவது போன்று அவனை வணங்குவதாகும்.

ஏனெனில் நீர் அவனைப் பார்க்காவிட்டாலும் அவன் உம்மைப் பார்க்கின்றான்' இந்த ஹதீஸில் குறிப்பிடப்படும் ஈமானின் அடிப்படையில் அகீதாவும், இஸ்லாமியக் கிரியைகளின் அடிப்படையில் ஷரீஆவும், இஹ்ஸானின் அடிப்படையில் தஸவ்வுப் இஸ்லாமியக் கலைகளின் முக்கிய பிரிவுகளாக வளர்ச்சியடைந்துள்ளன.

பிற்காலத்தில் முஸ்லிம் சமூகத்தில் தோன்றி வளர்ந்த ஹதீஸ், பிக்ஹ், தப்ஸீர் போன்ற கலைகளுக்கான அடிப்படைகள் அனைத்தும் நபி (ஸல்) அவர்களின் காலப்பிரிவில் காணப்பட்டது போன்று பிற்காலத்தில் ஒரு தனிப்பட்ட பிரிவாக வளர்ச்சியடைந்த தஸவ்வுபின் அடிப்படைகளும் காணப்பட்டன.

இஸ்லாம் தீனுல் பித்ரா என்னும் மனிதனின் இயற்கைக்குப் பொருத்தமான ஒரு மார்க்கமாகும். மனிதர்கள் இயற்கையிலே வித்தியாசமான தன்மைகளைப் பெற்றுள்ளனர். இஸ்லாம் வலியுறுத்தும் உலகப் பற்றற்ற மனநிலை, இறையச்சம், முற்றிலும் இறைவன் பால் பாரஞ்சாட்டி வாழும் பண்பு ஆகியவற்றை மிக வேட்கைளோடு பின்பற்றிய நபித்தோழர்கள் பலர் காணப்பட்டனர்

ஸுஹ்த் என்னும் உலகப் பற்றற்ற வாழ்வை மேற்கொண்ட இந்த நபித்தோழர் எவருமே சூஃபி என அழைக்கப்படவில்லை. இதற்கான காரணத்தையும் தஸவ்வுபின் தோற்றத்தையும் இமாம் குஷைரி தனது ரிஸாலாவில் பின்வருமாறு விளக்குகின்றார்.

நபி (ஸல்) அவர்களின் காலப்பிரிவின் பின்னர் நபித் தோழர்களைக் குறிக்க நபியவர்களுடன் அவர்களது தோழமையைச் சுட்டும் 'ஸஹாபி' என்ற சொல்லைத் தவிர வேறு எந்த ஒரு பதமும் பயன்படுத்தப்படவில்லை. ஏனெனில் நபியவர்களுடனான தோழமையைப் பொறுத்தளவில் இதனை விடச் சிறப்பான அந்தஸ்தையும் படித்தரத்தையும் எவரும் பெறல் முடியாது.

ஸஹாபாக்களின் காலப்பிரிவிற்குப் பின்னர் மக்கள் அறிவு, வணக்க வழிபாடுகளைப் பொறுத்தளவில் பல தரங்களையுடையோராகப் பிரிந்தனர். அவர்களில் சன்மார்க்க விடயங்களில் மிகத் தீவிரமாக ஈடுபட்ட ஸுஹ்ஹாத் உலகப் பற்றற்ற மனநிலையுடையது எனவும் உப்பாத் (ஆபிதீன் பன்மை) வணக்கவாளிகள் எனவும் அழைக்கப்பட்டனர்.

முஸ்லிம்களில் பல பிரிவுகள் தோன்றி நூதன கொள்கைகளை அறிமுகப்படுத்தி அவர்களும் இப்பதங்களைப் பயன்படுத்தி துஷ்பிரயோகம் செய்ய முனைந்த நிலைமையே அஹலுஸ் ஸுன்னாவைச் சார்ந்த நன்னெறிச் சான்றோர் தங்களை இவர்களிடமிருந்து வித்தியாசம் காட்டிக் கொள்வதற்காக ஸுபி என்ற சொல்லைப் பயன்படுத்தினர்.

தஸவ்வுப் ஸுஃபி என்ற பதம் ஹிஜ்ரி இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்னமே பிரபல்யமடைந்தது. (ரிஸாலா குஷைரிய்யா)

இப்னு கல்தூனும் தனது முகத்திமாவில் இதே கருத்தைக் குறிப்பிடுகின்றார்.

தஸவ்வுப் என்பது முஸ்லிம் சமூகத்தில் தோன்றிய ஷரீஆவின் அடிப்படையில் வளர்ந்த ஒரு கலையாகும். ஸூபிகளால் கடைபிடிக்கப்பட்ட நெறிமுறைகள் அனைத்தும் புகழ்பெற்ற ஸஹாபாக்கள் தாபிஈன்கள் மத்தியில் காணப்பட்டவையாகும்.

இறைவனிடத்தில் ஆழ்ந்த ஈடுபாடு, முற்றிலும் இறைவனைச் சார்ந்திருத்தல், உலகப்பற்றின் கவர்ச்சிகளிலிருந்து ஒதுங்கியிருத்தல், செல்வம், பதவி, அந்தஸ்து ஆகியவற்றைப் பொறுத்தளவில் பற்றற்ற மன நிலையைக் கடைப்பிடித்தல், தனிமையை விரும்புதல் ஆகிய இபாதத்கள் நபித் தோழர்களிலும் ஸலபுஸ் ஸாலிஹீன் என அழைக்கப்படும் நன்னெறிகள் முன்னோர்களிலும் காணப்பட்டன.

ஹிஜ்ரி இரண்டாம் நூற்றாண்டில் இஸ்லாம் பிற நாடுகளில் பரவியதைத் தொடர்ந்து சமூகத்தில் ஏற்பட்ட செல்வத்தின் பெருக்கம் காரணமாக பெரும்பான்மையான மக்கள் உலகக் கவர்ச்சி ஆடம்பர வாழ்வை நோக்கித் தீவிர ஈடுபாடு காட்டியபோது அவற்றை விட்டு ஒதுங்கி தங்களது ஆத்மீக தூய்மையைப் பேணுவதற்காக இறை வணக்கத்தில் ஆழமாக ஈடுபட்டோர் ஸூபிய்யா ஸூபிகள் என இனங்காணப்பட்டனர். இப்னு கல்தூன் முகத்தம்: 329

இப்னு கல்தூன் குறிப்பிடும் அத்தகைய பிரிவினர் எளிய வாழ்வை மேற்கொண்டு (ஸூப்) எனும் கம்பளி ஆடையை அணிந்தனர். கால ஓட்டத்தில் தங்களது ஆத்மிக பரிசுத்தம், உளத்தூய்மை, இறையன்பு ஆகியவற்றை அடிப்படை நோக்காகக் கொண்ட இப்பிரிவினர் தங்களுக்கு உரிய நெறிமுறைகள், கோட்பாடுகளின் அடிப்படையில் செயல்பட ஆரம்பித்தனர். இதுவே தஸவ்வுபின் ஆரம்பக் கட்டமாகும்.

ஆரம்பகால ஸூபிகளாக ஹஸனுல் பஸரி, மஃரூப் அல்-கர்கி, ஜுனைத் அல்பக்தாதி, ஸரீஅஸ் ஸிகதி, ஸுன்னூன் அல்மிஸ்ரி, ராபிஅதுல் அதவியா, புலைல் பின் இயாழ், ஹாரிஸ் அல்முஹாபிஸி ஆகியோர் குறிப்பிடத்தக்கோராவர்.

உலக வாழ்வைப் பொறுத்தளவில் பற்றற்ற மனநிலையைக் கடைபிடித்த இவர்கள், முற்றிலும் உலகப் பற்றிலிருந்து ஒதுங்கி வாழ்க்கைப் போராட்டத்திலிருந்து விடுபட்டு நிற்கவில்லை. இவர்கள் பலர் சமூக வாழ்வில் தீவிரமாக ஈடுபட்டனர்.

இமாம் ஹஸனுல் பஸரி போன்றோர் தங்களது சொற்பொழிவுகள் மூலம் மக்களினதும், ஆட்சியாளர்களினதும் உள்ளங்களில் இறை பக்தியையும் மறுமையின் பால் பற்றினையும் தோற்றுவித்தனர்.

புலைல் பின் இயாழ், அப்பாஸிய கலீபா ஹாரூன் ரஷீதைச் சந்தித்து அவரது ஆடம்பர வாழ்வைக் கண்டித்தார். புகழ்பெற்ற ஸூபிகளான ஷகீக் அல் – பல்கி (ஹி. 194) ஹாதிம் அல் – அஸம் (ஹி. 227) ஆகிய இருவரும் ஜிஹாதில் கலந்து கொண்டு பங்களிப்புச் செய்தனர்.

போர்க்களத்தில் பகைவர்களின் பயங்கர போராயுதங்கள் முட்டி மோதுகின்ற நிலையில் ஹாதிம் அல் அஸம் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

நிச்சயமாக நான் இந்த இடத்தில் எனது மனைவியுடன் கழித்த திருமண நாளின் முதலிரவின் இன்பத்தை அனுபவிக்கின்றேன். அவர் பெற்றிருந்த ஆத்மீக பக்குவம் உயிருக்கே பேராபத்து நிறைந்திருந்த அந்தப் போர்க்களத்தில் இறை நேசத்தின் இன்பத்தில் அவரை மெய்மறக்கச் செய்தது.

இப்ராஹிம் இப்னு அத்ஹம் என்ற ஸூபி மகான் பைஸாந்திரியர்களுக்கு எதிரான பல போர்களில் கலந்துகொண்டார்.

அபுல் ஹஸன் அலி அஷ்ஷாதிலி ஹிஜ்ரி 684 இல் மன்லாராவில் நடைபெற்ற கிறிஸ்தவர்களுக்கெதிரான சிலுவைப் போரில் பங்குகொண்டதாக வரலாறு குறிப்பிடுகிறது.

ஷெய்க் அப்துல் காதிர் ஜீலானியின் உருக்கமான உணர்ச்சிபூர்வமான சொற்பொழிவுகள் ஆயிரக்கணக்கான பாவிகளை நன்நெறியின் பால் திருப்பின. அப்பாஸிய ஆட்சியாளர்களையே ஆட்டங்காணச் செய்தன. அவர்களது சொற்பொழிவுகளில் உள்ளடங்கிய ‘புதூஹுல் கைப்’, ‘பத்ஹுல் ரப்பானி’ போன்ற நூல்கள் இதனைச் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றன.

எனவே, தஸவ்வுப் என்பது செயலின்மை, அசைவற்ற நிலை, உழைப்பின்மை ஆகியவற்றைப் போதிக்கும் துறவறக் கோட்பாடன்று. தஸவ்வுபின் அடிப்படைக் கோட்பாடுகளுள் ஒன்றான ஷுஹ்த் என்னும் பற்றற்ற துறவு நிலையின் இலட்சியம் உள்ளத்தின் கீழான உணர்ச்சிகளுக்கு தனக்கு தானே எதிராகப் போர் தொடுத்து அதனை அடிமைப்படுத்திய இஸ்லாமிய பணியிலும் போராட்டத்திலும் ஈடுபடும் வகையில் இறைநேசம், மறுமையின் பால் பற்று, உலக வாழ்வைத் துச்சமாக மதிக்கும் மனநிலை ஆகிய பண்புகளை உள்ளத்தில் தோற்றுவித்தலாகும்.

தஸவ்வுபின் வரலாற்று வளர்ச்சியில் ஹிஜ்ரி நான்காம் நூற்றாண்டளவு ஒரு முக்கிய கால கட்டமாகும். இக்காலப் பகுதியிலே தஸவ்வுப் பற்றிய நூல்கள் முதன் முதலில் தொகுக்கப்பட்டன. இந்நூல்கள் தொகுக்கப்பட முக்கிய காரணியாக அமைந்தது, இக்காலப்பகுதியில் சூஃபிகள் என்ற வேடம் தரித்து சமூகத்தில் தோன்றிய பலர் பல வழிகளில் தூய்மையான தஸவ்வுபை மாசுபடுத்த முனைந்ததாகும்.

தஸவ்வுப் பற்றிய சரியான தெளிவான விளக்கத்தை அளிக்கும் நோக்கோடு இந்நூல்கள் தொகுக்கப்பட்டன. இந்நூல்களுள் அபூ நஸர் அஸ்ஸர்ராஜ் எழுதிய கிதாபுல் உம்மா, அல்கலாபாதியின் கிதாபுத் தஅர்ருப் லீ மத்ஹபி அஹ்லுத் தஸவ்வுப், அபூதாலிப் அல்மகசியின் கூதுல் குலூப், அல்குஷைரியின் அர்ரிஸாலா ஆகிய நூல்கள் குறிப்பிடத்தக்கனவாகும்.

தஸவ்வுபின் வரலாற்றில் அடுத்த முக்கிய கட்டம் சூபி தர்ஷாக்களின் தோற்றமாகும். ஷேக் அப்துல் காதர் ஜீலானி (மரணம் 1166) பைஅத் முறையை அறிமுகப்படுத்தி மக்களை ஆத்மீக வழியில் நெறிப்படுத்தி, பண்படுத்தி, இறைதிருப்திக்கு இட்டுச் செல்லும் தரீக்கா எனும் மெஞ்ஞான வழியை அறிமுகப்படுத்தினார்கள். இவர்களால் நிறுவப்பட்ட காதிரிய்யா தரீக்கா சிரியா, துருக்கி, கெமருன், கொங்கோ, மொரிடானியா, தன்ஸானியா போன்ற ஊர்களிலும் மத்திய ஆசியாவில் கோக்கேசிய பிரதேசத்திலும் பரவியது.

மொறோக்கோவில் ஷேக் அபுல் ஹஸன் ஷாதுலியினால் (மரணம் 1258) நிறுவப்பட்ட ஷாதுலியா தரீக்கா வட ஆபிரிக்கா, எகிப்து, கென்யா, தன்ஸானியா மற்றும் ஆசியப் பகுதிகளில் பரவியது.

ஷெய்க் பஹாஉத்தீன் நக்ஷபந்தியினால் நிறுவப்பட்ட (மரணம் 1390) நக்ஷஸ்ரீபந்தியா, மத்திய ஆசியா, இந்தியா, இந்நோநேசியா, துருக்கி ஆகிய பகுதிகளில் பிரபல்யம் பெற்றது.

இது தவிர டிஜானியா, நிஸ்தியா, மல்லவியா போன்ற பல தரீக்காக்கள் கால வளர்ச்சியில் தோற்றம் பெற்றன. இஸ்லாத்தின் பரவலிலும், பிரஞ்சு, இத்தாலிய ஏகாதிபத்தியவாதிகளுக் கெதிரான போராட்டத்திலும் இத்தரீக்காக்கள் வகித்த பங்கும் கணிசமானதாகும்.

இந்தோனேசியாவில் முஸ்லிம்களுக்கும் டச்சுக் காரர்களுக்குமிடையில் நடைபெற்ற போர்களில் காதிரிய்யா தரீக்கா மிக முக்கிய இடத்தை வகித்தது.

அல்ஜீரியாவில் பிரஞ்சு ஏகாதிபத்தியத்துக்கு எதிரான 1832 – 1837 க்குமிடையில் மாபெரும் ஜிஹாதை மேற்கொண்ட அமீர் அப்துல் காதிர் ஜஸாஇரி காதிரிய்யா தரீக்காவின் ஷெய்குகளில் ஒருவராக விளங்கினார்.

திஜானியா தரீக்காவும் அல்ஜீரியாவில் பிரஞ்சு ஏகாதிபத்தியத்திறகு எதிரான போரில் சிறப்பான பங்களிப்பை மேற்கொண்டது.

மத்திய ஆசியாவில் ரஷ்ய ஏகாதிபத்தியத்திற்கெதிரான ஜிஹாதில் நக்ஷபந்தியா தரீக்கா முக்கிய பங்களிப்பை செலுத்தியது.

தஸவ்வுபின் வரலாற்றில் ஒரு முக்கிய காலகட்டம், குர்ஆன், ஸுன்னாவின் தூய கோட்பாடுகளில் அமைந்த அக்கலை பிற கலாசார, பண்பாட்டுத் தாக்கங்கள் காரணமாக ஒரு தத்துவச் செயலைப் பெற்றதாகும்.

ஆரம்பகால ஸுபிகள் தங்களது உள, ஆத்மீகப் பண்பாடு கீழான உணர்வுகள், மனோஇச்சைக்கு எதிராகப் போராடி இறை சிந்தனை, இறை தியானம், இறை திருப்தி ஆகியவற்றிலே முற்றிலும் கரிசனை செலுத்தினர்.

ஆனால் இந்த தூய தன்மை பெற்ற தஸவ்வுப் பிற்காலத்தின் தத்துவச் சாயலைப் பெற்றது. இறைவன், அவனது தன்மை, பண்புகள் பிரபல்யத்தில் அவனது வெளிப்பாடு போன்ற தத்துவச் சிந்தனையில் சிக்கியது. இக்கால பிரிவிலேயே வஹ்ஜதுல் அஜாத், ஹுலூல் ஹக்கீகதுல் முஹம்மதிய்யா போன்ற கோட்பாடுகள் தோன்ற ஆரம்பித்தன. கிரேக்கத் தத்துவம், பிளட்டனியா நியோ கோட்பாடு வேதாந்த தத்துவம் போன்ற தத்துவங்கள் தஸவ்வுபில் அவற்றின் தாக்கத்தை ஏற்படுத்தியன.

தஸவ்வுபின் வரலாறு பற்றி ஆராய்ந்த அறிஞர்கள் ஆரம்பகால தூய தஸவ்வுபை அத் தஸவ்வுபில் ஸுன்னி எனவும் பிற்கால தஸவ்வுபை அத் தஸவ்வு அல்பவ்ஸபீ எனவும் அழைத்தனர். இப்னு தைமிய்யா போன்ற அறிஞர்கள் தஸவ்வுப் அன்ஸுன்னியை ஏற்றுக்கொண்ட அதேவேளை தஸவ்வுப் அல் பல்ஸபியை கண்டித்தனர்.

எனவே, தஸவ்வுப் என்பது குர்ஆனின் ஸுன்னாவின் அடிப்படையில் வளர்ந்த ஒரு இஸ்லாமிய கலையாகும். பிற்காலத்தில் தப்ஸீர்களில் இஸ்ராஈலியத் என்னும் யூத மரபுக் கதைகள் நுழைந்தமைக்காக எவ்வாறு தப்ஸீரை நிராகரிக்க முடியாதது போன்று,

ஹதீஸ்களில் மெழூஅத் என்னும் புனைந்துரைக்கப்பட்ட ஹதீஸ்கள் இடம்பெற்றமைக்காக, ஒருவன் ஹதீஸை எவ்வாறு புறக்கணிக்க முடியாததை போன்று,

தஸவ்வுபில் அதன் வரலாற்றின் பிற்பட்ட காலகட்டத்தில் கிரேக்க, இந்திய தத்துவச் செயற்பாடு ஏற்பட்டு அதன் தூய்மை மாசுபட்டமைக்காக தூய உருவில் அமைந்த குர்ஆன் ஸுன்னாவின் போதனைகளின் அடிப்படையில் அமைந்த தஸவ்வுபை நிராகரித்தல் முடியாது.

எமது சமகால உலகில் மேற்குலகில் ஏற்பட்டுள்ள ஆத்மீக வெறுமையானது மேற்குலகின் புத்தி ஜீவிகள் பலரை தஸவ்வுபின் மூலம் இஸ்லாத்தில் இணையச் செய்தது. அறிவுத் துறையிலும் சிந்தனைத் துறையிலும் மிக ஆழமான புலமை பெற்றிருந்த புத்திஜீவிகள் பலர், தங்கள் வாழ்வில் நிம்மதியும், நிறைவும் பெறுவதற்கு மிக அடிப்படையான ஏதோ ஒன்றை இழந்திருப்பது போன்ற உணர்வைப் பெற்றனர்.

இந்த வெற்றிடமே ஆத்மீக வெறுமையாகும். இந்த ஆத்மீக வெறுமையை ஈடுசெய்ய முற்பட்ட அவர்களது முயற்சி தஸவ்வுபின் பால் ஆர்வம் கொள்ளச் செய்து அதனடியாக இஸ்லாத்தை ஏற்று, இத்துறையில் பெரும் பங்களிப்புச் செய்யும் ஆற்றல் படைத்த முஸ்லிம் அறிஞர்களாக அவர்களை மாற்றியது.

இவர்களுள் மாட்டின் லிங்ஸ் (அபூபக்கர் ஸிராஜுதீன்), டைடஸ் பேகாத் (அப்துல் வாஹித் யஹ்யா), விக்டர் டன்னர் (அப்துல் ஜப்பார் டன்னர்) ஆகியோர் குறிப்பிடத்தக்கோராவர்.

ஆக தஸவ்வுப் என்னும் சூஃபிஸம் இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாட்டின் அசைக்க முடியாத ஆணி வேர் என்பதில் எள்ளளவும் சந்தேகம் கொள்ளாதீர்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 25

" ஏகாந்த நிலை " என்றால் என்ன ? என்பது பற்றி நண்பர்கள் இத்தொடர் ஆரம்பித்த தினத்திலிருந்து பின்னூட்டத்தில் கேட்டுக் கொண்ட இருக்கிறார்கள். முகநூல் பதிவுகளில் கூட நண்பர்கள் தம் பதிவுகளில் ஏகாந்தம் பற்றிய வார்த்தைகள் அவ்வப்போது வந்து போனது.

ஏகாந்த நிலை என்பது ஏகனுடன் ஒன்றிருத்த நிலை. அதற்காக ஓரிடத்தில் மௌனத்து தியானிக்கும் நிலை மற்றுமன்று. எந்நிலையிலும் ஏகனை முற்படுத்தும் சொல்லும் செயலும் கூட ஏகாந்த நிலைதான் எனப்படும். உதாரணத்திற்கு,

ஒரு மனிதர் இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) அவர்களிடம் வந்து, நான் பாவங்கள் புரிந்து எனக்கு நானே அநீதம் இழைத்து விட்டேன். எனக்கு அறிவுரை கூறுங்கள் எனக் கேட்டார்.

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : என்னிடமிருந்து ஐந்து விஷயங்களை ஏற்றுக் கொண்டு அவற்றைச் செய்ய முன் வந்தால் எந்தப் பாவமும் உனக்கு எந்த தீங்கும் அளிக்காது.

அந்த மனிதர் : அவைகள் யாவை?

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : நீ அல்லாஹ்வுக்கு மாறு செய்ய நினைத்தால் அவனுடைய உணவை உண்ணாதே!

அந்த மனிதர் : பிறகு நான் எதை உண்பேன்? இப்புவியில் உள்ள அனைத்தும் அவனுடைய உணவே!

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : அப்படியானால் அல்லாஹ்வினுடைய உணவை உண்டு அவனுக்கு மாறு செய்வது சரியாகுமா?

அந்த மனிதர் : சரியாகாது. இரண்டாவது என்ன?

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : நீ அல்லாஹ்வுக்கு மாறு செய்ய நாடினால் அவனுடைய பூமியில் வசிக்காதே!

அந்த மனிதர் : இது முந்தயதை விடவும் கொடுமையானது! பிறகு நான் எங்கு தங்குவேன்?

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : அல்லாஹ்வினுடைய உணவை உண்டு, அவனுடைய பூமியில் தங்கி இருந்துக் கொண்டு அவனுக்கு மாறு செய்வது முறையாகுமா?

அந்த மனிதர் : அது முறையல்ல. மூன்றாவது என்ன?

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : நீ அல்லாஹ்வுக்கு மாறு செய்ய விரும்பினால் அவன் உன்னைக் காணாத இடத்திற்குச் சென்று விடு!

அந்த மனிதர் : நான் எங்கு செல்வேன்? அவனோ இரகசியத்தையும் பரகசியத்தையும் அறபவனாக இருக்கிறானே!

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : அல்லாஹ்வினுடைய உணவை உண்டு, அவனது பூமியில் தங்கிக் கொண்டு, அவன் உன்னைப் பார்த்துக் கொண்டிருக்க அவனுக்கு மாறு செய்வது முறையாகுமா?

அந்த மனிதர் : அதுவும் முறையல்ல. நான்காவது என்ன?

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : உயிரைக் கைப்பற்றும் வானவர் உன் உயிரைக் கைப்பற்ற வந்தால், எனக்கு இன்னும் கால அவகாசம் தாருங்கள்! நான் திருந்தி நற்செயல் புரிந்து வருகிறேன் என்று அவரிடம் சொல்லி விடு!

அந்த மனிதர் : அவர் என் கோரிக்கையை ஏற்க மாட்டார். எனக்கு அவகாசமும் தரமாட்டார்.

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : நீ பாவமீட்சி பெற்று திருந்தி வாழ்வதற்காக உன்னால் உன் மரணத்தைத் தடுக்க முடியவில்லையென்றால் இறைவனுக்கு நீ எப்படித் தான் மாறு செய்கிறாய்?

அந்த மனிதர் : ஐந்தாவது என்ன?

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : மறுமையில் தண்டனை தரும் வானவர்கள் உன்னை நரகத்திற்கு அழைத்துச் செல்ல வரும் போது நீ அவர்களுடன் செல்லாதே!

அந்த மனிதர் : அவர்கள் என்னை விடமாட்டார்களே! என் கோரிக்கையை ஏற்க மாட்டார்களே!

இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) : அப்படியானால் நரகத்திலிருந்து விடுதலையை நீ எப்படி எதிர்பார்க்க முடியும்?

அந்த மனிதர் : எனக்கு இவ்வளவு போதும்! என் இறைவனிடம் நான் பாவமன்னிப்பு கோருகிறேன். அவனிடமே திரும்புகிறேன்.

என தருமை சகோதர சகோதரிகளே! நாமும் நமது தவறுகளுக்கு வருந்தி நமக்கு மரணம் வருமுன் அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கோருவோம். இறைவன் நம்மை நரக நெருப்பிலிருந்து பாதுகாத்தருள போதுவமானவன்.

அல்லாஹ் கூறுகிறான்: –

‘நம்பிக்கையாளர்களே! நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் பக்கம் மன்னிப்புக் கோரி மீளுங்கள்! நீங்கள் வெற்றியடைவீர்கள்!’ (குர்ஆன் 24:31)

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 26

("அல்ஹாஃபி" - காலில் செருப்பின்றி நடப்பவர் )



மர்வ் நகரத்திலே பிறந்த ஒருவர் பக்தாது மாநகரம் வந்து குடிப்பதிலும் கும்மாளமடிப்பதிலும் தம் நேரத்தைக் கழித்து வந்தார். ஒருநாள் அவர் குடித்துக் கும்மாளமடித்து விட்டுத் தெரு வழியே தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டிருந்தார்.

"அருளாளனும், அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்" என்று பொறிக்கப்பட்ட தாள் ஒன்று ஆங்குக் கீழே கிடப்பதைக் கண்டதும் அதை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டு, தம் இல்லம் கொணர்ந்து அதன் மீது நறுமணம் பூசித் தம் பெட்டியிலே பத்திரமாக குடிப்போதையிலும் அதை பேணுதலுடன் வைத்தார்.

இஃது நிகழ்ந்தது பக்தாது மாநகரின் ஒரு பகுதியில் அதன் மற்றொரு மருங்கில் வாழ்ந்து வந்த நல்லார் ஒருவர் அவ்விரவு அயர்ந்து உறங்குங்கால் கனவொன்று கண்டார். அக்கனவில் அசரீரி ஒன்று பின்வருமாறு முழங்கியது:

"நீர் பிஷ்ரிடம் சென்று இச்செய்தியைக் கூறும். நீர் என் பெயரை நறுமணமாக்கினீர். நான் உன் பெயரை நறுமணமாக்குவேன். நீர் என் பெயரை உயர்த்தி வைத்தீர். நான் உன் பெயரை உயர்த்தி வைப்பேன். நீர் என் பெயரைப் புனிதமுறச் செய்தீர். நான் உம் பெயரைப் புனிதமுறச் செய்வேன். என் மாண்பின்மீது ஆணையாக நான் உம் பெயரை இம்மையிலும் மறுமையிலும் நறுமணம் கமழச் செய்வேன்.

இக் கனவைக் கண்டதும் திடுக்குற்று விழித்தெழுந்த நல்லாரின் மூளை சக்கரவாகமாகச் சுற்றிச் சுழலத் துவங்கியது. பிஷ்ரா? அவர் ஒரு குடிகாரரல்லவா? அவரைப் பற்றியா இக்கனவில் அறிவுறுத்தப்பட்டிருக்கும். ஒருவேளை இது ஷைத்தானின் திருவிளையாடலாக இருக்குமோ? இருக்கலாம்."

மீண்டும் மீண்டும் அதே கனவு அதே அசரீரி ...

அதன்பின் எப்பொழுது பொழுது புலரும் என்று ஏங்கிக் கொண்டிருந்த அவர் பொழுது புலர்ந்ததும் பிஷ்ரைத் தேடிப் புறப்பட்டார். பிஷ்ரோ இரவு முழுவதும் குடித்துக் கும்மாள மடித்து விட்டு குடிபோதையில் மயங்கிக் கிடந்தார்.

அவர் இருந்த இடத்தை அடைந்த அந்நல்லார், "பிஷ்ர் இங்கு இருக்கின்றாரா?" என்று வினவ, வாயலில் நின்றுகொண்டிருந்த சிலர்,

"ஆம்; அவர் உள்ளே உள்ளார். குடிபோதையில் மூழ்கிக் களைத்துப் போயுள்ளார்" என்று கூறினர்.

"நல்லது; அவரிடம் சென்று நான் அவருக்கு ஒரு செய்தி கொணர்ந்திருப்பதாகக் கூறுங்கள்" என்று அந்நல்லார்,

"எவரிடமிருந்து செய்தி கொணர்ந்துள்ளார் என்று கேட்டு வாருங்கள்" என்று கூறினார் பிஷ்ர்

"இறைவனிடமிருந்து" என்று அந்நல்லார் மறுமொழி கூறி அனுப்பினார்.

அது கேட்டதும் பிஷ்ரின் உள்ளமும் உடலும் ஒருங்கு சேர்ந்து அதிர்ந்தன. அவரின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்தோடியது.

"இறைவனிடமிருந்தா? எனக்கா? என்னைக் கண்டித்தா?" என்று அவர், "சற்றுப் பொறுங்கள். என் நண்பர்களிடம் கூறிவிட்டு வருகிறேன்" என்று காலில் செருப்புக் கூட போடாமல் ஓடோடி வந்து, "நண்பர்களே" என்று தம் நண்பர்களைக் கூவி அழைத்தார். அது கேட்டதும் அவரின் குடிகார நண்பர்கள் ஓடோடி வந்தார்கள்.

"நண்பர்களே ! எனக்கு அழைப்பு வந்துவிட்டது. நான் போகிறேன். இனிமேல் நீங்கள் என்னை இங்குக் காணமாட்டீர்கள்" என்று கூறிவிட்டு விறுவிறு என்று அவ்விடத்தை விட்டும் வெளியேறினார்.

இதிலிருந்து அவருடைய வாழ்க்கையிலே ஒரு மாபெரும் திருப்பம் ஏற்பட்டது. குடிகாரர் பிஷ்ர் இறைநேசர் பிஷ்ராக மாறினார். குடிப்பதும் கும்மாள மடிப்பதுமே தம் வாழ்வின் அலுவலாகக் கொண்டிருந்த அவர் தவ வாழ்வு வாழ்ந்து வந்த தம் மாமா அலீ இப்னு கஷ்ரம் (ரஹ்) அவர்களின் இல்லம் சென்று அவர்களின் கரம் பிடித்து 'பைஅத்' பெற்றார்.

இக்காலை அவரின் செருப்பின் வார் அறுந்து விடவே அதனைத் தைப்பதற்காகச் செருப்புத் தைப்பவனிடம் எடுத்துச் சென்றபொழுது

"உலகப் பற்று உமக்கு இன்னும் இவ்வளவு இருக்கின்றதா?" என்று வினயமாக வினவினார். அது அவரின் உள்ளத்தில் முள்ளெனத் தைக்கவே அவர் தம் கையிலிருந்த செருப்பைத் தூக்கி எறிந்து, காலில் இருந்த ஒற்றைச் செருப்பையும் உதறித் தள்ளி,

"இனி எக்காலத்திலும் செருப்பு அணிவதில்லை" என்று சூளுரைத்தார். இக்கணத்திலிருந்து அவர் செருப்பு அணியவில்லை. இதன் காரணமாக, 'காலில் செருப்பின்றி நடப்பவர்" என்று பொருள்படும் "அல்ஹாஃபி" என்ற பட்டப் பெயரும் அவருக்கு ஏற்பட்டது.

ஒருநாள் மக்கள் அவரை நோக்கி, "தாங்கள் ஏன் காலில் செருப்பு அணிவதில்லை?" என்று வினவிய பொழுது, "துன் மார்க்கத்தில் சென்று கொண்டிருந்த நான் எக்கணத்திலிருந்து நேரிய வழியில் நடக்கத் துவங்கினேனோ அக்கணத்திலிருந்து செருப்பு அணிய நாணமுற்றேன்.

மேலும் இறைவன் தன் திருமறையில், "நான் பூமியை உங்களுக்கு ஒரு கம்பளமாக ஆக்கியுள்ளேன்" என்று கூறியுள்ளான். அவ்விதமிருக்க இறைவன் விரித்திருக்கும் கம்பளத்தின் மீது செருப்புடன் நடமாடுவது என் போன்ற அவனின் அடிமைகளுக்குத் தகுமா?" என்று தாழ்மையுடன் அவர்கள் பதிலிறுத்தார்கள்.

இதே கேள்வியைக் கேட்ட மற்றொருவரிடமும் "பூமி முழுவதும் இறைவன் விரித்த கம்பளமாக உள்ளது. அவன் விரித்துள்ள கம்பளத்திற்கும் என் பாதங்களுக்கும் இடையே யாதொன்றும் இருக்க நான் விரும்பவில்லை" என்று கூறினர்.

இதற்கு ஹுஜ்வீரி (ரஹ்) அவர்கள் விளக்கம் கூறுங்கால்,"இறைவனை ஒருமித்த மனோநிலையுடன் தியானிக்கும் பொழுது காலணி போன்ற ஒருதிரை தமக்கும் இறைவனுக்கும் இடையே குறுக்கிடுவதை அவர்கள் விரும்பவில்லை என்று அவர்கள் சூசகமாகக் கூறியதாக இயம்பினர்

இதே கேள்வியைக் கேட்ட வேறொருவரிடம் " நான் நேர்வழி பெற்ற நேரத்தில் நான் செருப்பு அணியாதிருந்தேன். அப்பொழுது இறையச்சம் என்னை ஆட்கொண்டது. அந்த இறையச்சத்துடனே நான் இறக்கும் வரை இருக்க விரும்புகிறேன். அதற்கு இடையூறாக செருப்பு இருக்க வேண்டாம் " என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 27

( ஐந்து லட்சம் ரூபாய் கொடுத்து வாங்கிய காலணி )




காஜா நிஜாமுத்தீன் ஔவியா (ரஹ்) அவர்களுக்கும் அமீர் குஸ்ருவுக்கும் இருந்த ஈடுபாடோ ஈடு இணையற்றதாக இருந்தது. சிறந்த பார்ஸிக் கவிஞரான அமீர் குஸ்ரு, முதன் முதலாக காஜா அவர்களைச் சந்தித்த பொழுது, "உம் ஒளி நிரம்பிய நெற்றியை, என்னுடைய விலாயத்தின் கேடய ஒளி மேலும் ஒளிரச் செய்யும்" என்று கூறினர் காஜா. அவர்களிடம் அவர் தீட்சை பெற்றார்.

பின்னர் அவர்களைப் பற்றிப் புகழ்ப்பா பாடி, அவர்களின் முன்னிலையில் அவற்றை இனிய குரலெடுத்துப் பாட, அதுகேட்டு மகிழ்ந்த காஜா அவர்கள்,

"உமக்கு என்ன வேண்டும்?" என்று வினவினர்.

"என் சொல்லில் இனிமையும் உருக்கமும் வேண்டும்" என்று அவர் பதில் கூறினார்.

அப்பொழுது காஜா அவர்கள், தம் நாற்காலியின் கீழிருந்த தட்டிலிருக்கும் சீனியில் சிறிதளவு எடுத்து உண்ணுமாறு கூறினர். அவ்விதமே செய்ய, அன்றிருந்து அவருடைய தொனியில் இனிமையும், பாட்டில் உருக்கமும் ஏற்பட்டன. அவருடைய பாடல்களைக் கேட்டு மக்கள் மெய் மறந்த நிலையிலானார்கள்; சிலர் பிரக்ஞையற்ற நிலைக்குள்ளானார்கள். சிலர் உயிர் துறக்கவும் செய்தார்கள்.

ஒருமுறை தர்வேஷ் ஒருவர் காஜா அவர்களை அணுகித் தம் அவல நிலையை எடுத்துரைத்து உதவி வேண்டினார். அப்பொழுது தவமடத்தில் அவருக்குக் கொடுக்க யாதொரு பொருளுமில்லை. எனவே

காஜா அவர்கள், அவரை நோக்கி, "இன்று எனக்கு ஏதேனும் பொருள் வரின் உமக்குத் தருகிறேன்" என்றனர்.

அன்று முழுவதும் அவர் தவமடத்தில் காத்திருந்த போதினும், யாதொரு பொருளும் வரவில்லை. 'சரி'; நாளைக்கு வரின் தருகிறேன்" என்றனர் காஜா. அடுத்த நாளும் யாதொரு பொருளும் வாவில்லை. அடுத்த நாளும், அதற்கு அடுத்த நாளும் அவ்விதமே ஆயின.

சோதனையாக நான்கு நாட்களாக யாதொரு பொருளும் வராததைக் கண்ட காஜா அவர்கள், அந்த தர்வேஷிடம் தம் இரு காலணிகளைக் கொடுத்து, அவற்றை விற்றுத் துயர்போக்கிக் கொள்ளுமாறு கூறி அனுப்பி வைத்தார்கள்.

அவற்றைப் பெற்றுக் கொண்டு நகர் நீங்கிச் சாலை வழியே அந்த தர்வேஷ் சென்று கொண்டிருக்கும் பொழுது, வேற்றூர் சென்றுவிட்டு டில்லி திரும்பிக் கொண்டிருந்த அமீர் குஸ்ரு, அந்த தர்வேஷை நோக்கித் தம் ஆன்மீக ஆசானின் நலன் பற்றி விசாரித்தார்.

அப்பொழுது அமீர் குஸ்ரு, அந்த தர்வேஷை ஒரு முறைக்கு இருமுறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, 'உம்மிடமிருந்து என் ஆன்மீக ஆசானின் வாடையை நான் நுகர்கின்றேனே. அவர்களின் பொருள்களில் ஏதேனும் உம்மிடம் உள்ளதோ?" என்று வினவினார்.

'ஆம்' என்று கூறித் தம் பையிலிருந்த காஜா அவர்களுடைய இரு காலணிகளையும் எடுத்துக்காட்டி, அவற்றை அவர்கள் தமக்குத் தந்ததற்கான காரணத்தையும் எடுத்துரைத்தார் அவர்.

அப்பொழுது அமீர் குஸ்ரு அந்த தர்வேஷை நோக்கி, "அந்த இரு காலணிகளையும் எனக்கு விற்றுவிடுகிறீரா?" என்று வினவினர்.

"சரி" என்று கூறினார் அந்தத் தர்வேஷ்.

உடனே அமீர் குஸ்ரு தம் கையிலிருந்த ஐந்து லட்சம் ரூபாய்களையும் அவற்றிற்குப் பகரமாக அந்த தர்வேஷிடம் கொடுத்துவிட்டு, அவற்றைத் தம் தலையில் சுமந்த வண்ணம், காஜா அவர்களை அடைந்து வழியில் நிகழ்ந்ததை எடுத்துரைத்தார்.

அப்பொழுது காஜா அவர்கள் அமீர் குஸ்ருவை நோக்கி, புன்முறுவல் பூத்த முகத்தினராய், "துருக்கியே! நீர் அவற்றை மலிவான விலைக்கு வாங்கி விட்டீரே" என்று கூறினர்.

உடனே அமீர் குஸ்ரு "அந்த தர்வேஷ் நான் பணத்தைப் பெற்றுக் கொண்டு, மனநிறைவுடன் சென்று விட்டார். அதற்கு மாறாக அவர் என் சொத்து முழுவதையும் மட்டுமல்ல என் ஆவியை வேண்டினும் கொடுத்திருப்பேன் என்று பதில் உரைத்தார்.

படம் : நிஜாமுதீன் அவுலியாவின் கல்லறை (வெங்காயக் குவிமாடம்), ஜமாத் கானா மஸ்ஜித் (சிவப்பு சுவர்) மற்றும் முகலாய இளவரசி ஜஹான் ஆராவின் கல்லறை (இடதுபுறம் வாசல்), அனைத்தும் டெல்லி நிஜாமுதீன் தர்கா வளாகத்தில்"

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 28

( ஹராமான உணவின் கெட்ட வாடை )

அவர் ஒரு இறை நேசப் பெருந்தகை ஆவார்கள், அவர்கள் சாப்பிட்டு பல நாட்கள் ஆகிவிட்டது அதன் காரணமாக களைப்பாக ஒரு சாலையில் நடந்து சென்று கொண்டிருந்தார்கள்

அப்பொழுது அந்த சாலையில் வசித்துக் கொண்டிருந்த அந்த இறைநேசப் பெருந்தகை தோழர் அவர்கள் பெருந்தகை அவர்களை மிகவும் களைப்பாக இருப்பதை பார்த்து அவர்களை தங்கள் வீட்டிற்கு வாருங்கள் சாப்பிட என்று அழைத்தார்கள்

அப்பொழுது அந்த பெருந்தகை அவர்கள் கேட்டார்கள் " இதை நீர் விரும்புகின்றீர்களா ?" என்று

" ஆம் நீங்கள் என் வீட்டிற்கு வந்து உணவருந்த வேண்டும் என்பதை நான் மிகவும் விரும்புகிறேன்" மகிழ்ச்சியுடன் என்று சொன்னார்கள்

சரி என்று அந்த விருந்து அழைப்பை ஏற்ற இறைநேசப் பெருந்தகை அவருடைய இல்லத்திற்குச் சென்றார்கள். அப்பொழுது அந்த நண்பர் அவர்கள் தங்கள் வீட்டில் என்ன உணவு இருக்கிறது என்று தேடிப் பார்த்த பொழுது ஒரு திருமண வீட்டிலிருந்து அவர்களுக்கு வந்திருந்த உணவுப் பொருள் இருந்தது

அந்த உணவுப் பொருளை எடுத்து தட்டில் வைத்து அந்த இறைநேசப் பெருந்தகையிடம் கொடுத்தார்கள்

அதை வாங்கி உண்ண முயன்ற போது அந்த இறைநேசப் பெருந்தகை அவர்களுடைய முகம் சற்று மாற்றம் ஏற்பட்டு தாங்கள் வாயில் வைத்து உண்ண முயற்சித்த உணவை துப்பி விட்டு எதுவும் பேசாமலே சென்று விட்டார்கள்.

மறுநாள் அந்த இறைநேசப் பெருந்தகையை சந்தித்த மனிதர், : " என் விருந்தோம்பலை ஏற்று என் வீட்டிற்கு வருகை தந்து எனக்கு முதலில் மகிழ்ச்சியை தந்த நீங்கள் அதன் பின்பு அந்த உணவை துப்பி விட்டு எதுவுமே சொல்லாமல் சென்று விட்டீர்கள். அது எனக்கு மிகவும் வருத்தத்தை தந்தது. எனக்கு முதலில் மகிழ்ச்சி தந்து பின்பு வருத்தத்தை எனக்கு ஏன் ஏற்படுத்தினீர்கள் " என்று கேட்ட பொழுது

அந்த இறை நேசப் பெருந்தகை அவர்கள் சொன்னார்கள் "என் இறைவன் எனக்கு ஒரு நிலையை அளித்துள்ளான். நான் ஹலாலான உணவை உண்ணும் பொழுது எனக்கு எந்த ஒரு மாற்றமும் நிகழாது. அதுவே அந்த உணவு ஹராமாக இருக்கும் பட்சத்தில் அந்த உணவிலிருந்து ஒரு கெட்ட வாடை வந்து என்னை உண்ண முடியாமல் செய்து விடும்..

நீங்கள் தந்த உணவை நான் வாயில் வைத்து உண்ண துவங்கும்பொழுது ஒரு அந்த கெட்ட வாடை வந்து என்னை உண்ண விடாமல் செய்துவிட்டது அப்படி ஒரு கெட்ட வாடை தான் நீங்கள் தந்த உணவில் வந்தது ஆகவே தான் துப்பி விட்டு சென்று விட்டேன்" - என்று சொன்ன பொழுது அந்த இளவல் மிகவும் வருத்த முற்று,

"அது எங்கள் வீட்டில் செய்த உணவு அல்ல அருகில் இருக்கக்கூடிய ஒரு திருமண வீட்டில் இருந்து வந்த உணவு என்று சொல்லி தங்கள் வருத்தத்தை தெரிவித்த அந்த இளவல் மீண்டும் அந்த இறைநேசப் பெருந்தகையை தங்கள் வீட்டிற்கு அழைத்து உணவு உண்ண செய்தார்கள்...

இறை நேசர்கள் எப்படி இறைவனின் நெருக்கத்தைப் பெற்றார்கள் என்பதற்கு இந்த சம்பவம் ஒரு சாட்சியாக இருக்கிறது இறை நேசர்களுடைய வாழ்வில் ஹராமான எந்த ஒரு வஸ்தும் உள்ளே செல்லாது அதை இறைவன் தடுத்து விடுவான் என்கின்ற படிப்பினையும் இந்த நிகழ்வில் உள்ளது..

இப்படி இறைவனால் பாதுகாக்கப்பட்ட அந்த இறைநெசப் பெருந்தகை தான் ஹழ்ரத் ஹாரித் அல் முஹாஸிபி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஆவார்கள் ( Sufi Chiste பதிவு )

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 29

( பிழை பொறுக்கப்பட்டவனின் கைப்பட்டதும் மண்ணும் பொன்னாக மாறிவிடும் )

ஓர் இரவு புலைல் (ரஹ்) அவர்கள் வழிப்பறி செய்து திருடி விட்டு நம் காதலித்து வந்த ஒரு பெண்ணை பார்ப்பதற்காக மதில் மீது ஏறிய பொழுது அவ்வழியே சென்ற வணிக குழுவில் உள்ள காரி ஒருவர் திருக்குர்ஆனை சப்தமாக...

"ஈமான் கொண்டார்களே அவர்களுக்கு, அவர்களுடைய இருதயங்கள் அல்லாஹ்வையும், இறங்கியுள்ள உண்மையான (வேதத்)தையும் நினைத்தால், அஞ்சி நடுங்கும் நேரம் வரவில்லையா?" (குர்ஆன் : 57:16)

என்ற வசனத்தை ஓதிக் கொண்டு சென்றது புலைல் (ரஹ்) அவர்களின் அவர்களின் உச்சியைப் பிடித்து ஒரு குலுக்கு குலுக்குவது போன்று இருந்தது. அது கேட்டதும் அவர்கள் தங்களை அறியாமல்,

"இறைவனே அந்நேரம் வந்துவிட்டது ! இறைவனே அந்நேரம் வந்துவிட்டது !" என்று அவ்விடத்தை விட்டு விரண்டோடி கானகத்தின் நடுவே உள்ள ஒரு பாழ் மண்டபத்தில் கண்ணீருடனும் கம்பலையுடனும் தன் வாழ்வை கழித்து வந்தார்கள்.

தம்மால் தீங்கிழைக்கப்பட்டவர் ஒவ்வொருவரையும் தேடிக் கண்டு பிடித்து அவர்களிடம் தம் பாவம் பொறுத்தருளுமாறு வேண்டினார்கள். அவர்களும் அவர்கள் மீது இரங்கி அவ்வாறே செய்தார்கள்.

ஆனால் அபிவர்த் என்னும் ஊரிலுள்ள யூதன் ஒருவன் மட்டும் அவர்கள் தமக்குச் செய்த பொல்லாங்கைத் தம்மால் ஒருபோதும் மறக்க இயலாதென்று கூறினான். பின்னர் ஒருவாறு மனம் இளகி, "அதோ காணப்படுகின்றதே ஒரு மணல் மேடு அதனை நீர் வெட்டிச் சமதரையாக ஆக்கிவிடின் நீர் எனக்குச் செய்த பொல்லாங்கைப் பொறுக்கவும் மறக்கவும் செய்துவிடுகின்றேன்" என்று இயம்பினான்

அதற்கு புலைல் (ரஹ்) அவர்கள் அவர்கள் இணங்கி அம்மணல் மேட்டை வெட்டத் துவங்கினார்கள்.

வெட்டினார்கள்; வெட்டினார்கள். வெட்ட வெட்ட அம் மணல் மேட்டில் ஏற்பட்ட பள்ளம் காற்றினால் அடித்து வரப்பட்ட மணலால் நிரப்பப்பட்டுக் கொண்டு வந்தது. எனினும் அவர்கள் சளைக்கவில்லை. தாம் செய்த பாவத்திற்கு பரிகாரம் இந்த மணல் மேட்டில் தானே இருக்கிறது என்றெண்ணி 'இறையருளில் நம்பிக்கை வைத்து அவர்கள் அம்மணல் மேட்டைப் பல நாட்களாக வெட்டி வந்தார்கள்.

காற்று, அவர்களுடன் போட்ட போட்டியோ கடுமையாக இருந்தது. ஆனால் என்ன வியப்பு! அடுத்த நாள் காலையில் அவர்கள் வழக்கம் போல் மண் வெட்டியுடன் அங்கு வந்தபொழுது, அன்றிரவு அடித்த கடும்காற்றின் காரணமாக அம்மணல் மேடு முழுவதும் சமதரையாக ஆக்கப்பட்டிருந்தது.

இறுதியாக, இறைவன் அவர்கள்மீது இரங்கி,காற்றை அவர்களுக்குச் சாதகமாக அடிக்கச் செய்ததை இறைவன் அவர்களின் பாவம் பொறுத்து அவர்களை ஆட்கொண்டதற்கான ஒரு நல்ல அறிகுறியாகக் கண்டான் அந்த யூதன்.

எனினும் தான் முன்னர் செய்திருந்த ஆணைக்கு எவ்வாறு மாறு செய்வது? தம்மிடம் கொள்ளையிட்ட பொருளை அவர் திருப்பித் தந்தாலொழிய அவர்களைத் தாம் மன்னிப்பதில்லை என்றல்லவோ அவன் ஆணையிட்டிருந்தான்.

ஆனால் இப்பொழுது அவர்களிடம் அரைக் காசேனும் இல்லையே. இந்நிலையில் என் செய்வது? என்று சிந்தித்தான். அவனுடைய சிந்தனையில் ஓர் எண்ணம் பளிச்சிட்டது.

உடனே அவர்களைத் தம் இல்லம் அழைத்து வரச் செய்து அவர்களிடம் தாம் செய்த ஆணையை எடுத்துரைத்து, "அதற்காகத் தாங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். அதோ என் தலையணைக்குக் கீழே பணப்பை ஒன்றை வைத்துள்ளேன். அதனை எடுத்து வந்து என்னிடம் தந்து விடுங்கள். அப்பொழுது என்னுடைய ஆணையும் நிறைவேறிவிடும். நானும் தங்களை மன்னித்து விடுகிறேன்" என்று கூறினான்.

அவர்களும் அவ்வாறே செய்தார்கள். ஆனால் அவனோ அவர்களின் முந்தைய நிலையையும் தற்போதைய நிலையையும் கண்டு இஸ்லாம் அவர்களின் வாழ்விலே நிகழ்த்தியுள்ள மகோன்னத உணர்ந்து அடுத்த கணமே இஸ்லாத்தைத் தழுவினான். காரணம்.....

'எவனுடைய பாவமன்னிப்புக் கோரல் உண்மையாக உள்ளதோ அவன் கைப்படின் மண்ணும் பொன்னாக மாறிவிடும்' என்று தௌராத்தில் தாம் பார்த்துள்ளதாகவும் எனவே அதனைச் சோதிக்கத் தன் தலையணையின் கீழ் பையில் களிமண் கட்டி வைத்திருந்ததாகவும்,

புலைல் அவர்கள் அதனைத் தன்னிடம் எடுத்து வந்து தந்தபொழுது அது பொன்னாக இருந்ததைக் கண்டதாகவும் அதன் மூலம் அவர்கள் உண்மையான இறை பக்தர்தாம்; அவர்களின் மார்க்கம் உண்மையான மார்க்கம் தான் என்பதை உணர்ந்துதான் இஸ்லாத்தைத் தழுவியதாகவும் அந்த யூதன் கூறினானென 'தத்கிரத்துல் ஔலியா' என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 30

( திக்ரின் காலமே அவனாகி விடுகிறது )



வணிகராக வாழ்வைத் துவங்கிய ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்கள் எவ்வாறு ஆன்மீக ஞானியாக மாறினார்கள்? இக்கேள்வி அவர்களிடமே வினவப்பட்ட பொழுது அவர்கள் பின்வருமாறு பதில் கூறினார்கள்.

"ஒரு நாள் நான் கடையில் அமர்ந்திருந்தேன். அப்பொழுது ஹபீப்ராய் (ரஹ்) அவர்கள் அவ்வழியே சென்றார்கள். அவர்களை நான் அழைத்து ஏழைகளுக்கு வழங்குமாறு அவர்களிடம் சில பொருள்களை வழங்கினேன்.

அவற்றைப் பெற்றுக் கொண்ட அவர்கள், 'இறைவன் உமக்குப் பேரருள் பாலிப்பானாக!' என்று வாழ்த்தினர். அக்கணத்திலிருந்து என் உள்ளத்தில் உலகப் பொருள்களின் மீதுள்ள ஆசை எடுபடத் துவங்கியது.

அடுத்த நாள் மஃரூபுல் கர்கீ (ரஹ்) அவர்கள் ஓர் அநாதைச் சிறுவனை அழைத்து வந்து அவனுக்கு உடையணிவிக்குமாறு கூறினர்.

அவ்விதமே நான் செய்தேன். அது கண்டு மகிழ்ந்த மஃரூபுல் கர்கீ (ரஹ்) அவர்கள், "இறைவன் உமக்கு இவ்வுலகை வெறுப்பாக்கி உம்முடைய கவலைகள் அனைத்தையும் விட்டு உமக்கு விடுதலை வழங்குவானாக!" என்று இறைஞ்சினர்.

அக்கணத்திலிருந்து அவர்களின் உள்ளத்தில் எஞ்சியிருந்த சிறிதளவு உலக ஆசையும் இல்லாதொழிந்தது.இதிலிருந்து இறைவணக்கத்தில் அல்லும் பகலும் ஈடுபடத் துவங்கிய அவர்கள் சிறந்த ஆன்மீக ஞானியாக, இறைநேசச் செல்வராக விளங்கலானார்கள்.

ஒரு நாள் ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்களைக் காண அவர்களின் மருகர் ஜூனைதுல் பாக்தாதி (ரஹ்) அவர்கள்,காண வந்தபொழுது ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்கள் அழுதுகொண்டிருப்பதைக் கண்டதும் அதற்கான காரணத்தை அவர்களிடம் வினவினர்.

அதற்கு ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்கள் நேற்று என் சிறு மகள் என்னிடம் வந்து, "அப்பா! இரவு ரொம்பவும் புழுக்கமாக இருக்கிறது. தாங்கள் இரவில் தாகித்திருப்பீர்கள். குடிப்பதற்கு தண்ணீர் கொண்டு வந்துள்ளேன். அருந்தித் தாகம் தீருங்கள்" என்று கூறி ஒரு புது மண் கலயத்தில் தண்ணீர் கொண்டுவந்து உரியில் வைத்தாள்.

அப்பொழுது எனக்கு உறக்கம் மேலிட்டு நான் ஒரு கனவு கண்டேன். விண்ணகத்திலிருந்து ஓர் ஆரணங்கு கீழே இறங்கி வந்தாள்.

"நீ எவருக்காக வந்துள்ளாய்?" என்று நான் அவளிடம் வினவினேன்.

"புது மண் கலயத்தில் தண்ணீரைக் குளிர வைத்து அதை அருந்தாதவருக்காக" என்று கூறி விட்டு மறைந்தாள்.

திடுக்கிட்டு விழித்தெழுந்த நான் அம் மண் கலயத்தை எடுத்து உடைத்தெறிந்து விட்டு என் அவல நிலையை நினைந்து வருந்திக் கொண்டுள்ளேன்" என்று கூறினர்.

நாமோ இறைவனின் அடிமை. இறைச்சி அரசர்களின் உணவு என்பதற்காக அவர்கள் இறைச்சி உண்பதில்லை. தாம் உண்ணும் அந்த எளிய உணவில் சிறிதளவு எடுத்து தினமும் ஒரு பறவைக்குப் போட்டு வந்தார்கள்.

ஒரு தடவை அவர்கள் ஜுர்ஹானி (ரஹ்) அவர்களைக் காண சென்றபொழுது அவர்கள் புட்டு போன்ற ஒருவித உணவை உண்டு கொண்டிருப்பதைக் கண்டனர்.

அப்பொழுது அவர்கள், அப்பெரியாரை நோக்கி, "ஏன் இதனைத் தாங்கள் உண்ணுகிறீர்கள்?" என்று வினவினர்.

அதற்கு அவர்கள் "ரொட்டியை மெல்லுவதற்கும் அசை போடுவதற்கும் இதனை உண்பதற்கும் உள்ள நேரத்தை ஒப்பிட்டுப் பார்த்தேன். ரொட்டியை உண்ணும்பொழுது இந்த புட்டு உண்பதைவிட எழுபது தடவை 'சுப்ஹானல்லாஹ்' சொல்லும் நேரம் ரொட்டி தின்பதில் அதிகமாகிறது. எனவேதான் நான் நாற்பதாண்டுகளாக ரொட்டி தின்பதை விட்டுவிட்டேன்” என்று பதிலுரைத்தார்கள்.

இது ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்களுக்கு அது வழிகாட்டும் பாடமாக திருவசனமாக இருந்தது. ஆமாம்... காலம் பொன் போன்றதுதான். அதுவே இறைவனை திக்ரு செய்யும்போது, அந்த திக்ரின் காலமே அவனாகி விடுகிறது ! என்பதை ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்கள் அப்போது தான் விளங்கிக் கொண்டதாக கூறினார்கள்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 31

( இறைவனின் அளப்பரும் பேரருள் )

இறைவன் தன்னுடைய அளப்பரும் பேரருளின் பெருமையை துன்னூன் மிஸரீ (ரஹ்) அவர்களுக்கு உணர்த்த விரும்பினானோ என்னவோ, அவர்கள் ஒரு நாள் ஆற்றோரத்தில் வருத்தத்துடன் நின்று கொண்டிருந்தபொழுது அற்புதமான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது.

ஒரு தேள் ஆற்றோரத்தில் ஓடியது. திடீரென ஆற்றிலிருந்து தவளை வந்தது. தேள் அதன்மீது ஏறி இவர்ந்து சென்றது. இதைக் கண்ட அவர்கள் பெரிதும் வியப்புற்றவர்களாய், அவை என்ன செய்கின்றன என்பதைப் பார்க்க அவற்றின் பின்னே ஆற்றில் இறங்கி நடந்தும் நீந்தியும் சென்றார்கள்.

தவளை, அத்தேளைச் சுமந்து கொண்டு அக்கரை சேர்ந்தது. கரையை அடைந்ததும் தேள் தவளையின் முதுகிலிருந்து கீழே இறங்கி ஒரு மர நிழலை நோக்கி ஓடியது.

அம்மர நிழலில் ஒருவன் குடித்துவிட்டு அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். அவனின் நெஞ்சின் மீது ஒரு பாம்பு ஏறியது. அதனைப் போய் இத்தேள் கொட்டியது. அடுத்த கணம் பாம்பு செத்தது. அவன் பிழைத்தான். இதன் பின் அத்தேள் தான் வந்த வண்ணமே அத் தவளை மீது ஏறி திரும்பிச் சென்று விட்டது.

இப்பொழுது துன்னூன் மிஸ்ரி (ரஹ்) வியப்புக் கடலில் மூழ்கியவர்களாய் நின்று கொண்டிருந்தார்கள். இவர் இறைநேசச் செல்வராக இருக்கலாம். எனவேதான் இறைவன் தன் அருள்நேசரை, தீயவனைக் கொண்டு தீயவனை அடக்கிக் காத்தருள் புரிந்தான் என்று எண்ணினர்.

சற்று நேரத்தில் அவர் விழித்தெழுந்தார். அதன் பின் தான் அவர் குடி வெறியில் படுத்துறங்கியது அவர்களுக்குத் தெரிய வந்தது. அப்பொழுது அவர்களின் வியப்பு முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாகியது,

"இத்தகு துன்மார்க்கனை இறைவன் பாம்பாலோ, தேளாலோ கொன்றொழிக்காது காத்தருள் புரிந்தானே, இஃ தென்ன வேடிக்கையாக உள்ளது" என்று அவர்கள் எண்ணினர்.

அப்பொழுது அசரீரி ஒன்று முழங்கியது. "துன்னூனோ ஏன் மயங்குகின்றீர் ? அவன் துன்மார்க்கன் தான். தீயவன் தான். அதனாலென்ன ? நல்லோர்களைக் காப்பது போன்று தீயோர்களையும் நாம் காத்தருள் புரிந்து வருகின்றோம் என்பது உமக்குத் தெரியாதா, என்ன ?" என்று அவ்வசரீரி அவர்களை இடித்துரைத்தது. அவர்கள் மயக்கம் தெளியப் பெற்றார்கள்.

துயிலெழுந்த அவர் தம் அருகே பாம்பு ஒன்று செத்துக் கிடப்பதையும் அதற்கப்பால் இவர்கள் நின்று கொண்டிருப்பதையும் கண்டார்.

"என்ன செய்தி ? தாங்கள் ஏன் இங்கு வந்து நிற்கின்றீர்கள் இந்தப் பாம்பு ஏன் இங்கு செத்துக் கிடக்கின்றது ?" என்று வினவினார்.

அவர்கள் நடந்ததை நடந்தவாறு எடுத்துரைத்தார்கள். அது கேட்டு அவர் பெரும் கூச்சலிட்டுக் கொண்டு தம் தலையில் மண்ணைவாரிப் போட்டு தம் துணிகளைக் கிழித்துக் கொண்டு அங்கிருந்தும் வெருண்டோடினார். அதன் பின் அவர் நேர்வழி பெற்று ஓர் இறை நேசச் செல்வராக ஆனார் என்று கூறப்படுகிறது.

மற்றொரு நாள் அவர்கள் உருவத் தொழும்பியான கிழவி ஒருத்தி பறவைகளுக்கு தானியங்களைப் போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு,

"இறை மறுப்பவளான உன்னிடமிருந்தெல்லாம் இறைவன் யாதொரு நன்மையையும் ஏற்றுக் கொள்ள மாட்டான்" என்று கூறினர்.

அப்பொழுது அவள் யாதொரு மறுமொழியும் கூறவில்லை.

பின்னர் அவர்கள் அவளைக் கஃபாவில் வைத்துச் சந்தித்தபொழுது அவர்களால் தங்களின் கண்களையே நம்ப இயலவில்லை. "உருவத் தொழும்பியாகிய இவள் இங்கு எவ்வாறு வந்தாள் ?" என்று எண்ணினர்

அப்பொழுது அவள் அவர்களை நோக்கி, "துன்னூனே! என்ன என்னை ஒருவிதமான வியப்புக் கண்களுடன் பார்க்கிறீர் ? பறவைகளுக்கு நான் அறமாக வழங்கிய ஒரு பிடி தானியத்தின் காரணமாக இறைவன் எனக்கு இஸ்லாத்தை தழுவும் பேற்றினை வழங்கினான்" என்று கூறினாள். அது கேட்டு அவர்கள் இறைவனின் அளப்பெரும் பேரருளை எண்ணி எண்ணி வியந்தார்கள்.

اِنَّ الَّذِيْنَ اٰمَنُوْا وَالَّذِيْنَ هَادُوْا وَالنَّصٰرٰى وَالصّٰبِـِٕيْنَ مَنْ اٰمَنَ بِاللّٰهِ وَالْيَوْمِ الْاٰخِرِ وَعَمِلَ صَالِحًـا فَلَهُمْ اَجْرُهُمْ عِنْدَ رَبِّهِمْ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ

நம்பிக்கை கொண்டவர்களாயினும், யூதர்களாயினும், கிறிஸ்தவர்களாயினும், ஸாபியீன்களாயினும் எவர்கள் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் உண்மையாகவே நம்பிக்கை கொண்டு நற்செயல்களைச் செய்கின்றார்களோ அவர்களுடைய கூலி அவர்களுடைய இறைவனிடத்தில் அவர்களுக்கு நிச்சயமாக உண்டு. மேலும், அவர்களுக்கு எவ்விதப் பயமுமில்லை. அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள். (குர்ஆன் : 2:62)

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 32

( கிருஸ்தவ இளைஞரின் ஹஜ் )

இறைநேசச் செல்வர் அபூபக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் தம் மாணவர்களுடன் ஹஜ்ஜு செய்யப் புறப்பட்ட பொழுது. "ஏழை ஹஜ்ஜுப் பயணிகளுக்குக் காலணி வாங்குவதற்கு ஆயிரம் திர்ஹங்கள் நன்கொடையளிப்போர் இங்கு எவரேனும் உண்டோ?" என்று அவர்கள், அங்குக் கூடி இருந்த மக்கள் திரனை நோக்கி வினவினார்கள்.

அப்பொழுது ஒரு கிறிஸ்தவ இளவவ் எழுந்து, "நான் அத்தொகையைத் தருகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை தாங்கள் என்னையும் தங்களுடன் மக்காவுக்கு அழைத்துச் செய் வேண்டும்' என்று கூறினார்.

அதற்கு அவர்கள், "நீரோ ஒரு கிறிஸ்தவர் உமக்கு ஹஜ்' செய்வது கடமையல்ல. அவ்விதமிருக்க நீர் ஏன் எங்களுடன் சேர்ந்து மக்காவுக்கு வர விழைகிறீர்?" என்று வினவினார்கள்.

"அது சரிதான்; எனினும் தாங்கள், தங்களுடன், தங்களின் கோவேறு கழுதையையும் மக்காவிற்கு அழைத்துச் செல்கின்றீர்களல்லவா. அது போன்று என்னையும் எண்ணிக் கொண்டு, அழைத்துச் செல்லுங்கள்" என்று கூறினார்.

அதற்கு அவர்களும் இணங்கி, அவரைத் தம்முடன் அழைத்துச் சென்றார்கள். வழியில் அபூபக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் அவரை நோக்கி, "எவ்வாறு உள்ளீர்.- என்று வினவியபொழுது,

"தங்களுடன் வரும் மகிழ்ச்சியில் எனக்கு உறக்கமே வரவில்லை" என்று கூறினார்.

வழி நெடுக அவர் ஹஜ்ஜுப் பயணிகளுக்கு அளவற்ற குற்றூழியங்கள் செய்து வந்தார். குறிப்பிட்ட எல்லை வந்ததும், அவரும் ஏனையோர் போன்று 'இஹ்ராம்' அணிந்து கொண்டார்.

இறுதியாக அவர்கள் மக்கமா நகர் வந்து சேர்ந்தார்கள். பின்னர் அவர்கள் 'தல்பிய்யா' கூறியவண்ணம், ஹரம் ஷரீஃபின் நுழை வாயில் களில் ஒன்றான, பாபுஸ்ஸலாமை அடைந்த பொழுது, ஷிப்லீ (ரஹ்) அவர்கள் அவரை நோக்கி,

"இளைஞரே! நீர் கிறிஸ்தவ மதத்தைத் துறந்து இஸ்லாத்தைத் தழுவினாலொழிய நான் உம்மை உள்ளே அனுமதிக்க முடியாது" என்று கூறினார்கள்.

அப்பொழுது அவர் தம் தலையை அந்த வாசலில் வைத்து "இறைவனே! உன்னுடைய இல்லத்தில் நுழைய ஷிப்லீ என்னை அனுமதிக்க மாட்டேன் என்கிறார். இஃதென்ன அநியாயம், இஃதென்ன அநியாயம்'!! என்று அலறினார்.

அப்பொழுது "ஷிப்லீ! அவருக்கு வழி விடும். அவரை அன்பால் பிணைத்து நம் இல்லம் அழைத்து நாமே வந்தோம்" என்று அசரீரி முழங்கியது.

அது கேட்டுத் திடுக்குற்ற ஷிப்லீ (ரஹ்) அவர்கள், உடனே அவரை உள்ளே நுழைய அனுமதித்தனர். அவரின் பின்னே மற்றவர்களும் உள்ளே நுழைந்தனர்.

ஆங்குத் தொழுதுவிட்டு, அவர்கள் அனைவரும் திரும்பிய பொழுது, அந்த இளவல் மட்டும் திரும்பவில்லை. அவரை வெளியே வருமாறு ஷிப்லீ (ரஹ்) அவர்கள் கூறிய பொழுது,

"நான் என் செய்வேன்? அவன் என்னை வெளியே வர அனுமதிக்கின்றானில்லையே. நான் வாயிலை அடையும் ஒவ்வொரு தடவையும் கதவு மூடப்பட்டிருப்பதையல்லவோ காண்கிறேன்" என்று பதிலுரைத்தார்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 33

( எவரும் காணாத இடம்)

சில நாட்கள் சென்ற பின் ஷைகு மன்சூர் (ரஹ்) அவர்கள்,இருபத்தேழு வயதான தம் மருகர் சுல்தானுல் ஆரிஃபீன் சையிது அஹ்மதுல் கபீர் ரிஃபாயீ (ரஹ்) தம் கலீபாவாக நியமித்துவிட்டு, தாம் ஒதுங்கி இறைத் தியானத்தில் முழுக்க, முழுக்க ஈடுபட்டிருக்கப் போவதாகக் கூறிய பொழுது,

அவர்களின் மனைவியார் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை.தம் மகனே அப்பதவியைப் பெற வேண்டுமென்று அவர் அடம்பிடித்தார். இந் நிலையில் என்ன செய்வதென்று ஷைகு மன்சூர் (ரஹ்) அவர்களுக்குத் தெரியவில்லை.

ஒரு நாள் அவர்கள் தம் மகனை அழைத்து, அவரிடம் ஒரு புறாவைக் கொடுத்து, அதனை எவரும் காணா இடத்திற்குக் கொண்டு சென்று அறுத்து வருமாறு பணித்தனர். அவ்வாறே மருகரிடமும் ஒரு புறாவைக் கொடுத்து அறுத்துவருமாறு கூறினர்.

சற்று நேரத்தில் அதனை அறுத்துக் கொண்டு திரும்பிய மகன், "அப்பா! அதனை நான் எவரும் காணாத இடத்தில் அறுத்துக் கொண்டு வந்தேன்" என்றார். "நல்லது, மகனே! சென்று வா!" என்று அவர்கள் தம் மகனை முகமலர அனுப்பி வைத்தனர்.

அதன்பின் மருகர் தம் கையிலிருந்த புறாவை அறுக்காது கொண்டு வத்ததைக் கண்ட மாதுலர், "என்ன! புறாவை அறுத்துக் கொணரவில்லையா?" என்று வினவியபொழுது,

"நானும்,எவரும் காணாத இடத்தைத் தேடித் தேடி அலைந்து திரிந்தேன். எனினும் நான், அத்தகு இடத்தைக் காணேன். எங்குப் பார்த்தாலும், இறைவன் என்னைப் பார்த்துக் கொண்டிருப்பதையே கண்டேன்" என்று கூறித் தம் ஆற்றாமையை மருகர் வெளிப்படுத்தினர்.

அடுத்த நாள் ஷைகு மன்சூர் (ரஹ்) அவர்கள் தம் மகனை அழைத்து, அவரிடம் ஓர் அரிவாளைக் கொடுத்து, புல்அறுத்துக் கொண்டு வருமாறு பணிந்தார்கள். அவரும் அவ்விதமே செய்தார்.

ஆனால் சற்று நேரம் கழித்து, அதே வேலையை அவர்கள் தம் மருகரை அனுப்பி வைத்த பொழுது, வெறுங்கையுடன் அவர்கள் வந்து, "நான் என் செய்வேன்? புல்லை அறுக்க நான் முனைந்த போதெல்லாம் அப்புல், 'படைப்புகளை அழகாகப் படைத்து, அவற்றைப் பரிபாலிக்கும் இறைவன் தூயவன்' என்று இறைவனின் துதிபாடுவதைச் செவியுற்றேன். எனவே அவற்றை அறுக்காது திரும்பிவிட்டேன்" என்று கூறினார்கள்.

மூன்றாம் நான் மீன் வேட்டைக்கு அவர்கள் தம் மகனையும் மருகரையும் தனித்தனியாக அனுப்பிய பொழுது, மகன் ஏராளமான மீன்களைப் பிடித்துக் கொண்டுவர, மருகரோ வெறுமனே திரும்பி வந்தார்கள். அதற்கான காரணம் வினவப்பட்ட பொழுது,

''நான் அவற்றைப் பிடிக்க முயலுந்தொறும், முயலுந்தொறும் 'அனைத்தையும் படைத்த ஆதிபரனே! உனக்கே எல்லாப்புகழும்' என்று அவை இறைவனைத் துதிப்பது என் செவியில் விழுந்தது. எனவே அவற்றைப் பிடிக்காது திரும்பிவிட்டேன்." என்று பதிலிறுத்தார்கள் அவர்கள்.

இதன்பின் ஷைகு மன்சூர் (ரஹ்) அவர்கள் தம் மனைவியாரை அழைத்து, நடந்த அனைத்தையும் நவின்று, தம் இடத்தில் அமரத் தம் தனயனைவிடத் தம் மருகரே முழுக்க, முழுக்கத் தகுதியானவர் என்று கூற, அவர் மறுவார்த்தை பேசாது அதனை ஏற்றுக் கொண்டார்.

பின்னர் ஷைகு மன்சூர் (ரஹ்) அவர்கள், ஆண்டகை அவர்களுக்குக் 'கிலாஃபத் வழங்கி, இஸ்முல் அஃலத்தையும் இரகசியமாக எடுத்துரைத்துத் தம் இடத்தில் அவர்களை அமர்த்தி, மகிழ்வு பூத்தார்கள். அதே ஆண்டில் அவர்களின் ஆன்மா அமைதியுடன் இறைவனிடம் சென்றது.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 34

( என் இரு பாதங்கள், இறை நேசர்கள் அனைவருடைய தோள்கள் மீதும் இருக்கின்றன )

வலிமார்களின் அதிபதி, அல் குத்புர் ரப்பானி, வ கௌதுஸ் ஸமதானி, கிந்தீலே நூரானி, மௌஷூக்குர் ரஹ்மானி, மஹ்பூபுஸ் ஸுப்ஹானி, ஹர்முஷ்கில் ஆஸானி முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி ஆண்டவர்கள் ஏகாந்த நிலையில் அருளிய பொய்யா மொழிகள்

பூமி மீது விண் வெளி கவிழ்ந்துள்ளதைப் போல் என் “முரீதுகள்” நேசர்கள் மீது என் கைகள் கவிழ்ந்துள்ளன.

என் முரீதே! உனக்கு நல்வாழ்த்து உண்டாவதாக, நான் உனக்கு அளித்துள்ள கட்டளைகளை நிறைவேற்று, நீ துக்கத்தில் ஆழ்கையில் [துயரைத் துடைத்து] உனக்கு ஊக்கம் தந்து கரை சேர்க்க நான் இருக்கிறேன்.!

நான் மேற்கிலும் என் அன்பர்கள் கிழக்கிலும் இருந்தாலும், என் அன்பர்கள் போர்த்தப்படாமல் இருந்தால் நான் அவர்களைப் போர்த்தி பாதுகாப்பேன்.!

அஞ்சுகிறவற்றில் இருந்து என் அன்பர்களை நான் பாதுகாக்கிறவன், எல்லாவித தீமைகளில் இருந்தும், சோதனைகளில் இருந்தும் அவர்களை நான் பாதுகாக்கிறவன்.!

என் முரீதே! என்னைப் பற்றிப் பிடித்துக்கொள், என் மீது நம்பிக்கை கொண்டிரு, அப்படி நீ திட உறுதிக் கொண்டிருந்தால், இம்மையிலும் மறுமையிலும் நான் உன்னை பேணிப் பாதுகாத்துக் கொள்வேன்.!

என் முரீதே! மன மகிழ்ச்சியுடன் என்பாதையில் செல்க, நாடிய செயல்களை முடித்து விடுக, என் திரு நாமம் உயர்வானது.!

என் அதிகார ஆட்சியின் வீர வெற்றிமுரசு மேல் திசை நாடுகளில் இருந்து கீழ் திசை நாடுகள் வரை [எல்லா இடங்களிலும்] முழுங்குகிறது! துன்ப துயரங்களில் ஆழ்ந்திருக்கிறவர்களை பாதுகாத்து ரட்சிக்கிற "கௌஸ்" ஆகவும், கருணைக் கொடையாகவும் நான் இருக்கிறேன்.!

முந்தையோரின் கதிரவன்கள் எல்லாம் அஸ்தமித்துவிட்டன, நமது (ஞான) சூரியனோ, எக்காலமும் ஆன்மிக வானத்தில் நிரந்தரமாக நிலைத்திருக்கும்.!

எம்மை மனப்பூர்வமாக நேசித்து எமது சமூகத்திற்கு வந்து விட்டவர் நாயகத்தனம் பெற்ற நாதாக்களின் கோட்டையுள் நுழைந்து விட்டார், எம்முடைய பாதுகாப்பையும், ஏராளமான அருட்செல்வங்களையும் பெற்று விட்டார்.!

என் இந்தக் கைகள், என் ஆன்மீக வழியை ஏற்று நடத்தும் என் அன்பர்களை என்றென்றும் காப்பாற்றக் கூடியவை, நேர்வழி நாடுகிறவர்கள் என் கைகளால் ஈடேற்றம் பெறுவார்கள், நிச்சயமாக நான் தீன் எனும் மெய்ஞ்ஞான மார்க்கத்திற்கு புத்துயிர் அளிப்பவர் “முஹ்யித்தீன்” என அழைக்கப்படுவேன்.!

நான் உங்கள் அறிவுகளுக்கு அப்பாற் பட்டவன், என் நிலையை நீங்கள் யாரும் அறிய மாட்டீர்கள், நான் அனைவரையும், அனைத்தையும் கடந்த ஒப்பற்ற உயர் நிலையில் இருக்கிறேன்.!

ஒவ்வொரு குதுபு [இறைநேசர்]களும் "கஅபா"வின் இல்லத்தை ஏழுமுறைகள் சுற்றி வழிபடுவார்கள். அந்த "கஅபா"வின் இல்லமோ என் கூடாரத்தைச் சுற்றி வழிபடுகிறது.!

காலங்களோ, நேரங்களோ என்னிடம் வராமல் செல்வதில்லை! என் [மெய்ஞான] விருதுகளின் வெற்றிக்கொடி மாமலைச் சிகரங்களில் பட்டொளி வீசிப் பறக்கிறது.!

என் படைவீரர்களான குதுபு [இறைநேசர்]களே நான் அருந்திய இறை நேச அமுதத்தின் மிச்ச மீதியைத்தான் நீங்கள் அருந்தியுள்ளீர்கள், நான் அடைந்து உள்ள உயர் நிலையையும், ஈடிணையற்ற இறை நெருக்கத்தையும் நீங்கள் யாரும் பெறவில்லை.!

உலக முடிவுவரை என் அன்பர்களாக இருக்கப் போகிறவர்களின் பட்டியலை இறைவன் என்னிடம் கொடுத்துள்ளான், என் அன்பர்கள் பாவ மீட்சிபெற்று முழுமைநிலை அடையும் வரை அவர்கள் உயிரை கைப்பற்றுவதில்லை என இறைவனிடம் நான் வாக்குறுதி பெற்றுள்ளேன்.!

"கதமி ஹாதிஹி அலா ரகபத்தி குல்லி வலியுல்லாஹ்" என் இரு பாதங்கள், இறை நேசர்கள் அனைவருடைய தோள்கள் மீதும் இருக்கின்றன.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 35

( “ஹிஸ்புல் பஹ்ர்” )

ஸூபி ஹழ்ரத் நாயகம் அவர்களின் முரீது ஒருவர் ஸூபி ஹழ்ரத் அவர்களிடத்தில் “ஹிஸ்புல் பஹ்ர்” என்ற இஸ்முல் அஹ்லத்தை ஓத இஜாசத் கேட்டபொழுது, ஸூபி ஹழ்ரத் அவர்கள் இஜாசத் கொடுக்கவில்லை, உங்களுக்கு இருக்கின்ற வலீபாக்களே போதும் அதை தொடர்ந்து ஓதி வாருங்கள் என்று சொல்லி அனுப்பிவிட்டார்களாம்.

ஆனால் இந்த முரீதுக்கு ஹிஸ்புல் பஹ்ரை ஓத ஆசை மேலோங்குகின்றது. பின்பு ஒரு சமயம் இந்த முரீது மக்காவிற்கு ஹஜ்ஜுக்காக செல்கின்றார். அப்போது மக்காவில் வாழ்ந்து வந்த பிரபல்யமான ஷாதுலிய்யா தரீகாவின் குதுப் ஷைகு பாஸி நாயகம் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை ஸூபி ஹழ்ரத் அவர்களின் முரீது சந்திக்கின்றார்.

ஷைகு பாஸி நாயகம் அவர்களிடம் ஹிஸ்புல் பஹ்ர் ஓதுவதற்கு இஜாசத்து கேட்கின்றார்.

அதற்கு பாஸி நாயகமவர்கள் அவர்களிடம், " நீங்கள் உங்கள் ஷைகு இடம் இஜாசத் கேட்காமல் என்னிடம் கேட்கின்றீர்களே நான் எப்படி உங்களுக்கு இஜாசத் தரமுடியும் ? என்று அந்த நபரை கேட்டபோது,

அந்த நபர் "எனக்கு தயவு செய்து ஓத அனுமதி தாருங்கள்" என்று கேட்கின்றார்.

பாஸி நாயகமவர்கள் ஸூபி ஹழ்ரத் அவர்களின் முரீதை நீங்கள் கொஞ்சம் நேரம் இருங்கள் என்று சொல்லிவிட்டு, அறையின் உள்ளே சென்று விட்டார்கள் . சிறிது நேரம் கழித்து வெளியே வந்து அந்த நபருக்கு ஹிஸ்புல் பஹ்ரை ஓத இஜாசத் கொடுத்தார்கள்.

பின்பு அந்த முரீது ஹஜ்ஜு கடமையே இனிதே முடித்து விட்டு காயல் பட்டினம் திரும்பி விட்டார்கள். பின்பு சிறிது நாட்கள் கழித்து தன்னுடைய ஷைகு நாயகம் ஸூபி ஹழ்ரத் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஜீஸ் அவர்களை சந்திக்க செல்கின்றார்கள்.

அந்த சந்திப்பில் தான் மக்காவில் வேறொரு ஷைகிடம் வாங்கிய “ஹிஸ்புல் பஹ்ர்” அவ்ராதுக்குரிய இஜாசத் சம்பவத்தை தன்னுடைய ஷைகாகிய ஸூபி ஹழ்ரத் நாயகம் அவர்களிடம் சொல்லவில்லை.

ஆனால் ஸூபி ஹழ்ரத் அவர்கள் அந்த முரீதை நோக்கி என்ன இஜாசத் வாங்கி விட்டீர்களா பாஸி நாயகமவர்களிடம் என்று கேட்க, அங்கே நடந்த சம்பவங்களை ஸூபி ஹழ்ரத் அவர்கள் அப்படியே சொல்லி காட்டினார்களாம்.

ஸூபி ஹழ்ரத் நாயகம் அந்த முரீதிடம் “ நீங்கள் பாஸி நாயகத்திடம் இஜாசத் கேட்டபொழுது, பாஸி நாயகம் அறைக்குள்ளே சென்று விட்டு சிறிது நேரம் கழித்து வெளியே வந்து உங்களுக்கு இஜாசத் தந்தார்களே அது என்னிடம் அனுமதி கேட்கத்தான்.

பாஸி நாயகம் என்னிடம் ஹாலிராகி உங்களுடைய முரீது ஹிஸ்புல் பஹ்ர் ஓத என்னிடம் இஜாசத் கேட்கின்றாரே என்று கேட்டபோது நீங்கள் அனுமதி கொடுங்கள் என்று நான் சொன்ன பிறகுதான் அவர்கள் உங்களுக்கு அனுமதி கொடுத்தார்கள்" என்றார்களாம்

(மக்காவிலே அந்த சம்பவம் நடக்கும்போது பாஸி நாயகம் அவர்கள் மக்காவில் இருக்கின்றார்கள் ஸூபி ஹழ்ரத் அவர்கள் காயல் பட்டினத்திலே இருக்கின்றார்கள்)

இது எப்படி ?

சூஃபியாக்கள் காலம், தூரம், வெளி போன்ற இயற்கையின் அளவீடுகளை மிக எளிதாக பயன்படுத்துகிறார்கள்.

"நான் நினைக்கிறேன். அதனால் நான் இருக்கிறேன் " என்கிறார் தத்துவ ஞானி டெஸ்கார்ட்டெ (1596-1650)

சூஃபியாக்கள் எதைப்பற்றியாவது நினைக்கும்போது அது அங்கேயே அப்படியே நினைப்பது போல் தரிசனமாகி விடுகிறது !

இந்த மாயையைப் பற்றி கச்சியப்பிள்ளையம்மாள் பாடிய பாடல்கள் 'மெய்ஞ்ஞானமாலை' யில்

அண்டத்துக் கப்பால் அறிந்ததைச் சொல்லடி சிங்கி - அந்த

ஆகாயத்துள்ளே அரண்மனை தோன்றுமோ சிங்கா

அரண்மனைக்குள்ளிருந்(து) ஆளுவதாரடி சிங்கி- அங்கே

அருவுருவில்லாத அரசன் ஒருவனே சிங்கா

ஆளும் மகராஜன் அங்கே இருப்பானோ சிங்கி - அவன்

அங்கிமிருப்பதோ டெங்கும் பராபரம் சிங்கா

எங்கும் பராபரம் என்றான தென்னடி சிங்கி -அது

தங்கிய சோதியின் தன்மய மாகுமே சிங்கா

தன்மய மாகிய சங்கதி என்னடி சிங்கி -அது

தானே தானே நின்று தம்பிரானாச்சுது சிங்கா

அந்தப் பிரானைக் கண்(டு) அப்புறம் என்னடி சிங்கி - இனி

அப்பரத்துக்(கு) அப்பால் ஆருமில்லையடா சிங்கா

ஆனால் ஒருவரும் அவ்விடத்தில் இல்லையோ சிங்கி - அங்கு

தானா தனாதந்த னாதாந்த நாதமே சிங்கா

**Sufi Hazrath Kahiri** பதிவிலிருந்தும்

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 36

( இறைகாதலில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருப்பவரை பசியோ தாகமோ யாதொன்றும் செய்ய இயலாது )

சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள் ஒரு மலையடிவாரத்தின் அருகே ஒரு பூங்கா இருந்தது. அதில் சற்று அயர்ந்து படுத்துறங்கினர். இச் சமயத்தில் அவர்கள் கனவொன்று கண்டனர்.

அழகே உருவாய் அமைந்த இளவல் ஒருவர், அவர்களின் முன்தோன்றி, "பதீயுத்தீனே! உம் வரவை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் எதிர்பார்த்த வண்ணம் வீற்றிருக்கிறார்கள்" என்று கூறுகிறார்.

அப்பொழுது சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள் அவரை நோக்கி, “என் பெயர் உமக்கு எவ்வாறு தெரியும்?" என்று வியப்புடன் வினவுகிறார்கள். அதற்கு அவர், புன்முறுவல் பூத்த வண்ணம், “உம் பெயரா எனக்குத் தெரியாது. அதுதான் ஈருலகமும் தெரிந்த பெயராக உள்ளதே” என்று கூறிவிட்டு, "இந்தப் பூங்காவிற்குள் நுழையும்!" என்று கூறிவிட்டுச் சென்று விடுகிறார்

அவ்வாறே சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள் கனவில் காட்டப்பட்ட பூங்காவிற்குள் நுழைந்த பொழுது அங்கு ஓர் அழகிய மாளிகை தென்படுகிறது. அதில் ஒன்றன் பின் ஒன்றாக ஏழு வாயில்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வாயிலிலும் ஒவ்வோர் அழகாரும் இளவல் நின்று ஆண்டகை அவர்களை வரவேற்று, 'ஸலாம்' கூறி வழியனுப்பி வைக்கிறார்.

இவ்வாறு ஏழு வாயில்களையும் கடந்து சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள், சென்ற பொழுது, ஆங்கிருந்த மண்டபம் ஒன்றில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அரியாசனத்தில் அமர்ந்திருக்கின்றனர். அவர்களைச் சூழ, அவர்களின் அன்புத் தோழர்கள் அணியணியாய் அமர்ந்திருக்கின்றனர்.

அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்களைச் சாடையால் தம்மிடம் வருமாறு அழைத்துத் தம் அருகே அமர்த்திக் கொள்கின்றனர்.

சற்று நேரம் கழிந்தது. ஒருவர் ஒரு கையில் உணவும், மற்றொரு கையில் உடையும் ஏந்தியவராய் அங்கு வருகிறார். அவர் கொண்டு வந்த உணவில் ஒன்பது பிடியை அண்ணல் நபி (ஸல்) அவர்கள், சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்களுக்கு உண்ணக் கொடுக்கிறார்கள். அதனை உண்டதும், ஆண்டகை அவர்களுக்கு அர்ஷ் முதல் தஹ்த்தஸ்ஸரா வரையுமுள்ள அனைத்தும் தெளிவாகத் தெரியவருகின்றன.

அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்களை நோக்கி, "பதியுத்தீனே ! இனிமேல் உமக்கு உணவு, நீர்,ஆகியவற்றின் தேவையிராது" என்று கூறி, தம் கையால் அவர்களுக்கு உடையுடுத்தி முகத்திற்குத் திரையுமிட்டு, தலைக்குப் பாகையும் ஆணிவிக்கின்றார்கள். இத்துடன் கனவு கலைகிறது.

ஒரு சமயம் சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள், ஜவ்ன்பூர் வந்த பொழுது, அவர்களைச் சந்திக்க அமைச்சர் ஸத்ரெ ஜஹானும், அரசரின் இளவல் அஷ்ரஃப் கானும் சென்றனர். அவர்களுடன் சேர்ந்து நகர மக்கள் ஓரி இலட்சம் பேர்களும் சென்றிருந்தனர். சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள் ஒரு சிறு அறையில் தங்கியிருந்ததால், முதலில் அமைச்சர் ஸத்ரெ ஜஹானுக்கு மட்டும் அவர்கள் பேட்டியளித்தார்கள்.

அமைச்சர் அறைக்குள் நுழைந்ததும் சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள் தாம் வழக்கமாக அணிந்து வரும் முகத்திரையை நீக்க, அவர்களின் முகத்திலிருந்து வெளியான பேரொளியைப் பார்க்க இயலாது, அமைச்சர் குப்புற வீழ்ந்தார்.

அப்பொழுது ஆண்டகை அவர்கள் அவரை நோக்கி, "சையிதே! தலையை உயர்த்தும்! இப்பொழுது மூஸா (அலை) அவர்கள் மீது பாய்ந்த பேரொளி உம்மீதும் பாய்ந்து விட்டதோ?" என்று வினவினார்கள்.

அதற்கு அவர் யாது பதில் கூறுவதென அறியாது விக்கி, விக்கி அழுதார்.அது கண்ட சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள், "இந்த அழுகை உமக்கு விரைவில் மகிழ்ச்சியாக மாறும். நீர் இறைவனின் பேரருளை எய்தப் பெறுவீர்.

ஒரு நாள் அவ்வூரைச் சேர்ந்த ஷைகு ஈஸா என்பவர் ஆண்டகை அவர்களை அணுகி, "தாங்கள் யாதொன்றும் உண்பதில்லை என்று கேள்விப்படுகின்றேனே. அதற்கான காரணம் யாது? தங்களால் எவ்விதம் அது சாத்தியப்படுகிறது?" என்று வினவினார்.

அவரின் இக்கேள்வி ஆண்டகை அவர்களைப் புன்முறுவல் பூக்கச் செய்தது. அவர்கள் ஷைகு ஈஸாவை நோக்கி, "நான் நாள்தோறும் திருக்குர்ஆனை ஓதிவருகிறேன். அதன் எழுத்துக்கள் என் உடலுக்கும், அதன் கருத்துக்கள் என் ஆன்மாவுக்கும் உணவாக உள்ளன" என்று பதிலுரைத்தார்கள். அவர்களின் இப்பதில் ஷைகு ஈஸாவின் கண்களை வியப்பால் விரியச் செய்தது.

அது கண்ட ஆண்டகை அவர்கள் அவரை நோக்கி, "யூசுஃப் (அலை) அவர்களின் காலத்தில் மிஸ்ரில் கொடிய பஞ்சம் ஏற்பட்ட பொழுது, மிஸ்ர் மக்கள் யூசுஃப் (அலை) அவர்களின் பேரழகைக் கண்களால் பருகிப் பசியும் தாகமும் தீரப் பெற்றனர் என்று நீர் கேள்வியுற வில்லையா ? அது போன்று இறைகாதலில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருக்கும் ஒருவரையும் பசியாலோ, தாகத்தாலோ யாதொன்றும் செய்ய இயலாது என்பதை அறிவீராக!” என்று பதிலுரைத்தார்கள்.

முகவரி: அல்ஹாஜ் சையத் மஹ்சார் அலி மதாரி, மகான்பூர் ஷரீஃப், மாவட்டம். கான்பூர், உத்தரப் பிரதேசம், இந்தியா

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 37

( இஸ்முல் ஆலம் )

ஒரு சீடர் தன் குருவிடம், "தாங்கள் எனக்கு இஸ்முல் ஆலம் என்ற அமலை தாங்கள் எனக்கு தரவேண்டும் எனக் கேட்டார்.

அதற்கு குரு அவர்கள் " தாங்களுக்கு பக்குவம் வந்த பின் அந்த அமலை தருகிறேன்" என்றார்கள்.

அந்த சீடரோ, " இல்லை இல்லை எனக்கு அந்த அமலை தாருங்கள்" என வற்புறுத்துகிறார்

உடனே குரு அவர்கள், "நான் சொல்லிய இடத்தில் இந்த மரத்தின் கீழ் நில்லுங்கள்" என்று சொல்லி அனுப்புக்கிறார்கள்

அந்த சீடர் அதே போல் அந்த மரத்தின் கீழ் நிற்க்கிறார்.அப்பொழுது அந்த சாலையின் வழியே ஒரு முதியவர் கைவண்டியில் பொருள்களை எற்றிக்கொண்டு மிகவும் சிரமத்துடன் தள்ளிக் கொண்டு வருகிறார். அந்த வழியே வந்த வாகனத்தில் அந்த முதியவர் தன் கைவண்டியைக் கொண்டு தவறுதலாக இடித்துவிட்டார்.

உடனே அந்த வாகனத்தின் உரிமையாளர் அந்த முதியவரை அடித்தார். இந்த காட்சியை கண்ட அந்த சீடருக்கு கடும் கோபம். பின்பு தன் குருவைக் காண அந்த சீடர் வருகிறார்.

அப்பொழுது அந்த குரு அவர்கள், "நீங்கள் அந்த முதியவர் அடிப்படுவதை பார்த்தீர்களா ?"

" ஆமாம்" என்றார் அந்த சீடர்.

"நான் உங்களுக்கு இஸ்முல் ஆலம் அமலை தந்திருந்தால், நீங்கள் என்ன செய்தீருப்பீர் ?

அதற்கு அந்த சீடர் கூறினார்: "அந்த முதியவரை அடித்தவரை இஸ்முல் ஆலத்தைக் கொண்டு தலையை துண்டாக வெட்டிருப்பேன்" என்றார்

குரு அவர்கள்: "அந்த அடி வாங்கிய முதியவர் தான் எனக்கு இஸ்முல் ஆலம் என்னும் அமலை கற்றுக்கொடுத்தார்கள்.

அந்த சீடர் வாயடைத்துப் போனார் .அந்த அமலை பெறும் பொழுது நாம் பொறுமை என்னும் அமலை கடைப்பிடிக்க வேண்டும் ஏனென்றால் பொறுமையாளர்களுடன் அல்லாஹ் இருக்கிறான் என்று கூறினார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 38

( அமானிதமாக துருக்கி அடிமைப் பெண் )



யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களின் மகாத்மியத்தை மக்கள் சரியாக உணராது, அவர்களைக் 'காஃபிர்' என்று வாய் கூசாது கூறினார்கள்.

இந்த பொழுதில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. நீஷாப்பூர் வந்த வணிகர் ஒருவர், அவ்வூரில் ஆயிரம் தீனார் கொடுத்து, ஓர் அழகிய துருக்கிய அடிமைப் பெண்ணை விலைக்கு வாங்கினார்.

அவர் தமக்கு வேண்டிய கடன் பாக்கியை வசூல் பண்ணுவதற்காக மற்றோர் ஊருக்கு அவசரமாகச் செல்ல வேண்டி இருந்ததால், தாம் வாங்கிய அடிமைப் பெண்ணைத் தகுந்த ஒருவரிடம் ஒப்படைத்துவிட்டுச் செல்ல விரும்பி,

அபூ உதுமான் என்ற பெரியவரை அணுகித் தம் நிலையை எடுத்துரைத்து, தாம் வரும் வரை அப்பெண்ணை அவரிடம் ஒப்படைத்துத் விட்டுச் செல்வதாகவும், தம்முடைய அவ்வேண்டுகோளை அவர் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் வேண்டி நின்றார்.

துவக்கத்தில் அவரின் வேண்டுகோளை ஏற்றுக் கொள்ள மறுத்த அபூ உதுமான், இறுதியாக அதற்கு ஒருவாறு இணங்கினார். அந்த வணிகரும் அந்த அடிமைப் பெண்ணை அபூ உதுமானின் இல்லத்தில் விட்டு விட்டு, மனஅமைதி யுடன் வெளியூர் புறப்பட்டார்.

ஒருநாள் அபூஉதுமான் தம் இல்லத்தில் வீற்றிருக்குங்கால், அவ் அடிமைப் பெண்ணின் மீது அவரின் பார்வை பட்டது. அடுத்த கணம் காதல் போதை தலைக்கேறி, அவருடைய தலை கிறுகிறுத்தது. யாது செய்வதென அறியாது, அவர் தம் ஆசான் அபூஹப்ஸ் ஹத்தாத் (ரஹ்) அவர்களை அணுகி, நடந்த செய்தியை ஒளிவுமறைவுன்றி எடுத்துரைத்து அவர்களின் அறிவுரை வேண்டி நின்றார்.

அதுகேட்ட அபூஹப்ஸ் (ரஹ்) அவர்கள், உடனே ரை நகர் சென்று, அங்கு வாழ்ந்து வரும் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களிடம் அதுபற்றி ஆலோசனை கலக்குமாறு அவருக்கு அறிவுறுத்தினார்கள்.

இதன்பின் அபூ உதுமான் அங்கு ஒரு கணமும் தாமதிக்காது ரை தகருக்குப் புறப்பட்டார். ரை நகர் வந்தடைந்த அவர் யூசுஃப் இப்னு ஹூஸைன் (ரஹ்) அவர்களின் இல்லம் எதுவென மக்களிடம் விசாரித்தார்.

"அந்தக் காஃபிரைப் போய் நீர் ஏன் பார்க்க விரும்புகிறீர்? உம்மைப் பார்த்தால் ஒரு மதபக்தி வாய்ந்தவர் போன்று தோன்றுகிறது. அவரின் கண்களில் விழித்தால் கூட நீர் கெட்டுப் போய்விடுவீரே" என்று கூறி, அவர்களைப் பற்றி இல்லாததும் பொல்லாததுமாக, என்னவென்னவோ கூறினார்கள் ரை நகர மக்கள்.

அவர்களின் அக்கூற்று அபூ உதுமானின் தலையைச் சக்கரவாகமாகச் சுழலச் செய்தது. ஷைகு எனக் கருதி ஷைத்தானிடமல்லவோ வந்து விட்டோம் என எண்ணி வருந்திக் கொண்டு வந்த வழியே மீண்டார் அவர்.

விரைவில் நீஷாப்பூர் வந்தடைந்த அவர், தம் ஆசான் அபூஹப்ஸ் ஹத்தாத் (ரஹ்) அவர்களின் திருமுன் வந்து நின்றார். அவரைக் கண்டதும் ஆவலுடன் "என்ன செய்தி? யூசுஃப் (ரஹ்) அவர்களைப் பார்த்தீரா? என்று வினவினர் அபூஹப்ஸ் ஹத்தாத் (ரஹ்).

"இல்லையே" என்று பதிலிறுத்தார் அபூ உதுமான்.

"ஏன்" என்று கேட்டார்கள் அபூஹப்ஸ் ஹத்தாத் (ரஹ்).

அவர் ஒரு காஃபிர் என்றும், அவரின் கண்களில் விழித்தால் கூட நான் கெட்டுவிடுவேன் என்றும், மேலும் இன்ன, இன்ன விதமாக வெல்லாம் அங்குள்ள மக்கள் அவரைப் பற்றிக் கூறினார்கள். எனவே அவரிடம் செல்லாது திரும்பிவிட்டேன்" என்று மறுமொழி பகர்ந்தார் அபூ உதுமான்.

''அப்படியா! சரி; மீண்டும் ரை நகர் சென்று அவர்களைக் கண்டு வாரும்" என்று பணித்தனர் அபூஹப்ஸ்,

ரை நகர் மீண்ட அவர் யூசுஃப் (ரஹ்) அவர்களின் இல்லத்தைத் தேடிக் கண்டுபிடித்தனர். அங்குச் செல்ல வேண்டாமென்று கூறி அங்குள்ள மக்கள் முன்னைவிட ஆயிரம் ஆயிரம் அவதூறுக் கணைகளை அவர்கள் மீது தொடுத்த போதினும், அபூ உதுமானின் செவியில் அவையெல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்குபோல் ஆயின.

இறுதியாக, அபூ உதுமான், யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களின் இல்லத்தில் நுழைந்த பொழுது, ஆங்கு ஒரு வயோதிகர் வீற்றிருப்பதைக் கண்டார். அப்பொழுது அவரின் முன் அழகிய இளவல் ஒருவன் கூஜா ஒன்றையும், கிண்ணம் ஒன்றையும் வைத்துக் கொண்டிருந்தான். அம்முதியவரின் முகத்தில் பேரொளி ஒன்று இலங்கிக் கொண்டிருந்தது.

இல்லத்தின் உள்ளே நுழைந்து அபூ உதுமான் ஆங்கு வீற்றிருந்த முதியவருக்கு 'ஸலாம்' உரைத்தார். அவரும் பதில் 'ஸலாம்' உரைத்து, அவரை அமரச் சொன்னார்கள். அதன்பின் பற்பல ஆன்மீகக் கருத்துக்களை அள்ளிச் சொரிந்தார்கள். அதுகேட்டு அபூ உதுமான் அளவற்ற வியப் பெய்தினார்.

அவர்கள் பேசி முடிந்ததும், அபூ உதுமான், யூசுஃப் இப்னு ஹூஸைன் (ரஹ்) அவர்களை நோக்கி, "இத்துணை உயரிய, ஆழிய ஆன்மீகக் கருத்துக்களைக் கூறும் தாங்கள், தங்கள் முன் ஓர் இளவலையும், மதுவையும் வைத்துக் கொண்டிருப்பது எனக்குப் பெரிதும் விந்தையாக உள்ளது. இதுபற்றித் தாங்கள் இறைவனுக்காக வேண்டி எனக்கு விளக்கம் பகரவேண்டும்' என்று கூறினார்.

அப்பொழுது யூசுஃப் இப்னு ஸைன் (ரஹ்) அவர்கள் புன்முறுவல் பூத்தவர்களாய், "இந்த இளவல் என் அருமந்த மைந்தன் அவன் என் மைந்தன் என்பது ஒரு சிலருக்கே தெரியும். அவனுக்கு நான் திருக்குர்ஆனை ஓதிக் கொடுத்துக் கொண்டுள்ளேன். ஒரு நாள் நான் தெருவழியே செல்லும் பொழுது,

கூஜா ஒன்று குப்பை மேட்டிலே கிடப்பதைக் கண்டேன். அதை எடுத்து வந்து கழுவிச் சுத்தம் செய்து, இங்கு வருவோரின் தாகம் தணிப்பதற்காகத் தண்ணீர் வைத்துள்ளேன். என்னிடம் குடம் இல்லாததனால் இவ்விதம் செய்துள்ளேன்" என்று கூறினர்.

"நல்லது, நான் அல்லாஹ்லின் பெயரைச் சொல்லிக் கேட்கிறேன். மக்கள் இவற்றையெல்லாம் பார்த்துவிட்டுத் தங்களைப் பற்றித் தப்பும் தவறுமாக என்னவெள்ளவெல்லாமோ கூறும் வண்ணம் தாங்கள் என் இவ்வாறெல்லாம் செய்கிறீர்கள்?" என்று வினவினார் அபூ உதுமான்.

'அதைப் பற்றியா கேட்டீர்?' என்று கூறிப் புன்முறுவல் பூத்த யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள், "இவ்வாறு நான் வேண்டுமென்றே செய்கின்றேன். மக்கள் என்னைப் பெரிதாகக் கருதித் துருக்கிய அடிமைப் பெண்ணை என்னிடம் அமானிதமாக ஒப்படைத்து செல்லக்கூடாதல்லவா?" என்று இயம்பினர்.

அவ்வளவுதான். அபூ உதுமானின் தலை சுழன்றது. யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களின் மகாத்மியத்தை உணர்ந்து, அவர்களின் தாள்களில் வீழ்ந்து தம்மை மன்னித்து ஆட்கொண்டு, அறிவுரை பகர வேண்டுமென்று கண்ணீரும் கம்பலையுடனும் வேண்டி நின்றார்.

அப்பொழுது அவர்கள் அபூ உதுமானை நோக்கி, "இறைவனை நேசிப்பவர்கள் உலகத்துடன் நட்புறவு கொண்டிருக்க மாட்டார்கள். இறைவனை நேசிப்பவர்களின் உள்ளத்திலிருந்து அவனுடைய படைப்புகளை நேசிக்கும் பான்மை அகற்றப்படுகிறது" என்று இயம்பினர்.

உண்மையில் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள், பொறுமையின் புகலிடமாக விளங்கினர். "துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு, தம் வெறுப்பைக் காட்டுபவர் பொறுமையாளரல்ல. துன்பத்தை இன்பமாகக் கொள்பவரே பொறுமையாளர்" என்று அவர்கள் அடிக்கடி கூறுவார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 39

( ஸஹாபாக்கள் வலிமார்கள் போதித்த வஹ்ததுல் வுஜூத் )

♣நான் அல்லாஹ்வைத் தவிர வேறொன்றையும் பார்க்கவில்லை, என் உள்ளே இருக்கிற விஷயத்தை நான் வெளியிடுவேனானால், ஆழமான கிணற்றில் விடப்பட்ட கயிறு துடிப்பதை போன்று நீங்களும் துடிப்பீர்கள்.

( ஸெய்யதுனா இமாம் அலி ரலியல்லாஹு அன்ஹு )

♣அல்லாஹ், தன்னையே வணங்குவோனும், வணங்கப்படுவோனும் ஆவான்.

ஹழ்ரத் முஹியத்தீன் அப்துல் காதிர் ஜீலானி ரலியல்லாஹு அன்ஹு

♣நான் இறைவனை முப்பதாண்டுகளாக தேடினேன். ஆனால் ஆழ்ந்து கவனிக்கும் பொழுது அவனே தேடுபவனாகவும் நான் தேடப்படும் பொருளாகவும் இருந்ததை உணர்தேன்.

இமாம் அபூ யஸீத் பிஸ்தாமி ரலியல்லாஹு அன்ஹு

♣அகப் பார்வையுடைய ஞானக் கண்ணானது ஒளி பெற்றதாக இருந்தால், அது எந்தத் திசையை நோக்கினாலும் அவனது தோற்றத்தையே காணும்.

ஹழ்ரத் காஜா மீர்தர்த் ரலியல்லாஹு அன்ஹு

♣ஒரு தடவை ஜுனைதுல் பக்தாத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பனா நிலையில் பேசுகின்றவனும் நானே, கேட்கின்றவனும் நானே, ஈருலகிலும் வேறு யார் உள்ளார்? என்று தம்மையறியாமல் கூறி

விட்டனர். இதன் காரணமாக அவர்களை காபிர் என்று மார்க்க அறிஞர்கள் கூறவும், அவர்கள் சிறைத் தண்டனைக்கு உள்ளாகவும் நேரிட்டது. நூல்: வலிமார்களின் வரலாறு பாகம் - 2

♣ எல்லாம் அவனுடைய ஒளிதான், எல்லாம் அவனே, அவன் அல்லாததற்கு எந்த ஒரு எதார்த்தமும் இல்லை.

இமாம் கஸ்ஸாலி ரலியல்லாஹு அன்ஹு

மிஷ்காத்துல் அன்வார், பக்கம் 60

♣ ஏகத்துவம் எதுவென இமாம் கஸ்ஸாலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு அதற்கு அவர்கள் கூறினார்கள் அனைத்தையும் ஒன்றாக்க வேண்டும். ஒன்றென்றே நோக்க வேண்டும். ஒன்றென்றே அறிய வேண்டும். தமக்கோர் உள்ளமையும், அல்லாஹ்வுக்கோர் உள்ளமையும் உன்றென்று கற்பனை கூட செய்ய கூடாது. அப்படி எண்ணுவது வழிகேடாகும். ஆரிஃப் ரப்பை பார்க்கலாம். பார்க்காமலும் இருக்கலாம் என்ற பாகுபாட்டை கடக்கும் போதுதான் அவருக்கு சர்வமும் சித்தியாகும்.

நூல்: காஜா முஹினுத்தீன் சிஸ்தி ரலியல்லாஹு அன்ஹு

♣யா அல்லாஹ்! வஹ்ததுல் வுஜூத் என்ற கடலில் எங்களை மூழ்கடித்துவிடு.

இமாம் அபுல் ஹஸன் அலி ஷாதுலி ரலியல்லாஹு அன்ஹு

♣உள்ளமையில் அல்லாஹுதஆலாவையும் அவனுடைய செயலையும் தவிர வேறொன்றுமில்லை.

இமாம் கஸ்ஸாலி ரலியல்லாஹு அன்ஹு

இஹ்யா உலூமுத்தீன் 3வது பாகம் 15வது பக்கம்

♣நிச்சயமாக அவனே எல்லாம். உள்ளமையில் அவனுக்கு வேறான எதுவுமில்லை.

இமாம் கஸ்ஸாலி ரலியல்லாஹு அன்ஹு

இஹ்யா உலூமுத்தீன் 4வது பாகம் 328வது பக்கம்

♣ அவன்தான் நன்றிசொல்பவனும் நன்றி சொல்லப்பட்டவனும். அன்பு வைத்தவனும் அன்பு வைக்கப்பட்டவனும் அவன்தான். அவனுக்கு வேறானது வுஜூதிலே ஒன்றுமில்லை.

இமாம் கஸ்ஸாலி ரலியல்லாஹு அன்ஹு

இஹ்யா உலூமுத்தீன் 4வது பாகம் 86வது பக்கம்

♣ஸூபிய்யாக்கள், ஆரிபீன்கள் ஒரே முடிவை எடுத்திருக்கிறார்கள். அது உள்ளமையில் அல்லாஹ்வை அன்றி வேறு எதனையும் காணவில்லை.

இமாம் கஸ்ஸாலி ரலியல்லாஹு அன்ஹு

மிஷ்காத்துல் அன்வார், பக்கம் 57

♣ மெய்ஞ்ஞானிகளுக்கு அகக்கண் திறந்ததும் வெளிக்கண் பார்வை இழந்து விடுகிறது. எனவே அவர்களுடைய கண்களுக்கு இறைவனை தவிரவுள்ள வேறு யாதொன்றும் தென்படுவதில்லை.

ஹழ்ரத் அபூ சுலைமான் தாரானி ரலியல்லாஹு அன்ஹு

♣முப்பது ஆண்டுகளாக நான் இறைவனோடு உரையாடி கொண்டிருக்கிறேன். ஆனால், மக்கள் நினைக்கிறார்கள், நான் அவர்களோடு உரையாடிக் கொண்டிருக்கிறேன் என்று.

இமாம் ஜுனைதுல் பக்தாத் ரலியல்லாஹு அன்ஹு

♣நீங்கள் இறைவனை அறியாவிட்டாலும், இறைவனுடைய அடையாளங்களையாவது அறிந்து கொள்ளுங்கள். நான் தான் மெய்ப்பொருள் (அனல் ஹக்) உண்மையின் மூலமாகிய நானே நிரந்தரமான உண்மையாவேன்.

ஹழ்ரத் மன்ஸுர் ஹல்ஹாஜ் ரலியல்லாஹு அன்ஹு

நூல்: வலிமார்களின் வரலாறு பாகம் - 2

♣மக்கள் அபூபக்கர் ஷிப்லி ரலியல்லாஹு அன்ஹு அவர்களை பைத்தியம், பைத்தியம் என்று அழைத்த பொழுது,

"நான் பைத்தியம் அல்ல. நீங்கள் தான் பைத்தியம். இந்த உண்மை உங்களுக்கு நியாய தீர்ப்பு நாள் அன்று தான் தெரியவரும் என்று கூறினார்கள்.

ஜுனைதுல் பக்தாத் ரலியல்லாஹு அன்ஹு தம் மாணவர்களையும், ஏனையோரையும் நோக்கி கூறினார்கள். நீங்கள் ஒருவர் மற்றொருவரை பார்க்கும் கண்களுடன் அபூபக்கர் ஷிப்லியை பார்க்காதீர்கள். காரணம் அவர் அல்லாஹ்வின் கண்களை கொண்டு பார்க்கிறார்.

♣அல்லாஹ் " முந்தினவனும் அவனே பிந்தினவனும் அவனே வெளியானவனும் அவனே உள்ளானவனும் அவனே" என்ற தனது பேச்சு கொண்டு அவனுக்கு வேறானவை அனைத்தையும் அழித்துவிட்டான் என்று இமாம் அபுல் ஹஸன் அலி ஷாதுலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் சொன்ன போது அவ்வாறாயின் படைப்பு பற்றி என்ன சொல்வீர்கள் படைப்பு உண்டா? இல்லையா? என்று அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு.

படைப்பு உண்டு ஆயினும் அது வீட்டின் கூரையிலுள்ள துவாரத்தின் வழியாக உள்ளே விழும் சூரிய வெளிச்சத்தில் மேலும் கீழுமாக ஏறி இறங்கும் தூசி போன்றது அது உனது கண்ணுக்கு – பார்வைக்கு மட்டும் தான் தெரியுமேயன்றி நீ அதை கைகொண்டு பிடித்தால் பிடிக்க முடியாது. இவ்வாறு தான் படைப்பு என்பது. அது உனது கண்ணுக்கு மட்டும் தான் தெரியுமேயன்றி அதற்கு வுஜூத் – உள்ளமை இல்லை. அது பார்வைக்கு மட்டு உள்ளதே தவிர எதார்த்தத்தில் இல்லாததாகும் என்று பதில் கூறினார்கள்.

இமாம் அப்துல் வஹ்ஹாப் ஷஃரானி ரலியல்லாஹு அன்ஹு

நூல்: அல்யவாகீத் - 01 ம் பாகம் 65ம் பக்கம்

♣எல்லா பொருள்களிலும் நான் இறைவனையே காண்கிறேன். இறைவனுடைய மகத்துவத்தை நான் வெளிப்படுத்துவேனாயின். மக்கள் என்னை பைத்தியக்காரன் என்று கூறுவார்கள்.

ஹழ்ரத் அபுல் ஹஸன் ஹர்கானி ரலியல்லாஹு அன்ஹு

♣இறைவன் தனது "ஸிபாத்" தன்மைகளான அறிவைக் கொண்டும் சக்தியைக் கொண்டும்தான் எல்லா இடத்திலும் இருக்கின்றான். தனது வுஜூத் எனும் உள்ளமை கொண்டல்ல என்று வழிகெட்டவர்கள் கூறுவார்கள். இக்கூற்று உண்மைக்கு முரணானதாகும்.

இமாம் அப்துல் வஹ்ஹாப் ஷஃரானி ரலியல்லாஹு அன்ஹு

நூல்: அல் யவாகீத் வல் ஜவாஹீர், பாகம் – 02 பக்கம் – 60 பாடம் – 08

♣மன்ஸூர் ஹல்ஹாஜ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஓராண்டு காலம் சிறையில் வைக்கப்பட்டிருந்தார்கள். அந்த ஓராண்டு காலமும் அவர்கள் நாளொன்றுக்கு ஆயிரம் 'ரக்அத்' கள் வீதம் தொழுது வந்தார்கள்.

அப்போது அவர்களை காண வந்த மக்கள் 'நீங்கள் தான், தங்களை இறைவன் என்று கூறுகிறீர்களே பின்னர் எவருக்காக இத்தொழுகையை தொழுகின்றீர்கள். என்று வினவியபொழுது,

என்னுடைய மகத்துவத்தை நான் ஒருவனே நன்கு அறிவேன். நேசனும் நானே. நேசிக்கப்படுபவனும் நானே! தொழுபவனும் நானே தொழப்படுபவனும் நானே. "அனல் ஹக்" "அனல் ஹக்" என்று அவர்கள் பதில் கூறினார்கள்.

நூல்: வலிமார்களின் வரலாறு பாகம் - 2

♣ அல்லாஹ்வும் அடியானும் ஒன்று கலந்துவிட்ட நிலைக்குத்தான் (மகாம் ஜனிய்யத்) அன்வயித்தல் என்ற என்று கூறப்படும். சந்திரன் வேறு ஒளி வேறு என்று கற்பிப்பது சரியாகாது.

ஹழ்ரத் காஜா முஹினுத்தீன் சிஸ்தி ரலியல்லாஹு அன்ஹு

♣ உலகம் கானல் நீர்போன்றது. அதுயதார்த்தத்தில் அல்லாஹ்தான். இந்த உண்மையை தெரிந்துகொண்டவர் தரீக்காவின் ரகசியத்தை புரிந்துகொண்டவராவார். இந்த உலகம் வெளித் தோற்றத்தில் பல உருவங்களையும் தோற்றங்களையும் உடையதாக இருந்தாலும், யதார்த்தத்தில் சந்தேகமின்றி அது அல்லாஹ்வாகவே இருக்கின்றது. உருவம் என்பது திரை. அத்திரையில் மாட்டினவன் அவ்வுருவத்தில் தோற்றுபவனை புரிந்து கொள்ளமாட்டான்.

ஷெய்குல் அக்பர் இமாம் முஹ்யித்தீன் இப்னு அரபி ரலியல்லாஹு அன்ஹு

நூல் : புதூஹாத்துல்மக்கிய்யா, பக்கம் : 201

♣அன ஹிய (நான் தான் அவன்)

இமாம் இப்னு ஃபாரின் ரலியல்லாஹு அன்ஹு

நூல்: வலிமார்களின் வரலாறு பாகம் - 3

♣ என்னுடைய இருக்கை சென்றது. அவனுடைய சிந்தனையே நின்றது. இப்போது நீ பார்க்கின்ற இவன் நானல்ல, ஆனால், அவனே தான்.

அமீர் குஸ்ரூ ரலியல்லாஹு அன்ஹு

♣“வாஜிபுல்வுஜூத்” என்ற மெய்ப்பொருள் ஒன்றே ஒன்றுதான். அது இரண்டுமில்லை; பலதுமில்லை. ஒன்றை இன்னொன்றுடன் சேர்த்துப் பார்க்கும் போதுதான், இரண்டு, அதிகம் போன்ற எண்ணிக்கை ஏற்படுகின்றது.

மூலப்பொருளான மெய்ப்பொருள் ஒன்றே ஒன்றாக இருந்தாலும்கூட அதன் பாத்திரங்கள் பலதாக உள்ளன. அந்த மெய்ப்பொருள் அதன் உடையைப் பொறுத்து இரண்டாகவும் பலதாகவும் தோற்றுகின்றது. யதார்த்தத்தில் இரண்டுமில்லை பலதுமில்லை. சிருஷ்டிகள் என்பன அந்த மெய்ப்பொருளின் உடைகளேயாகும்.

இமாம் இப்னு ஹஜர் அல் ஹைதமீ ரழியல்லாஹுஅன்ஹு

நூல் : அல்பதா வல்ஹதீதிய்யா, பக்கம் : 246

♣மெய்ப்பொருளை அடைந்து கொள்ளுதல் என்பது அல்லாஹ் உமக்களித்த விஷேட அறிவினால் நீ அவன் என்றும், அவன் நீ என்றும் அறிந்து கொள்வதேயாகும். இது “ஹுலூல், இத்திஹாத்” என்ற வழிதவறிய கொள்கையல்ல. அடியான் அடியான் தான். இறைவன் இறைவன் தான். அடியான் இறைவனாக மாறுவதுமில்லை. இறைவன் அடியானாக மாறுவதுமில்லை.

இமாம் அப்துல் கரீம் ஜீலி ரலியல்லாஹு அன்ஹு

நூல்: அல் இன்ஸானுல் காமில், பக்கம்: 230

♣உலகிலுள்ள சகல ஷிருஷ்டிகளும் அவற்றின் மூலத்தைக் கவனிப்பது கொண்டு, அல்லாஹ்தானாகவே இருக்கின்றன. எனினும் வெளியமைப்பைக் கவனிப்பது கொண்டு மட்டு நோக்கினால், அல்லாஹ்

அல்லாதவையாக இருக்கின்றன. யதார்த்தத்தை கவனித்துப் பார்க்கும் பொழுது எல்லாம் அல்லாஹ்தானாகவே இருக்கின்றது.

உதாரணமாக, ஐஸ்கட்டி, அலை என்பன போன்று இவ்விரண்டும் வெளியமைப்பில் எவ்வாறிருந்தாலும், இவ்விரண்டுக்கும் மூலமாயிருப்பது தண்ணீர்தான். இது போன்றுதான் ஷிருஷ்டிகள் அவை எந்த அமைப்பில் இருந்தாலும், அவற்றுக் கெல்லாம் அல்லாஹ்வின் "வுஜூத்" எனும் உள்ளமைதான் மூலமாக இருக்கின்றது.

இமாம் முஹம்மத் இப்னு பழ்லுள்ளாஹ் ரலியல்லாஹு அன்ஹு

நூல் : அத்துஹ்பதுல் முர்ஸலா, பக்கம் : 68

♣ அவனல்லாதது (எங்கும்) பெற்றுக் கொள்ளப்படாத நிலையில் அவன் எங்கே மறைந்திடுவான்?. எனினும், அவன் கடுமையாக வெளியாகி இருப்பது அவனை மறைத்து விட்டது.

நூல்: மகானி - இமாம் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் (ரஹ்மதுல்லாஹி அலைஹி)

♣ஏகத்துவம் என்பது இரண்டு அம்சங்களைக் கொண்டது. ஒன்று- தன்ஸீஹ் எனும் அரூபநிலை. மற்றையது- தஸ்பீஹ் எனும் ரூபநிலை. அரூப நிலையில் இறைவன் கண்பார்வையால் காணப்படமாட்டான். அந்நிலையில் அவன் மனதால் அறியப்பட்டவனாயிருப்பான். எனினும், ரூபநிலையில் கண்களால் பார்க்கப்படுபவனாயிருப்பான்.

ஷெய்ஹுல் அக்பர் இமாம் முஹ்யித்தீன் இப்னு அரபி ரலியல்லாஹு அன்ஹு

நூல் : புதூஹாத்துல்மக்கிய்யா, பக்கம் : 283

♣மெய்ப்பொருள் என்று சொல்ல படிகின்ற இறைவனின் வுஜூத் ஒன்றே ஒன்றுதான். அது இரண்டோ பலதோ இல்லை. ஷிருஷ்டிகள் யாவும் ஒரு மரத்தின் கிளைகள் போன்றவை. அக்கிளைகள் மரத்தை விட்டும் பிரியாதது போல், ஷிருஷ்டிகள் மெய்ப்பொருளான வுஜூதை விட்டும் பிரிந்தவைகள் இல்லை.

இமாம் அப்துல் வஹ்ஹாப் ஷஃரானி ரலியல்லாஹு அன்ஹு

நூல் : அல்யவாகீத் வல்ஜவாஹீர் பாகம் – 01 பக்கம் - 78

இன்னும் ஏராளமான வலிமார்கள் கூறிய வார்த்தைகள் ஏராளம் உண்டு. அகப் பார்வையுள்ளவர்கள் அனைத்திலும் இறைவனை பார்ப்பார்கள். இந்த உண்மைகளை அறிந்தவர்கள் பாக்கியசாலிகள்.

இந்த உண்மைகளை அறியாமல் ஹக்கை எவர்கள் நிராகரிக்கிறார்களோ அவர்கள்தான் வழி தவறியவர்கள் என்று அல்லாஹ் அல் குர்ஆனில் கூறுகிறான்.

எவர் இதில் (இவ்வுலகில் நேர் வழியை விட்டும் அகக்) குருடராக இருந்தாரோ, அவர் மறுமையிலும் குருடராக இருப்பார். இன்னும் (அவர்) பாதையால் மிகத் தவறியவராவார். அல் குர்ஆன் (17: 72)

குருடனும் பார்வை உடையவனும் சமமாவார்களா? அல்குர்ஆன் (13:16 )

( MAIL OF ISLAM )

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 40

( மஃரிஃபா - ஆன்மீக ஞானம்)



ஹாரித் அல்முஹாஸிபி (ரஹ்) அவர்கள் மஃரிஃபா (ஆன்மீக ஞானம்) பற்றி ஒரு நூல் எழுதினார்கள். அந்நூலில் ஆன்மீக ஞான ரகசியங்களை ஒளிவு மறைவு இல்லாமல் எழுதினார்கள். அதுபற்றி அவர்கள் பெருமிதமும் கொண்டார்கள்.

ஒரு நாள் அவர்கள் தம் இல்லத்தின் கதவு தட்டப்படும் சப்தம் கேட்டுக் கதவைத் திறந்தார்கள். ஓர் இளம் தர்வேஷ் அவர்களுக்கு 'ஸலாம்' கூறிக்கொண்டு உள்ளே நுழைந்தார்.

நுழைந்த அவர் ஹாரித் அல்முஹாஸிபி (ரஹ்) அவர்களை நோக்கி, "மஃரிஃபா என்பது இறைவன் மனிதனுக்கு அளிக்கக் கூடியதா? அல்லது மனிதன் முயன்று பெறக்கூடியதா?" என்று வினவினார்.

'இறைவன் மனிதனுக்கு அளிக்கக் கூடியது" என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

"அவ்விதமாயின் சிலருக்கு மட்டும் அதனை அளித்து, வேறு சிலருக்கு அளிக்காதிருப்பது அந்நீதியல்லவா? அவ்விதமாயின் அவன் ஓர் அநீதிவானா?" என்றார் அவர்.

அது கேட்டு யாது கூறுவதென அறியாது திகைத்த அவர்கள் அடுத்த கணம் "அது மனிதனால் முயன்று பெறக் கூடியது" என்று பதிலுரைத் தனர்.

"அவ்விதமானால் ஏனையோருக்கு அவ்வித ஆற்றலை அவன் நல்காதது அநீதமல்லவா? அவன் எவருக்கும் அநீதி செய்யா நெறி நீதி மன்னவாயிற்றே" என்று கூறிவிட்டு, வேறு யாதொன்றும் பேசாது வந்த வழியே திரும்பிவிட்டார்.

இந்நிகழ்ச்சி ஹாரித் அல்முஹாஸிபி (ரஹ்) அவர்களுக்குப் பெரும் அதிர்ச்சியை அளித்தது. தம் குறையை உணர்ந்த அவர்கள், மஃரிஃபா பற்றிப் பேசவோ, எழுதவோ தமக்குத் தகுதியில்லை என்று கருதி, தாம் மஃரிஃபா பற்றி எழுதி வைத்திருந்த நூலை அக்கணத்திலேயே எரித்துச் சாம்பலாக்கி விட்டார்கள்.

இதன்பின் அவர்கள் வயதேறப் பெற்றுப் போதிய அறிவு முதிர்ச்சி எய்தியபின் 'ஷரஹுல் மஃரிஃபா வ பதல் நஸீ ஹா' என்று ஒரு நூல் எழுதினார்கள். அதில் அவர்கள் அறிவை, இறைவனைப் பற்றிய அறிவு, இறைவனின் பகைவனாகிய இப்லீஸைப் பற்றிய அறிவு, தன் நஃப்ஸைப் பற்றிய அறிவு, இறைவனின் செயல்களைப் பற்றிய அறிவு, நான்கு வகையாகப் பிரித்தார்கள்.

அதில் இறைவனைப் பற்றிய அறிவு பற்றி அவர்கள் கூறும் பொழுது, அந்த அறிவு இறைவனைத் தியானிப்பதாலும், அவன் தன் அண்மையில் இருப்பதை நினைவு கூர்வதாலும், அவன் தன்னை இடைவிடாது கவனித்துக் கொண்டிருக்கிறான் என்று நம்புவதாலும் எய்தப் பெறுவதாகும்.

இறைவனின் பகைவனாகிய இப்லீஸைப் பற்றிய அறிவு என்ன வென்றால், அவன் தான் மற்ற எவரையும் விட மிகவும் சக்தி வாய்ந்த கொடிய விரோதி என உணர்வதும், அவனை எதிர்த்துச் சிறிதேனும் தளராது போராடுவதும், அவனுக்குச் சிறிதேனும் விட்டுக் கொடுப்பது தனக்கே தான் இழிவையும், அழிவையும் தேடிக் கொள்வதாகும் என்று உணர்வதுமாகும்.

தன் நஃப்ஸைப் பற்றி அறிவது என்றால் நஃப்ஸானது தீமை செய்வதில் முனைந்து நிற்பது என்பதை உணர்ந்து, அதனை இமை கொட்டாது கண்காணித்து வருவதும், தன்னையே தான் அடிக்கடி பரிசோதனை செய்து கொள்வதுமாகும்.

இறைவனின் செயலைப் பற்றிய அறிவானது இறைவனின் நாட்டப்படி செயலாற்றுவதும், அவனுடைய ஏவல்களை எடுத்து நடப்பதும், விலக்கல்களைத் தவிர்ந்து கொள்வதும், தனக்கு மறுமைப் பேற்றினை அளிக்கும் வழியில் அடியெடுத்து வைத்து நடப்பதுமாகும்.

இவ்வாறு கூறிய அவர்கள், இந்த நூலை மனிதர்கள் தம் பார்வையில் படும்படியாகத் தம்முன் கண்ணாடி போல் வைத்துக் கொள்ளுமாறும். இது இறையருளையும், இறை உதவியையும் பெற அவர்களுக்கு உதவும் எனக் கூறி நூலை முடிக்கிறார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 41

( "மனமே பெருமையுற்ற நீ இப்போது சிறுமையுற்றாயா ? ")

இப்ராஹீம் இப்னு அத்ஹம் அவர்கள் "மற்றவர்களெல்லாம் காலால் நடந்தும், வாகனங்களில் இவர்ந்தும் மக்கமா நகர் செல்கின்றனர். நானோ என் கண்களாலும் தலையாலும் நடந்து சென்று இறை இல்லத்தைத் தரிசிப்பேன் என்று கூறியவர்களாய்,

எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடிக்கும் இரண்டு ரகஅத்கள் வீதம் தொழுது இறைவனிடம் அழுது கெஞ்சி, 'துஆ' இரந்தவர்கனால் மக்கமா நகர் நோக்கிப் புறப்பட்டார்கள். இவ்வாறு அவர்கள் செய்து வந்ததன் காரணமாக அவர்கள் மக்கமா நகரின் அண்மையை வந்தடைய ஏழாண்டுகள் ஆயின.

இதற்குள் அரசு துறந்த ஆத்மஞானி இப்ராஹீம் இப்னு அத்ஹம் அவர்கள் மக்கமா நகர் வருவது மக்கமா நகர் வாழும் மக்கள் அனைவருக்கும் எப்படியோ தெரிய வந்தது. அவர்கனை வரவேற்க செல்வர்களும், ஏழைகளும், பண்டிதர்களும் ஒருவரோடொருவர் போட்டியிட்டுக் கொண்டு ஊருக்கு வெளியே ஓடோடி வந்தார்கள்.

ஆனால் அப்பெருந்தகையோ மக்கள் எவரும் தம்மை இலக்குக் கண்டு கொள்ளக் கூடாது என்ற எண்ணத்துடன் வணிகக் குழு ஒன்றுடன் இணைந்து அடியெடுத்து வைத்து நடந்து வந்தார்கள்.

அப்பொழுது ஒருவர் அவர்களை அணுகி, "இப்ராஹீம் இப்னு அத்ஹம் வழியில் வந்து கொண்டிருப்பதாகக் கேள்வியுற்றோமே, நாங்கள் எல்லாம் அவர்களை வரவேற்பதற்காக வந்துள்ளோம் நீர் அவர்களை எங்கேனும் வழியில் பார்த்தீர்களா ? என்று வினவினர்.

அவர்கள் இவ்வாறு வினவிவாய் மூடுமுன், "அந்த வழி கேடனையா வரவேற்க வந்துள்ளீர் வீண் வேலை" என்று கூறினர் இப்ராஹிம் இப்னு அத்ஹம்.

அடுத்த கணம். "எவரை வழி கேடன் என்று கூறினாய்? என்று ஆவேசத்துடன் மொழிந்த வண்ணம் அவர்கள்மீது மொத்த கூட்டமும் குத்து மழையைப் பொழிந்தது.

"நீங்கள் என்னை என்ன செய்தபோதினும் சரியே. அவர் ஒரு வழி கேடன், வழிகேடன்தான்" என்று குத்துகளையும் வாங்கிக் கொண்டு உரத்து சப்தமிட்டுக் கூறினார்கள் இப்ரா ஹீம் இப்னு அத்ஹம்.

"நீ தான் வழிகேடன். நீ தான் வழி கேடன்' என்று கூறிக் கொண்டு அவர்களை நையப் புடைத்தார்கள் மக்கள்.

''ஆம்; நான்தான் வழிகேடன். நான்தான் வழிகேடன்" என்று கூறிக் கொண்டு கத்தினார்கள் இப்ராஹீம் இப்னு அத்ஹம்.

அவர்கள் தம் தவற்றை உணர்ந்து கொண்டார்கள் என்று எண்ணி 'ஓடிப்போ' என்று கூறி அவர்களை விரட்டியடித்தார்கள் அம்மக்கள்.

பெற்ற அடிகளின் காரணமாக அடிகளாரின் உடல் நலிவுற்றது. தள்ளாடித் தள்ளாடி அவர்கள் அடியெடுத்து வைத்து நடந்து சென்றார்கள்.

அப்பொழுது இப்ராஹீம் இப்னு அத்ஹம் அவர்கள் தம் மனத்தை நோக்கி,"மனமே! உம்மை வரவேற்க மக்கள் வருகின்றார்கள் என்பதை உணர்ந்ததும் உனக்கு சற்று பெருமை ஏற்பட்டதல்லவா? அந்தப் பெருமைக்கு ஏற்ற சிறுமை உனக்கு இப்பொழுது கிடைத்ததா ?" என்று வினவினர்.

அவர்கள் இவ்வாறு தம் மனத்திற்குத் தாமே கூறியது கூட்டத்திலுள்ள ஒருவரின் செவிப்பட்டதும், அவர்களை ஏறிட் டுப் பார்த்தார் அவர். அவர்களின் உள்ளே ஆத்மீக ஞானி இப்ராஹீம் அத்ஹம் ஒளிந்துகொண்டிருப்பது அவருடைய கண்களுக்குப் பளிச்சிட்டது. ''ஆ! என்ன தவறு செய்து விட்டோம்! என்ன தவறு செய்து விட்டோம்" என்று அலறினார் அவர்.

''ஏன் இவ்வாறு அலறுகின்றீர்? நாம் என்ன தவறு செய்து விட்டோம்?" என்று வினவினர் மக்கள்.

அதற்கு அவர், "நாம் எவரை அடித்தோமோ அவர்கள் தாம் இப்ராஹீம் இப்னு அத்ஹம்” என்று நா தழதழக்கக் கூறினார். அப்பொழுது அவருடைய கண்களிலிருந்தும் கண்ணீர் அருவியெனப் பாய்ந்தோடியது.

அப்பொழுது மக்களுக்கு ஏற்பட்ட மன உணர்ச்சிக்கு அளவில்லை. அம்மேதகையை அடித்த கைகளைத் தங்களின் மார்பிலும், முகத்திலும் அடித்த வண்ணம் அவர்கள், "ஆ! என்ன தவறு செய்துவிட்டோம். என்ன தவறு செய்து விட்டோம்" என்று கூறி அழுது பிரலாபித்தார்கள்.

அதன்பின் அவர்கள் அனைவரும் இப்ராஹீம் இப்னு அத்ஹம் அவர்களை அணுகி, தாம் அறியாது செய்த பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினர். அதனைப் பிழையெனக் கருதாத பெருந்தகை இப்ராஹீம் இப்னு அத்ஹம் அவர்கள் அதுகேட்டுப் புன்முறுவல் பூத்தார்கள்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 42

( அதென்ன பெயர் மாலிக் இப்னு தீனார் ? )



ஊர்க் காவல்காரராக இருந்த அவரோ ஒரு குடிகாரர். எப்பொழுதும் மது மயக்கத்திலேயே மூழ்கித் திழைப்பவர். நம் பெண் குழந்தையுடன் விளையாடுவதே அவரின் பொழுது போக்கு. அதன் மீது அவர் அளவற்ற அன்பு வைத்திருந்தார். ஆனால் அதுவோ அவரை அழவைத்து விட்டுத் தன் சின்னஞ் சிறு வயதிலேயே இவ்வுலகை விட்டும் பிரிந்து சென்றது.

இதன்பின் நாட்கள் பல நகர்ந்தன. அது ஒரு பராஅத் இரவு - வெள்ளி இரவாக இருந்தது. மது அருந்திவிட்டு, அந்தப் போதையில் இரவுத் தொழுகையைக் கூடத் தொழ மறந்துவிட்டு அயர்ந்து உறங்கினார்

அப்பொழுது அவர் ஒரு கனவு கண்டார். மஹ்ஷர் வெளியிலே மக்களெல்லாம் திரண்டு நிற்கின்றார்கள். அப்பொழுது ஒரு கரும்பாம்பு இவரைத் துரத்திக்கொண்டு வருகிறது. இவரோ வெருண்டோடு கின்றார். வழியில் வெண்ணாடை அணிந்த நல்லார் ஒருவரைக் கண்டு தம்மைக் காப்பாற்றுமாறு வேண்டுகிறார்.

அது கேட்ட அந்த நல்லார், "என்னால் உன்னைக் காப்பாற்ற இயலாதே . நானோ வலுவற்றவன், அதுவோ வலுவானது. நான் என் செய்வேன்? எனினும் விரைந்தோடு. தப்பிப் பிழைக்க ஒரு வழி ஏற்படும்" என்று கூறுகிறார். அவ்வாறே இவர் ஓடுகிறார். ஓடுகிறார். ஓடி ஓடி நரகத்தின் விளிம்பிற்கே வந்து விடுகிறார். இன்னும் சில கணங்களில் இவர் அதில் விழுந்து விடுவார் போல் தோன்றுகிறது.

அப்போது ஓர் அசரீரி பின்வருமாறு முழங்குகிறது. "திரும்பிச் செல்லும்; நீர் இதற்காகப் படைக்கப்பட்டவரல்லர் என்று". அது கேட்டு இவர் திரும்பிச் செல்கிறார். பாம்பும் இவரைத் துரத்திக் கொண்டு வருகிறது. வழியில் மீண்டும் வெண்ணாடை புனைந்த அந்த நல்லாரைக்

காண்கிறார். "தாங்கள் என்னைக் காப்பாற்ற மாட்டேன் என்கிறீர்களே" என்று இவர் கண் கலங்கி அலறுகிறார்.

அதற்கு அவர், "நான் என்ன செய்வது? நான் வலுவற்றவனாயிற்றே" என்று தம் ஆற்றாமையை எடுத்துரைக்கிறார். அதன் பின் அவர் இவரை நோக்கி, "அதோ தெரிகின்றதே ஒரு மலை. ஆங்குச் செல். அங்கு முஸ்லிம்களின் அடைக்கலப் பொருள்கள் உள்ளன. அவற்றின் மூலம் உனக்கு அடைக்கலம் கிடைக்கலாம்" என்று கூறுகின்றார்.

அவர் கூறிய வண்ணம் இவர் அம்மலையை நோக்கி ஓடுகிறார். பாம்பு இவரை விடாது துரத்திக் கொண்டு வருகி றது. அதில் பொன்னாலும் மணியாலும் ஆன இரண்டு வாயல்கள் உள்ளன. அவற்றில் திரை தொங்கவிடப்பட்டுள்ளது. இவர் அதனை அடைந்ததும், "திரையை அகற்றுங்கள். இந்த ஏழைக்கு இங்கு அபயம் இருக்கக் கூடும்" என்று கூறப்படுகிறது.

உடனே திரைகள் விலகுகின்றன. உள்ளிருந்து ஒளிர் வண்ண ஓவியம் போல் குழந்தைகள் வெளியே வருகின்றன. இதற்குள் பாம்பு அவரை நெருங்கி விடுகிறது. இதோ, அவர் பாம்பின் வாயில் அகப்பட்டு அதன் வயிற்றில் அடைக்கலம் புகுந்து விடுவார் போல் தோன்றுகிறது.

அப்பொழுது அக்குழந் தைகளில் ஒன்று சரேலெனப் பாய்ந்து தன் இடக்கரத்தால் அவரை அணைத்து வலக் கரத்தால் ஓர் எறி ஈட்டியை அப்பாம்பின் மீது வீசி எறிகிறது. என்ன வியப்பு ! விரட்டிக் கொண்டு வந்த பாம்பு வெருண்டோடுகிறது.

அதன்பின் அவரைக் கீழே அமரச் செய்து அவரின் மடி மீதமர்ந்து அவரை நோக்கி, 'அப்பா' என்று தன் பிஞ்சு வாய் திறந்து மழலை மொழியால் விளிக்கிறது. அப்பொழுது அவர் தம் கண்களை அகல விரித்து அக்குழந்தையை உற்று நோக்கி அது வேறு யாருமல்ல, அவர் ஈன்றெடுத்த அவரின் அன்புத் திருமகள்தான்.

அதனை அப்படியே கட்டித் தழுவி அதன் கன்னங்களில் ஆயிரம் முத்தங்களை சொரிகிறார். அப்பொழுது அக்குழந்தை அவரின் கன்னத்தில் தன் தளிர்க் கரத்தால் அடித்து, 'விசுவாசங் கொண்டவர்களின் இதயங்கள் அல்லாஹ்வை நினைத்தும் அவன் இறக்கி வைத்த சத்திய (வசன)ங்களைக் கவனித்தும் அஞ்சக் கூடிய நேரம் (இன்னும்) வரவில்லையா?...... என்ற இறை திருவசனத்தை ஓதுகிறது.

அதுகண்டு வியப்புற்ற அவர், உனக்குக் குர்ஆன் ஓதத் தெரியுமா?" என்று வினவுகிறார், "ஆம்; உங்களைவிட அதிகமாக நாங்கள் அதனை அறிந்துள்ளோம்" என்று அது பதிலிறுக்கிறது. அப்பொழுது அவர் தம் அருமை மகளை நோக்கி, 'என்னைத் துரத்திக்கொண்டு வந்த பாம்பு யாது?" என்று வினவுகிறார்.

"அதுதான் நீங்கள் செய்த தீவினைகளெல்லாம் ஒருங்கு திரண்டதனாலான உரு. அது உங்களைப் பிடித்து நரகத்தில் தள்ள முயன்றது" என்று அது கூறுகிறது.

"நான் வழியில் சந்தித்த வெண்ணாடை புனைந்த அந்த நல்லவர் யார்?" என்று அடுத்து வினவுகிறார் அவர். "அவரே நீர் செய்த நற்செயல்களின் பிரதிபிம்பம். உங்களின் தீச்செயல்களால் அவரை வலுவற்றவராக்கி விட்டீர்கள். எனவே அவரால் உங்களுக்கு யாதோர் உதவியும் செய்ய இயலாமல் போய் விட்டது” என்று அது பதிலிறுக்கிறது.

அதன்பின் அவர் தம் அன்பு மகளை நோக்கி, "நீங்கள் இங்கு என்ன செய்கிறீர்கள்? " என்று வினவுகிறார். "முஸ்லிம்களின் குழந்தைகளாகிய நாங்கள் இங்கு உங்களை எதிர்பார்த்துக் கொண்டுள்ளோம். நீங்கள் எங்களிடம் வரும் பொழுது உங்களுக்காக நாங்கள் இறைவனிடம் பரிந்துரைப்போம்" என்று அது கூறுகிறது.

இத்துடன் கனவு கலைகிறது. திடுக்கிட்டு விழித்தெழுந்த அவர் இறைவனிடம் பாவமன்னிப்பு கோருகிறார். அவரின் வாழ்விலே ஒரு மாபெரும் திருப்பம் ஏற்படுகிறது. இது முதல் ஒரு புது மனிதராக, மனிதப் புனிதராக அவர் உருவெடுக்கிறார். தாபித் என்று தாங்கிய அவர் வரலாற்றிலே மாலிக் இப்னு தீனார் (ரஹ்) என்ற பெயருடன் உலவுகின்றார்.

அதென்ன பெயர் மாலிக் இப்னு தீனார் ?

இவர் ஒரு கப்பலில் கூலி செலுத்தாது பிரயாணம் செய்தார் என்றும் நடுக்கடலில் வைத்து மாலுமி இவரிடம் கூலி கேட்டபொழுது இவர் தம்மிடம் காசேதும் இல்லையெனக் கையை விரித்தார் என்றும்

அதுகேட்டு இவரை அம்மாலுமி நையப் புடைத்தான் என்றும்

அப்பொழுது கடலிலுள்ள மீன்களெல்லாம் தம் வாயிலே ஒரு தீனாரைக் கௌவிக் கொண்டு தலையை வெளியே நீட்ட , இவர் ஒரு மீனின் வாயிலிருந்த தீனாரை எடுத்து மாலுமியிடம் செலுத்தி விட்டு, கப்பலைவிட்டு இறங்கி அக்கடலிலே நடந்து சென்று மறைந்து விட்டார் என்றும் இதிலிருந்து இவருக்கு மாலிக் இப்னு தீனார் என்ற பெயர் ஏற்பட்ட தென்றும் கூறப்படுகிறது.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 43

( அவனிடமிருந்து அவனை மட்டுமே தேடுவீராக! )

யஹ்யா இப்னு முஆத் (ரஹ்) அவர்கள் அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களின் இருப்பிடத்தை அடைந்தபொழுது, பொழுதும் அடைந்துவிட் டது. அவர்கள் இறை வணக்கத்தில் ஈடுபடுவதற்காகப் பாலைவனம் போயுள்ளார் என்பதை அறிந்து ஆங்குச் சென்றார்கள்.

அங்கு அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) வணக்கத்தில் ஈடுபட்டிருப்பதைக் கண்டு அவர்களின் வணக்கத்தைக் குலைக்க மனமில்லாதவர்களாய் அவர்கள் வணக்கத்தைத் தாமாக முடிக்கும் வரையில் அங்கு வீற்றிருந்தார்கள். ஆனால் அவர்கள் இரவு முழுவதும் கால் கடுக்க நின்று கடும் தவம் பொழுது புலர்ந்தபொழுதுதான் அவர்களின் தவம் கலைந்தது.

அப்பொழுது யஹ்யா இப்னு முஆத் (ரஹ்), பிஸ்தாமி (ரஹ்) அவர்களை அணுகி அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்து அவர்களுக்கு அன்றிரவு ஏற்பட்ட மெய்ஞ்ஞான அனுபவங்களைப் பற்றி வினவினர்.

அதற்கு அவர்கள் எனக்கு இருபதுக்கும் மேற்பட்ட படித்தரங்கள் காட்டப்பட்டன. ஆனால் அவற்றில் ஒன்றைக் கூட நான் விரும்பலில்லை. ஏனெனில் அவை அனைத்தும் திரையிடப்பட்டிருந்தன" என்று கூறினார்கள்.

அதுகேட்ட யஹ்யா இப்னு முஆத் (ரஹ்) அவர்கள் அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களை நோக்கி, "மெய்ஞ்ஞானத்தை (மஃரிபாவை) இறைவனிடம் தாங்கள் கேட்டிருக்கலாமே. அவன்தான் மன்னர்களின் மன்னனாயிற்றே. நீங்கள் விரும்பியதைக் கேளுங்கள்" என்றும் கூறியுள்ளானே" என்றனர்

அதற்கு அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள், "யஹ்யா! வாயை மூடிக் கொண்டிரும். அவனை அறிவதில் எனக்கே என்மீது பொறாமையாயுள்ளது. அவனையன்றி வேறு ஒருவரும் அவனை அறியக் கூடாது என்று நான் விரும்புகிறேன். அதுவே அவனுடைய விருப்பமாகவும் உள்ளது. அதில் தலையிட நான் யார்?" என்று

இடித்துரைத்தார்கள்.

அதுகேட்ட யஹ்யா இப்னு முஆத் (ரஹ்) அவர்கள், "இறைவனின் மகத்துவத்தின் மீது ஆணையாக, தங்களுக்குச் சென்ற இரவு கிடைத்த இறை அன்பளிப்புகளில் ஒரு பகுதியை எனக்குத் தத்துதவுங்கள்" என்று கூறினர்.

அதற்கு அவர்கள், "ஆதம் (அலை) அவர்களை உலகில் தன் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்தது போன்ற தேர்வையோ, ஜிப்ரீல் (அலை) அவர்களின் புனிதத்துவத்தையோ, இப்ராஹீன் (அலை) அவர்களின் தோழமையையோ, ஈஸா (அலை) அவர்களின் தூய்மையையோ, எம்பெருமானார் (ஸல்)அவர்களின் அன்பையோ உமக்குத் தந்தபோதினும் நீர் திருப்தியுறக் கூடாது.

உம்முடைய குறிக்கோளை மிகவும் உயரத்தில் வைத்திரும். அவனிடமிருந்து அவனை மட்டுமே தேடுவீராக! அவ்விதம் தேடுவீராயின் நீர் அனைத்தையுமே பெற்றுக் கொள்வீர் உம்முடைய குறிக்கோளைக் கீழே கொண்டு வர வேண்டாம். கீழே கொண்டுவரின், நீர் எதில் கொண்டுவந்து உம்முடைய குறிக்கோளை நிறுத்துகின்றீரோ அதிலே வைத்து மூடப்பட்டுவிடுவீர்" என்று அறிவுரை பகர்ந்தார்கள்.

அவர்கள் வேறொருவரிடம், "மூஸா (அலை) அவர்கள் இறைவனோடு உரையாடல் நிகழ்த்தினார்கள். ஈஸா (அலை) அவர்களுக்கு இறைவன் மகத்தான ஆத்மீக பலத்தை வழங்கினான். இந்தப் பேறுகளெல்லாம் எனக்குக் கிடைத்தால்கூட நான் அவற்றிற்கு அப்பாலுள்ள ஒன்றை இறைவனிடம் கேட் பேன். ஏனெனில் இப்பேறுகளை யெல்லாம்விடச் சிறப்பு வாய்ந்த எண்ணிலடங்கா நற்பேறுகள் இறைவனிடம் உள்ளன " என்று கூறினர்.

மேலும் அவர்கள் தங்களைப் பற்றிக் கூறும்பொழுது, "நான் இறைவனுக்கு இரண்டே வயது இளையவன்" என்று கூறினர். அதன் பொருள் இறைவனின் தனிப்பெரும் பண்புகளான 'தானே இயங்குதல், சர்வ வல்லமை ' ஆகிய இரண்டைத் தவிர்த்து ஏனைய அனைத்தையும் மனிதன் பெற இயலும், அவற்றை எய்த அவன் பாடுபட வேண்டும் என்பதேயாகும்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 44

( வயிறு நிரம்ப உண்டதுமில்லை; பாவம் ஏதும் செய்யவுமில்லை )

ஒரு தடவை துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் கஃபாவில் இருக்கும் பொழுது நீக்ரோ ஒருவர் அல்லாஹ்வைத் துதித்துப் பல்வேறு பாடல்களைப் பாடிக் அப்பொழுது அவரின் முகம் ஒளிர்வதையும் அவர் பாடுவதை நிறுத்தியதும் அது முன்பு போல் ஆகிவிடுவதையும் கண்டனர்.

அப்பொழுது துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் அவரை அணுகி, தாம் அவரிடம் கண்டதை எடுத்துரைத்தபொழுது, "ஆம்; அல்லாஹ்வின் நினைவு என் முகத்தை மட்டுமல்ல. என் ஒவ்வொரு மயிர்க் காம்புகளையும் ஒளிமயமாக ஆக்குகின்றது. அது என் இதயத்தையும் மூளையையும் நறுமணத்தால் நிரப்புகிறது" என்று கூறினார். அவரின் இப்பதில் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களின் உள்ளத்தைப் பெரிதும் ஆட்கொண்டது.

எனவே துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் தொழ நிற்பார்களானால் "இறைவனே! உன் திருமுன் நான் எந்தக் காலினால் நடந்து வருவேன். உன் 'கிப்லா'வை நான் எந்தக் கண்களைக் கொண்டு காண்பேன்.உன் மறைவான இரகசியங்களை நான் எந்த நாவைக் கொண்டு வெளிப்படுத்துவேன். உன்னுடைய புகழை நான் எந்தப் பெயரைக் கொண்டு எடுத்துரைப்பேன். ஒன்றுமற்றவனாக நான் உன் முன்வந்து நிற்கின்றேன். எனினும் முக்கிய அலுவல் காரணமாக, வெட்கமின்றி நான் உன் முன் வந்து நிற்கின்றேன்" என்று கூறிவிட்டே அவர்கள் 'தக்பீர்' கட்டித் தொழுவார்கள்.

ஒரு தடவை அவர்கள் தொழ நின்று 'அல்லாஹுஅக்பர் என்ற தக்பீர் சொல்லிக் கையைக் கட்டியதும் மயக்கமுற்றுக் கீழே சாய்ந்து விட்டார்கள்.

ஒரு சமயம் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் எகிப்து நாட்டில் சுற்றி அலைந்து கொண்டிருக்கும்பொழுது சில சிறுவர்கள் ஒருங்கு சேர்ந்து ஓர் இளவலைக் கல்லால் எறிந்து கொண்டிருந்தார்கள்.

துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் அச்சிறுவர்களை அணுகி "ஏன் அவரைக் கல்லால் எறிகிறீர்கள்?" என்று வினவினர். அதற்கு அவர்கள் "அவர் ஒரு பைத்தியம்" என்று கூறினர்.

"எவ்வாறு அவர் ஒரு பைத்தியம் என்று உங்களுக்குத் தெரிய வந்தது என்று துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் வினவினர்,

அதற்கு அவர்கள் "அவர் தாம் இறைவனைக் கண்டதாக உளறுகிறார்" என்று பதிலிறுத்தார்கள்.

அப்பொழுது அவர்கள் அந்த இளவலிடம் "நீர் அவ்வாறு கூறியதுண்டா?" என்று வினவினர்.

அதற்கு அவர் "நான் இறைவனை ஒரு கணமேனும் காணாதிருப்பின் அவனை விட்டும் திரையிடப்பட்டவனாகவும் அவனுக்கு அடி பணியாதவனாகவுமல்லவோ இருப்பேன்" என்று கூறினார்.

அவர் கூறியது துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களைத் தூக்கிவாரிப் போட்டது அவரின் மாண்பினை உணர்ந்து அவர்கள் மெய்சிலிர்த்தார்கள். அவரின் பதில் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களின் அறிவுக் கண்களைத் திறந்து விட்டதென்றே கூறலாம்.

இதன் பின்னர் அல்லும் பகலும் இறை நினைவிலே திளைத்திருக்கும் பயிற்சியை மேற்கொண்ட துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களை ஒருவர் அணுகி, "தௌபா (பாவமன்னிப்புச் செய்தல்) என்றால் என்ன ?" என்று வினவினார்.

அதற்கு அவர்கள் பொது மக்களின் தௌபா தம் பாவங்களை நினைந்து வருந்தி அழுது இறைவனிடம் மன்னிப்புக் கோருவதாகும். ஆனால் இறைநேசர்களின் தௌபாவோ இறைவனைக் கண நேரம் மறந்திருக்கும் (கஃப்லா) நிலைக்காக இறைவனிடம் பாவ மன்னிப்புக் கோருவதாகும்" என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் மாபெரும் நெறி வாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள். "எல்லாப் பாவங்களும் இச்சையினால் ஏற்படுகின்றன. எல்லா இச்சைகளும் உள்ளம் திருப்தியடைந்தபொழுது தம் தலையைக் காட்டுகின்றன. எனவே தான் திருப்தியடைந்த ஒருவன் பாவம் செய்யாமலோ பாவத்தை நாடாமலோ இருப்பதில்லை" என்று அவர்கள் கூறினார்கள்.

அவர்கள் தம் வாணாளில் ஒருபோதும் வயிறு நிறைய உண்டதில்லை. இது பற்றி அவர்கள் ஒரு தடவை கூறும் பொழுது, "வயிறு நிரம்ப நான் உண்டதுமில்லை. நான் பாவம் செய்யவுமில்லை" என்று கூறினார்கள். இவ்வாறு கூறி வயிறு நிரம்ப உண்பது தான் பாவத்திற்கு மூல காரணம் என்று கூறாது கூறினர்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 45

( இறைவனே! என் இரகசியம் அம்பலமாகி விட்டது )

அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்கள் அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களைக் கனவில் காணும் பேறு பெற்றார்கள்.

அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்களிடம் அடிமை ஒருவர் இருந்தார். அந்த அடிமை தமக்கு ஒரு நூறு தீனார் தரின் தாம் அவரை உரிமை விடுவதாக அந்த அடிமையிடம் வாக்களித்திருந்தார்கள்.

அவ்வாறே அந்த அடிமை ஒவ்வொரு நாளும் சில தீனார்களை அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்களிடம் தம் விடுதலைக்கு கொடுத்து வந்தார்.

ஒருநாள் அவர்களின் அண்டை வீட்டுக்காரர் ஒருவர் அவர்களிடம் வந்து, உங்களின் அடிமை ஒவ்வோர் இரவும் முஸ்லிம்களின் அடக்கவிடத்திற்குச் சென்று கஃபனைத் திருடி வந்து, விற்று தன் விடுதலைக்கு பணம் கொடுத்து வருவதாகக் கூறினார்.

ஓரிரவு அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்கள் இதனைச் சோதித்துப் பார்க்கும் நோக்கத்துடன் தன் அடிமை பின்னே அவரறியாமல் சென்றார்கள்.

அந்த அடிமை முஸ்லிம்களின் அடக்கவிடத்தை அடைந்து தம் உடைகளைக் கழற்றி வைத்துவிட்டு ஒரு கோணித் துணியை அணிந்து கொண்டார். கழுத்தில் ஓர் இரும்பு வளையத்தைப் போட்டுக் கொண்டார். பின்னர் ஓர் அடக்கவிடத்திற்குள் இறங்கி வைகறை வரை அழுது சலித்து வணங்கிக் கொண்டிருந்தார்.

பின்னர் அண்மையிலிருந்த பள்ளிக்கு வந்து வைகறைத் தொழுகையைத் தொழுது விட்டு "இறைவனே! இன்னும் விடியச் சிறிது நேரமே உள்ளது. விடிந்ததும் நான் என் உடலின் எசமானனுக்கு இன்றையக் கூலியைக் கொடுக்க வேண்டும். அதனை எனக்கு ஈந்தருள்" என்று இறைஞ்சினார்.

அடுத்த கணம் ஓர் ஒளி மின்னென மின்னி அவரின் ஏந்திய கைகளில் விழுந்தது. மறுகணம் அது தீனார்களாகப் பளிச்சிட்டது

அவற்றை எடுத்துக் கொண்டு அவர் அங்கிருந்து புறப்பட்ட பொழுது அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்கள் அந்த அடிமையின் முன் பாய்ந்து, "இன்றிருந்து நீ தான் என் எசமானர்; நான் உம்முடைய அடிமை" என்று உணர்ச்சி மீக்குற்றுக் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்களை ஏறிட்டுப் பார்த்த அந்த அடிமை தம்முன் நிற்பது தம் எசமானர் என்பதை உணர்ந்ததும் தம் இருகரம் ஏந்தி, "இறைவனே! என் இரகசியம் அம்பலமாகி விட்டது. இனிமேல் நான் உயிர் வாழ விரும்பவில்லை. என் உயிரை எடுத்துக் கொள்வாயாக!" என்று இறைஞ்சினார்.

அடுத்த கணம் அவரின் உயிர் அவரின் உடலை விட்டும் பிரிந்தது.

அந்த அடிமை அவர் அணிந்திருந்த கோணித் துணியாலேயே கஃபனிட்டு நல்லடக்கம் செய்து விட்டு தம் இல்லம் திரும்பினார்கள் அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்கள்.

அன்றிரவு அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்கள் கனவொன்று கண்டார்கள். அதிலே அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் திருத்தோழர்களுடன் காட்சி வழங்கி "நம் அன்பிற்கு பாத்திரமான அன்பரை அவர் அணிந்திருந்த கோணித் துணியாலேயே கஃபனிட்டு அடக்கிவிட்டீரே" என்று கூறி விட்டு மறைந்தனர்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 46

( இறைகாதலில் தம்மை அழித்துக் கொண்டவர் )



நாளாக, ஆக அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் இறைகாதலில் தம்மை அழித்துக் கொண்டவர்களின் கூட்டத்தில் கலந்து தம்மையே தாம் காணாமல் ஆக்கிக் கொண்டார். இதனால் ஆன்மீகத் துறையில் பற்பல படித்தரங்களைக் கடந்து சென்று கொண்டிருந்தார்கள். இதனை பின்வருமாறு நிகழ்வுகள் அழகாக எடுத்துரைக்கின்றன.

அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் : "முதல் தடவையாக நான் கஃபாவிற்குச் சென்றபொழுது நான் கஃபாவைக் கண்டேன். இரண்டாவது தடவை நான் கஃபாவிற்குச் சென்றபொழுது நான் அங்குக் கஃபாவின் இறைவனைக் கண்டேன். மூன்றாவது தடவை நான் கஃபாவிற்குச் சென்றபொழுது தான் அங்குக் கஃபாவையும் காணவில்லை. கஃபாவின் இறைவனையும் காணவில்லை !

இவ்வாறு கூறித் தாம் தம்மை இறைகாதலில் அழிந்துக் கொண்டதன் காரணமாகத் தாம் ஒன்றையும் காணவில்லை என்றும் நாம் அங்கு எதையேனும் கண்டதாய் இருப்பின் அது இறைவனையே கண்டதாய் இருக்கும் என்றும் அவர்கள் கூறாமல் கூறினார்கள்.

ஒரு நாள் ஒருவர் அவர்களின் இல்லத்திற்கு வந்து "இங்கே அபூ யஸீத் இருக்கின்றார்களா ?" என்று அவர்களைப் பற்றி முன்பே தெரியாதவர் அவர்களிடமே வினவினார்.

அதற்கு அவர்கள், "இங்கு இறைவனைத் தவிர வேறு எவரும் இருக்கின்றார்களா?" என்று கேள்வி கேட்டவரிடமே வினவினார்கள். வந்தவரோ யாது பதில் கூறுவதென அறியாது திரும்பி விட்டார்.

இதற்கு ஹுஜ்வீரி (ரஹ்) அவர்கள் தம்முடைய 'கஷ்புல் மஹ்ஜூப் என்ற நூலில் விளக்கம் கூறும்பொழுது,

"எவ்வாறு யூசுஃப் (அலை) அவர்களைப் பிரிந்த யஃகூப் (அலை) அவர்களுக்கு அனைத்து நாட்டமும் யூசுஃப் (அலை) அவர்களைப் பற்றியதாக இருந்ததோ,

எவ்வாறு லைலா மீது அடங்காக் காதல் கொண்ட மஜ்னூனுக்கு உலகிலுள்ள அனைத்துப் பொருள்களும் லைலாவாகவே தோற்றமளித்ததோ

அதே போன்று இறைகாதலில் மூழ்கித் திளைத்த அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களுக்கும் அனைத்தும் இறைவன் மயமாகவே காட்சியளித்தன" என்று கூறுகிறார்கள்.

ஒரு நாள் அபூ யஸீத் (ரஹ்) அவர்கள் தங்களின் இல்லத் தில் வீற்றிருந்தார்கள். அப்பொழுது ஒருவர் அவர்களைக் காண வந்தார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி,

"வந்த அலுவல் யாதோ?" என்று வினவினர். அவர்கள் எவரென அறிந்து கொள்ளாத அவர்,

"அபூ யஸீத் (ரஹ்) அவர்களைக் காண்பதற்காக அவர்களைத் தேடி வெகு தொலைவிலிருந்து வந்தேன்" என்று கூறினார்.

அதுகேட்ட அவர்கள், "நானும் தான் அபூ யஸீதை முப்பதாண்டுகளாகத் தேடிக் கொண்டுள்ளேன். எனினும் அவர் பற்றி ஒரு சிறு துப்புக் கூடக் கிடைக்கவில்லையே" என்று கூறினார்கள்.

ஆம்; அவர்கள் தம்மையே இறைவனளவில் அழித்துக் கொண்டு தம்மை மறந்த நிலையிலேயே வாழ்ந்து வந்தார்கள். அதுதான் உண்மை !

அபூ யஸீத் (ரஹ்) அவர்களிடம் ஒருவர் இருபதாண்டுகளாக ஊழியம் புரிந்து வந்தார். அவர் ஒவ்வொரு நாளும் அவர்களிடத்தில் வரும் பொழுது அவர்கள் அவரை நோக்கி, "மகனே! நீ யார்? உன் பெயர் என்ன? " என்று வினவுவார்கள்.

அஃது அவருக்குப் பெரிதும் வியப்பாக இருந்தது. தம் ஆசான் தம் பெயரைத் தம்மிடம் ஒவ்வொரு நாளும் வினவி, தம்மைக் கேலி செய்கின்றார்களா ? என்று கூட அவருக்கு ஐயம் ஏற்பட்டது.

ஒரு நாள் அவர் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு அதனை அவர்களிடம் கேட்டே விட்டார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, "மகனே! அப்படியல்ல. இறைவனின் திருப்பெயர் என் உள்ளத்தில் நுழைந்து மற்றப் பெயர்களையெல்லாம் என்னை விட்டும் அப்புறப்படுத்தி விடுகிறது. எனவே அவற்றை என்னை அறியாமல் மறந்துவிடுகிறேன்" என்று அவருக்கு ஆறுதல் மொழி கூறினார்கள்.

இச்செய்தி துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களுக்குத் தெரிய வந்ததும், "அல்லாஹ், என் சகோதரர் அபூயஸீதுக்குப் பேரருள் பாலிப்பானாக! அவர் இறைகாதலில் தம்மை அழித்துக் கொண்டவர்களின் கூட்டத்தில் கலந்து தம்மையே தாம் காணாமல் ஆக்கிக் கொண்டார்" என்று கூறினர்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 46

( "இவ்வுலகைத் துச்சமாகக் கருதுங்கள்" )

ஒரு நாள் ராபியா பஸரீ (ரஹ்) அவர்களைக் காணவந்த ஒருவர் இவ்வுலக வாழ்வைப் பற்றிப் பெரிதும் இழித்துரைத்துக் கொண்டிருந் தார். அவர் கூறுவதையெல்லாம் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த ராபியா பஸரீ (ரஹ்) அவர்கள்,

அவரை நோக்கி, "நீர் உண்மையில் இவ்வுலக வாழ்வை விரும்புபவரேயன்றி அதனை வெறுப்பவரல்ல. ஒன்றை அதிகமதிகமாக விரும்புபவனே அதைப் பற்றி அதிகமதிகமாகப் பேசுவானே யொழிய அதை வெறுப்பவன் அதைப் பற்றி வாயெடுத்தும் பேசவே மாட்டான்.

ஒருவன் ஒரு பொருளை விரும்பி அதனை வாங்க நாடின் அதனை விலை குறைத்து வாங்குவதற்காக அதைப் பற்றிக் குறைவாகவே விற்பனையாளரிடம் கூறுவான். அது போன்று உள்ளது உம் கூற்று. அந்த ஒரு பொருள் தேவையில்லை யென்றால் ,பொருளுக்கு உரிமையாளன் தானே அதனை வேண்டுமென்றே கீழே போட்டு உடைப்பான்" என்று கூறிய அவர்கள்,

"ஒருவன் இறைவனைத் துதிப்பதைவிட அதிகமாக ஒன்றின் மீது ஆசை கொள்ளின் அவ்வாசை அவனை வழி கெடுத்துவிடும்" என்ற கருத்துப் பொதிந்த நபிமொழி ஒன்றைக் கூறினர்.

ஒரு நாள் சுப்யான் தௌரீ, அபூஜஃபர் பின் சுலைமானை நோக்கி, "வாருங்கள்; நாம் அந்த ஆசிரியையிடம் செல்வோம். அவரிடம் சென்று சற்று நேரம் உரையாடி விட்டு வந்தால் தான் எனக்கு மனச் சாந்தி ஏற்படுகிறது" என்று கூறினார்.

அவர்கள் இருவரும் ராபியா (ரஹ்) அவர்களின் சிறு குடிலுக்கு வந்ததும் சுப்யான் தௌரீ தம் கைகளை உயர்த்தி, "இறைவனே! நான் இவ்வுலக மாயைகளை விட்டும் உன்னிடம் காவல் தேடுகிறேன்" என்று கூறினார்.

அது கேட்ட ராபியா (ரஹ்) அவர்கள் அழுதுவிட்டார்கள். அழுவதற்கான காரணத்தை சுப்யான் தௌரீ வினவியபொழுது, "தாங்கள் தாம் நான் அழுவதற்கான காரணமாகும்" என்று விடையிறுத்தனர் ராபியா.

'எவ்வாறு?' என்று சுப்யான் தௌரீ வினவிய பொழுது,

"உலக மாயைகளை விட்டும் விடுதலை பெறுவதென்பது உலகிலுள்ள பொருள்களை 'தூ' வெனத் தூக்கி எறிவதாகும். ஆனால் தாங்கள் அவற்றால் தங்களையே தாங்கள் மாசுறச் செய்து கொண்டிருக்கும்பொழுது எவ்வாறு தாங்கள் உலக மாயைகளை விட்டும் விடுதலை பெறுவது?" என்று வினவினர் ராபியா.

அதன் பின் அவர்கள் சுப்யான் தௌரீ அவர்களை நோக்கி, "தங்களுக்கோ அதிக வாணாள் உள்ளது. அது சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டே வந்து இறுதியாக ஒன்றுமே இல்லாது போய் விடும். தாங்களோ அறிஞர். இதனை விளங்கிக் கொள்ளுங்கள்" என்று கூறினர்.

மற்றொரு நாள் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, "இவ்வுலகம் எத்தனை அழகாக இருந்தாலும் துச்சமாகக் கருதுங்கள். அவ்விதம் கருதுவதே மிகவும் இன்பம் பயப்பதாகும்" என்று கூறினர்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 47

( அசரீரி )



இன்று நண்பர் ஒருவர்: "உங்களுடைய "ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள்" தொடரில், அநேக சூஃபியாக்களுக்கு இறைவன் புறத்திலிருந்து அசரீரி வருவதாக சுட்டிக்காட்டி இருக்கிறீர்கள். நல்லது அவர்களுக்கு அசரீரி வரட்டும். அது மாதிரி அசரீரி இப்பொழுதெல்லாம் யாருக்கேனும் வருகிறதா ? அப்படியே தனக்கு வந்ததாக யாரும் சொன்னால் நம்பவா முடிகிறது ? அட , நம்மால் நம்பத்தான் முடியுமா ?

உங்கள் விளக்கம் எதுவாக இருந்தாலும் முகநூலில் விஞ்ஞானத்தின் மூலம் அசரீரி நிரூபித்து பதிவு ஒன்று போடுங்களேன்" என்றார்.

நண்பர் சுன்னத்துல் ஜமாத்தைச் சேர்ந்தவர்தான். இத்தொடரின் 24 பதிவான " தஸவ்வுப் ஸூஃபி " பதிவைப் பற்றி ஒரு மணி நேரமாக கால் கடுக்க நின்று பாராட்டியவர்தான்.

சரி, அசரீரியைப் பற்றி விஞ்ஞான நிரூபணத்தின் மூலம் சொல்றேன்.

முயூனிச்சில் ரிச்னா விடுதியில் அறிதுயில் நிகழ்ச்சி (மெஸ்மெரிஸம்) ஒன்றை ஃப்ரான்டீர் ஸ்ட்ரொபல் (Fronter Strobel) என்பவர் ஏற்பாடு செய்திருந்தார். இந்த டெலிபதி (தொலைவிலுணர்தல்) மனித வாழ்வில் தொலைவிலுணர்தல் மூலமாகத் தொடர்பு கொள்ளுதல் சாத்தியமே என்பதை விஞ்ஞானம் மூலம் அறிந்திருக்கிறோம் அல்லது அனுபவ ரீதியாக உணர்ந்திருக்கிறோம்.

இந்நிகழ்ச்சி வானொலி நிகழ்ச்சியில் குறுக்கிட்டது என்பதற்காக 1950 டிசம்பரில் அந்த அறிதுயிலை நிகழ்த்துபவருக்கு எதிராக பவேரியன் (ஜெர்மானிய) அதிகாரிகள் வழக்குத் தொடர்ந்தனர்.

காரணம் ?

நடந்தது இதுதான். அறிதுயில் நிகழ்த்தும் ஃப்ரான்டீர் ஸ்ட்ரொபல் அங்கு அமர்ந்திருந்த ஒரு பார்வையாளரிடம் ஒரு சீட்டைக் கொடுத்து அதில் உள்ள எண்ணைக் குறித்துக் கொள்ளும்படி கூறினார். அவ்வளவு தான். அந்தப் பார்வையாளரிடமோ வேறு யாரிடமோ சீட்டிலுள்ளதைப் பற்றி மேற்கொண்டு விவரங்களை அவர் வெளிப்படுத்தவில்லை.

அந்தச் சீட்டு விவரங்களையும் அதில் எழுதப்பட்ட எண்ணையும் குறித்து அப்போது வானொலியில் செய்தி வாசித்துக் கொண்டிருந்த அறிவிப்பாளருக்குத் தொலைகடத்தல் செய்யப்போவதாகவும் தெரிவித்தார்.

சில நொடிகளுக்குப் பிறகு வானொலி அறிவிப்பாளர் ரிச்னா விடுதித் துருப்புச்சீட்டு அதில் எழுதப்பட்ட எண் குறித்து ஏதேதோ கூறி தடுமாறும் குரலில் பேசியதைப் பார்வையாளர்கள் கேட்டு அதிர்ச்சியடைந்தனர் . இந்த அறிதுயில் சோதனையில் பங்கேற்ற பார்வையாளர் தம் மனதில் குறித்திருந்த சீட்டு விவரங்களும் அந்த எண்ணும் தாம் கூறியது என உறுதி செய்தார்.

வானொலி செய்தி அறிவிப்பாளரின் குரலில் பீதி தெரிந்தது. எனினும் உளறலைத் தொடர்ந்து செய்தி வாசிப்பதை நிறுத்தாமல் தொடர்ந்தார். இதற்கிடைய வானொலியைக் கேட்டுக்கொண்டிருந்த நூற்றுக் கணக்கானோர் தவறு நடந்தது பற்றி வானொலி நிலையத்தைத் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டு விசாரிக்கத் தொடங்கினர்.

அந்தச் சீட்டும் சொற்களும் செய்தியோடு தொடர்புடையதாக இல்லை என்பதைப் புரிந்து கொண்ட மக்களில் பலர் செய்தி வாசிப்பாளர் குடித்திருந்ததாகக் குற்றம் சாட்டினர். மருத்துவர் உடனே அழைக்கப்பட்டார். பரிசோதித்த மருத்துவர், செய்தி வாசிப்பாளர் அந்த ஒரு நொடியில் பதட்டமான மனநிலையில் இருந்ததாகத் தெரிவித்தார்.

தொடர்ந்து செய்தி வாசிக்கையில் திடீரெனக் கடும் தலைவலியால் துன்புற்றதாகவும் அதன்பின் என்ன நடந்ததெனத் தனக்கு ஏதும் தெரியாதெனவும் செய்தி வாசிப்பவர் தெரிவித்தார்.

வெகுதூர இடைவெளியில் ஒருவருக்கொருவர் விலகி இருக்கும் இருவர் தங்களுக்குள் தொடர்புகொள்ளக் கண்ணுக்குத் தெரியாத எந்த இணைப்பும் இல்லாத நிலையில், டெலிபதி மூலமாக ஒருவரின் எண்ணங்களை மற்றவருக்குக் கடத்த முடியுமெனில் இத்தகைய தொடர்பு பிரபஞ்சத்தின் அதிபதியான இறைவனிடமிருந்து மனிதருக்கு அதுவும் சூஃபியாக்களுக்கு வருவதை நினைத்துப் பார்க்கவே முடியாது என்று ஏன் கருதவேண்டும் ?

ஒருநாள் இறந்து போக வேண்டிய மனிதர்களே இத்தகைய டெலிபதி திறன் கொண்டிருப்பார்கள் எனில் கண்களுக்குப் புலனாகும் ஊடகம் எதுவும் இல்லாமல் இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே தொடர்பை உருவாக்க முடியும் என்பதையும் திரிபுகளோ விடுபடல்களோ இல்லாத முழுமையான சிந்தனையை ஒரு மனிதரிடமிருந்து மற்றொரு மனிதருக்குக் கடத்த முடியும் என்பதையும் நாம் புரிந்துகொள்வதில் சிரமம் எதுவும் இல்லை.

இறை சொல்லாடலில் இத்தகைய தொடர்புக்கான சரியான சொல் 'இறைவெளிப்பாடு' (அசரீரி) என்பதாகும். அடிப்படையில் இறை வெளிப்பாடு என்பதும் ஒருவகைப் பிரபஞ்ச டெலிபதியாகும்.

உதாரணமாக... வலசை என்னும் புலம்பெயரும் பறவைகள் கண்டம் விட்டு கண்டம் தாண்டி இனச் சேர்க்கை செய்து முட்டையிட்டு குஞ்சு பொரித்து அக்குஞ்சையும் கூட்டிக் கொண்டு பருவநிலை மாறும்போது நன்கு வகுக்கப்பட்ட பாதையிலேயே பறந்து புறப்பட்ட இடத்திற்கே திரும்புகின்றன.

ஒரு பயணத்தைத் தொடங்குவதற்கு முன்னர் செல்லும்பாதை, சேருமிடம் ஆகியவை குறித்த GPS தகவல்கள், வழிகாட்டுதல் முதலியவை மனிதனுக்குத் தேவைப்படுகின்றன. ஆனால் பறவைகளோ மிக விரைவாகப் பறந்து இலக்கு தவறாமல் சேருமிடத்தை அடைகின்றன.

வெகுதூரம் நீண்டு பரந்து கிடக்கும் கடல் ஆறுகள் முதலிய நீர்நிலைகளைக் கூடுமானவரை தவிர்க்க நிலப்பகுதிக்கு மேலேயே தங்களின் ஆகாயப் பயணம் அதிக நேரம் இருக்கும்படி பாதையை அமைத்துக் கொள்கின்றன.

இந்த வலசைப் பயணத்திற்காக அவை தகவல் சேகரிப்பதில்லை; பகிர்வதுமில்லை. மனிதனைப் போல ஆராய்ச்சி எதனையும் மேற்கொள்வதுமில்லை; தகவல்களைப் பரிமாறிக் கொள்வதுமில்லை.

பறவைகளுக்கு மனித சக்திக்கு அப்பாற்பட்ட புற ஆதாரத்திலிருந்து வழிகாட்டுதல் இருக்கும் என்பதை விஞ்ஞானம் நிரூபித்திருக்கிறது.

தேனீயின் வாழ்க்கை திட்டமிட்ட ஒழுங்குடன் இருப்பதற்கு இறைவன் அருளிய குர்ஆன் வசனம் உள்ளது.

وَاَوْحٰى رَبُّكَ اِلَى النَّحْلِ اَنِ اتَّخِذِىْ مِنَ الْجِبَالِ بُيُوْتًا وَّمِنَ الشَّجَرِ وَمِمَّا يَعْرِشُوْنَۙ

உங்களது இறைவன் தேனீக்கு மலைகளிலும், மரங்களிலும், மக்கள் கட்டும் கட்டிடங்களிலும் கூடுகளை அமைத்துக் கொள்ளும்படி (வஹீ ) அறிவூட்டினான். (குர்ஆன் : 16:68)

பறவைகள், தேனீக்கள் போன்றவற்றிற்குக் கூட இறைவன் புறத்திலிருந்து செய்திகள் அசரீரியாகவோ , மன உதிப்பாகவோ வரும்போது, மனிதன் அதுவும் தன்னுடைய கலீபா என்னும் பிரதிநிதித்துவம் பெற்ற மனிதருக்கு அசரீரியாக செய்தி வருவதில் உங்களுக்கு என்ன சந்தேகம் வருகிறது ?

நிச்சயமாக அல்லாஹ் வெகு நுட்பமான அறிவுடையவனும், அனைத்தையும் நன்கு தெரிந்து வைத்திருப்பவனாகவும் இருக்கிறான். (குர்ஆன் : 31:16)

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 48

( யார் துறவி ? )

ஒருதடவை ஹாத்திம் அஸம் (ரஹ்) அவர்கள் பகுதாதுக்கு வந்தபொழுது அவர்களின் வருகை பற்றிய செய்தி ஒரு நொடியில் அம்மாநகரம் முழுவதும் காட்டுத்தீ போல் பரவலாயிற்று.

எவர் வாயில் பார்த்தாலும், "குராஸான் நாட்டுத் துறவி வந்துள்ளார்; குரா ஸான் நாட்டுத் துறவி வந்துள்ளார்" என்ற வார்த்தைகளே அடிபடத் துவங்கின.

இது கலீபாவின் செவிப் பட்டதும் அவருக்கும் அவர்களைக் காண வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டது. அவர்களைத் தம் அரண்மனைக்கு அழைத்து வருமாறு ஆள் அனுப்பினார். அவ்வாறே அவர்களும் வந்தார்கள்.

கலீபாவைக் கண்டதும், "துறவியாகிய கலீபாவே" என்று அவரை அழைத்துப் பேச்சைத் துவங்கினார்கள். அப்பொழுது கலீபா இடைமறித்து "நான் துறவியல்லவே. உலகம் முழுவதும் என் ஆட்சியின் கீழ் இருக்கும் பொழுது நான் எவ்வாறு துறவியாவேன் ? தாங்களன்றோ துறவி" என்று கூறினார்.

அப்பொழுது அவர்கள் கலீபாவை நோக்கி, "நான் துறவி யல்ல; இறைவன் தன் திருமறையில் 'உலக வாழ்வு மிகவும் அற்பமானது" (குர்ஆன் 4:77) என்று கூறுகின்றான்.

தாங்களோ அந்த அற்பமானதைக் கொண்டு மன நிறைவுடன் உள்ளீர்கள். ஆதலின் தாங்கள் தாம் ஒரு துறவியே யன்றி நானல்ல. நானோ இவ்வுலகைத் தந்த போதினும் வாங்கிக்கொள்ளாது அவன் மீது பேராசை பிடித்தவனாயுள்ளேன். அவ்விதமிருக்க நான் எவ்வாறு துறவியாவேன் ? " என்று கூறினர்.

இனிது இனிது ஏகாந்தம் இனிது என்பதையே ஹாத்திம் அஸம் (ரஹ்) அவர்கள் தங்களின் தாரக மந்திரமாகக் கொண்டிருந்தனர். எனவே, எப்பொழுதும் இறை சிந்தனையில் மூழ்கித் தனித்திருப்பதையே பெரிதும் விரும்பி வந்தனர்.

ஒருநாள் கலீபா அவர்களைக் காண வந்தார். அவர்களுடன் சற்று நேரம் உரையாடிவிட்டு விடை பெறுங்கால் அவர், அவர்களை நோக்கி, "தங்களுக்கு, ஏதேனும் விருப்பமிருப்பின், கூறுங்கள், நிறைவேற்றித் தருகிறேன்" என்று கூறினார்.

அதற்கு அவர்கள் "நீர் என்னைப் பார்க்காமலும், நான் உம்மைப் பார்க்காமலும் தனித்து இருக்க வேண்டும் என்பதே. என் விருப்பம். இதனை நீர் எனக்கு நிறைவேற்றித் தந்தால் போதும்''என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 49

( "என்னுடைய இறைவனைப் பற்றி எனக்குக் கூறுங்கள்" )

பிஷ்ர் இப்னுல் ஹாரித் (ரஹ்) அவர்களின் மகாத்மியத்தைத் துவக்கத்தில் பெரும்பாலோர் உணரவில்லை. ஆனால் அதனை இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்கள் நன்கு உணர்ந்தார்கள். எனவே அவர்களின் இருப்பிடம் சென்று அவர்களை அடிக்கடி சந்திக்கும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார்கள்.

இதைக் கண்ட இமாம் ஹன்பல் அவர்களின் மாணவர்கள், அவர்களை நோக்கி, "தாங்களோ ஹதீது, பிக்ஹு முதலான மார்க்க கலைகளில் ஈடு இணையற்ற பேரறிஞராக இருக்கும்பொழுது, எவரோ ஒருவரைப் போய்ச் சந்தித்து அளவளாவி வருவது தங்களுடைய தகுதிக்கு உவந்ததாக எங்களுக்குத் தெரியவில்லையே" என்று கூறியபொழுது,

"தாங்கள் கூறிய மார்க்க கலைகளிலெல்லாம் நான் அவரைவிட அதிகம் அறிந்தவன்தான். அதில் ஐயமில்லை. ஆனால் அவரோ இறைவனை என்னைவிட அதிகம் அறிந்துள்ளாரே. இஃது உங்களுக்குத் தெரியவில்லையே" என்று பதிலிறுத்தார்கள்

இமாம் ஹன்பல் அவர்கள் பிஷ்ர் (ரஹ்) அவர்களைப் பின் தொடர்ந்து செல்லும் பொழுதெல்லாம் "என்னுடைய இறைவனைப் பற்றி எனக்குக் கூறுங்கள்,எனக்குக் கூறுங்கள் " என்று அவர்களை வேண்டிக் கொண்டே செல்வார்கள்.

அது மட்டுமல்லாது இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்களிடம் எவரேனும் ஃபிக்ஹ் பற்றிய ஐயங்களைக் கேட்பின் அவற்றைத் தெளிவுபடுத்தும் அவர்கள், ஆன்மீக விஷயங்கள் (ஹகாயிக்) பற்றிய ஐயங்களை வினவின் அவரை பிஷ்ர் (ரஹ்) அவர்களிடமே செல்லுமாறு கூறிவிடுவார்கள்.

இறைவனையே நேசித்து இறை நேசத்தையே விரும்பி இறை நேசச் செல்வராய் வாழ்ந்து வந்த அவர்கள் இறப்புப் படுக்கையில் கிடக்குங்கால் ஒருவர் அவர்களிடம் வந்து தம் வறிய நிலையை எடுத்துரைத்த பொழுது,

அவருக்கு வழங்க, தாம் அணிந்திருந்த சட்டையைத் தவிர்த்து வேறொன்றுமில்லாததைக் கண்ட அவர்கள், அச்சட்டையைக் கழற்றி அவரிடம் கொடுத்து தாம் இரவல் சட்டை வாங்கி அணிந்து கொண்டு அந்நிலையிலேயே உயிர் நீத்தார்கள். இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 227 ஆம் ஆண்டிலாகும். அப்பொழுது அவர்களுக்கு வயது 77.

அவர்கள் உயிரோடிருந்த வரையில் பிஷ்ர் இப்னுல் ஹாரித் (ரஹ்) அவர்களின் பாதங்கள் அசுத்தப்படக் கூடாதென்று கருதி மிருகங்கள் கூட பகுதாதின் தெருக்களில் சாணமிடவில்லை என்றும்,

ஓரிரவு ஒருவன் தன் கோவேறு கழுதையை அந்நகர வீதி ஒன்றில் நடத்திச் சென்ற பொழுது, அது சாணமிட்டதைக் கண்டு, இன்று பிஷ்ர் ஹாபி (ரஹ்) அவர்கள் இறந்துவிட்டார்கள் என்று அவன் கூறியதாகவும் பின்னர் விசாரித்துப் பார்க்கும்பொழுது உண்மையில் அவ்விதமே இருந்ததென்றும் கூறுவர்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 50

(உன் அழகு என் கண்களில் உள்ளது. உன் புகழ் (திக்ர்) என்

வாயிலுள்ளது. உன் மீதுள்ள காதல் என் இதயத்தில் உள்ளது. இவ்வாறு இருக்கும் பொழுது நீ எங்குப்போய் ஒளிவாய்?)

ஒருநாள் அபூ பக்ர் ஷிப்லி (ரஹ்) அவர்கள் காட்டின் வழியே சென்று கொண்டிருந்த பொழுது, அங்கு புஹ்லுல் தானா மஜ்னூனைக் கண்டனர்.

அவரின் ஒரு கையில் மூங்கிலாலான ஒரு குதிரை இருந்தது. மற்றொரு கையில் பிரம்பு ஒன்று இருந்தது. அவர் ஓடிக் கொண்டிருந்தார். அவரை நிறுத்தி, "எங்கே செல்கின்றீர்?' என்று அவர்கள் வினவினார்கள்.

" அல்லாஹ்விடம் " என்று அவர் பதில் கூறினார்.

சற்று நேரம் கழித்து, அவர் திரும்பி வந்தார். அவர் கையிலிருந்த மூங்கிலாலான குதிரை உடைந்திருந்தது. அவருடைய கண்கள் அழுது, அழுது சிவந்திருந்தன.

"என்ன நேர்ந்தது? ஏன் அழுகிறீர்?' என்று அவர்கள் வினவினார்கள். அதற்கு அவர்,

"நான் அல்லாஹ்வின் திருமுன், அவன் என்னையும் தன் அடியார்களில் ஒருவனாக ஏற்றுக் கொள்ளட்டும் என்று எணணிய வண்ணம் நின்று கொண்டிருந்தேன். ஆனால் அவன் என்னை அறிந்த பொழுது, ''என் முன் நிற்காதே' என்று கூறி, என்னை விரட்டி விட்டான்" என்று கூறினார்.

மற்றொரு நாள் அபூ பக்ர் ஷிப்லி (ரஹ்) அவர்கள் தெருவழியே சென்று கொண்டிருந்த பொழுது, புஹ்லுல் தானா மஜ்னூனை சிறுவர்கள் கல்லாலெறிந்து கொண்டிருந்தார்கள். சிறுவர்கள் எறிந்த கற்களில் ஒன்று அவரின் தலையில் பட்டு இரத்தம் வடிந்து கொண்டிருந்தது. அது கண்டு அவர் மீது இரங்கிய அவர்கள். சிறுவர்களை விரட்டினார்கள்.

ஆனால் சிறுவர்களோ, ஓடுவதற்கு மாறாக அவர்களை அணுகி, “ஷைகு அவர்களே! எங்களை, எங்களின் போக்கில் விட்டு விடுங்கள். நாங்கள் அவரை இக்கணமே கொன்றொழித்து விடுகிறோம்" என்று கூறினர்.

"ஏன் அவர் மீது உங்களுக்கு இத்துணை ஆத்திரம்?" என்று வினவினார்கள் அவர்கள்.

''அவர் ஒரு காஃபிர்" என்றார்கள் அவர்கள் பற்களை நெறு நெறெனக் கடித்துக் கொண்டு,

"எவ்வாறு அவரைக் காஃபிர் என்று கூறுகின்றீர்கள்?" என்று வியப்போடு வினவினார்கள் அவர்கள்.

"அவர், தாம் இறைவனைக் கண்டதாகவும், அவனுடன் உரையாடியதாகவும் கூறுகிறார். இது குஃப்ரியத்தல்லவா?" என்றார்கள் அவர்கள்.

உடனே ஷிப்லீ (ரஹ்) அவர்கள், அச்சிறுவர்களை நோக்கி, "சற்றுப் பொறுமையாயிருங்கள். நான் இது பற்றி அவரிடம் விசாரித்து வருகிறேன்." என்று கூறிவிட்டு அவரிடம் சென்றனர்.

புஹ்லுல் தானா மஜ்னூன் அவரோ தம்மோடு பேசிச் சிரித்துக் கொண்டிருந்தார். அந்த பேச்சோடு பேச்சாக அவர் தம்மை நோக்கி, "இந்தச் சிறுவர்கள் உம் பேரில் குற்றம் சுமத்தும் வண்ணம் நீர் நடந்து கொள்வது உமக்கு அழகா?" .என்று தன்னையே கேட்டுக் கொண்டிருந்தது ஷிப்லீ (ரஹ்) அவர்களின் செவியில் விழுந்தது

ஷிப்லீ (ரஹ்) அவர்கள் புஹ்லுல் தானா அவர்களை அணுகி, ''என் உடன் பிறந்தாரே! இந்தச் சிறுவர்கள் உம்மைப் பற்றி ஏதோ குறை கூறுகிறார்களே. அது உண்மையா?" என்று வினவினர்.

"என்ன குறை கூறுகிறார்கள்?" என்று அவர்கள் வினவினர்.

"நீர் இறைவனைக் கண்டதாகவும், அவனுடன் உரையாடியதாகவும் கூறினீராமே. அது உண்மையா?" என்று வினவினர்.

அது கேட்ட அவர் பெரும் சப்தமிட்டு அலறி, ''ஷிப்லியே! எவன் தன் காதலால் என்னைப் பணிவுள்ளவனாக்கி, தன் தொலைவினால் என்னைப் பித்துப் பிடித்தவனாகச் செய்தானோ அவன் மீது ஆணையாகச் சொல்கிறேன். அவன் ஒரு நொடி என்னை விட்டு மறைந்தாலும், நான் பிரிவாற்றாமையால் துகள் துகளாகச் சிதறுண்டு போவேன்" என்று

"ஜமாலுக ஃபீ அய்னீ வ ஃதிக்ருக ஃபீ ஃபம்யீ

வ ஹுப்பிக ஃபீகல்பீ ஃபஅய்ன தயீபு"

(உன் அழகு என் கண்களில் உள்ளது. உன் புகழ் (திக்ர்) என்

வாயிலுள்ளது. உன் மீதுள்ள காதல் என் இதயத்தில் உள்ளது. இவ்வாறு இருக்கும் பொழுது நீ எங்குப்போய் ஒளிவாய்?)

என்று பாடிக் கொண்டு, அவ்விடத்தை விட்டு ஓடிவிட்டார்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 51

( திருடன் மகானானார் )

நள்ளிரவு அப்பொழுது பல்க் நாட்டிலுள்ள ஓர் இல்லத்தில் ஒரு பெரியவர் அமைதியாக வீற்றிருந்து இறைவனைத் தியானித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது வீட்டின் ஒரு பகுதியில் ஏதோ கடகடவென்று சப்தம் கேட்டது. எலிதான் புகுந்து எதையும் உருட்டுகின்றதோ என்று எண்ணினார் அவர்.

ஆனால் சற்று நேரத்திற்குப் பின் கரிய உரு ஒன்று ஆங்கு ஒன்றும் கிடைக்காத ஏமாற்றத்தில், மெதுமெதுவாகத் திரும்பிச் செல்வதை அவரின் கண்கள் கண்டன. அவருக்கு அவன்மீது இரக்கம் சுரந்தது.

"இளைஞனே ! இங்கே வா. வந்து இந்த வாளியை எடுத்துச் சென்று கிணற்றிலிருந்து தண்ணீர் மொண்டு 'உளூச்' செய்து தொழு. எனக்கு ஏதேனும் அன்பளிப்பு வரின் நான் உனக்கு அதனைத் தருகிறேன். நீ என்னுடைய இல்லத்திலிருந்து வெறுங்கையுடனும்,ஏமாற்றத்துடனும் திரும்பிச் செல்ல வேண்டியதில்லை" என்று கூறினார்.

அவரின் இந்தக் கனிவான மொழிகள் அந்த இளைஞனின் உள்ளத்தைக் கவர்ந்தன. அவரின் முன் பெட்டிப் பாம்பென அடங்கி, அவர் கூறியவண்ணமே செய்தான் அவன்.

பொழுது புலர்ந்தது. ஒருவர் அப்பெரியவரை அணுகி, அவரின் முன் தம் அன்புக் காணிக்கையான நூறு பொற்காசுகளை வைத்தார். அப்பெரியவர் அவற்றைக் கையாலும் தீண்டவில்லை. அருகில் வணக்கத்தில் ஈடுபட்டிருந்த அந்த இளைஞனை நோக்கி,

"இளைஞனே! இவற்றை எடுத்துக் கொள். நீ இன்றிரவு இறைவனை வழுத்தியதற்காக உனக்கு வழங்கப்படும் அன்பளிப்பாகும் இவை" என்று கூறினார்.

அது கேட்டு அந்த இளைஞன் மகிழ்ச்சியுறவில்லை. அதற்கு மாறாக அவனுடைய உடலெல்லாம் அதிர்ந்தது. கண்களிலிருந்தும் கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடியது.

"நான் வழி தவறிச் சென்று விட்டேன். ஓரிரவு இறைவனை வழுத்தியதற்காக எனக்கு இத்தகைய அன்பளிப்பை வழங்கினான் இறைவன். நான் எப்பொழுதுமே அவனை வழுத்தி வந்தால், அவன் எத்தகைய அன்பளிப்பை வழங்குவான் " என்று கூறிக் கதறினான்.

அவனுடைய வாழ்விலே ஒருவிதப் புதுத் திருப்பம் ஏற்பட்டது.அப்பொற்காசுகளை அவன் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை.அப்பெரியவரின் கால் மலர்களிலே தன் கண்களை ஒற்றித் தன்னை மன்னித்து ஆட்கொள்ளுமாறு வேண்டினான். அவ்விதமே அவரும்

செய்தார். பலன், கொள்ளை அடிக்க வந்த அவர் விரைவில் இறைவனின் பேரருளைக் கொள்ளை கொண்ட மாபெரும் மகானாக விளங்கினார்.

இத்தகைய மாற்றத்தைத் திருட வந்த ஒருவரின் வாழ்விலே ஏற்படுத்திய அப்பெரியவர் - அஹ்மத் இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள், பல்க் நாடு ஈன்றெடுத்த மாபெரும் இறைநேசச் செல்வராகத் திகழ்ந்தார்கள்.

ஹாத்திம் அஸம் (ரஹ்) அவர்களின் மாணவராகவும், அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களின் உற்ற நண்பராகவும் விளங்கிய அவர்களுக்கு, ஆயிரம் மாணவர்கள் இருந்தார்கள் என்றும், அவர்கள் அனைவரும் நீரின் மீது நடக்கவும், விண் மீது பறக்கவும் செய்தார்கள் என்றும் கூறுவர்.

இவர்கள் ஓர் அவ்த்தாத்' ஆவர் என்று இறைநேசச் செல்வர் அனைவரும் ஒருமித்துக் கூறுகின்றனர். அகிலத்தின் ஆணிமுளையாக விளங்கும் குத்பென்றும் இவர்களைக் கூறப்படுகிறது.

எனினும் ஒரு தடவை இவர்களிடம், 'இப்பொழுது உயிர்வாழ்ந்து கொண்டிருக்கும் 'குத்பு யார்?' என்று வினவப்பட்ட பொழுது இவர்கள் தம்மைக் கூறாது ஜுனைத் (ரஹ்) அவர்களைச் சாடையாகக் குறிப்பிட்டார்கள்.

ஆரம்பத்தில் அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள் நாற்பது இறைநேசச் செல்வர்களுக்குப் பணிபுரிந்து அவர்களிடமிருந்து ஆன்மீகக் கல்வியைப் பயின்று 'சாஹிப் தம்கீன்' என்ற உயரிய பதவியை எய்தப் பெற்றனர்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 52

( 'அல்லாஹ்' அல்லாஹ் ' )

மாபெரும் மகாத்மாவாக, இறைக் காதலில் மூழ்கித் திளைத்த முதுபெரும் இறைநேசச் செல்வராக விளங்கிய அபுல் ஹுஸைன் நூரி (ரஹ்) அவர்கள் அல்லாஹ்வைப் பற்றி அறிந்த படித்தரங்கள் மிகவும் மகத்துவமானவை.

ஒரு நாள் தெருவழியே சென்று கொண்டிருந்த பொழுது ஒரு குருடர் 'அல்லாஹ், அல்லாஹ்' என்று அலறிக் கொண்டிருந்தார்.

அப்பொழுது நூரி (ரஹ்) அவர்கள் அவரை அணுகி, "நீர் அல்லாஹ், அல்லாஹ் என்று அலறிக் கொண்டுள்ளீரே. உமக்கு அல்லாஹ்வைப் பற்றி என்ன தெரியும்? என்று கூறிவிட்டு,

(அவன்தான் அருள் மிக்க) அர்ரஹ்மான் ; ஆகவே அறிந்தவர்களிடம் அவனைப் பற்றி கேட்டு தெரிந்து கொள்ளுங்கள் (குர்ஆன் 25 : 59 ) என்ற வசனத்தை ஓதி விட்டு,

அவனைப் பற்றி உமக்கு உண்மையில் தெரியவரின் நீர் உயிரோடிருப்பீரா, என்ன?" என்று கேட்டு விட்டு " அ..ல்.... லா....ஹ்..." என்ற ஒற்றை வார்த்தையை அவரின் காதில் சொன்னார்கள்.

இவ்வளவுதான் நூரி (ரஹ்) அவர்கள் கூறினார்கள்

அந்த ஒற்றை வார்த்தை அவருக்குள் பேரின்பப் போதை குருடரின் தலைக்கேறி, குருடர் அவர்கள் தன்னிலை மறந்தார்கள். "அல்லாஹ்" என்ற பெயர் நாமம் அவரின் இதயத்தினுள் பொன்னால் பொறிக்கப்பட்டு விட்டது.இந்நிலையிலேயே அவர்கள் காடு, கழனிகளெல்லாம் அலைந்து திரிந்தார்கள்.

அப்பொழுது காடுகளில் வளர்ந்திருந்த முட்செடிகள், அவர்களின் கால்களில் குத்தியதோடு, உடலையும் கிழித்தன. அதன் காரணமாக. அவர்களின் உடலிலிருந்து குருதி சிந்தியது. எனினும், அது அவர்களுக்குத் தெரியவில்லை. மண்ணில் விழுந்த குருதிச் சொட்டுகள் 'அல்லாஹ்' அல்லாஹ் ' என்ற எழுத்து வடிவம் பெற்றன !

காடுகளிலும் கழனிகளிலும் உணர்வின்றி, உணவின்றி அலைந்து திரிந்ததன் காரணமாக, அவர்களின் உடலும் தளர்ந்தது. அவர்கள் மயங்கிக் கீழே வீழ்த்தார்கள்.

அவர்கள் கானகத்தின் நடுவே மயக்கமுற்று வீழ்ந்துகிடப்பதைக் கேள்வியுற்ற அவர்களின் நண்பர்கள் ஆங்குச் சென்று அவர்களை, அவர்களின் இல்லம் எடுத்து வந்தனர்.

அவர்களின் முடிவு அண்மிவிட்டது என்பதை உணர்ந்த அவர்கள், அவர்களிடம் இஸ்லாத்தின் மூலமந்திரமாகிய 'வணக்கத்திற்குரியோன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை' என்பதை எடுத்தியம்ப,

"நான் ஏன் அதனைக் கூற வேண்டும்? நான் அங்குத் தானே இருந்து கொண்டிருக்கிறேன் " என்று ஈனக்குரலில் பதிலுரைத்தார்கள்.

ஆம் அவர்கள் குருடர்தான் ஆனாலும் அககக்கண் திறந்தவர்கள் அம்மேதகை என்பதை நண்பர்கள் உணர்ந்து கொண்டார்கள்.

அத்துடன் அவர்களின் மூச்சும் நின்றது. வாழ்வும் முடிவுற்றது

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 53

("என்னை கொன்றொழியுங்கள் ! அதற்கான நற்பலனைப் பெறுவீர்கள்")

ஒரு நாள் மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் மன்சூரின் பள்ளி வாயிலுக்குச் சென்று. ''மக்களே! வாருங்கள் நான் ஒரு செய்தியைக் கூறப் போகிறேன் என்று பெரும் சப்தமிட்டு முழங்கினார்கள்.

ஒரு நொடியில் பெருங் கூட்டம் திரண்டு விட்டது. அதிலே அவர்களை நேசிப்பவர்களும், வெறுப்பவர்களும் புகழ்பவர்களும், குறை கூறுபவர்களும் நின்று கொண்டிருந்தனர்.

அப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் அக்கூட்டத்தினரை நோக்கி, "இறைவன் என்னை மார்க்கத்திலிருந்து வெளியேற்றி விட்டான். ஆதலின் என்னைக் கொன்றொழியுங்கள்,கொன்றொழியுங்கள்" என்று கத்தினார்கள்.

அது கேட்டு கூட்டத்திலிருந்த பலர் 'கோ' வென்று அலறிவிட்டனர். ஆனால் சூஃபி அப்துல் வதூத் என்பவர், அவர்களை நெருங்கி "ஷைகு அவர்களே! தாங்களோ கலிமாச் சொல்கிறீர்கள், தொழுகிறீர்கள். நோன்பு நோற்கிறீர்கள். இத்தகைய ஒருவரை நாங்கள் எவ்வாறு கொன்றொழிப்பது?" என்று வினவினார்கள்.

அதற்கு அவர்கள் "அவற்றிற்கும், என்னைக் கொன்றொழிப்பதற்கும் யாதொரு தொடர்பும் இல்லை. ஆதலின், என்னை கொன்றொழியுங்கள் ! நீங்கள் அதற்கான நற்பலனைப் பெறுவீர்கள் நானும் அமைதி பெற்று விடுவேன். அது உங்களுக்கு புனிதப் போராக இருக்கும். எனக்கோ உயிர்த் தியாகமாக இருக்கும்" என்று கூறினார்.

"என் அன்பு மகனே! என்னைச் சிலர் 'வலீ' என்றும், சிலர் 'காஃபிர் என்றும் கூறுகிறார்கள். என்னைக் 'காஃபிர்' என்று கூறுபவர்களை நான் விரும்புகிறேன். அல்லாஹ்வும், அவர்களையேதான் விரும்புகிறான் என்று அவர்கள் என்னிடம் கூறினார்கள்.

"அது கேட்ட நான், 'ஷைகு அவர்களே! ஏன் இவ்வாறு கூறுகிறீர்கள்?" என்று வினவினேன்.

"அதற்கு அவர்கள் 'என்னை மதிப்பவர்கள் என்னை 'வலீ ' என் கூறுகிறார்கள். மற்றவர்களோ மார்க்கத்தின் மீது தங்களுக்குள்ள பக்தியின் காரணமாக, என்னைக் 'காஃபிர்' என்று கூறுகிறார்கள். இரண்டும் ஒன்று தானே.

அல்லாஹ்வின் படைப்பினங்களில் ஒன்றாகிய என்னை மதிப்பவர்களை விட, மார்க்க பக்தியுள்ளவர்களையே நானும் விரும்புகிறேன், அதையே அல்லாஹ்வும் விரும்புகிறான்.

"...இப்ராஹீமே ! நான் தூக்கிலிடப்பட்டு, என் உடல் எரிந்து சாம்பலாக்கப்படும் நாளைப் பற்றி என்ன கூறுகிறீர் ? என்னைப் பற்றிய வரையில் அதுவே என் வாழ்வில் மிகவும் மகிழ்ச்சிகரமான நாளாகும்" என்று கூறினார்கள்.

இவ்வாறு கூறிவிட்டு பள்ளி வாயிலை விட்டு வெளியே சென்றார்கள். எனினும், சூஃபி அப்துல் வதூத் அவர்களை விடவில்லை. அவர்களின் பின்னே சென்று,

''ஷைகு அவர்களே! தாங்கள் கூறியது எங்களுக்குப் பெரிதும் கவலையை அளிக்கிறது. தாங்கள் என்னதான் கூறுகிறீர்கள் என்பதை எங்களால் விளங்கிக்கொள்ள இயலவில்லை" என்று கூறினார்கள்.

அப்பொழுது அவர்கள், "மகனே! இப்பொழுது முஸ்லிம்களுக்கு மிகவும் அவசியமான, அவசரமான அலுவல் என்னவென்றால். என்னைச் சிரச்சேதம் செய்வதேயாகும். என்னுடைய இறப்பே, இஸ்லாமிய ஷரீஅத் சட்டத்தைத் தாங்கிப் பிடித்து காத்து நிற்கும்" என்று கூறினர்.

இதன்பின் அவர்களின் வாய், 'அனல் ஹக், அனல்ஹக்' என்று முழங்கலாயிற்று. வீட்டிலும், வீதிகளிலும், காட்டிலும், கடைத்தெருக்களிலும், அவர்கள் ஆனந்தப் பரவசமுற்ற நிலையில், 'அனல் ஹக், அனல் ஹக்' என்று முழங்கிக் கொண்டிருந்தார்கள்.

அது கேட்டு மக்களுக்கு இவையெல்லாம் என்னவென்றே விளங்க வில்லை. இவரை இனிமேல் இவ்வாறு விட்டு வைக்காது, சிறையிலடைத்தால், இவரின் பிதற்றல்களுக்கு ஒரு முடிவேற்படும்.

இல்லை யெனில் மக்களின் மனத்தையெல்லாம் இவர் மாசுபடுத்தி விடுவார் போலிருக்கிறது' என்று அவர்கள் எண்ணினார்கள். எனவே அவர்கள், அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸை அணுகி, அவரிடம் முறையிட்டார்கள்.

இதனை அமைச்சர், கலீபா அல் முகத்ததிர் பில்லாஹ்விடம் கூற அவர் உடனே ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைச் சிறை செய்யுமாறு ஆணை பிறப்பித்தார்.

ஆனால் அதற்கு முன்பே தம் சீடர் ஒருவர் தன் ஷைகு ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை பக்தாத்தை விட்டு வெளியேற்றி விட்டார்.

"மதுவோடு கண்ணீர் கலந்தாற் போன்று உன் ஆன்மா

என் ஆன்மாவோடு கலந்துள்ளது.

ஏதேனும் ஒன்று உன்னைத் தொடுமாயின்

அது என்னையே தொடுகிறது.

ஒவ்வொன்றிலும் நீ நானாகவே இருக்கிறேன்.

நான் நேசிக்கும் அவனும் நான் தான்.

என்னால் நேசிக்கப்படும் அவனும் நான் தான்.

என்னை நீ பார்க்கும் பொழுது அவனையே நீ பார்க்கிறாய்.

அவனை நீ பார்க்கும் பொழுது என்னையே நீ பார்க்கிறாய்"

என்று ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் வாய் பாடியது

இதன் பின் அவர்கள் நான்கு ஆண்டுகள், பல்வேறு இடங்களிலும் சுற்றித் திரித்தார்கள். இறுதியாக அவர்கள் ஹிஜ்ரி 301 ஆம் ஆண்டில் சூஸா வந்தபொழுது, காவல்துறை அதிகாரிகளால் கைது செய்யப்பட்டு, பக்தாது அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு அவர்கள் தற்காலிமாகக் கலீபாவின் அரண்மனையின் ஒரு பகுதியில் சிறை வைக்கப் பட்டார்கள்.

பின் தீர்ப்பு வழங்கப்பட்டது .

"....இப்ராஹீமே..! நான் தூக்கிலிடப்பட்டு, என் உடல் எரிந்து சாம்பலாக்கப்படும் நாளைப் பற்றி என்ன கூறுகிறீர் ? என்னைப் பற்றிய வரையில் அதுவே என் வாழ்வில் மிகவும் மகிழ்ச்சிகரமான நாளாகும்" என்று கூறினார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 54

( குத்பின் பெருமை )




உலகில் ஏக காலத்தில் பல எண்ணிக்கையுள்ள, பலவகை படித்தரங்கள் உடைய அவுலியாக்கள் - குதுபுமார்கள் - அப்தால்கள் - அவுத்தாதுகள் - நுகபாக்கள் - நுஜபாக்கள் என்ற பதவி உடையவர்கள், உலக முடிவு நாள்வரையில் இருந்தே வருவார்கள் என்றும்,

ஹகீகத்தில் ஈருலகையும் கண்காணிப்பவர்கள் அவர்கள் தானென்றும், அவர்களை முன்னிட்டே பலாய், முஸீபத்துகள் விலக்கப்படுவதாயும் ஹதீதுகள் பல காணப்படுகின்றன.

அன்னார் அனைவருக்கும் குத்பே அதிபராவார். அன்னாரை கௌது என்றும் சொல்லப்படும். இது பற்றிய ஆதாரங்கள் பல இருப்பினும் சிலவற்றை மட்டிலும் இங்கே பார்ப்போம்.

இறைவா என் மீது நபிமார்கள் நடந்து திரிந்தார்கள், அவர்களுக்குப் பிறகு நபிகள் பெருமான் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைச் சுமந்திருந்தேன்.

தற்போது அவர்களும் சென்று விட்டார்களே, நான் தனித்துவிட்டேனே, என் மீது எந்த நபியும் இல்லையே என்பதாய் பூமி பிரலாபித்து இறைவனிடம் முறையிட்டுக் கொண்டது.

நான் சில அவுலியாக்களை அனுப்புவேன். அவர்களது இருதயங்கள் நபிமார்களது இருதயங்களைப் போலிருக்கும். அவர்கள் யுகமுடிவு வரை உன் மீது சஞ்சரிப்பார்கள் என்று இறைவன் பூமிக்கு அறிவித்தான்.

இவ்விடயத்தை ஸாலிஹான, இறையருள் நேசரான, பெரியார் ஒருவர் தமது உலக யாத்திரையின் போது, நித்திய ஜீவனுடைய ஹஜ்ரத் கிலுறு அலைஹிஸ்ஸலாம் அவர்களைச் சந்தித்த சமயம் அன்னாரைக் கேட்டுத் தெரிந்து கொண்டதாக, ஷமவாஹிபுல் மஜீது பீ மனாகிபி ஷாஹுல் ஹமீது எனும் கிரந்தத்தில் காணப்படுகிறது.

அந்த அவுலியாக்கள் ஏகத்தில் 440 பேர்கள். அவர்களுள் நுஜபாக்கள் 300, நுகபாக்கள் 70, அப்தால்கள் 40, அகியார்கள் 10, உறபாக்கள் 7, அன்வார்கள் 5, அவுத்தாதுகள் 4, முக்த்தார்கள் 3, குதுபு ஒருவர். இக்குத்பே அனைவருக்கும் அதிபராவார்.

இன்னாரைக் கௌது என்றும் சொல்லப்படும். இவர்களுள் யாரும் மரணமாவார்களாயின் அவர்களுக்கடுத்த (தரஜா) படித்தரத்திலிருப்பவர்கள் அந்த ஸ்தானத்திற்கு மாற்றப்படுவார்கள்.

அங்ஙணம் பதவியில் உயர்த்தப்படும் போது, கீழ்ப்படித்தரத்திலுள்ள நுஜபாக்கள் காலியாகுமிடத்தில் ஸாலிஹீன்களான முஸ்லீம்களில் ஒருவர் அந்தத் தானத்தில் அமர்த்தப்படுவர்.

இச் செய்தி ஹிலுறு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கூறியதாக மனாகிபுகுத்பில் மஜீதிஸ்ஸையிது ஷாஹுல் ஹமீதில் மாணிக்கப்பூரியில் மவுலிதிந் நாகூரிய்யில் மர்கதி என்ற கித்தாபில் மாதிஹுர் ரஸுல் அல்லாமதுஷ் ஷைகு ஸதக்கத்துல்லாஹில் காஹிரிய்யிஸ் ஸித்தீக்கி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களது சீடர் அல்லாமா ஆரிபுபில்லாஹ் மஹ்மூது தீபிரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களும்,

மவாஹிபுல் மஜீது பீ மனாகிபி ஷாஹுல் ஹமீது எனும் கித்தாபில், காயல்பட்டணத்தில் பிறந்து கீழக்கரையில் அடங்கி இருக்கும் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் என்ற அல்லாமத்துல் பாழில் ஸையிது முஹம்மது ஆரிபுபில்லாஹி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களும் கூறுகின்றார்கள்.

இவை போன்ற பல அபூர்வ விளக்கங்களை மஜ்மூ அத்துர் ரஸாயில் 2-வது பாகம் 264-வது பக்கத்தில் ஷறத்துல் முஹ்த்தார் இயற்றிய அல்லாமா இபுனு ஆபீதீன் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் விபரமாக வரைந்துள்ளார்கள்.

மேலும் இமாம் ஷஃரானி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் அல்யவாக்கீத்து வல் ஜவாஹிர்என்னும் கிரந்தத்தில் குத்புமார்களின் தரஜா, பதவிகளை விவரமாக எழுதியுள்ளார்கள்.

இன்னும், இமாம் இபுனு ஹஜர் மக்கீ ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் தங்கள் பதாவா ஹதீதிய்யாவிலும் விரிவாக குறிப்பிட்டுள்ளார்கள்.

மேலும், என்னுடைய உம்மத்துகளில் நாற்பது நபர்கள் நபி இபுராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய இருதயத்தையுடையவர்களாய் என்றும் இருந்தே வருவர். அல்லாஹ்தஆலா அந்த நபர்களைக் கொண்டு பிரபஞ்சத்தில் இருப்பவர்களை விட்டும் பிணிகளைப் போக்குவிப்பான்.

அவர்களுக்காக மழையைப் பொழியச் செய்வான். அன்னவர்களைக் கொண்டுதான் பிரபஞ்சத்திலுள்ளோருக்கு உதவி புரியப்படும் என்பதாய் எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஹதீது தபறானியில் காணக் கிடைக்கின்றது.

குத்புக்கே கௌது என்று பெயர். அவர் ஒருவருக்குப் பின் ஒருவராக வருவார். படைப்புகளை எல்லாக் கருமங்களிலும் அன்னார் இரட்சிக்கக் கூடியவராக இருப்பதனால் கௌது என்று பெயர். அன்னவருக்கு வலம், இடம் இருபக்கங்களிலும் அரசர்களுக்கு இருப்பதுபோல இரு அமைச்சர்கள் உள்ளனர்.

கௌது உடைய உத்தரவு கொண்டு வலது பக்கமிருப்பவர் மறைவுலகங்களான ஆலமுல்கைபு, ஆலமுல் மலகூத்தை நிருவகித்து வருகின்றார். இடது பக்கமிருப்பவர், வெளியுலகமான ஆலமுஷ்ஷஹாதத்தைக் கண்காணித்து வருகின்றார்.

வேலூர் பாக்கியாத்துஸ் ஸாலிஹாத்து அரபிக் கலாசாலை மத்ரஸா ஸ்தாபகர், ஹஜ்ரத், அல்லாமா, ஷைகு அப்துல் வஹ்ஹாபு ஸாஹிபு ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களது ஞான குரு ஹஜ்ரத் ஆரிபு பில்லாஹி, அல்லாமா ஷைகு ஷாஹ் முஹியித்தீன் ஸாஹிபு வேலூரி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் ஜவாஹிருஸ்ஸுலூக்கு என்னும் கிரந்தத்தில் 114-வது பக்கத்தில் வரைந்துள்ளார்கள்.

மேலும் இது போன்ற விபரங்கள் ரூஹுல்பயான் தப்ஸீர் பாகம் 2, பக்கம் 363லும், இபுனு அரபி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களைக் கொண்டு விபரமாகச் சொல்வதை அறிவிக்கப்படுகிறது.

அந்தரங்க, பகிரங்க ஆபத்துக்களில் நின்றும் குத்புமார்களைக் கொண்டே இறைவன் அகிலத்தைப் பாதுகாத்துக் கொள்கிறான் என்று தப்ஸீர் ரூஹுல்பயான் 9-வது பாகம், 102-வது பக்கத்திலும் கூறப்பட்டுள்ளது.

மேலும் விபரமாகத் தெரிய முஜ்த்தஹிது, ஹாபிளு அஹா தீதெ நபவிய்யா, இமாம் ஷைகு ஜலாலுத்தீன் ஸுயூத்தி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் இயற்றிய ரிஸாலா-அல்-கபருத்தால்லு அலாவுஜுதின் னுகபா-வல்-அக்த்தாபி-வல்-அவ்த்தாதி-வல்-அப்தால் என்னும் நூலையும் அல்லாமா பகீஹ் இபுனு ஆபிதீன் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் இயற்றிய மஜ்துஅதுர் ரஸாயில் நூலையும் நோட்டமிடுக.

அவுலியாக்களுள் இரு வகுப்பாருண்டு, ஒரு வகுப்பார் இறைவனுடைய பாதையில் கஷ்டப்பட்டு, முயன்று அவனளவில் தன்னையழித்து பனாவாகியவர்கள்.

இவர்களுக்கு கஸ்பீ என்று சொல்லப்படும். மற்ற வகுப்பார் ஆலம் அர்வாஹ் எனும் ஆன்ம லோகத்திலேயே இறைவனால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள். இவர்களுக்கு அத்தாயீ என்று கூறப்படும். குத்பு கௌதுகள் அத்தாயீ வகுப்பைச் சேர்ந்தவர்களே. (ஜவாஹிருஸ்ஸுலுக்கு 114-வது பக்கம் பார்க்க)

குத்பு என்ற பதத்திற்கு முளை துருவம் என்றும், கௌது என்ற பதத்திறகு இரட்சிப்பவர் - நாயன் நோட்டமிடும் ஸ்தானம் என்றும் பொருளைப் பயக்கி நிற்பினும், அவற்றின் அந்தரங்கம் பல அரும்பெரும் இரசகியப் புதையல்களைத் தன்னுள் அடக்கியதாய் அமைந்து கிடக்கின்றன.

இன்னவர்கள் மூலமாகத் தான் முதலவன் தன்னிருக்கையை அறிக்கை செய்ய வேண்டியதிருக்கிறது. அன்றேல், அஞ்ஞான இருள் படர்ந்து மூடி அகிலம் அந்தகாரத்தில் ஆழ்ந்து பாழ்பட்டுப் போகும்.

இறைவன் தன்னடியார்களுக்கு அளித்துள்ள கைம்மாறிளக்க வொண்ணாப் பெரும் அருட்கொடைகள் அத்தனையையும் ஒரு தட்டிலும், குத்பை அனுப்பித் தந்த அருட்பெருங்கொடையை மற்றொரு தட்டிலும் வைத்து சீர்தூக்கிப் பார்ப்போமாயின், குத்பால் பெற்ற கிருபையளவே கனத்து முறுகி நிற்கக் காண்போம்.

இன்னாரைப் பற்றி இறைவன் குர்ஆன் ஷரீபில், நிச்சயமாக அல்லாஹ் உடைய அவுலியாக்களுக்கு பயமென்பதுமில்லை, கவலையென்பதுமில்லை (10:62) என்பதாய் அருளியுள்ளான்.

**https://ahlezikr.blogspot.com/2017/04/blog-post_26.html**

( இல்முல்லதுன்னீ என்னும் மெய்ஞானபாக்கியம் பெற்ற இறைநேசர்கள் பற்றிய பதிவு தளத்திலிருந்து )

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 55

( ஹஸ்பியல்லாஹு - இறைவன் எனக்குப் போதுமானவன் எனக் கூற மாட்டேன் )



அபூ பக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் ஒரு தடவை 'ஹஸ்பியல்லாஹு (இறைவன் எனக்குப் போதுமானவன்) என்று கூற வேண்டுமென்று நான் பன்னெடுங்காலமாக எண்ணிக் கொண்டுள்ளேன். அவ்விதம் நான் கூறின், நான் எண்ணிக் கொண்டிருப்பது ஒன்று, சொல்வது ஒன்றாகி விடுமோ என்ற ஐயத்தின் காரணமாக, அதனைக் கூறாது வாய்மூடிக் கொண்டுள்ளேன்" என்று அவர்கள் மொழிந்தார்கள்.

ஒருநாள் அவர்கள் பள்ளியில் தனித்திருந்து 'அல்லாஹ், அல்லாஹ்' என்று மொழிந்து இறைவனைத் தியானித்துக் கொண்டிருக்குங்கால்,

அண்மையில் வீற்றிருந்த ஓர் இளவல் அவர்களின் தனிமையை கலைத்து, அவர்களை நோக்கி,

'லாஇலாஹ இல்லல்லாஹு என்று சொல்லுங்களேன்" என்று கூறிய பொழுது,

"நான் அவனுக்குப் பதிலாக, வேறொருவனைத் தேடமாட்டேன்" என்றார்கள் அவர்கள்.

அதுகேட்டு வியப்புற்ற அவ் இளவல் "இன்னும் கூறுங்கள்" என்று இயம்ப,

"லாஇலாஹ " (இல்லை அல்லாஹ்) என்று கூறும் பொழுதே, என் மூச்சு வெளியேறி நான் இறந்துவிடின், நான் இறைவனை மறுத்த நிலையில் காஃபிராக இறப்பெய்த ஏதுவாகிவிடுமோ என்ற அச்சத்தின் காரணமாகவே அவ்விதம் கூறாது அல்லாஹ், அல்லாஹ் என்று இவ்விதம் கூறிக் கொண்டுள்ளேன்" என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

இப்பொழுது அவ்இளவலின் வியப்பு முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாகியது. "இன்னும், இன்னும்" என்று அவர் இறைபோதையில் கத்தினார்.

அவர்களும் அவ் இளவலின் வேண்டுகோளுக்கு இணங்கி, "இறைவன் தன் திருமறையில், 'குலில்லாஹு ஃதும்மஃதர் ஹும்ஃபீ ஹவ்லிஹ்ம் யல்அபூன்' (அல்லாஹு என்று சொல்லும். பின்னர் அவர்களை விளையாடியவர்களாய் விட்டுவிடும் " என்று கூறுகின்றான்") என்று இயம்பினர்,

அதுகேட்ட அவ் இளவல் உணர்ச்சி மீக்குற்றவராய் அலறித்துடித்துக் கீழே சாய்ந்து அக்கணமே உயிர் நீத்தார்.

இச்செய்தி பக்தாது நகரம் முழுவதும் ஒரு நொடியில் பரவி, பெரும் பரபரப்பை உண்டு பண்ணிவிட்டது. 'ஷிப்லீ அநியாயமாக ஒருவரைக் கொன்று விட்டார்' என்று விஷமிகள் நகரமெங்கும் புரளியைக் கிளப்பி விட்டார்கள்.

எனவே கொலைக் குற்றம் சாட்டப்பட்டு ஷிப்லீ (ரஹ்) அவர்கள் கலீபாவின் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டார்கள்.

தன்னுணர்வற்ற நிலையில் தம் முன் வந்து நின்ற ஷிப்லீ (ரஹ்) அவர்களை நோக்கிக் கலீபா, "தாங்கள் அவரைக் கொன்றது உண்மையா?" என்று வினவினார்.

"அல்ல" என்று பேச்சைத் துவங்கிய ஷிப்லீ (ரஹ்) அவர்கள்,

"அர்ரூஹூ ஹன்னத்; ஃபரஹத்; வதுயியத்; ஃப அஜாபத்; வஸமி அத்ஃப

(ஓர் ஆன்மா அவாவுற்றது. பின்னர் அது அஞ்சியது. அதன்பின் அது அழைக்கப்பட்டது. உடனே அது பதில் கூறிக் கேட்டுக்கொண்டே பறந்துவிட்டது.') என்று பதிலிறுத்தனர்.

அவர்களின் இம்மறுமொழி, கலீபாவுக்கு ஒருவித மயக்கத்தை அளித்தது. உடனே அவர் தம் பணியாளர்களை நோக்கி, "விரைவில் ஷிப்லீயை இவ்விடத்தை விட்டும் அப்புறப்படுத்துங்கள். என் தலை கிறுகிறுக்கிறது. நான் அரியணையிலிருந்து மயங்கிக் கீழே வீழ்ந்து இறந்து விடுவேனோ என்று அஞ்சுகிறேன்" என்று பதற்றத்துடன் கூறினார்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 56

முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் கூறுவது : செவில்லியில் வாழ்ந்து, செருப்புத் தைக்கும் தொழிலைச் செய்து வந்த ஸாலிஹ் அல் காராஸ் என்னும் இறைநேசச் செல்வருக்கும், எனக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருந்தது. நாங்கள் இருவரும். ஒருவர் மற்றொருவரைப் பெரிதும் நேசித்தோம்.

தன்னை இறைநேசர் என்று அறிந்தவர்களின் செருப்பை அவர் தைத்துக் கொடுக்க மாட்டார். அதற்குக் காரணம், தம் உண்மை நிலையை, அவர்கள் அறிய ஏதுவாகி விடுமோ என்ற அச்சம் தான். எனவே தமக்குத் தெரியாத, தம்மை எவரென்று அறியாத வெளியூர் வாசிகளின் செருப்புகளையே, அவர் தைத்துக் கொடுத்து வந்தார்.

''ஒரு நாள் என் நண்பர் ஒருவர், அவரிடம் சிறிது நேரம் பேச வேண்டும் என்பதற்காகத் தம்முடைய செருப்பை வேண்டுமென்றே பழுதாக்கிக் கொண்டு, என்னையும் அழைத்துக் கொண்டு, அவரிடம் சென்றார்.

நான் அவரின் கண்களில் படாது சற்று மறைவாக இருந்து கொண்டேன் என் நண்பர் அவருக்கு 'ஸலாம்' உரைத்துத் தம் செருப்பைத் தைத்துத் தருமாறு அவரை வேண்டிக் கொண்டார்.

அதற்கு அவர், 'ஏற்கனவே ஒருவர் தம் செருப்பைத் தந்து, அதனைத் தைப்பதற்கான கூலியையும் தந்து விட்டுச் சென்றுள்ளார். நான் இப்பொழுது அவ்வேலையில் ஈடுபட்டுள்ளேன்' என்றார்.

'பாதகமில்லை. அவ் வேலையை முடித்துவிட்டு என் வேலையை எடுத்துக் கொள்ளுங்கள்!" என்றார் நண்பர்.

அதற்குள் நான் இறந்து விட மாட்டேன் என்பதற்கு என்ன உறுதி உள்ளது? ஆதலின் நீர் உம்முடைய செருப்பை வேறொருவரிடம் எடுத்துச் செல்லலாம்' என்றார் அவர்.

'அதனை வேறு எவரிடமும் கொடுக்க விரும்பவில்லை. அதனைத் தாங்கள் தாம் செய்து தர வேண்டும். தாங்கள் அதனை முடிக்கும் வரை, நான் இங்கேயே அமர்ந்திருக்கிறேன்' என்றார் நண்பர்.

'நான் கூற வேண்டியதைக் கூறிவிட்டேன். அதற்கு மேல் நீர் இங்கு இருக்க விரும்பினால், அது உம்முடைய விருப்பத்தைப் பொறுத்தது' என்றார் அவர்.

"அங்கு சற்று நேரம் வீற்றிருந்த நண்பர், அவரை நோக்கி, 'அதனைத் தைக்கக் கூலி என்னவாகும்?' என்று நாசூக்காக வினவினார்.

'அரைக்கால் திர்ஹம் ஆகும்' என்றார் அவர்.

'நான் தங்களுக்கு கால் திர்ஹம் தருகிறேன். அதனைத் தைத்துத் தாருங்கள்!' என்றார் நண்பர்.

அதற்கு அவர் 'நான், எனக்கு இன்றைக்குத் தேவையானதை ஈட்டிக் கொண்டு விட்டேன். அதற்கு மேல் தேவை இல்லை.தேவையுள்ளவர்கள் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள்.நீர் தாராளத் தன்மையுடைய வராயிருந்தால், அவர்களைப் போய்ப் பார்த்து, அதனைக் கொடும்! என்னை வீணே தொந்தரவு படுத்த வேண்டாம்!' என்று முடிவாகக் கூறிவிட்டுத் தம் கையிலிருந்த வேலையில் கவனத்தைச் செலுத்தலானார்.

"நண்பர் என்னிடம் ஏமாற்றத்துடன் திரும்பி வந்தார். நான் அவரை நோக்கி, 'நீர் மீண்டும் அவரிடம் சென்று 'இறைவனுக்காக அதனை

எவ்விதக் கூலியும் பெறாமல் தைத்துத் தருமாறு கூறும்!" என்று ஆலோசனை பகர்ந்தேன்.

"அவ்விதமே நண்பர் செய்ய. 'நீராக இதனைக் கூறவில்லை. எவரோ ஒருவர் இவ்விதம் கூறுமாறு உம்மிடம் சொல்லியிருக்கிறார்கள் என்று மொழிந்து தலையை நிமிர்த்திப் பார்த்தார். தான் அங்கு நிற்பதைக் கண்டதும், நிலைமையை ஒருவாறு விளங்கிக் கொண்டு,

'நல்லது; உம் செருப்பை வைத்து விட்டுப் போம்! பிற்பகலில் வாரும்! நான் அப் பொழுது உயிரோடிருந்தால், அதனை உம்மிடம் திருப்பித் தருகிறேன். நான் இறந்து விட்டால், அதனைப் பக்கத்துக் கடைக்காரரிடம் கேட்டுப் பெற்றுக் கொள்ளும்!' என்று கூறினார்.

"பின்னர் அவர் என்னைத் தனியாக அழைத்துச் சென்று, 'நண்பர்கள் ஒருவரோடொருவர் இவ்வாறு தானா நடந்து கொள்வது? ஒருவர் விரும்பாத செயலை, இவ்வாறு தானா அவர் மீது திணிப்பது? இனிமேல் நீர் இவ்விதம் செய்யாதீர்! என் நிலைமை பற்றி எவரிடமும் கூறாதீர். நான் எவரும் அறியப்படாத நிலையில் இருப்பதையே விரும்புகிறேன் என்று சொன்னார்.

நான் அவர் போன்ற மனிதரைப் பார்த்ததே இல்லை பின்னர் அவர் தனிமையை விரும்பிக் கானகம் சென்று விட்டார்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 57

( காமிலான ஷைகு )




இலங்கையில் அளவற்ற துன்பத்தால் பெரிதும் நலிந்த ஒருவர் கீழக்கரையில் வாழ்ந்த தம் நண்பர் ஒருவருக்குத் தம் அவல நிலையை எடுத்துரைத்துக் கடிதம் எழுதி, ஆண்டகை அவர்களை அணுகித் தமக்காக துஆச் செய்யுமாறு கேட்க வேண்டிக் கொண்டார்.

இதனைத் தம் உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட ஆண்டகை அவர்கள், அவருக்காக இறைவனிடம் துஆ இறைஞ்சி 'ஹம்தன் இலாஹி தஆலா' என்று தொடங்கும் 43 கண்ணிகளை எழுதி வைத்திருந்தனர்.

சில நாட்கள் கழித்து ஒருவர் வந்து அவர்களின் கதவைத் தட்டியதும் அவரை எவரெனத் தம் உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட ஆண்டகை அவர்கள் தாம் எழுதி வைத்திருந்த கஸீதாவை எடுத்துக் கொண்டு வந்து கதவைத் திறந்து, வந்தவரிடம் எதுவும் கேட்காமல்

"இதனைத் தங்களுடைய இலங்கை நண்பருக்காக இறைவனிடம் துஆ இறைஞ்சி எழுதினேன். எனக்கோ விரைவில் கவி எழுத வராது. நான் கல்வத்தில் ஆன பதினேழு ஆண்டுகளில் இப்பொழுதுதான் முதல் தடவையாகக் கவி எழுதினேன். இதனைத் தங்களின் நண்பருக்கு அனுப்பி வையுங்கள்! இறைவனருளால் அவர் தொல்லை நீங்கி நலமும் வளமும் பெறுவார்" என்று கூறி அவரிடம் கொடுத்தனர். அப்பொழுது வந்தவரின் புருவங்கள் வியப்பால் மேலேறின

ஒரு தடவை ஒருவர் காமிலான ஷைகைத் தேடிப் பல இடங்களிலும் சுற்றித் திரிந்து கொண்டிருக்கும் காலை ஓரிடத்தில் நண்பர் ஒருவரைச் சந்தித்து உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது அவர் "நீர் ஏன் நாடு நகரங்களெல்லாம் சுற்றித் திரிகின்றீர்? கீழக்கரை சென்றால் நீர் காமிலான ஷைகைக் கண்டு கொள்வீர் " என்று கூறினார்.

அவ்விதமே அவர் கீழக்கரை வந்து ஆண்டகை அவர்களை அணுகித் தமக்கு தீட்சை தந்து, மேலும் அப்துல்கரீம் ஜீலி (ரஹ்) அவர்கள் எழுதிய "இன்ஸானெ காமில் " என்ற மாபெரும் நூலைத் தொடங்கித் தருமாறும் வேண்டிக் கொண்டார்.

ஆனால் கல்வத் நாயகம் அவர்களோ அவரைத் தம் தந்தையாரிடம் அனுப்பி வைத்து விட்டார்கள்.

இச்சமயத்தில் அவர்களின் தந்தையாரிடம் ஆலிம் சாஹிபு ஒருவர் எழுத்தராக இருந்தார். அவருக்கும் ஒரு காமிலான ஷைகைத் தேடிக் கண்டு பிடித்து தீட்சை பெற வேண்டுமென்று பெரிதும் ஆவலாக இருந்தது. ஒருகணம் அவர் கல்வத் நாயகம் அவர்களைப் பற்றி எண்ணினார்.

மறுகணம் அவர், "அவர்கள் காமிலான ஷைகாக இருந்தால் அவர்களைத் தேடி தீட்சை பெற வந்தவருக்கு தீட்சை அளித்திருக்கலாமே. அவ்விதம் செய்யாது அவர்கள் தம் தந்தையாரிடமே அவரை அனுப்பி வைத்து விட்டார்களே.

மேலும் காமிலான ஷைகுகளான முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் போன்றோ ஷாஹுல் ஹமீது பாதுஷா நாயகம் போன்றோ அவர்கள் எவ்வித அற்புதமும் நிகழ்த்தவில்லையே. இந்நிலையில் நான் என் செய்வது? என்று எண்ணினார், தயங்கினார்,

இவ்வாறு அவர் எண்ணிக் கொண்டு முஹம்மது கௌஸ் குவாலியரி (ரஹ்) அவர்கள் எழுதிய 'ஜவாஹிருல் ஹம்ஸா' என்ற நூலைப் பிரதி எடுத்துக் கொண்டிருந்தார். அதில் உள்ள 'லெக்கு' என்ற சொல்லுக்கு அவருக்குப் பொருள் விளங்கவில்லை.

அதைப்பற்றி அவர் சிந்தித்துக் கொண்டிருக்கும்பொழுது, ஒரு சிறுவன் அங்கு வந்து அவரிடம் ஒரு தாளைக் கொடுத்து, "இது தங்களுக்காக எழுதப்பட்ட கவியாம் இதனைத் தங்களிடம் தருமாறு கல்வத் ஆண்டகை அவர்கள் கூறினார்கள்" என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

அதனைப் பெற்றுக் கண்களில் ஒற்றிக் கொண்டு அதனைப் படித்துப் பார்த்த பொழுது அதில் எழுதப்பட்டிருந்த கவிதைகளில் ஒருவரியேனும் அவருக்கு விளங்கவில்லை. அவற்றிற்கான பொருளும் அதில் எழுதப்பட் டிருக்கவில்லை.

ஆனால் அதில் உள்ள "ஸ்கூலுக்கு" என்ற சொல்லுக்கு மட்டும், இது லெக்கு என்ற சொல்லின் பன்மையாகும். இதன் பொருள் கோடானு கோடி என்பதாகும் என்று பொறிக்கப்பட்டிருந்தது.

அதுகண்டு பெரிதும் வியப்புற்ற அவர் அடுத்த நாள் ஆண்டகை அவர்களைப் போய்ச் சந்தித்த பொழுது, "கவிதைகளைப் படித்தீரா? கருத்தை விளங்கிக் கொண்டீரா?" என்று கல்வத் நாயகம் அவர்கள் வினவினர்.

அதற்கு அவர் பதில் கூறுவதற்கு முன்பாகவே கல்வத் நாயகம் அவர்கள் அதில் தாம் எழுதிய, "அய்யுஹல் முஸ்தத்து லிஉஃபீ அம்ரீ" என்று தொடங்கும் கவிதையையும் அதற்கு அடுத்துள்ள கவிதையையும் தாமே கூறி விளக்கம் சொல்லி அவரின் "லெக்கு" சொல்லின் ஐயங்களை நீக்கிவிட்டு,

ஆலிம் சாஹிபே! பெரியோர்கள் உள்ளுணர்வால் விஷயங்களை விளங்கி அதற்குரிய விளக்கத்தைத் தெளிவுபடுத்தி ஐயங்களை நீக்கும் ஆற்றல் பெற்றிருப்பதோடு, அற்புதங்களை ஆற்றும் ஆற்றலும் பெற்றிருப்பார்கள். எனினும் அதனை அவர்கள் வெளியில் காட்டிக்கொள்வதில்லை.

மாதவிடாய் வந்த கன்னிப் பெண் எவ்வாறு தான் பூப்பெய்தியதை வெளியாக்க நாணமுறுவாளோ அவ்விதமே அவர்கள் அற்புதங்களை வெளியாக்க நாணமுறுவார்கள்.சில பொழுது அவர்களே அறியாமல் அல்லாஹ்வே அவற்றை அவர்கள் மூலம் வெளிப்படுத்தி அவர்களை மாண்புறச் செய்வான்" என்று கூறினர்.

அப்பொழுது அந்த ஆலிம் சாஹிபு தாம் செய்த தவற்றை எண்ணிப் பெரிதும் வருந்தினார். கல்வத் நாயகம் அவர்களும் அவர் மீது இரங்கி அவருக்கு பல ஞான ரகசியங்களை எடுத்து கூறினார்கள்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 58

( அறுபட்ட உடல் உறுப்புகள் )

நூஹ் லெப்பை ஆலிம் அவர்கள் காயல் பட்டினத்தை சேர்ந்தவர்கள். இவர்களுடைய தகப்பனார் மஞ்சக்கொல்லையில் அடங்கப் பெற்றிருக்கும் ஷைகு அப்துல் காதிர் லெப்பை என்ற அக்காது லெப்பை

நூஹ் லெப்பை ஆலிம் அவர்களும் காசிம் புலவரும் நண்பர்களாக விளங்கினர். இருவரும் திருவடிக்கவிராயர் என்ற தமிழ் அறிஞரிடம் தமிழ்க் கற்றனர்.

ஒரு வகையில் பார்த்தால், நூஹ் லெப்பை ஆலிம் அவர்களே காசிம் புலவரின் ஆசான் என்று கூறவேண்டும். காசிம் புலவர் ஆன்மீகத்தில் உயரிய படித்தரத்தை எய்துவதற்கு, மூல காரணமாய் அமைத்தவர் நூஹ் லெப்பை ஆலிம் அவர்களே என்று கூறின் அது மிகையல்ல.

ஒருநாள் அவ் இருவரும் ஓரிடத்தில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது, கூரையில் ஓடிய எலியொன்று மண்ணைத் தட்டி விட்டுச் சென்றது. அது காசிம் புலவரின் கண்களில் விழுந்ததும், அவர்களுக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அளவில்லை. ஓர் அறம் பாடினார்கள். அடுத்த கணம் அந்த எலி இரண்டு துண்டாகச் செத்து சிதறி விழுந்தது.

இது கண்டு அவ் எலியின் மீது நூஹ் லெப்பை ஆலிம் அவர்களுக்குக் கழிவிரக்கம் ஏற்பட்டது. அவர்கள் அங்கு கிடந்த ஒரு குச்சியை எடுத்து, அதனை இரு துண்டுகளாக ஒடித்து அத்துண்டுகளைக் காசிம் புலவரிடம் கொடுத்து, ஒன்று சேர்க்குமாறு கூறினர். அவர்களோ அவ்விதம் செய்யாது சிரித்து மழுப்பி விட்டார்கள்.

அப்பொழுது ஆலிம் அவர்கள் ஒரு கவி பாடினார்கள். என்ன வியப்பு! அடுத்தகணம், உடைந்த இரு குச்சிகளும் ஒன்றாயின. இரு துண்டமாகிக் கிடந்த எலியும் ஒன்றுசேர்ந்து உயிர் பெற்று ஓடியது.

இதன் பின் காடுகளிலும், வனங்களிலும் சுற்றித் திரிந்த ஆலிம் அவர்கள், சில சமயம் இரவு நேரங்களில் தம் இல்லம் வந்து, தம் வீட்டுத் தோட்டத்தில் இருந்த வைக்கோல் போர் மீது படுத்துறங்கி விட்டு வைகறையில் எழுந்து தொழுவதற்குப் பள்ளி சென்று விடுவார்கள்.

ஒரு வைகறையில் அவர்களின் வீட்டுத் தோட்டத்தில் தண்ணீர் எடுக்கவந்த பெண்மணி ஒருவர், அங்கிருந்த வைக்கோல் போர் மீது ஒருவர் கால்வேறு, கைவேறு, தலைவேறு, முண்டம் வேறாகச் சிதறுண்டு கிடப்பதைக் கண்டு திடுக்குற்றாள். சற்று நேரத்தில் சிதறிக் கிடந்த அவ் உறுப்புகளெல்லாம் ஒன்று சேர்ந்து முழு உருவமாகிப் பள்ளி வாயிலுக்குப் போவதையும் பார்த்தாள். அது அவளுக்கு அளவற்ற வியப்பை அளித்தது.

உறுப்புக்கள் சிதறிக் கிடந்த இடத்தை அவள் நெருங்கிப் பார்த்த பொழுது, அங்கு ஒரு காது மட்டும் கிடப்பதைக் கண்டு அதனை மரியாதையுடன் எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்தாள்.

பள்ளி சென்ற ஆலிம் அவர்கள் தொழுதவற்காக உளூ செய்த பொழுது தமக்கு ஒரு காது இல்லாததை அறிந்ததும், அதனை எடுத்துச் செல்லத் தம் வீட்டுத் தோட்டத்திற்கு வந்தார்கள்,

அப்பொழுது அங்கு நின்றுகொண்டிருந்த அப்பெண்மணி நூஹ் லெப்பை அவர்கள் எதனையோ அங்கு மிங்கும் தேடுவதைக் கண்டு, நிலைமையை உய்த்துணர்ந்து தாம் எடுத்துப் பத்திரமாக வைத்திருந்த அவர்களின் காதை அவர்களிடம் கொடுத்தாள்.

அதனை அவர்கள் வாங்கி அதற்குரிய இடத்தில் வைத்ததும் அது முன்புபோல் பொருந்திக் கொண்டது. அப்பொழுது அவர்கள் அவளை நோக்கி, ''இதனை எவரிடமும் கூறவேண்டாம்!" என்று சொல்லி விட்டு தொழுவதற்காகப் பள்ளிக்கு விரைந்தார்கள்.

ஒருநாள் அவர்கள் ஓர் ஊருக்குச் சென்ற பொழுது, அங்கு ஒரு ஷைகு ராத்திபு நடத்தினார். அப்பொழுது அவர்களின் சீடர்கள் உணர்ச்சி மீக்குற்று திக்ர் செய்யும் பொழுது, கத்தியால் தங்களின் உறுப்புகளில் சிலவற்றைத் துண்டிக்கவும் பின்னர் ஒட்டவைக்கவும் செய்தார்கள்.

இதைக் கண்ட ஆலிம் அவர்கள், "இவ்வாறு பகிரங்கமாச் செய்து மக்களைக் குழப்பத்தில் ஆக்காதீர்கள்! உங்களுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு. உங்களுக்கும் இறைவனுக்குமே தெரிந்த இரகசியமாக இருக்கட்டும். அவன் விரும்பின் அதனை வெளியாக்கட்டும். நீங்களாகவே அதனை வெளியாக்க வேண்டாம்!" என்று எவ்வளவோ இதமாக அவர்களிடம் எடுத்துரைத்தார்கள்.

எனினும் அவர்கள் கேட்கவில்லை. அது கண்டு, ஆலிம் அவர்களும் எரிச்சலுடன் அவ் இடத்தை விட்டு அகன்றார்கள்.

சற்று நேரத்தில் அந்த திக்ர் மஜ்லிஸ் முழுவதும் குழப்ப மயமாகியது. அங்கு திக்ரு செய்தவர்கள் வெட்டிய, அவர்களின் உறுப்பு ஒவ்வொன்றும், அவர்களின் கையில் இருந்ததேயொழிய அவர்கள் எவ்வளவோ முயன்றும் உடம்பில் அதற்குரிய இடத்தில் ஒட்டிக் கொள்ளவில்லை. அதுகண்டு அவர்களின் ஷைகே முன் வந்து, எவ்வளவோ முயன்றும் யாதொரு பலனும் ஏற்படவில்லை.

இதன்பின் தான் அவர்கள் தம் தவற்றினை உணர்ந்தார்கள். அங்கு வந்த பக்கீர் ஒருவர் தம்மை எவ்வளவோ எச்சரித்தும் தாம் கேட்க வில்லையே, அவரின் முனிவுதான் இந்த விபரீதத்துக்குக் காரணமாய் இருக்கும் என உணர்ந்து, அவர்கள் ஆலிம் அவர்களை ஊரெங்கணும் தேடித் திரிந்தார்கள்.

இறுதியாக ஒரு பாழடைந்த மடத்தில் அவர்களைக் கண்டு,தம் குறை பொறுத்து, தமக்காக இறைவனிடம் இறைஞ்சித் தம் உறுப்புகளை அவற்றிற்கான இடத்தில் மீண்டும் பொருந்திக் கொள்ளச் செய்ய வேண்டுமென்று அழுது கெஞ்சி வேண்டினார்கள்.

ஆலிம் அவர்களும் அவர்கள் மீது இரங்கி, அவ்விதமே செய்ய, அவர்கள் அனைவரும் முன்பிருந்த நிலையை எய்தப்பெற்றார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 59

(களுத்துறை பழித்துறை ஆகிவிட்டது )




அல்லாமா மாப்பிள்ளை லெப்பை ஆலிம் (ரஹ்) அவர்கள் இலங்கை முஸ்லிம்களிடையே ஒரு மறுமலர்ச்சியை உண்டு பண்ணுவதற்காக நாடு நகரங்களெல்லாம் சுற்றித் திரிந்தபொழுது பல துன்பங்களையும் இன்பங்களையும் நுகர்ந்தனர்.

அவர்கள் சுளுத்துறை ஜும்ஆ பள்ளியில் இரண்டு நாட்கள் தங்கி மக்களுக்கு அறிவுரை நல்கிய போதினும் அவர்களை ஏறிட்டுப் பார்ப்பார் எவருமில்லை. உண்பதற்கு யாதொரு சிற்றுண்டி விடுதியும்

அங்கில்லை. அவர்களுக்கோ கடுமையான பசி ஏற்பட்டது. எனவே அவ்வூரை விட்டுப் புறப்பட எண்ணிய அவர்கள், அந்தப் பள்ளியின் சுவரில்

"ஸம்மீ கதீபன் களுத்துறை

அல் ஆன ஸார பழித்துறை"

(பண்டுதொட்டு களுத்துறை என்னும் பெயர் வழங்கப்பட்டு வந்த இந்த ஊர் கொலைகார ஊராக அல்லவா இருக்கிறது) என்று எழுதி விட்டுப் புறப்பட்டனர்.

சற்று நேரத்தில் அவர்கள் எழுதியதைப் போல அங்குக் கொலை ஒன்று நிகழ்ந்தது. ஒரு செல்வச் சிறுமியை ஒருவர் கொன்று அச்சிறுமி அணிந்திருந்த நகைகளைக் கவர்ந்து கொண்டு அதன் வெற்றுடலை ஆற்றங்கரையில் போட்டுவிட்டுச் சென்றுவிட்டார்.

பள்ளிவாயலில் பணி செய்து வந்த முஅஸ்ஸின், மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் மீதே அப்பழியைச் சுமத்தினார். அவரே இரண்டு நாட்களாகப் பள்ளியில் தங்கியிருந்துவிட்டுப் புறப்படு முன் பள்ளிவாயில் சுவரில் ஏதோ எழுதிவிட்டுச் சென்றார். அவரே அச் சிறுமியைக் கொன்றிருக்க வேண்டும் என்று குற்றம் சாட்டினார்.

உடனே மாப்பிள்ளை லெப்பை ஆலிமைத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்து பள்ளிவாயிலில் நிறுத்தி குறுக்கு விசாரணை செய்தார்கள் அவ்வூர் மக்கள்.

தாம் பள்ளிவாயில் சுவரில் "சுளுத்துறை பழித்துறை ஆகிவிட்டது" எழுதியது உண்மைதான் என்றும் ஆனால் தமக்கும் அக்கொலைக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்றும் அவர்கள் கூறினார்கள் அவர்களின் பேச்சு மக்களுக்குத் திருப்தியளிக்கவில்லை. அவர்களை மக்கள் ஐயக்கண்களுடனேயே நோக்கினர்.

அப்பொழுது திடீரெனச் அவ்வூர் சிலர் அங்கு வந்து அன்று காலை முஅஸ்ஸின் பதற்றத்துடன் ஆற்றங்கரையிலிருந்து வெளி வந்ததைத் தாங்கள் பார்த்ததாகவும் எனவே அவர்மீது தங்களுக்கு ஐயம் ஏற்படுவதாகவும் கூறினார்கள்.

உடனே அவருடைய பெட்டி திறந்து சோதிக்கப்பட்ட பொழுது அதிலே அச்சிறுமி அணிந்திருந்த ஆபரணங்கள் அனைத்தும் காணப்பட்டன.

அப்பொழுது மக்கள் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களின் மாண்பினை உணர்ந்து அவர்களிடம் தம் தவற்றிற்காக மன்னிப்புக்கோரி, அவர்களை நல்ல முறையில் உபசரித்து அனுப்பி வைத்தார்கள்.

மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் மாத்தரைப் பள்ளியில் சொற்பொழிவாற்றி தாம் கைப்பட எழுதிய 'ஃபத்ஹிஸ் ஸலாம்' என்ற நூல்களின் சில பிரதிகளை அங்கு விற்பனை செய்துவிட்டு திக்வெல்லாவுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் பொழுது,

தீன் லெப்பை என்பவர், "என்ன பிரமாதமாக எழுதி விட்டார்? நானும் என்னுடைய கையாலேயே (கவனிக்கவும் **#கையாலேயே** ) எத்தனையோ நூல்களை இதைவிட அழகாக எழுதி பிரதி எடுத்துள்ளேனே" என்று கூறி இழித்துரைத்தார்.

இவ்வாறு கூறிவிட்டுக் குளிக்கச் சென்ற அவரை முதலை இழுத்துச் சென்று கொன்று விட்டது. பின்னர் அவரின் உடல் கரையில் ஒதுங்கிய பொழுது அதில் வலது **#கையைக்** காணோம்.

உடலை எடுத்து முறைப்படி அடக்கம் செய்துவிட்டு அந்த முதலையைப் பிடித்து மக்கள் கொன்ற பொழுது அதன் வயிற்றில் தீன் லெப்பையின் **#வலதுகை** இருப்பதைக் கண்டு அதனை என்ன செய்வதென அறியாது திணறினர்.

அப்பொழுது ஒருவர் தாம் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களிடம் வாங்கிய 'ஃபத்ஹிஸ் ஸலாம்' என்ற நூலைக் கொண்டு வர அதில் இத்தகு சூழ்நிலையில் எவ்வாறு செயலாற்றுவது என்று பொறிக்கப்பட்டிருந்தது.

உடனே அவர்கள் கையை எடுத்து முழு உடலையும் அடக்கம் செய்வதற்கான, அத்தனை சடங்குகளையும் செய்து அதனை அடக்கம் செய்தனர்.

இதன்பின்னர் அவ்வூர் மக்கள் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களின் மாண்பினை உணர்ந்து அவர்களின் கரம் பிடித்து தீட்சை பெற்று அவர்களின் ஆன்மீக மாணவர்களாயினர்.

**Rahmath Rajakumaran**

மகான் மாப்பிள்ளை லெப்பை ஆலிம், பெற்றோர் அவருக்குச் சூட்டிய பெயர் சையிது முகம்மது. ஹிஜ்ரி 1232-ம் ஆண்டு முஹர்ரம் மாதம் பிறை பதினாறில் (கி.பி 1817) காயல்பட்டினத்தில்

பிறந்தார்கள்.

இவர்களின் தந்தை வெள்ளை அஹமது லெப்பை ஆலிம் ஆவார்.இவர் மாதிஹுர் ரஸூல் சதகதுல்லாஹில் காஹிரி (சதகதுல்லா அப்பா) அவர்களின் வம்சாவழியில் தோன்றியவர்.

இவர்களின் இயற்பெயர் செய்யித் முஹம்மத்.அவரது இரண்டாவது வயதில், அவர்களது குடும்பம் கீழக்கரையில் குடியேறியது.இவர் தனது 10வது வயதில் புனித அல்குர்ஆனை மனனம் செய்தார்.

குழந்தைக்கு நன்றாகப் பேச வரவில்லை. திக்குவாய்ப் பிள்ளையாக இருந்தார். அந்தக் குறையை எப்படியாவது போக்கிவிடத் தந்தையார் முயன்றார். அதனால் ஷைகு முகம்மது அல் நுஸ்கி என்பவரிடம் குழந்தையைக் கொண்டு சென்றார்.

அந்தப் பெரியவர் இறையருளை இறைஞ்சி குழந்தைக்கு ஓதிவிட்டார். தேனை நாவில் இட்டுத் தண்ணீரைப் பருகச் சொன்னார். பாலகரின் திக்குவாய் அகன்றுவிட்டது.

பத்து வயதிலேயே குர்ஆனை மனப்பாடம் செய்துவிட்ட சையிது முகம்மது அரூஸியா தைக்கா கல்வி நிலையத்திற்கு அனுப்பப்பட்டார். அவருடைய கல்வித்திறன் தைக்காவின் தலைவர் தைக்கா சாகிபைக் கவர்ந்தது.

தன் வீட்டு மாப்பிள்ளையாக்கிக்கொள்ள வேண்டும் என்று முடிவு செய்தார். அதன்படி தமது புதல்வி சாராவை மனைவியின் சம்மதத்துடன் மணம் செய்துவைத்தார். அதனால் அவருக்கு ஏற்பட்ட பெயர்தான் மாப்பிள்ளை லெப்பை.

தமிழ், அரபு, உர்து, பார்ஸி மொழிகளில் புலமை பெற்றிருந்த மாப்பிள்ளை லெப்பை பல நாடு நகரங்களுக்குப் பயணம் செய்து ஆத்ம ஞானிகளையும் அறிஞர்களையும் சந்தித்தார். ஐம்பத்தைந்தாவது வயதில் ஹஜ் கடமையை நிறைவேற்ற மக்கா நகருக்குச் சென்றரார்.

அங்கே ஒரு வியப்பு காத்திருந்தது. அங்குள்ள ஒரு நூலகத்தில் அவர் எழுதிய ‘மின்ஹதுஸ் சரந்தீப்’ என்ற நூலின் கையெழுத்துப் பிரதி வைக்கப்பட்டிருந்தது. கீழக்கரையில் தம்மால் எழுதப்பட்ட நூல் மக்கா நகரில் பட்டு உறையிடப்பட்டு பாதுகாக்கப்படுவதைக் கண்டு மகிழ்ந்தார். ஹஜ் கடமையை நிறைவேற்றிவிட்டு ஈரான், சிரியா, ஈராக், ஏமன் ஆகிய நாடுகளுக்குச் சென்று சமய, சமூக நிலைமைகளைக் கண்டறிந்தார்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 60

( ஹகீமே ஔலியா )

திர்மிதீ (ரஹ்) அவர்கள் இளமையில் அழகு மிக்கவர்களாய் விளங்கினர். அவர்களின் அழகால் ஈர்க்கப்பட்ட ஆரணங்கு ஒருத்தி அவர்களின் உடல்தழுவி இன்பம் நுகர எவ்வளவோ விரும்பியும், அவர்கள் அதற்கு இணங்கினார்களில்லை.

ஒரு நாள் அவர்கள் தம் தோட்டத்தில் இருக்கின்றார்கள் என்பதைக் கேள்வியுற்ற அவள், அவர்களை வற்புறுத்தி இணங்கச் செய்வதற்காக அங்குச் சென்ற பொழுது, அவர்கள் அவ் விடத்தை விட்டும்

அவளின் கொடும்பிடியை விட்டும் தப்பித்து வெருண்டோடினார்கள். எனினும் அவள் அவர்களை விட்டாளில்லை.

தன்னை அவர்கள் கொல்ல வந்தார்களென்று அவர்கள் மீது வீண் அபவாதம் சுமத்தி அலறிக் கொண்டு அவர்களைத் துரத்திக் கொண்டு ஓடினாள். ஆனால் அவர்களோ ஒரு சுவர் மீது ஏறிக் குதித்துத் தப்பித்துக் கொண்டார்கள்.

இது நிகழ்ந்து பல்லாண்டுகள் உருண்டோடிவிட்டன. திர்மிதீ (ரஹ்) அவர்கள் மூப்பெய்தி நரையும் திரையுமாக விளங்கினார்கள்.

ஒரு நாள் அவர்கள் இதனை நினைவு கூர்ந்தார்கள். 'அன்று அவளின் விருப்பத்தை நிறைவேற்றி இருந்தால் தான் என்ன? அப்பொழுது நான் இளைஞனாகத் தானே இருந்தேன். பின்னர் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரி இருக்கலாமே" என்று ஒரு கணம் அவர்கள் எண்ணினார்கள்.

அடுத்த கணம் அவர்களின் உள்ளத்தை மாபெரும் துயரம் ஆட்கொண்டது. அடங்கா சினத்துடன் வெகுண்டெழுந்தார்கள். "அடே அயோக்கியனே! நாற்பதாண்டுகளுக்கு முன் நீ இளைஞனாக இருக்கும் பொழுது இந்த எண்ணம் உனக்குத் தோன்றவில்லை. இப்பொழுது மீசை நரைத்த பின் உனக்கு ஆசை நரைக்கவில்லையா, என்ன?' என்று அலறினார்கள்.

இதன்பின் அவர்களின் உள்ளத்தை மாபெரும் துயரம் ஆட்கொண்டது. ஒரே அழுகையாக அழுது கொண்டிருந்தார்கள். "நான் ஒரு பாவி; ஒரு பாவி;" என்று கூறிக் கொண்டு அழுது கொண்டிருந்தார்கள். இவ்வாறு அவர்கள் மூன்று நாட்கள் வரை ஓயாது, ஒழியாது கூறி அழுது கொண்டிருந்தார்கள்.

நான்காவது நாள் இரவு அவர்கள் அழுது புலம்பி அரற்றிய பின், அயர்ந்து உறங்கும் பொழுது நானிலம் புரக்க வந்த நபிகள் பெருமான் (ஸல்) அவர்களைக் கனவில் தரிசித்தனர். அப்பொழுது அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் திர்மிதீ (ரஹ்) அவர்களை நோக்கி,

"திர்மிதீ! வருந்தற்க! அத்தீய எண்ணம் உம் உள்ளத்தில் நுழைந்தது உம் தவறாலன்று. நாம் மண்ணுலகு நீத்து நாற்பதாண்டுகளுக்கு மேற்பட்டு விட்டதன் காரணமாக ஏற்பட்ட தீயபலனே அது" என்று திருவாய் மலர்ந்து விட்டு மறைந்தனர்.

இதன் பின் திடுக்கிட்டு விழித்தெழுந்த திர்மிதீ (ரஹ்) அவர்களின் அகமும் முகமும் ஒருங்கு சேர்ந்து மலர்ந்தன. அண்ணலெம் பெருமான் தமக்குத் திருக்காட்சி நல்கி ஆறுதல் மொழி பகர்ந்தது கண்டு, அவர்களின் உள்ளம் உவகை பூத்தது.

இதன் பின் அவர்கள் எவ்வளவு தான் தங்களின் தீய இச்சைகளை

முறியடிக்க முனைந்து நின்ற போதினும் அவை சிலபொழுது தம் கோர

முகங்களைக் காட்டி அவர்களை நையாண்டி செய்தன. அது கண்டு அவர்களுக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அளவில்லை.

"என்னை, என் உடலை,என் ஆன்மாவை வெந்நரகிற்கு இரையாகவே அன்றி வேறெதற்காகவும் படைக்கவில்லை, அவ்விதமிருக்க நான் ஏன் அதனை ஊட்டி வளர்க்க வேண்டும்?" என்று அவர்கள் எண்ணினார்கள்.

இந்த எண்ணம் அவர்களின் உள்ளத்தில் மிகைக்கவே, அவர்கள் ஆற்றை நோக்கி அடியெடுத்து வைத்து நடந்தார்கள். அதன் ஓரத்தில் ஒருவன் வீற்றிருப்பதைக் கண்டதும், தம் கால்களையும், கைகளையும் இறுகப் பிணைத்து ஆற்றோரத்திலே உருட்டி விடுமாறு அவனை வேண்டிக் கொண்டார்கள்.

அவனும் அவர்களைச் சற்று நேரம் ஏற இறங்கப் பார்த்துவிட்டு "யாதோ பித்துக்குளி போன்று தோன்றுகிறது. அது கூறுகின்றபடி செய்து என்ன நடக்கிறது என்று பார்ப்போம்" என்று எண்ணி, அவ்வாறே செய்தான்.

ஆற்றின் மேடான கரையிலிருந்து அவன் அவர்களை உருட்டிவிடவே, அவர்கள் உருண்டோடி ஆற்றை அடைந்தார்கள். ஆனால் என்ன வியப்பு! ஆற்றுப் பிரவாகத்தின் வேகம், அவர்களின் கைளிலும்

கால்களிலும் இருந்த பிணைப்புக்களை எல்லாம் அறுத்தெறிந்தது. திடீரெனப் பேரலை ஒன்று வந்து அவர்களை ஆற்றோரத்திலே ஒதுக்கியது. அதுகண்டு திர்மிதீ (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்திற்கு அளவில்லை.

"இறைவனே! புகழுக்குரிய பெரியோனே!! ஏனோ படைத்தாய் இந்த இழிந்தோனை. இவன் சுவனத்திற்கும் தகுதியுள்ளவனாக இல்லை. நரகத்திற்கும் தகுதியுள்ளவனாக இல்லையே" என்று கூறி அழுதார்கள்.

அப்பொழுது அவர்களின் ஆன்மீகக் கண் திறந்தது. அவர்கள் தன்னிலை மறந்தார்கள். பேரின்ப இரகசியங்களெல்லாம் அவர்களின் மனக்கண்முன் பளிச்சிட்டன.

இதன்பின் அவர்கள் நாளுக்கு நாள் ஆன்மீக உச்சத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். "நான் இறைவனை ஆயிரம் தடவைகள் கனவில் கண்டேன், ஒருதடவை நான் அவனை நோக்கி, "இறைவ எம் பெரும! இறை நம்பிக்கை (ஈமான்) என் உள்ளத்திலிருந்து நீங்கி விடுமோ என்று நான் அஞ்சுகிறேன். அது நீங்கா வண்ணம் என் உள்ளத்தில் என்றென்றும் நிலைத்திருக்க ஓர் உபாயம் கூறுவாயாக!" என்று இறைஞ்சினேன்.

அதற்கு அவன், ஒவ்வொரு நாளும் வைகறைத் தொழுகையின் சுன்னத்துக்கும் ஃபர்ளுக்கும் இடையில்,

"பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம். அல்லாஹும்ம பிஹுருமத்தில் ஹஸனி வஅகீஹி வஜத்திஹி வஅபீஹி வஉம்மிஹி வபனீஹி நஜ்ஜினீமினல் கொமமில்லதீ அன்பீஹி யாஹையு யாகையூம் யாஃதல்ஜலாலிவல் இக்ராம் அஸ் அலுக அன்துகு இய கல்பீ பி நூரி மஅரிஃபத்திக யா அல்லாஹு யா அல்லாஹு யா அல்லாஹு யா அர்ஹமர் ராஹீமீன்" என்று ஓதி வருவீராக!" என்று கூறினான் என இயம்பினார்கள்.

அடிமைத்தனத்தை (உபூதிய்யத்தை) எவ்வாறு சரியாக நிறைவேற்றுவது என்பதை அறியாதவன், ருபூயிய்யத்' தாகிய இறை ஆட்சியின் தன்மையை நன்கு அறியாதவனே ஆவான். ஏனெனில் தன்னை அறியாதவன், தன் நாயனை அறிய மாட்டான். மனித இயல்புகளைச் சரியாக அறியாத ஒருவனால், இறைவனின் பண்புகளைச் சரிவர அறிய இயலாது" என்று அவர்கள் கூறினார்கள்.

அவர்கள் கதமுல் விலாயத், கிதாபுல் நஹ்ஜ், நவாதிருள் உஸூல், கிதாபுத் தௌஹீத், கிதாப் அதாபுல் கப்ர், ஆதாபுல் முரீதீன் ஆகிய நூல்களை எழுதியுள்ளனர். அவர்கள் தம் சுய வரலாற்றையும் எழுதியுள்ளனர். திருக் குர்ஆனுக்கு விளக்கவுரை எழுதத்துவங்கிய அவர்கள் அதனை நிறைவு செய்யவில்லை.

அவர்களின் எழுத்துக்கள் பிற்காலத்தில் ஆன்மீகக் கல்வி பெறப் பெரிதும் முயன்று கொண்டிருந்த இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களுக்குப் பெரிதும் உறுதுணையாக அமைந்திருந்தன. அவர்களின் எழுத்துக்களால் பெரிதும் கவரப்பட்டவர்களில் ஒருவர் ஷைகுல் அக்பர் இப்னு அரபி (ரஹ்) ஆவர்.

அவர்களின் சூஃபி தத்துவத்தின் காரணமாக, பிறந்த ஊராகிய திர்மிதியிலிருந்து விரட்டியடிக்கப்பட்ட அவர்கள், நீஷாப்பூர் வந்து, அங்கேயே தங்கி தத்துவப்பிரச்சாரம் செய்து வாழ்ந்து, ஹிஜ்ரி 285 ஆம் ஆண்டில் இறப்பெய்தினர்.

அவர்களின் இயற்பெயர் அபூ அப்துல்லா முஹம்மது இப்னு அலீ இப்னு அல்ஹுஸைன் அல் ஹகீமுல் திர்மிதீ என்பதாகும். ஆனால், அவர்களின் புகழ்ப் பெயர்களோ ஹகீமே ஔலியா, ஆலிமெரப்பானி என்பவையாகும்.

"முஹம்மது இப்னு அலீ திர்மிதீ ஓர் ஆணிமுத்தாவார். அவரைப் போன்ற ஒருவரை நாம் அகில உலகமும் தேடினும் காண இயலாது" என்று தம்முடைய ஷைகு கூறியதாக ஹுஜ்வீரி (ரஹ்) அவர்கள் எடுத்துரைக்கிறார்கள்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 61

( ஒரு சூஃபியின் இறுதி நேரம் )



இறுதியாக ஒரு வெள்ளிக்கிழமைப் பிற்பகல், ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்கள் தம்முடைய எண்பதாவது வயதில் இவ்வுலகு துறக்க வேண்டிய நேரமும் வந்து சேர்ந்தது. இதனை உணர்ந்த அவர்கள், தாம் தம்முடைய நண்பர்கள், மாணவர்கள் அனைவரும் உணவருந்திக் கொண்டிருக்கும் பொழுதே உயிர் துறக்க எண்ணி அவர்களுக்கெல்லாம், உணவு சமைக்குமாறு கூறி, அவர்களை உண்ணச் செய்து பார்த்துக் கொண்டிருந்தனர்.

இவ்வாறு அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அவர் களை இறப்பின் முதல் வேதனை கௌவிப் பிடித்தது. உடனே அவர்கள் தம் மாணவர் ஒருவரை நோக்கித் தாம் 'உளு' செய்யத் தண்ணீர் கொணரு மாறு கூறினர். 'உளு'ச் செய்யும் பொழுது, தண்ணீர் விரல்களுக்கிடையே வழிந்தோடாததைக் கண்ட அவர்கள், வழிந்தோடும் வண்ணம் தம் கைகளில் தண்ணீரை ஊற்றுமாறு கூறி, உளுவை ஒழுங்குறச் செய்து முடித்தனர்.

இதன்பின் அவர்கள் தொழச் செல்வதைக் கண்ட அவர்களின் மாணவர்கள், ''இவ்வளவு காலமாகத் தாங்கள் நிகழ்த்திய வணக்கங் களும், தொழுகைகளும், போதாவென்று, இப்பொழுதுமா தொழச் செல் கின்றீர்கள்?" என்று வினவிய பொழுது, "இப்பொழுதை விட நாள் தொழுவதற்கு வேறு எப்பொழுதும், அதிகத் தேவை இருந்ததில்லை" என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

தொழுது முடித்ததும், அவர்கள் சஜ்தாவில் விழுந்து அழுவதைக் கண்ட அவர்களின் மாணவர்கள், “ஏன் இவ்வாறு அழுகின்றீர்கள்?" என்று கூறிய பொழுது, ''என் வாணாளில் நான் இப்பொழுதை விட வேறு எப்பொழுதும், என்னுடைய ஆற்றாமையை இத்துணை அதிகமாக உணர வில்லை" என்று அவர்கள் கூறினர்.

பின்னர் அவர்கள் தம் அருகிலிருந்த திருக்குர் ஆன் பிரதியை எடுத்து ஓதத் துவங்கினார்கள். அது கண்ட அவர்களின் மாணவர்கள் 'என்ன! இந்நிலையில் குர் ஆன் முழுவதையும் ஓதுகின்றீர்களா?" என்று வினவிய பொழுது,

'என் வாழ்வுச் சுருள், சுருட்டப்படும் நிலையில் இருப்பதைப் பார்த்தபின், நான் ஓதாது வேறு எப்பொழுது ஓதுவது? திருக் குர்ஆனை விட மேலான நண்பரும், ஆறுதல் கூறுபவரும் வேறு எவருமில்லை. என்னுடைய என்பதாண்டு வணக்கமும், தொழுகையும், ஒரு சிறு நூலில் தொங்கிக் கொண்டுள்ளது. ஒரு காற்று வீசி அதனை அங்குமிங்கும் அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது.

அக்காற்று என்னை இறைவனை விட்டும் அப்புறப்படுத்துமோ அல்லது ஒன்றுபடுத்துமோ என்பதை நான் அறியேன். ஒரு பக்கம் சுவனம், நரகம் ஆகியவற்றிற்கான பாதைகள் தோற்றமளிக்கின்றன. மறுபக்கல் மரண தூதுவர் தோற்றமளிக்கின்றார். நீதி வழங்கும் எசமானன் அதோ நீதி வழங்கக் காத்துக் கொண்டிருக்கிறான்.

என் முன் இரண்டு பாதைகள் விரிந்து கிடக்கின்றன. அதில் எப்பாதையில் என் விதி என்னைச் சேர்த்திடுமோ நான் அறியேன்" என்று அவர்கள் கூறினர்.

இதன்பின் வெகுசிரமத்துடன் திருக்குர் ஆன் முழுவதையும் ஓதி முடித்த அவர்கள், இரண்டாவது தடவையும் அதனை ஓதத் துவங்கிய பொழுது, "ஏன் மீண்டும் சிரமத்துடன் அதனை ஓதுகின்றீர்கள்? அல்லாஹ், அல்லாஹ் என்று கூறுங்கள். அது போதும்''என்று மாணவர்கள் கூறிய பொழுது,

"நான் ஒரு கணமேனும் அல்லாஹ்வை மறந்ததில்லையே. மற்றவர்களுக்கன்றோ அதனை நீங்கள் நினைவுறுத்த வேண்டும்" என்று கூறித் தங்களின் விரல்களால் எண்ணிய வண்ணம் 'அல்லாஹ், அல்லாஹ்' என்று 'திக்ரு' செய்தனர்.

அதன் பின் அவர்கள் மீண்டும் திருக்குர் ஆனை ஓதினார்கள். அவர்கள் அதனை ஓதி வருங்கால். சூரத்துல் பகராவில் எழுபதாவது திருவசனமாகிய, "அல்லாஹ் நாடினால் இனி நாம் நிச்சயமாக நேர்வழி பெற்று விடுவோம்" என்பதனை ஓதியதும், அவர்களின் உயிர் அவர்களின் உடலை விட்டும் கழன்றது.

மறுநாள் பக்தாதிலுள்ள ஷூனிஸியா அடக்கவிடத்தில் அவர்கள் தம், மாமனார் ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்திற்கு அண்மையில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள். அப்பொழுது பக்தாது நகரமே துக்கத்தில் மூழ்கி இருந்தது.

அவர்களின் இறப்பிற்குப் பின், அவர்களை அபூ முஹம்மது ஹுரைரி (ரஹ்) அவர்கள், கனவில் கண்டு அவர்களைப் பற்றி வினவிய பொழுது, "எல்லாம் பயனற்றுப் போயின. 'ஸுப்ஹானல்லாஹ்' என்று நான் ஓதிவந்தது தான் பலனளித்தது" என்று அவர்கள் கூறினார்கள்.

மற்றொருவர் அவர்களைக்கனவில் கண்டு, அவர்களின் நிலை பற்றி விசாரித்த பொழுது, தமக்கு அன்பளிப்பாக வந்த பறவை ஒன்றைத் தாம் சில நாட்களாகக் கூட்டிலடைத்து வைத்த பின், அதனைத் திறந்து

விட்டதன் காரணமாக, இறைவன் தமக்கு மீட்சி நல்கியதாக அவர்கள் பதிலுரைத்தார்கள்.

மற்றொருவர் அவர்களைக் கனவில் கண்டு, அதே கேள்வியை அவர்களிடம் கேட்ட பொழுது, “அல்லாஹ் என்னை என் வணக்கத்தின் காரணமாகவல்ல, தன்னுடைய கழிவிரக்கத்தின் காரணமாக, என் பாவம். பொறுத்தருளினான். நள்ளிரவில் நான் துயிலெழுந்து தொழுத இரண்டு ஏக அத் 'தஹஜ்ஜுத்' தொழுகையைத் தவிர்த்து, ஏனைய என்னுடைய வணக்கங்களெல்லாம், கற்ற கல்வியெல்லாம், எனக்கு எத்தகைய பயனும் அளிக்கவில்லை " என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 61

( ஒரு சூஃபியின் இறுதி நேரம் )

இறுதியாக ஒரு வெள்ளிக்கிழமைப் பிற்பகல், ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்கள் தம்முடைய எண்பதாவது வயதில் இவ்வுலகு துறக்க வேண்டிய நேரமும் வந்து சேர்ந்தது. இதனை உணர்ந்த அவர்கள், தாம் தம்முடைய நண்பர்கள், மாணவர்கள் அனைவரும் உணவருந்திக் கொண்டிருக்கும் பொழுதே உயிர் துறக்க எண்ணி அவர்களுக்கெல்லாம், உணவு சமைக்குமாறு கூறி, அவர்களை உண்ணச் செய்து பார்த்துக் கொண்டிருந்தனர்.

இவ்வாறு அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அவர் களை இறப்பின் முதல் வேதனை கௌவிப் பிடித்தது. உடனே அவர்கள் தம் மாணவர் ஒருவரை நோக்கித் தாம் 'உளு' செய்யத் தண்ணீர் கொணரு மாறு கூறினர். 'உளு'ச் செய்யும் பொழுது, தண்ணீர் விரல்களுக்கிடையே வழிந்தோடாததைக் கண்ட அவர்கள், வழிந்தோடும் வண்ணம் தம் கைகளில் தண்ணீரை ஊற்றுமாறு கூறி, உளுவை ஒழுங்குறச் செய்து முடித்தனர்.

இதன்பின் அவர்கள் தொழச் செல்வதைக் கண்ட அவர்களின் மாணவர்கள், ''இவ்வளவு காலமாகத் தாங்கள் நிகழ்த்திய வணக்கங் களும், தொழுகைகளும், போதாவென்று, இப்பொழுதுமா தொழச் செல் கின்றீர்கள்?" என்று வினவிய பொழுது, "இப்பொழுதை விட நாள் தொழுவதற்கு வேறு எப்பொழுதும், அதிகத் தேவை இருந்ததில்லை" என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

தொழுது முடித்ததும், அவர்கள் சஜ்தாவில் விழுந்து அழுவதைக் கண்ட அவர்களின் மாணவர்கள், “ஏன் இவ்வாறு அழுகின்றீர்கள்?" என்று கூறிய பொழுது, ''என் வாணாளில் நான் இப்பொழுதை விட வேறு எப்பொழுதும், என்னுடைய ஆற்றாமையை இத்துணை அதிகமாக உணர வில்லை" என்று அவர்கள் கூறினர்.

பின்னர் அவர்கள் தம் அருகிலிருந்த திருக்குர் ஆன் பிரதியை எடுத்து ஓதத் துவங்கினார்கள். அது கண்ட அவர்களின் மாணவர்கள் 'என்ன! இந்நிலையில் குர் ஆன் முழுவதையும் ஓதுகின்றீர்களா?" என்று வினவிய பொழுது,

'என் வாழ்வுச் சுருள், சுருட்டப்படும் நிலையில் இருப்பதைப் பார்த்தபின், நான் ஓதாது வேறு எப்பொழுது ஓதுவது? திருக் குர்ஆனை விட மேலான நண்பரும், ஆறுதல் கூறுபவரும் வேறு எவருமில்லை. என்னுடைய என்பதாண்டு வணக்கமும், தொழுகையும், ஒரு சிறு நூலில் தொங்கிக் கொண்டுள்ளது. ஒரு காற்று வீசி அதனை அங்குமிங்கும் அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது.

அக்காற்று என்னை இறைவனை விட்டும் அப்புறப்படுத்துமோ அல்லது ஒன்றுபடுத்துமோ என்பதை நான் அறியேன். ஒரு பக்கம் சுவனம், நரகம் ஆகியவற்றிற்கான பாதைகள் தோற்றமளிக்கின்றன. மறுபக்கல் மரண தூதுவர் தோற்றமளிக்கின்றார். நீதி வழங்கும் எசமானன் அதோ நீதி வழங்கக் காத்துக் கொண்டிருக்கிறான்.

என் முன் இரண்டு பாதைகள் விரிந்து கிடக்கின்றன. அதில் எப்பாதையில் என் விதி என்னைச் சேர்த்திடுமோ நான் அறியேன்" என்று அவர்கள் கூறினர்.

இதன்பின் வெகுசிரமத்துடன் திருக்குர் ஆன் முழுவதையும் ஓதி முடித்த அவர்கள், இரண்டாவது தடவையும் அதனை ஓதத் துவங்கிய பொழுது, "ஏன் மீண்டும் சிரமத்துடன் அதனை ஓதுகின்றீர்கள்? அல்லாஹ், அல்லாஹ் என்று கூறுங்கள். அது போதும்''என்று மாணவர்கள் கூறிய பொழுது,

"நான் ஒரு கணமேனும் அல்லாஹ்வை மறந்ததில்லையே. மற்றவர்களுக்கன்றோ அதனை நீங்கள் நினைவுறுத்த வேண்டும்" என்று கூறித் தங்களின் விரல்களால் எண்ணிய வண்ணம் 'அல்லாஹ், அல்லாஹ்' என்று 'திக்ரு' செய்தனர்.

அதன் பின் அவர்கள் மீண்டும் திருக்குர் ஆனை ஓதினார்கள். அவர்கள் அதனை ஓதி வருங்கால். சூரத்துல் பகராவில் எழுபதாவது திருவசனமாகிய, "அல்லாஹ் நாடினால் இனி நாம் நிச்சயமாக நேர்வழி பெற்று விடுவோம்" என்பதனை ஓதியதும், அவர்களின் உயிர் அவர்களின் உடலை விட்டும் கழன்றது.

மறுநாள் பக்தாதிலுள்ள ஷூனிஸியா அடக்கவிடத்தில் அவர்கள் தம், மாமனார் ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்திற்கு அண்மையில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள். அப்பொழுது பக்தாது நகரமே துக்கத்தில் மூழ்கி இருந்தது.

அவர்களின் இறப்பிற்குப் பின், அவர்களை அபூ முஹம்மது ஹுரைரி (ரஹ்) அவர்கள், கனவில் கண்டு அவர்களைப் பற்றி வினவிய பொழுது, "எல்லாம் பயனற்றுப் போயின. 'ஸுப்ஹானல்லாஹ்' என்று நான் ஓதிவந்தது தான் பலனளித்தது" என்று அவர்கள் கூறினார்கள்.

மற்றொருவர் அவர்களைக்கனவில் கண்டு, அவர்களின் நிலை பற்றி விசாரித்த பொழுது, தமக்கு அன்பளிப்பாக வந்த பறவை ஒன்றைத் தாம் சில நாட்களாகக் கூட்டிலடைத்து வைத்த பின், அதனைத் திறந்து

விட்டதன் காரணமாக, இறைவன் தமக்கு மீட்சி நல்கியதாக அவர்கள் பதிலுரைத்தார்கள்.

மற்றொருவர் அவர்களைக் கனவில் கண்டு, அதே கேள்வியை அவர்களிடம் கேட்ட பொழுது, “அல்லாஹ் என்னை என் வணக்கத்தின் காரணமாகவல்ல, தன்னுடைய கழிவிரக்கத்தின் காரணமாக, என் பாவம். பொறுத்தருளினான். நள்ளிரவில் நான் துயிலெழுந்து தொழுத இரண்டு ஏக அத் 'தஹஜ்ஜுத்' தொழுகையைத் தவிர்த்து, ஏனைய என்னுடைய வணக்கங்களெல்லாம், கற்ற கல்வியெல்லாம், எனக்கு எத்தகைய பயனும் அளிக்கவில்லை " என்று அவர்கள் விடையிறுத்தார்கள்

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 62

( நான் தோன்றும் பொழுது, அவன் மறைந்து விடுகின்றான் )

குராஸானிலிருந்து பக்தாது வந்து குடியேறிய ஒரு குடும்பத்தின் வழித்தோன்றலாக அவதரித்த அபுல் ஹுஸைன் அஹ்மது இப்னு முஹம்மது அல் நூரி (ரஹ்) அவர்கள், அக்காலத்தில் பக்தாது மாநகரில் வாழ்ந்து வந்த ஆண்டகை ஸரீஅஸ்ஸகதி (ரஹ்) அவர்களின் ஆன்மீக மாணவராவர்.

அபுல் ஹுஸைன் நூரி (ரஹ்) அவர்கள் இரவில் பேசும் பொழுது அவரின் வாயிலிருந்து ஒளி யொன்று புறப்பட்டு, அவரின் இல்லம் முழுவதையும் ஒளி மயமாக்கிற்று அந்தப் பேரொளிசினால் அவர் மனிதர்களின் உள்ளங்களின் இரகசியங்களை விளங்கிக் கொண்டார்.

எனவே தான் ஜூனைத் (ரஹ்) அவர்களும், அவரை 'அபுல் ஹஸன் ஜாஸூஸுல் குலூப் ஆக (இதயங்களின் ஒற்றராக) உள்ளார்" என்று கூறினர் என்றும், அதன் காரணமாக அவர் நூரி' என்றும் அழைக்கப்பட்டார் என்று கூறுனர் சிலர்.

"இல்லை; இல்லை. அது அவ்வாறன்று. அவரின் உள்ஆன்மீக பேரொளியால் நிரம்பப் பெற்றதன் காரணமாக, அவர் ஆன்மீகத் தெளிவு பெற்றுப் பற்பல ஆன்மீக இரகசியங்களை வெளிப்படுத்தினார். அதன். காரணமாக அவருக்கு அப்பெயர் ஏற்பட்டது" என்று எடுத்துரைப்பர் வேறு சிலர்.

"அவ்வாறெல்லாம் இல்லை. அவர் வனாந்தரங்களுக்குச் சென்று இரவு முழுவதும் விழித்திருந்து வணங்குவார். அப்பொழுது அவர் வணங்கிக் கொண்டிருக்கும் இடத்திற்கு நேரே ஒரு பேரொளி இலங்கிக் கொண்டிருக்கும். அதன் காரணமாக அவருக்கு அப்பெயர் ஏற்பட்டது என்ற விளக்கம் பகர்வர் மற்றும் சிலர்.

ஆனால் அது அவருக்கு எவ்வாறு ஏற்பட்ட போதினும், அவருடைய இயற்பெயர் அஹ்மதை விட அவருடைய குன்யத் அபுல் ஹுஸைனை விட அவரின் புகழ்ப் பெயர் நூர் என்பதே நிலைத்து விட்டது. நூரி, நூரி என்றே அவர் எங்கணும் புகழ் பெற்றுப் பொலிவுற்றுத் திகழவானார்.

ஒரு நாள் ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம் தோழர்கள் சிலருடன், நூரி (ரஹ்) அவர்களைக் காண்பதற்காக அவர்களின் இல்லம் சென்ற பொழுது, அவர்களின் தாளடிகளிலே நூரி (ரஹ்) அவர்கள் வீழ்ந்து,

"இறைவன் எனக்குச் செய்த அநியாயத்தைப் பார்த்தீர்களா? நான் கடுமையான போராட்டம் நிகழ்த்தினேன். இனிமேல் நான் பேராட கனக்கு ஆற்றலும் இல்லாதொழிந்து விட்டது. முப்பதாண்டுகளாக அவன் தோன்றும் பொழுது நான் மறைந்து விடுகின்றேன். நான் தோன்றும் பொழுது, அவன் மறைந்து விடுகின்றான்.

நான் இல்லாத போதுதான் அவன் தோன்றுகின்றான். நான் அவனை எவ்வளவோ கெஞ்சி, நானும் நீயும் ஒரே பொழுதில் தோன்ற வேண்டும் என்று இறைஞ்சிய போதினும் "அது முடியாது; ஒன்று நான் இருக்க வேண்டும் அல்லது நீ இருக்க வேண்டும்" என்று கூறிவிட்டான்" என்று இயம்பினர்.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம் தோழர்களை நோக்கி, ”இறைவனால் முழுக்க முழுக்கச் சோதிக்கப்பட்டு, அதன் காரணமாக யாது செய்வதென அறியாது திக்பிரமையடைந்துள்ள இம்மனிதரைப் பார்த்தீர்களா? இவ்வித நிலையைத்தான் ஒவ்வொருவரும் அடைய முயல வேண்டும்'' என்று கூறினர்.

அதன்பின் அவர்கள் நூரி (ரஹ்) அவர்களை நோக்கி. "அவன் உம்மால் திரையிடப்பட்ட போதினும், அல்லது உம்மால் வெளிப்படுத்தப்பட்ட போதினும், நீர், நீராக இருக்க மாட்டீர். எல்லாம் அவன் மயமாகவே இருப்பீர்' என்று கூறினர்.

ஒரு நாள் சிலர் ஜூனைத் (ரஹ்) அவர்களிடம் சென்று "சில நாட்களாக நூரி (ரஹ்) அவர்கள், கையில் ஒரு செங்கல்லைத் தூக்கிக் கொண்டு. அல்லாஹ், அல்லாஹ்' என்று அலறிய வண்ணம், தெருத் தெருவாக அலைந்து கொண்டுள்ளார்கள். உண்பதோ உறங்குவதோ இல்லை. எனினும் ஒழுங்காகக் குறித்த வேளைகளில் 'உளூச் செய்து தொழுது வருவதானால், அவர்கள் தம்மை மறந்த ஃபனா நிலையை எய்தவில்லை. தன்னுணர்வோடு தான் இருக்கிறார்கள் என்று எண்ணுகின்றோம்" என்று கூறினர்.

அது கேட்ட ஜுனைத் அவர்கள், "நீங்கள் எண்ணுவது தவறு. தம்மை மறந்த ஃபனா நிலையை எய்தியவர்களை, அவர்கள் மதக் கடமைகளைத் தவற விடாது நிறைவேற்றி வரும் வண்ணம் அல்லாஹ் கண்காணித்து வருகின்றான்" என்று கூறினர்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 63

( காத்தமுல்வலீ , ஆரிஃபுபில்லாஹ், சையிதுல் ஆலிம், காமில் முக்கம்மில் )




தொண்டியில் அடங்கப் பெற்றிருக்கும் அபூபக்ர் வலிய்யுல்லாஹ் அவர்களின் பாரம் பரியத்தில் அவர்களின் புதல்வர் லெப்பை கனி ஆலிம் சாஹிபு வழி வந்த நூர் முஹம்மது சாஹிபு அவர்களின் திருப் புதல்வர் பல்லாக்கு வலிய்யுல்லாஹ் அவர்கள்,

பல்லாக்கு வலிய்யுல்லாஹ் கீழக்கரையில் பிறந்தார்கள். பிறந்த நாள் ஹிஜ்ரி 1268 ரபீஉனில் அவ்வல் பிறை12. தாயார் பாத்திமா அம்மையாரும், தந்தையாரும் அவர்களுக்குச் சூட்டிய பெயர்தான் ஹபீப் முஹம்மது ஸதகதுல்லாஹ், ‘பல்லாக்குத் தம்பி’ என்றும் செல்லமாக அழைக்கப்பட்டு வந்தார்கள்.

“பல்லாக்கு வலிய்யுல்லாஹ்” என்று போற்றப்படும் ஹபீப் முஹம்மது ஸதகதுல்லாஹ் அவர்கள் கல்வத்து நாயகம் அவர்களிடம் கல்வி பயின்று, மாப்பிள்ளை லெப்பை ஆலிமிடம் தீட்ச்சை பெற்று அரும் பெரும் ஆன்மீகப் பணிபுரிந்து, கீழக்கரைக்குப் புகழ் சேர்த்த இறைநேசச் செல்வர் பல்லாக்கு வலிய்யுல்லாஹ் அவர்கள்.

கீழக்கரை பள்ளிவாசலில் தொழுகையை நிறைவேற்றுவதற்காக பல்லாக்கு வலிய்யுல்லாஹ் அவர்கள் அங்க சுத்தி (வுழு) செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது நீர் நிறைந்த ஹவ்ழிருந்து சில முறை தண்ணீரை கைகளால் வீசியெறிந்தார்கள். இதனைக் கவனித்துக் கொண்டிருந்த சிலர், தண்ணீரை வீசியதற்கு காரணம் கேட்டார்கள்.

‘தொண்டியில் ஒரு தீ விபத்து ஏற்பட்டிருக்கின்றது. சில வீடுகள் பாதிப்புக்குள்ளாகியுள்ளன. அந்தத் தீயை அணைப்பதற்காகவே அவ்வாறு செய்தேன். தீ அணைந்து விட்டது’ என்று அவர்கள் கூறினார்கள்.

இதை நம்பாத சிலர், உறுதிப்படுத்திக் கொள்ளும் விதத்தில் விசாரித்து வர ஏற்பாடு செய்தார்கள். ‘வலிய்யுல்லாஹ் விவரம் கூறிய அந்த நேரத்தில் தொண்டியில் தீ விபத்து ஏற்பட்டது என்பதும் பின்னர் தானாகவே அணைந்து விட்டது’ என்றும் தகவல் கிடைத்தது.

இறைவனின் பேரன்பில் மூழ்கிய ‘மஜ்தூப்’ ஆகவும் பல்லாக்கு வலிய்யுல்லாஹ் அவர்கள் இருந்திருக்கிறார்கள். இதன் காரணமாக அவர்களுக்கு ‘ஜத்பு’ ஏற்படுவதுண்டு. உயிரினங்களின் பேச்சை புரிந்து கொள்ளும் ஆற்றலை இவர்கள் பெற்றிருந்தார்கள்.

ஒரு முறை பல்லாக்கு வலிய்யுல்லாஹ் அவர்கள் புறா ஒன்றைச் சுட்டிக்காட்டி இது தம்மை ‘காத்தமுல்வலீ’ என்று சொல்வதாக மற்றவர்களிடம் கூறினார்கள்.

அவ்வாறே ஒரு வண்டை மற்றவர்களுக்குக் காட்டி, அது தம்மை ‘சையிதுல் ஆலிம்’ என்று மொழிவதாக நவின்றார்கள்.

இன்னொரு சமயம் தங்கள் மேனியில் அமர்ந்திருந்த ஈக்களைக் காட்டி அவை தம்மை ‘ஒருமுஃமின்’ என்றும், வலிய்யுல்லாஹ் என்றும் சொல்கின்றன என்பதாகக் குறிப்பிட்டார்கள்.

அப்பொழுது ஒருவர் அவர்களின் இக்கூற்றைப் பற்றி ஐயுற்ற பொழுது அதனைத் தம் உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட அவர்கள் " உள்ளிம் ளு மன்திகத் தைரி (நாம் பறவைகளின் மொழிகள் கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளோம்) என்று கூறினார்கள். அதுகேட்டு ஐயுற்றவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

ஒருதடவை அவர்கள் முத்துப்பேட்டை சென்றிருந்த பொழுது அங்கு ஒரு வீட்டில் ஒரு புனுகுப்பூனை கூட்டில் அடைக்கப்பட் டிருப்பதைக் கண்டு, "இன்ன பேருடைய வலையன் என்னை இன்ன காட்டிலிருந்து பிடித்துவந்தான்" என்று அந்தப் புனுகுப் பூனை என்னிடம் கூறுகிறது" என்று சொன்னார்கள். பின்னர் விசாரித்துப் பார்த்த பொழுது

உண்மை அதுவாகவே இருந்தது.

இதன்பின் அங்கு முடையப்பட்டுக் கிடந்த தென்னம் தட்டியைச் சுட்டிக்காட்டி, ''என்னை இன்னான் இன்ன தோட்டத்திலிருந்து கொண்டு வந்து முடைந்தான் என்று அத்தட்டி என்னிடம் கூறுகின்றது" என்றனர். பின்னர் விசாரித்துப் பார்த்தபொழுது உண்மையும் அதுவாகவே இருந்தது.

பின்னர் ஒருதடவை அவர்கள் மாட்டு வண்டியில் சென்று கொண்டிருந்த பொழுது அவ்வண்டியில் பூட்டப் பெற்றிருந்த மாடுகளில் ஒன்றைச் சுட்டிக்காட்டி, "இம் மாடு என்னை 'ஆரிஃபுபில்லாஹ்' என்று கூறுகிறது" என்று சொன்னார்கள்.

ஓரிரவு விளக்கு வெளிச்சத்தில் விளையாடிக் கொண்டிருந்த விட்டில் ஒன்று அவர்கள் மீது வந்து விழுந்தது. அப்பொழுது அவர்கள் தம் அருகில் இருந்தோரை நோக்கி, "இது என்னைக் காமில் முக்கம்மில் (இறை தேசத்தில் நிறைவானவர் நிறைவு பெற்றவர்) என்று அழைக்கிறது" என்று கூறினார்கள்.

காத்தமுல்வலீ , ஆரிஃபுபில்லாஹ், சையிதுல் ஆலிம்,காமில் முக்கம்மில்

போன்ற பட்டங்களை மனிதகுலம் அல்ல ; ஜீவராசிகள் அவர்களுக்கு கொடுத்த பட்டங்கள்.

1929- ம் ஆண்டு நம்புதாளைக்கு விஜயம் செய்த போது இவ்வூரில் கடுமையாக காரலா நோய் பரவி கொள்ளை கொண்டுள்ளதை மக்கள் பீதியுடன் கருணை மிக்க வலிய்யுல்லாஹ் அவர்களிடம் முறையிட்டனர்.

அப்போது வலிய்யுல்லாஹ் அவர்கள் நம்புதாளையை தனது அருள் ஆட்சிக்கு உட்பட்ட ஊராக தத்து எடுத்துக் கொண்டு இவ்வூரில் உள்ள ஒவ்வொரு குடியும் மாதம் ஒன்றுக்கு அரையணா வீதம் வருடத்திற்கு ஆறு அணா இருசால் செலுத்தி வர வேண்டும் என கட்டளையிடப்பட்டது

அதன் படி அம்மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு இன்று வரை இருசால் செலுத்தி வரப்படுகிறது. அன்று முதல் இவ்வூரில் காளரா நோய் இல்லாமல் ஆகிவிட்டது.

இப் பெரியார் அவர்கள் கி.பி. 1925 ம் ஆண்டிலிருந்து அகிலத்தின் அருட் பிழம்பாய் வந்துதித்த அண்ணல் நபி(ஸல்) அவர்கள் மீது மவ்லித் ஷரீப் ஓதி அன்னதானம் வழங்கும் படி நம்புதாளை மக்களுக்கு ஆலோசனை கூறினார்கள். இன்று வரை அவ்வூர் மக்கள் அதைப் பேணிவருகின்றார்கள்.

இந் நல்லார் அவர்கள் நம்புதாளையில் இருக்கும் பொழுது ஒரு சமயம் ஸுப்ஹுத் தொழுகைக்குப் பிறகு அண்மையில் உள்ள ஆயா குளத்தில் மீன் பிடித்து உண்ண ஆவலாய் உள்ளது என்றார்கள்.

அக்கணமே மக்கள் பல வலைகளைக் கொண்டு வந்து மீன் பிடித்தனர். பிடித்த மீன்களில் சிலதைச் சுட்டிக் காட்டி அதை தண்ணீரில் மீண்டும் விட்டு விடும் படியும், சிலதை சமைப்பதற்கு எடுத்துக் கொள்ளும் படியும் ஏவினர்.

அச்சமயம் சிறுவன் ஒருவன் தன் தோளில் மைனா ஒன்றை வைத்து விளையாடிக் கொண்டு இவர்கள் முன் வர.... ஏ! நங்க நத்தியே! அற்ப ஆயுள் கொண்ட பறவையே! அதற்குள் பல்லாக்குத் தம்பியை பார்த்து விட்டு வரலாம் என்றா வந்திருக்கின்றாய்? என்று மொழிந்து சில வினாடிகள் தான் இருக்கும்....

மீன்பிடி குளத்தின் மேல் வட்டமிட்டுக் கொண்டிருந்த செம்பருந்து ஒன்று சர்....ர்....ரென்று கீழே இறங்கி அந்த மைனாவை ராஞ்சி சென்றது.

. இறப்பெய்வதற்கு நான்கு நாட்களுக்கு முன்பு தங்கள் முடிவைப் பற்றி அறிவித்தார்கள். ‘பல்லாக்குத் தம்பி மறையப் போகிறார். ஏராளமான அன்பர்கள் வெளியூர்களில் இருந்து வருவார்கள்’ என்றார்கள்.

அதன் படி 1360 ம் ஆண்டு துல்கஃதா இருபத்தைந்தாம் நாள் வெள்ளிக்கிழமை அன்று வழக்கம் போல் காலை உணவு உட்கொண்ட அவர்கள் ஜும்ஆ நேரத்தில் மறைந்தார்கள். அப்பொழுது அவர்களுக்கு வயது 92.

கீழக்கரை புதுப் பள்ளிவாசலை அடுத்துள்ள தோட்டத்தில் பல்லாக்கு வலிய்யுல்லாஹ் அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 64

( ஃபனாஃபிஷ் ஷைகு )

ஒருநாள் காஜா பஷீர் அஹ்மது சாஹிப் (ரஹ்) அவர்கள் தேவ்பந்த் புகைவண்டி நிலையத்தில் நின்று கொண்டிருக்கும் பொழுது அங்கிருந்த யோகி ஒருவர் அவர்களையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார். அதைக் கவனித்த அவர்கள், "என்ன மகராஜ், என்னைக் கூர்ந்து பார்க்கிறீர்கள்?" என்று அவரை வினவினர்.

அதற்கு அவர், "உம்முடைய ஆசான் மிகவும் ஆன்மீக ஆற்றல் வாய்க்கப் பெற்றவர்" என்று கூறினார்.

“சரி என்னுடைய ஆசான் யார் என்று கூறுகின்றீர்களா?" என்று வினவினார்கள் அவர்கள்.

அதுகேட்டுப் புன்முறுவலை உதிர்த்த அந்த யோகி, "உம்முடைய ஆசானா? அவர் தாம் ஷைகுல் மஷாயிஹ் ஹுஸைன் அஹ்மத் மதனீ" என்று பதிலிறுத்தார். அதன்பின் அந்த யோகி , "உம்முடைய ஆசான் உம்மைக் காப்பாற்றி விட்டார். போம்!" என்று கூறி வாழ்த்தி வழியனுப்பி வைத்தார்.

மற்றொரு நாள் காஜா அவர்கள் தேவ்பந்த் மஸ்ஜிதில் அமர்ந்து தன் ஆசானின் ஆணையின் மீது இஸ்மு தாத்தை (அதாவது அல்லாஹ் என்ற இஸ்மை) ஒன்றே கால் இலட்சம் முறை ஓதிக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது அவர்களின் கண்ணெதிரே தேவ்பந்த் அஞ்சல் நிலையம் காட்சி வழங்கியது. அதிலுள்ள ஒவ்வொரு பொருளும் அவர்களின் கண்களுக்குத் தெரிந்தன.

பின்னர் திரை விலகியது. மற்றொரு காட்சி தொடங்கியது. அவர்கள் மதரஸா மாணவர் ஒருவரின் அறைக்குள் நுழைகிறார்கள். அங்கிருந்த நூல் ஒன்றை எடுத்து விரித்துப் பார்த்து விட்டு அவ்விடத்திலேயே அதனை வைத்து விட்டுத் திரும்பி விடுகிறார்கள். ஆனால் உண்மையில் அவர்கள் அவ்விடத்தைவிட்டு அகலவில்லை. அமர்ந்த இடத்திலேயே அமர்ந்திருக்கிறார்கள். இது அவர்களுக்குப் பெரும் வியப்பை அளித்தது.

அடுத்த நாள் காலை அந்த அறையில் தங்கியிருந்த மாணவர், காஜா அவர்களிடம் வந்து, "சென்ற இரவு என் அறையில் ஒரு விநோத சம்பவம் நிகழ்ந்தது. நான் படித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது திடீரென என் அருகிலிருந்த நூல் ஒன்று மேலே கிளம்பிப் போய் பின்னர் கீழே அதன் இடத்தில் வந்து தானாகவே அமர்ந்து கொண்டது. எழுதுகோலிலும் ஒருவித அசைவு ஏற்பட்டது" என்று கூறினார். காஜா அவர்கள் அவரிடம் யாதொன்றும் கூறவில்லை.

பின்னர் அவர்கள் இவ்விஷயத்தைத் தம் ஆசானிடம் கூறினர். அதுகேட்ட ஆசான் மகிழ்ச்சியுற்றார். "ஆன்மீக வழியில் அடியெடுத்து வைக்கும் மாணவர் செல்லும் வழியில் நூதனமான காட்சிகளை யெல்லாம் காண நேரிடும். ஆனால் அவற்றையெல்லாம் அவர் பெரிது கண்டு அத்துடன் தன் பயணத்தை நிறுத்திவிடக் கூடாது. தொடர்ந்து செய்து கொண்டே இருக்க வேண்டும்' என்று அருள் எச்சரிக்கை செய்தனர்.

மற்றொரு நாள் அவர்கள் இரவில் தனியே அமர்ந்து 'பாரா தஸ்பீஹ்' என்ற திக்ரை செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் திடீரென்று அங்கிருந்து ஒரு பர்லாங்குக்கு அப்பாலுள்ள ஒரு மௌலவி சாஹியின் அறைக்குள் நுழைகிறார்கள். பின்னர் திரும்பி வந்து தம் இருப்பிடத்தில் அமர்ந்து கொள்கிறார்கள். ஆனால் உண்மையில் அவர்கள் திக்ரு செய்த அவ்விடத்தை விட்டும் ஓர் அங்குலம் கூட நகரவில்லை.

அடுத்த நாள் காலை அந்த மௌலவி சாஹிப், காஜா அவர்களின் அறைக்கு வந்து, "சென்ற இரவு தாங்கள் என் அறைக்கு வந்தீர்களே, ஏன் என்னிடம் எதுவும் பேசாது திரும்பி விட்டீர்கள்?" என்று வினவினார். காஜா அவர்களுக்கோ என்ன பதிலிறுப்பது என்றே புரியவில்லை.

பின்னர் அவர்கள் இதனைத் தம் ஆசானிடம் எடுத்துரைத்தார்கள். அதற்கு ஆசான், "திக்ரின் காரணமாக உடல் சூடேறியதும் உயிர் வெளியே புறப்பட்டுச் செல்கிறது. சூடு தணிந்ததும் அது மீண்டும் தன் கூண்டுக்குள் வந்து புகுந்து கொள்கிறது. இதுவே உமக்கு ஏற்பட்ட நிலையாகும்.

இந்த நிலையில் பல அகமிய இரகசியங்கள் மனிதனுக்கு வெளிப் படுகின்றன. மனிதன் தான் ஒருவனே திக்ரு செய்வதாகக் கருதுகின்றான். ஆனால் சில பொழுது அவனுடைய ஒவ்வோர் உறுப்பும் இறைவனை திக்ரு செய்வதும் உண்டும்" என்று கூறினார்கள்.

ஒருநாள் அவர்கள் இரவில் தம் இல்லத்தில் படுத்திருக்கும் பொழுது திடீரென அவர்கள் எழுந்து தம்மைப் பார்த்தார்கள். முழுக்க, முழுக்க தாம் தம் ஆசான் ஷைகுல் மஷாயிஹ் ஹுஸைன் அஹ்மத் மதனீ (ரஹ்) அவர்கள் போன்று தோன்றுவதைக் கண்டு அவர்களுக்கே பெரும் வியப்பேற்பட்டது.

கண்ணாடி முன்சென்று தம் உருவைப் பார்த்தார்கள். கண்ணாடியில் ஹலரத் மதனீ (ரஹ்) அவர்களின் திரு வுருவமே காட்சி வழங்கியது. எதுவும் புரியாது படுத்து உறங்கிவிட்டார்கள்.

காஜா அவர்கள் உறங்கிய பின் அவர்களின் அறைக்குள் வந்த அவர்களின் துணைவியார் தம் கணவர் படுத்திருக்கும் இடத்தில் ஹலரத் மதனீ அவர்கள் படுத்திருப்பதைக் கண்டு தம் மாமியாரிடம் சென்று,"ஹலரத் மதனீ அவர்கள் வந்திருக்கிறார்கள்" என்று கூறினார்.

அதுகேட்டு காஜா அவர்களின் அன்னையார், "எவருக்கும் தெரியாமல் ஹலரத் மதனீ அவர்கள் எங்கிருந்து இங்கு வந்தார்கள்! என் மகன் பஷீர் அஹ்மது தானே படுத்திருந்தார்" என்று கூறிக்கொண்டே வந்து பார்க்க,

ஹலரத் மதனீ அவர்களே அங்குப் படுத்திருப்பதைக் கண்டு அவர்களை வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டு நின்றார்கள். அவர்கள் இவ்வாறு பார்த்துக் கொண்டு நிற்கும் பொழுதே காஜா அவர்களின் தோற்றம் சிறிது சிறிதாக மாறுதலடைந்து அவர்களின் சுய உருவை அடைந்தது.

அப்பொழுது அவர்களின் அன்னை தம் மருமகளை நோக்கி, "என்னவோ சொன்னாயே, இதோ பார்! என் மகன் பஷீர் அஹ்மது தான் படுத்திருக்கிறார்!" என்று கூறினார்.

காஜா அவர்களின் துணைவியாருக்கோ யாது பதில் கூறுவ தென்றே விளங்கவில்லை. விடிந்தெழுந்ததும் காஜா அவர்கள் இந்நிகழ்ச்சியைத் தம் ஆசானுக்கு மடல் மூலம் தெரியப்படுத்தினர். அதற்கு அவர்களின் ஆசானிடமிருந்து,

“நீர் ஃபனாஃபிஷ் ஷைகில் (ஆசானுக்கு உம்மை அர்ப்பணம் செய்து

கொள்வதில்) நிறைவு பெற்று விட்டீர்" என்று பதில் வந்தது.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 65

(ஒரு சூஃபியின் உலகப் புகழ் பெற்ற மாணவச் செல்வங்கள் )

மாபெரும் இறைநேசச் செல்வராகிய கீழக்கரை தைக்கா சாஹிபு வலி அவர்கள் ஹிஜ்ரி 1192 ஆம் ஆண்டில் காயல்பட்டினத்தில் பிறந்தனர். அவர்களின் தந்தை முஹம்மது நெய்னா, தேட்டாளர் மஹ்தூம் நெய்னா என்ற செல்வரின் வழிவழிப் பேரராவார்.

தைக்கா சாஹிபு வலி அவர்கள் இளமையில் தம் தாய் மாமா ஷைகு அப்துல் காதிர் தைக்கா லெப்பை ஆலிம் சாஹிபு அவர்களிடம் குர்ஆனை ஓதி மனனம் செய்ததோடு மார்க்கக் கல்வியும் பயின்றனர்.

இளமையிலேயே தைக்கா சாஹிபு வலி அவர்கள் மிகவும் வேணுதலும் மார்க்க பக்தியும் உடையவர்களாயிருந்தனர். அவர்கள் பாலகராக இருந்தபொழுது அவர்களின் அன்னை இறந்துவிட்டதனால் அவர்கள் பல பெண்களிடம் பால் குடித்திருந்தனர்.

அவர்களுக்கு வயதேறப் பெற்றதும் அவர்களுக்கு தம் மகளை மணமுடித்துக் கொடுக்கப் பலர் முன்வந்த பொழுது அவர்கள் பின் வாங்கினார்கள். அதற்குக் காரணம், எவர் எவர் தம் பால் குடி சகோதரிகள் என்று அவர்களுக்குத் தெரியாமல் போனதேயாகும்.

எனவே தான் பிறந்த ஊரில் எவரையும் மணமுடித்துக் கொள்ள விரும்பாத அவர்கள் கீழக்கரை வந்து அங்கு உள்ள பெண்ணை நிக்காஹ் செய்தார்கள்

தைக்கா சாஹிபு வலியுல்லாஹ் அவர்களின் தாளில் தாள் மடித்து அமர்ந்து பாடம் கேட்டவர்கள் பலர். அவர்கள் பாடம் போதித்துக் கொண்டிருக்கும் பொழுது, ''என் மாணவர்களில்

1) ஓர் அமீர்,

2) ஒரு துறவி,

3) ஒரு மாபெரும் மார்க்க விற்பன்னன் தோன்றுவார்கள்" என்று அடிக்கடி கூறுவார்கள். அவர்கள் கூறிய வண்ணமே நிகழ்ந்தது.

1) ஓர் அமீர் :

அவர்களின் மாணவர் ஹபீபு முஹம்மது மரைக்காயரின் வாணிபம் விரைவில் உச்சநிலை எய்தியது. துவக்கத்தில் "ஹபீபு முஹம்மது மரைக்காயர்" என்று அழைக்கப்பட்ட அவர் பின்னர் "ஹபீப் அரசர்" என்று அழைக்கப்பட்டனர்.

ஹபீபு முஹம்மது மரைக்காயருடைய கப்பல்கள் உலகின் நாலா பக்கங்களிலும் சென்று வந்தன. அவருடன் வாணிபத்தில் போட்டியிட இயலாது பிரிட்டிஷாரும், டச்சுக்காரரும் பெரிதும் திணறினர். எனவே வாணிபத்தில் அவரின் ஒத்துழைப்பை அவர்கள் போட்டி போட்டுக் கொண்டு விரும்பினார்கள்.

ஹபீபு முஹம்மது மரைக்காயரிடம் பல கப்பல்கள் இருந்தன. அவர் நாகப்பட்டினத்தில் ஒரு கப்பல் கட்டிய பொழுது அதற்கு நாகூர் நாயகரின் பெயரால் 'காதர் பக்ஷ்' (காதர் வலி தந்த பிச்சை) என்று பெயர் சூட்டியதுடன் அது எவ்விதச் சிரமமுமின்றிக் கடலில் இறங்கியதற்காக தர்காவின் மேல் புறத்தில் ஒன்பது கடைகளைக் காணிக்கையாகக் கட்டிக் கொடுத்தார்.

கி.பி. 1976 ஆம் ஆண்டில் நியூஸிலாந்தின் அருகில் கண்டெடுக்கப்பட்ட 'முஹ்யித்தீன் வக்காஸ்' என்ற கப்பலின் மணி அவருடைய கப்பல் மணியே என்று கருதப்படுகிறது.

பிரிட்டிஷாருக்கும் டச்சுக்காரர்களுக்கும் இடையே போர் நடந்த போது பிரிட்டிஷ் அரசாங்கம் அவரிடம் சில கப்பல்களைத் தந்துதவுமாறு வேண்ட, அவர் அச்சமயத்தில் கீழக்கரைத் துறைமுகத்தில் இருந்த தம் ஒன்பது கப்பல்களை அவர்களுக்குக் கொடுத்துதவினார்.

அதற்கு நன்றி தெரிவிக்கும் முறையில் பேரரசி விக்டோரியா அவருக்கு 'ஸ்டார் ஆப் இந்தியா' என்னும் உயரிய பதக்கத்தை வழங்கிக் கௌரவித்ததோடு 'புலாவ் புரானி' என்ற கிழக்கிந்தியத் தீவையும் அவருக்கு அன்பளிப்பாக வழங்கினார்.

ஹபீபு முஹம்மது மரைக்காயருடைய கப்பல்கள் தங்குவதற்கு இந்தியாவின் துறைமுகப் பட்டினங்களிலும் இலங்கை, பர்மா, மலேஷியா, ஜாவா ஆகிய நாடுகளிலும் அவருக்குச் சொந்தமான இடங்கள் இருந்தன.

இலங்கையில் புத்தளத்திற்கு அண்மையிலுள்ள ஏத்தாளை என்ற துறைமுகமும் சிங்களபூரின் பக்கத்திலுள்ள அந்துபார் என்ற கப்பல் கட்டும் இடமும் அவருக்குச் சொந்தமானவையே ஆகும்.

அவரின் கடல் வாணிபச் சிறப்புக்கு எடுத்துக்காட்டாக இன்று கூட கடற்கரைப் பகுதியில் வாழும் மக்கள் 'கார்த்திகைச் சோளம் என்று முன்னர் அழைக்கப்பட்டு வந்த காற்றை 'மரைக்காயர் சோளம் என்று அழைத்து வருவதைக் கூறலாம்.

முத்து வாணிபத்தில் ஈடுபட்டிருந்த அவர் முத்து வணிகர்கள் தங்குவதற்கு வசதியாக நம்நாட்டில் மதுரை, காரைக்குடி, இராமேஸ் வரம், திருவனந்தபுரம் ஆகிய ஊர்களிலும் கிழக்கிந்திய தீவுகளில் ஒன்றான திமோர் தீவிலுள்ள தில்லி என்ற இடத்திலும் முத்துச் சாவடிகளை நிர்மாணித்தார்.

கீழக்கரையில் ஓடைக்கரைப் பள்ளியையும் கல்கத்தாவில் சோலியாப் பள்ளியையும் அவரே கட்டினார். இவற்றையன்றி அவரால் கட்டப்பட்ட பள்ளிவாயல்களும் மதரஸாக்களும் சத்திரங்களும் பலவாகும்.

மண்டபத்தின் அருகிலுள்ள மரைக்காயர்பட்டினம் அவரால் நிறுவப்பட்டதேயாகும். மரைக்காயர் ஊருணி என்னும் பெயருடன் அவர் பல ஊருணிகளை வெட்டினார்.

2) ஒரு துறவி :

தைக்கா சாஹிபு வலி அவர்கள் முன்னறிவிப்புச் செய்த வண்ணம் பிற்காலத்தில் மாபெரும் துறவியானவர் சுல்தான் அப்துல் காதிர் என்னும் குணங்குடி மஸ்தான் சாஹிபு ஆவார்கள்.

'வாய் மூடினால் ஈடேறுவீர்' என்று தம் ஆசான் தமக்களித்த அறிவுரையைச் சிரமேற்கொண்டு ஒழுகி மேன்மை அடைந்தவர் அவர்கள்.

3) ஒரு மாபெரும் மார்க்க விற்பன்னர்

தைக்கா சாஹிபு வலி அவர்கள் முன்னறிவிப்புச் செய்தவண்ணம் மாபெரும் மார்க்க விற்பன்னரானவர் அவர்களின் மருகர் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் ஆவார்கள்.

இவர்களையன்றி புலவர் நாயகம் சேகனாப் புலவரும்,

வேலூரில் மதரஸா பாக்கியாத்துஸ் ஸாலிஹாத்தை நிறுவிய அப்துல் வஹ்ஹாப் ஹலரத் அவர்களின் தந்தை ஆத்தூர் அப்துல் காதிர் ஹலரத் அவர்களும்

கொழும்பு ஆலிம் சாஹிபு அவர்களும்,

இலங்கை யாசீன் மௌலானா அவர்களின் தந்தை ஜமாலியா மௌலானா அவர்களும்,

சென்னை அங்கப்ப நாயக்கன் தெருவிலுள்ள ஈத்கா மஸ்ஜிதின் வளைவிற்குள் இருக்கும் மதரஸா யூசுஃபிய்யாவின் தலைமைப் பேராசிரியராக இருந்து பணியாற்றிவரும் 'ஸுன்து சுபியான்' என்ற நூலை இயற்றிவருமான அம்மாபட்டினம் முஹம்மது யூசுஃப் ஹலரத் அவர்களும்

தைக்கா சாஹிபு வலி அவர்களின் மாணவர்களில் குறிப்பிடத் தக்கவர்களாவர்கள் ஆவார்கள்.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 66

( எனக்கோ பொன்னும் மண்ணும் ஒன்றேயாம் )

சில காலம் ஜவ்ன்பூரில் தங்கியிருந்த பின், சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள் மக்கன்பூர் புறப்பட ஆயத்தமானார்கள்

வழியில் நவ்வாஹு என்ற ஊரை அவர்கள் அடைந்து, அங்குச் சில நாட்கள் தங்கியிருந்த பொழுது, அவ்வூரிலுள்ள சூனியக்காரர்கள் தங்களுக்குப் போட்டியாக, அவர்கள் அவ்வூருக்கு வந்து விட்டார்களோ, அதன் காரணமாகத் தங்களின் பிழைப்புக்கு ஆபத்து வந்து விடுமோ என்று அஞ்சி, அவர்களைக் கொல்ல சூனியம் செய்தனர். அவர்கள் செய்த சூனியத்தால் சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்களுக்கு யாதொரு கேடும் ஏற்பட வில்லை.

அதற்கு மாறாக, அவர்களுக்கே கேடாக முடிந்தது. அது கண்டு திடுக்குற்ற அவர்கள் சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்களின் திருமுன் வந்து தங்களின் பிழை பொருத்தருளுமாறு பெரிதும் வேண்டி நின்றனர்.

அப்பொழுது சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள், அந்தச் சூனியக்காரர்களை நோக்கி, "உங்களின் வினை உங்களையே சுட்டது. இனிமேல் நீங்கள் எவருக்கும் சூனியம் செய்வதில்லை என்று உறுதி கூறின் நான் உங்களுக்கு யாதொரு தீங்கும் ஏற்படாது விலக்கி விடுகிறேன். இல்லையேல் என்னைக் கொல்ல நீங்கள் செய்த சூனியம், உங்களைக் கொல்லாது விடாது" என்று கூறினர்.

அது கேட்டு நடுங்கிப் போன அவர்கள், அவ்விதமே ஆண்டகை அவர்களிடம் உறுதிமொழி கூறி மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர்.

பின்னர் ஆண்டகை அவர்கள் அங்கிருந்து கிளம்பி ஸத்ஹன் என்ற ஊரை அடைந்த பொழுது, அவ்வூரில் வாழ்ந்து வந்த துறவி ஒருவர்

ஆன்மீகம் பற்றிச் சில கேள்விகளை சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்களுக்கு வட மொழியில் எழுதியனுப்பினார்.

அவற்றிற்கு ஆண்டகை அவர்கள் வடமொழியிலேயே பதில் எழுதித் தம் மாணவர் சையிது அபுல் ஹஸன் காஜா தைபூரியிடம் அனுப்பியதோடு, அவர்களிடம் சில கேள்விகளைக் கூறி, அவற்றிற்கான பதில்களை அவரிடமிருந்து பெற்று வருமாறும் ஆணையிட்டார்கள்.

தம் கேள்விகளுக்கான சரியான பதில்களை சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள் வடமொழியிலேயே எழுதியிருப்பதைக் கண்டு, அவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. பின்னர் ஆண்டகை அவர்களின் கேள்விகளை, அவர்களின் மாணவர் கூறிய பொழுது, அவற்றிற்குப் பதில் கூற அறியாது திணறினார் அவர்.

இதன்பின் சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்களின் மாணவருடன், ஆண்டகை அவர்களைக் காண வந்த அவர், ஆண்டகை அவர்களை நோக்கி "பெரியீர்! தாங்கள் ஆணையிட்டால் தாங்கள் அமர்ந்திடப் பொன்னால் ஒரு மேடை செய்து தரக் காத்திருக்கிறேன்" என்று வினயமாகக் கூறிவார்.

அப்பொழுது சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள், அவரின் கண்களை மூடிக் கொள்ளுமாறு கூறிப் பின்னர் திறக்குமாறு கூறினர். அவ்விதமே அவரும் செய்தார். என்ன வியப்பு! அவர் பார்வை எட்டிய தொலைவு வரை எங்கணும் பொன்மயமாகக் காட்சி வழங்கியது. பின்னர் அவர்கள் அவரைக் கண்களை மூடித் திறக்குமாறு கூறினர். அவ்வாறே அவர் செய்ய, அனைத்தும் மாயமாய் மறைந்து விட்டன. அப்பொழுது அவருடைய முகத்தில் வியப்பின் அறிகுறி பனிச்சிட்டது.

அப்பொழுது ஆண்டகை அவர்கள் அவரை நோக்கி, "இதில் வியபடைவதற்கு ஒன்றுமில்லை. உமக்குப் பொன் என்பது மதிப்பிற்குரிய பொருளாக இருக்கலாம். ஆனால் எனக்கோ பொன்னும் மண்ணும் ஒன்றேயாம்'' என்று கூறினர்.

இப்பதில் அவரை முன்னை விட அதிகமாக வியப்படையுமாறு செய்தது. அக்கணமே அவர் ஆண்டகை அவர்களின் மாண்பினை உணர்ந்து, அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தைத் தழுவினார்.

இறுதியாக சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள் மக்கன்பூர் புறப்பட்டு வரும் பொழுது வழியில் காஜா மக்தூம் என்னும் பெரியாரும். அவர்களுடன் சேர்ந்து கொண்டார்.

அவர்கள் மக்கன்பூர் வந்த பொழுது, அவ்வூரில் வானம் பொய்த்துக் கடும் பஞ்சம் தலைவிரித்தாடியது. மக்கள் சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கவிடம் முறையிடவே. ஆண்டகை அவர்கள்அல்லூர் அதிகாரியான யாசீன் என்பவரிடம் தம் கைத்தடியைக் கொடுத்து

"இதனை எடுத்துச் சென்று, இன்ன இடத்தில் ஊன்றும்! அவ்விடத் திலிருந்து தண்ணீர் குமிழியிட்டு வெளிவரும்" என்று கூறினர்.

அவ்விதமே அவர் செய்ய, தண்ணீர் குமிழியிட்டு வெளிப் போந்தது. மக்கள் வாய்க்கால் வெட்டி அத்தண்ணீரைத் தங்களின் வயல்களில் பாய்ச்சி விவசாயம் செய்தனர். அதன் காரணமாக நாடு செழித்தது. மக்கள் நலமுற்றார்கள். அன்று ஒலித்தோடிய அச்சுனை, இன்றும் ஒலித்தோடிக் கொண்டே உள்ளது.

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 67

(உயரிய ஆன்மிக தத்துவக் கடிதங்கள் )



மகுதூமுல் முல்க் ஷைகு ஷரஃபுத்தீன் யஹ்யா மனேரி (ரஹ்) அவர்களின் இயற்பெயர் அஹ்மது என்பதாகும். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தையார் ஜுபைர் அவர்களின் வழி வழி வந்த அவர்களின் பாட்டனார், மௌலானா முஹம்மது தாஜுத்தின் (ரஹ்)

அவர்கள், பைத்துல் முகத்தஸிலிருந்து, 24 கிலோ மீட்டர் தொலைவில் இப்ராஹீம் (அலை) அவர்கள் அடங்கப் பெற்றுள்ள கலீல் என்ற இடத்திலிருந்து வலசை கிளம்பி வந்து, பீஹாரிலுள்ள மனேர் என் இடத்தில் குடியேறி வாழ்ந்து வந்தனர்.

சிறந்த மார்க்க மேதையாகவும் மகானாகவும் விளங்கிய அவர்கள், தம் தூய வாழ்வாலும், தவ வலிமையாலும், ஏராளமானோரை இஸ்லாத்தில் இணைத்த பின், தன் மகன் ஷைகு யஹ்யாவையும், ஏனைய தம் குடும்பத்தினரையும் மனேரிலேயே வாழ்ந்து தீன் சுடர் கொளுத்திக் கொண்டிருக்குமாறு பணித்து விட்டு, மீண்டும் கலீலுக்கே சென்று சிறிது காலம் வாழ்ந்து காலமாயினர்.

ஷைகு யஹ்யா மனேரி (ரஹ்) அவர்களின் தாய் வழிப்பாட்டனார் ஷைகு ஷிஹாபுத்தீன் (ரஹ்) அவர்கள், ஹுஸைன் (ரலி) அவர்களின் வழி வந்தவர்களாவர். சுஹ்ரவர்தியா தரீக்காவைச் சேர்ந்த மாபெரும் இறைநேசச் செல்வரான அவர்கள், ஜக்ஜத் (உலகப் பேரொளி) என்னும் புகழ்ப் பெயர் பெற்று விளங்கினர்.

மகுதூமுல் முல்க் ஷைகு ஷரஃபுத்தீன் யஹ்யா மனேரி (ரஹ்) அவர்களின் ஆன்மீக மாணவரான ஷைகு முஸஃப்பர் தமக்கு ஆன்மீகப் பாதையில் ஏற்பட்ட இடுக்கண்களை எடுத்துரைத்து, அறிவுரை வேண்டிய பொழுது, அவருக்கு அறிவுரை கூறும் முறையில் 28 மடல்கள் வரைந்தனர்.

அவை மிகவும் உயரிய ஆன்மீக தத்துவங்கள் நிறைந்ததாய் இருந்ததால், தாம் இறந்ததும் அவற்றையும் தம்முடன் வைத்துப் புதைத்து விடுமாறு கூறிச் சென்றார் அவர். அவ்விதமே செய்யப் பட்டது.

எனினும் அவற்றைப் படித்த அவரின் ஆன்மீக மாணவர்கள் அவற்றைப் பிரதி செய்து வைத்திருந்தனர். ஆக, அவர்கள் எழுதிய அத்தனை மடல்களும், இப்பொழுதும் உள்ளன. அவை 'மக்தூபாதெஸதீர் என்ற பெயருடனும் 'மக்தூபாதெ-பிஸ்தோஹஷ்த்' என்ற பெயருடனும் வெளிவந்துள்ளன.

அவர்களின் கடிதங்கள் தெளிவான பார்ஸி மொழியில் எழுதப் பட்டுள்ளன. அவை அவர்களின் ஆழிய அறிவின் பிரதிபலிப்பாக உள்ளன. அவர்கள் ஒரு மடலில் இறைவனின் மாண்பினைப் பற்றிப் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

"இறைவன் ஒரு சிலருக்கு மட்டும் செல்வத்தையும் வள வாழ்வையும் நல்கி மற்றவர்களுக்கு அவ்விதம் செய்யாது ஏன் விட்டொழித்தான் என்று வினவ,

'எவனுக்கு எந்த உரிமை இருக்கிறது? ஓர் அரசன் ஒருவனைத் தன்னுடைய அமைச்சனாகவும், மற்றொருவனைத் தன்னுடைய சிறு ஊழியனாகவும் நியமிக்கின்றானல்லவா அது போன்றே இறைவனும், ஒருவனைச் செல்வனாகவும், சீமானாகவும், உயர்ந்தவனாகவும், மற்றொருவனை வறிஞனாகவும், ஏழையாகவும், தாழ்ந்தவனாகவும், செய்கிறான்.

கொள்ளைக் கூட்டத்தின் தலைவனாக இருந்த புலைல் இப்னு இயாலை, ஒரு நொடியில் தன்னுடைய அருள் நேசராக ஆக்கிவிட்டான்.

நானூறு ஆண்டுகள் தம் தொழுகை விரிப்பில் அமர்ந்து தவம் செய்து கொண்டிருந்த பல் அம் பாவூரை, ஒரு நொடியில் தன் சினத்திற்கு இலக்கானவராக ஆக்கிவிட்டான்.

'உருவத்தொழும்பராக இருந்த உமரை, உன்னத பதவியிலாக்கி, ஏழாயிரம் ஆண்டுகள் தன்னை வணங்கிக் கொண்டிருந்த அஸாஸீலை (சைத்தானை) தன் முனிவிற்காளானவனாக ஆக்கிலிட்டான். 'நிச்சயமாக, அவன் செய்பவற்றைப்பற்றி (ஏன் செய்தாய்.எதற்காக செய்தாய் என்று) எவருமே கேட்க முடியாது) குர்ஆன் (21:23)

2-வது கடிதத்தில் "வஹ்தத்துஷ் ஷஹூத்" பற்றி..."இறைவனின் திருமுன் அழிந்து விடுவது என்பது, கதிரவனின் பேரொளியின் முன் விண்மீன்கள் மங்கி மறைந்துவிடுவது போன்றே அல்லாது வேறில்லை. அழிந்து விடுவது வேறு; மங்கி மறைந்து விடுவது வேறாகும். மனிதன் ஒரு போதும் இறைவனாக இயலாது. ஏனெனில் இறைவனின் மாண்போ அளப்பரியதாகும்.

நீ ஒரு கண்ணாடியின் முன் நின்று, உன் உருவத்தைப் பார்க்கும் பொழுது, கண்ணாடி பற்றிய நினைவே உனக்கு இல்லாமல் போகிறது. அதற்காக நீ கண்ணாடி அழிந்து விட்டது என்றோ, அல்லது அது உன் உருவத்தின் பிரதிபிம்பமாக ஆகிவிட்டது என்றோ, அல்லது உன் உருவத்தின் பிரதிபிம்பம் கண்ணாடிக்குள் உருகி விட்டது என்றோ கூற முடியுமா?

இந்தப் பாதை மிகவும் குறுகலானது; இதில் ஏராளமானோர் வழுக்கி விழுந்து விட்டார்கள். இறைவனின் பேரருளும், தகுந்த ஞானாசிரியரின் வழி காட்டுதலும் எய்தப் பெற்றவர்களே, நேர்வழி பெற்று உய்கின்றார்கள்.

3-வது கடிதத்தில் மனிதன் தன்னுடைய உடல் இச்சைகளையும், இயற்கை உந்துதல்களையும், அழித்தொழித்துவிட வேண்டுமென்று சில அறிவிலிகள் கூறுகின்றார்கள். அதற்கு மாறாக, அவற்றை அடக்கி வாழவேண்டுமென்றே ஷரீஅத் கூறுகிறது என்பதை அவர்கள் உணரவேண்டும்.

''நான் ஒரு மனிதன்தான். சிலபொழுது நான் சினமுறுகிறேன்" என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குச் சினம் ஏற்படின், அது அவர்களின் முகத்தில் தெளிவாகப் பிரதிபலித்தது. இறைவனும் தன் திருமறையில், சினத்தை அடக்குகிறவர்களை நேசிப்பதாகக் கூறுகிறானேயொழிய, சினமே இல்லாதவர்களை நேசிப்பதாகக் கூறவில்லை.

பால் உணர்வையே ஒழித்துவிட வேண்டுமென்று ஷரீஅத் கூறவில்லை. ஷரீஅத்தின் மூலமான அண்ணல் நபி (ஸல்) அவர்களே, ஒன்பது பெண்களை மணந்து வாழ்ந்துள்ளார்களே?

ஒருவனுக்குப் பால் உணர்வே இல்லாதிருப்பின், பால் உணர்வைப் பெறுவதற்காக மருந்து உட்கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். ஏனெனில், ஷரீஅத் கூறுவதெல்லாம், பால் உணர்வைச் சட்டவரம்பிற்கு உட்பட்டு, கட்டுப்பாட்டுடன் வைத்திருக்க வேண்டும் என்பதேயாகும்.

வேட்டைக்குச் செல்பவனுக்கு இவர்ந்து செல்லப் பழக்கப்பட்ட ஒரு குதிரையும், வேட்டை மிருகத்தை விரட்டிச் சென்று பிடித்துவரப் பழக்கப்பட்ட ஒரு நாயும் தேவை. குதிரை பழக்கப்பட்டிராவிட்டால், அது

அவனைக் கீழே தள்ளிவிடும். நாய் பழக்கப்படாவிட்டால் அது அவன் மீது சீறிப் பாய்ந்து குதறித்தள்ளிவிடும்.

அது போன்றே, பால் உணர்வும், சினமும், மறுமைப் பயன்களைப் பெறுவதற்குத் தேவையாக உள்ளன. அவை கட்டுப்பாட்டுக்குள் வைத்துப் பழக்கப்படாவிடின், அவை ஒருவனை மிகைத்து, அவனை அழிவுப் படுகுழியில் தள்ளிவிடும். அவற்றைக் கட்டுப்படுத்தச் சிறந்த சாதனம், தொழுகையும், நோன்புமாகும். என்று அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

4-வது கடிதத்தில் விலாயத்தானது, நுபுவ்வத்தை விட மேலானது என்ற தவறான கருத்து, அக்காலத்தில் சில போலி ஞானிகளால் பரத்தப்பட்டு வந்தது. அதனை அவர்கள் தகுந்த ஆதாரங்களுடன் தகர்த்தெறிகிறார்கள்.

ஒரு நபியுடைய ஒரு முச்சு, ஒரு வலியுடைய வாணாள் முழுவதையும் விடப் புனிதமானதாகும். எல்லா நபிமார்களும், விலாயத் எய்தப் பெற்றவர்கள் தாம். ஆனால் ஒரு வலி கூட, " நுபுவ்வத் " எய்தப் பெற இயலாது.

வலிமார்கள், இறைஞான இரகசியங்களில் மூழ்கித் திளைக்கும் பொழுது, நபிமார்களோ, அல்லாஹ்வால் அருளப்பட்ட வேத வெளிப்பாடுகளை மட்டுமே விளங்கியவர்களாக உள்ளனர் என்று சிலர் கூறி, மூஸா (அலை) அவர்களுக்கும் கிள்ரு (அலை) அவர்களுக்கும் இடையே நடத்த வரலற்றை எடுத்துரைக்கிறார்கள்.

கிள்ரு (அலை) அவர்கள், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் மட்டும் இறைஞான இரகசியங்களை அதிகமாக அறிந்ததன் காரணமாக, மூஸா (அலை) அவர்களைவிட மாண்புடையவர்களாக இருந்தார்கள். ஆனால், மூஸா (அலை) அவர்களோ, நுபுவ்வத்தின் காரணமாகவும், ரிசாலத்தில் காரணமாகவும், நிரந்தரமான மாண்புடையவர்களாக இருந்தார்கள் என்பதை அவர்கள் அறியத் தவறி விடுகிறார்கள்.

ஆண்களால் தொடப்படாத நிலையில், மர்யம் அவர்கள் ஈஸா (அலை) அவர்களைக் கருவுற்று ஈன்றதன் காரணமாக, மற்றப் பெண்களைவிடத் தற்காலிகமான மாண்பு பெற்றார்கள்தான். ஆனால் அதற்காக அவர்களின் தற்காலிக மாண்பு பெண் இனத்திற்கே நாயகியாகிய 'காத்தூனெ ஜன்னத்' பாத்திமா (ரலி) அவர்களுடையவும், ஆயிஷா (ரலி) அவர்களுடையவும் நிரந்தரமான மாண்பினை மிகைத்து விட்டது என்று கூற இயலுமா?

வலிமார்கள் எவ்வளவோ அரும்தவம் செய்து பெறக்கூடிய படித்தரத்தை, நபிமார்கள் தாங்கள் எடுத்து வைக்கும் முதல் அடியிலேயே எய்தப் பெறுகிறார்கள். விலாயத்தின் இறுதியே, நபிமார்களுக்கு நுபுவ்வத்தின் துவக்கமாக இருக்கிறது. இறைஞான இரகசியங்களை அறிவிக்கப்பட்ட பின்னரே, அவர்களுக்கு 'நுபுவ்வத்' என்னும் பரிவட்டம் வழங்கப் பெறுகிறது.

எனவேதான், ஒருவன் பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களிடம் சென்று, "நபிமார்களின் வாழ்வு பற்றித் தங்களின் கருத்து என்ன ?" என்று வினவியபொழுது, "அவர்களின் பேரரசின் விளிம்பில் கூட எங்களால் அடியெடுத்து வைக்க இயலாதபோழ்து, அவர்களைப்பற்றி நான் என்ன கூறவுள்ளது? என்று சொல்லிவிட்டார்கள் அவர்கள்.

'விலாயத் 'தின் படித்தரங்கள், பாமரர்களின் கண்களைவிட்டு மறைக்கப்பட்டிருக்கின்றன என்பது உண்மைதான். ஆனால், 'நுபுவ்வத்தின் படித்தரங்களோ, வலிமார்களின் கற்பனையால் கூட எண்ணிப்பார்க்க இயலா, அத்துணை உயரத்தில் உள்ளன. நபிமார்களோ, விண்ணிலே பறக்கும் பொழுது வலிமார்களோ, மண்ணிலே தவழ்கிறார்கள்" என்று அவர்கள் எடுத்துரைக்கின்றனர்.

5-வது கடிதத்தில் சில போலி ஞானிகளோ, ஷரீஅத்தை ஒரு குறிப்பிட்ட படித்தரத்தை எய்தும் வரை தான் பின்பற்ற வேண்டுமென்றும், அதற்கப்பால் சென்றுவிடின், அதைப் பின்பற்ற வேண்டிய தேவை இல்லை என்றும் கூறி, மக்களை வழிகெடுத்து வந்தார்கள்.

தங்களின் இக்கூற்றுக்கு ஆதாரமாக அவர்கள், திருக்குர்ஆனின் 15:99 ஆவது திருவசனமாகிய ''உமக்கு 'யகீன்' ஏற்படும் வரையில், உம் இறைவனை வணங்கிக் கொண்டிருப்பீராக!" என்பதை எடுத்துரைத்து,

இதில் வரும் 'யகீன்' என்ற சொல்லுக்கு, ஆன்மீக வெளிச்சம் என்று பொருளுரைத்து, "நீங்கள் ஆன்மீக வெளிச்சம் பெறும் வரையில் இறைவனை வணங்குங்கள்'' என்று விளக்கம் பகர்ந்து வந்தார்கள்.

உண்மையில் இங்கு 'யகீன்' என்ற சொல்லுக்கு, இறப்பு என்றே திருமறை விளக்க வல்லுனர்கள் அனைவரும் பொருள் கொண்டு, "இறக்கும் வரையில் நீங்கள் இறைவனை வணங்கிக் கொண்டிருங்கள்" என்று விளக்கம் பகர்கின்றனர்.

இதனை ஷைகு யஹ்யா மனேரி (ரஹ்) அவர்கள், ஒரு மடலில் எடுத்துரைத்து, "எவரும் எய்த இயலாத மாபெரும் ஆன்மீக உச்சத்தை அடைந்த அண்ணல் நபி (ஸல்) அவர்களே, கால்கள் வீங்கும் வண்ணம் இரவில் நின்று வணங்கினார்களே. தொழுகை, என்னைப் பின்பற்றியவர்களுக்கேயன்றி, எனக்கல்ல. எனக்கு அதிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்று கூறவில்லையே. அவர்களை விடவா இந்தப் போலிகள் ஆன்மீக வெளிச்சத்தைக் கண்டு கொண்டார்கள்?" என்று சாடுகின்றார்கள்.

ஆன்மீக உச்சத்தை தொடும் இன்னும் 23 கடிதங்கள் உள்ளன.அவை 'மக்தூபாதெஸதீர் என்ற பெயருடனும் 'மக்தூபாதெ-பிஸ்தோஹஷ்த்' என்ற பெயருடனும் வெளிவந்துள்ளன.

**Rahmath Rajakumaran**

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அழகிய முன் மாதிரியைப் பின் பற்றி அன்பு மயமாக அவர்கள் விளங்கினர். எவருடைய உள்ளத்தையும் அவர்கள், அணுவத்தனையும் புண்படுத்த விரும்பவில்லை.

ஒருநாள் அவர்கள் நஃபில் நோன்பு நோற்றிருந்தார்கள். அப்பொழுது ஒருவர் சில உணவுப் பொருள்களைக் காணிக்கையாக அவர்களின் திருமுன் கொண்டு வந்து வைத்து அவற்றை உண்ணுமாறும், அவர்கள் அவற்றை உண்பதைத் தாம் கண் குளிரக் கண்டு களிகூர வேண்டுமென்றும் கூறி நின்றார்.

அவருடைய வேணவாவை நிறைவேற்றி, அவருக்கு மனநிறைவு நல்குவதற்காக அவர்கள் அதனை உண்டனர். அப்பொழுது அவர்களின் வாயிலிருந்து, "முறிக்கப்பட்ட நோன்பைப் பின்னர் நிறைவு செய்து கொள்ளலாம்; ஆனால் முறிக்கப்பட்ட இதயத்தை ஒழுங்கு செய்ய இயலாது" என்ற சொற்கள் வெளிவந்தன.

## ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 68

( "எவன் என்னுடைய வலியைப் பகைத்தானோ, அவன் என்னுடன் போர் செய்ய ஆயத்தமாகி விட்டான்" )

டில்லியை ஆண்ட சுல்தான் முஹம்மது இப்னு துக்ளக், நிஜாமுத்தீன் ஔலியா அவர்களின் மாண்பினை அறியாது தம்முடைய போராட்டத்தைத் துவங்கினார். நிஜாமுத்தீன் ஔலியா அவர்களின் மூன்று பிரதான மாணவர்களான ஷைகு சம்சுத்தீன் யஹ்யா (ரஹ்), ஷைகு குத்புத்தீன் முனவ்வர் (ரஹ்), ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) ஆகிய மூவர் மீதும் சுல்தானின் சினப் பார்வை வீழ்ந்தது. ஆனால், அம் மூவரிலும் சுல்தானிய சினத்திற்குப் பெரிதும் ஆளானவர்கள் ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர்களே ஆவர்

இப்பொழுது சுல்தான் குராஸான் மீது படையெடுக்கப் பெரும் ஆயத்தங்கள் செய்து வந்தார். அப்படை எடுப்பபுக்காக 1,70,000 குதிரை வீரர்கள் ஒருங்கு சேர்க்கப்பட்டார்கள். தம்முடைய இந்தப்

படையெடுப்பிற்கு ஆட்களும், ஆயுதங்களும் சேர்ப்பது ஒரு புறம் நடந்து கொண்டிருக்க, மறுபுறம் மக்களின் பேராதரவையும், சுல்தான் திரட்ட வேண்டியிருந்தது.

தமக்கு இதில் ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர்களுக்கு மக்களின் ஆதரவு நிரம்ப இருப்பதால் சுல்தான், அவர்களை அழைத்து வருமாறு அவர்களின் இல்லத்திற்கு ஆள் அனுப்பினார்.

அரச ஆணையை ஏற்று ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர்கள் அரண்மனை சென்ற பொழுது சுல்தான், அவர்களைத் தம் வலப்புறத்தில் அமரச் செய்து, "நான் குராஸான் மீது படை நடாத்திச் சென்று செங்கிஸ்கானின் பூண்டே இவ்வுலகில் இல்லாமல் அழித்தொழிக்க விரும்புகிறேன். அப்படையெடுப்பில் தாங்களும் கலந்து கொள்ள வேண்டும்''என்று கூறினார்.

அதற்கு ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர்கள், "இன்ஷா அல்லாஹ்' என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

அதுகேட்ட சுல்தான் "தாங்கள் 'இன்ஷா அல்லாஹ்' என்று கூறுவதைப் பார்த்தால், தாங்கள் விஷயத்தைத் தட்டிக் கழிப்பது போன்றல்லவோ தோன்றுகிறது" என்று கூறினார்.

சுல்தானும், ஷைகு அவர்களும் படித்த அறிஞர்கள். எனவே இன்ஷா அல்லாஹ் பதப்பிரயோகம் பற்றி இருவருக்கிடையே வாதப் பிரதி வாதங்கள் ஏற்பட்டன. இறுதியாக ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர்கள் அந்த வாதப் பிரதிவாதங்களுக்கு முற்றுப் புள்ளி வைக்கும் நோக்குடன்,

"இன்ஷா அல்லாஹ் கூறப்படாத எந்த அலுவலும் வெற்றி பெறாது. அது இணக்கத்தைத் தெரிவிக்கப் பயன்படுத்தும் வாசகமே யன்றி விஷயத்தைத் தட்டிக்கழிக்கப் பயன்படுத்தும் வாசகமல்ல" என்று பல்வேறு மேற்கோள்களைக் காட்டி எடுத்துரைத்தனர்.

ஆழமும் பொதிந்த வாதத்தைக் கேட்டுப் பிரமித்துப்போன சுல்தான், ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர் களைத்தம்முடன் உணவுண்ண அழைத்துச் சென்றார். வேண்டா வெறுப்பாக அவருடன் சென்ற அவர்களுக்கு அங்குப் பேரதிர்ச்சி ஒன்று காத்திருந்தது.

பொன்னாலும் வெள்ளியாலும் ஆன பாத்திரங்களில் பல்வேறு வகையான உணவுப் பொருள்கள் வைத்துப் பரத்தப்பட்டிருந்தது. அவர்கள் அவற்றை அப்பாத்திரங்களில் வைத்து உண்ணின் அவர்களின் மார்க்க பக்தியின் மீது மாசு கற்பிக்கலாமென்றும், உண்ணா விடின் தம்மை சுல்தானை அவமதித்ததாக அவர்களின் மீது குற்றம் சாட்டலா மென்றும் எண்ணியே, சுல்தான் முன்னேற்பாடாக அவ்விதம் செய்திருந்தார்.

ஆனால் ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர்களோ சுல்தான் விரித்த வலையில் விழாது, உணவைத் தம் கையில் எடுத்து வைத்து உண்டார்கள். அப்பொழுது சுல்தான், ஷைகு அவர்களை நோக்கி, 'எனக்கு ஏதேனும் அறிவுரை பகருங்கள்' என்று வினயமாகக் கூறினார்.

அடுத்தகணம் ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர்களின் திருவாயிலிருந்து "தாங்கள், தங்களின் மிருக ஆசையைத் தங்களின் உள்ளத்திலிருந்து கிள்ளி எறிந்து விடுங்கள்" என்ற அறிவுரை வன்மையுடன் வெளிவந்தது. அதுகேட்டு மாபெரும் சக்கரவர்த்தி சுல்தான் முஹம்மது பின் துக்ளக்கின் பொறாமை என்னும் எரியும் நெருப்புக்கு எண்ணெய் வார்த்தது போன்றிருந்தது. ஷைகு அவர்களின் புகழ் தம் புகழையும் மிஞ்சிவிடும் போலிருக்கிறதே. என்று அவர் அஞ்சினார்.

சுல்தான் முஹம்மது இப்னு துக்ளக் உள்மனம் ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர்களை பழிவாங்க துடித்தது.

சிலர் ஷைகு அவர்களை அணுகி, " சுல்தான் தங்களுக்கு இத்தனை இன்னல்கள் இழைக்கின்றாரே அதற்கான காரணம் யாது ? என்று பதிவோடு விசாரித்த போது, " அது எனக்கும் என் இறைவனுக்கும் இடையே உள்ள விஷயம் என்று கூறி அப்பேச்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தார்கள்.

இப்பொழுது கலகக்காரர்களை எதிர்த்து, தாட்டா மீது சுல்தான் படை நடாத்திச் செல்ல விரும்பினார். தம் நாட்டிலுள்ள அறிஞர்களையும், மகான்களையும் தம்முடன் அழைத்துச் செல்ல விரும்பி, அவர்களுக்கெல்லாம் அழைப்பு விடுத்தார். அது உண்மையில் ஓர் ஆணையாகவே இருந்தது.

அத்தகு ஆணையொன்று ஷைகு அவர்களுக்கும் வந்த பொழுது, அவர்களும் தவிர்க்க முடியாத நிலையில் அவ் ஆணைக்கு இணங்கி அப்படை யெடுப்பில் கலந்து கொள்ள வேண்டியதாயிற்று. அப்

படையெடுப்பின் போது, சுல்தான் நோன்பு நோற்ற நிலையில் இறப்பெய்தினார். இது கி.பி. 1351-ஆம் ஆண்டு, மார்ச் திங்கள், 20-ஆம் நாள் நிகழ்ந்தது.

அது கண்டு மக்கள் சுல்தான், ஷைகு அவர்களுடன் தொடர்ந்து பிணங்கிக் கொண்டதே அதற்கான காரணம் என்றும், ஷைகு அவர்களின் முனிவே அவரின் உயிர் பறித்துச் சென்ற கொடுவாளாக அமைந்ததென்றும் பேசிக் கொண்டார்கள். ஆனால் ஷைகு அவர்களோ, உண்மையில் எவரையும் தம் வாணாளில் முனிந்ததே இல்லை. அவர்களின் புனித வாழ்வு மாசு மறுவற்றது.

சுல்தான் முஹம்மது பின் துக்ளக் திடீரென இறந்த செய்தியறிந்து, படை முகாமே அல்லோல கல்லோலப்பட்டது. அடுத்து என்ன நிகழுமோ என்று அறியாது படைவீரர்கள் கதிகலங்கிக் கொண்டிருந்தனர். அப்பொழுது முஹம்மது பின் துக்ளக்கின் சகோதரர் மகன் பைரோஸ் துக்ளக் முன் வந்து, பிரதானிகள், படைத் தளபதிகள் ஆகியோரை ஒருங்கழைத்து, அடுத்துச் செய்ய வேண்டிய அலுவல் பற்றி ஆலோசனை கலந்தார்.

அப்பொழுது அவருடைய உள்ளத்தில் முஹம்மது பின் துக்ளக், ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர்களின் வெறுப்பை விலைக்கு வாங்கிக் கொண்டதே, அவருடைய உயிருக்கு உலைவைத்தது என்ற எண்ணம் இழையோடிக் கொண்டிருந்தது.

அவருடைய எண்ணத்திற்கு உரம் ஏற்றும் வகையில், "எவன் என்னுடைய வலியைப் பகைத்தானோ, அவன் என்னுடன் போர் செய்ய ஆயத்தமாகிவிட்டான். என்னுடைய வலிமார்களுக்கு உதவி செய்வதில் நான் தீவிரமானவன். துணிவுள்ள சிங்கம் சினமுறுவது போன்று, நான் அவர்களுக்காகச் சினமுறுவேன்" என்று இறைவன் ஹதீது குத்ஸியில் கூறியிருப்பது, அவருடைய உளத்திரையில் பளிச்சிட்டு, அவருடைய உடலை ஒரு குலுக்குக் குலுக்கியது.

அப்பொழுது ஷைகு நஸீருத்தீன் (ரஹ்) அவர்களின் பணியாள் வந்து, ஒரு மடலை ஃபைரோஸ் துக்ளக்கிடம் கொடுத்தார்.மடலைப் பிரித்துப் பார்த்தார் பைரோஸ். அதிலே பின்வருமாறு எழுதப்பட் டிருந்தது.

''பைரோஸ் துக்ளக்குக்கு!

நீர் நீதி நெறி தவறாது ஆட்சி செய்ய ஒப்புகிறீரா? அல்லது நான் வேறொருவருக்கு அரசபாரத்தை வழங்குமாறு இறைஞ்சவா?"

(ஒப்பம் )

நஸீருத்தீன் மஹ்மூது

அதைப் படித்ததும் பைரோஸ் துக்ளக்குக்கு உள்ளமும் உடலும் ஒருங்கு சேர்ந்து நடுங்க,

"எனக்கு மணி முடி கிடைப்பின் நான் அல்லாஹ்வின் படைப்புகளை அன்புடனும், நீதியுடனும், பரிபாலிப்பதாக உறுதி கூறுகிறேன்" என்று எழுதிக் கைச் சாத்திட்டு, வந்த அலுவலாளரிடமே அனுப்பி வைத்தார், ஃபைரோஸ்.

மடலைப் படித்த ஷைகு அவர்கள் மகிழ்ச்சி மீக்குற்றவர்களாய்,

''நீர் உம் உறுதி காப்பின் நாம் உமக்கு நாற்பதாண்டு ஆட்சி நல்குமாறு இறைவனிடம் இறைஞ்சுவோம்" என்று மறுமடல் தீட்டி அனுப்பினர்.

அதனைப் பெற்றுத் தம் கண்களில் ஒற்றிக் கொண்டார் ஃபைரோஸ்.

அதன்பின் என்ன? ஃபைரோஸே ஓர் அவ்லியா ஏற்றுக் கொண்டதும் அனைவராலும் ஒருமித்து அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஷைகு அவர்களின் இறைஞ்சுதலை இறைவன் ஒரு நொடியில் ஏற்றுக் கொண்டான்

ஏகாந்த நிலையில் சூஃபியாக்கள் 69

( அவ்லியாக்களும், அரசாட்சிகளும் )

"எவர்களைக் கண்டால் அல்லாஹ்வின் நினைவு ஏற்படுகிறதோ அவர்களே அவுலியாக்கள்" என்று நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

இந்த அவுலியாக்களில் பலர் அந்தந்த நாட்டின் அரசாட்சிக்கு மிக்க உறுதுணையாகவும் இருந்துள்ளார்கள் என்பதையும் மேலும் சிறப்பு தகவல்களாக நாம் விளங்கிக் கொள்ள வேண்டும்.

1) சோழ மண்டல சாம்ராஜ்ஜியத்திற்கு உற்ற துணையாக இருந்தவர்கள் திருச்சி நத்ஹர் வலியுல்லாஹ். சோழ மன்னனுக்கு மகப்பேறு கொடுத்து அதில் பிறந்த தசைப்பிண்டமான உருவுக்கு உயிர் கொடுத்தவர் நத்ஹர் (வலி). அப்படி தசைப்பிண்டமாக பிறந்த சோழ இளவரசி பெண்ணே குந்தவை நாச்சியார். இவர்களது வளர்ப்பு மகளானார். இப்பெண்ணுக்கு மின்மினிகளின் மேல இருந்த ஈர்ப்பால் ‘மாமா ஜிக்னி' என்று அழைக்கப்பட்டார்.

விஜயநகர மன்னர் விஸ்வநாத நாயக்கரின் மனைவி அரசி மீனாட்சி, நத்ஹர் வலி தர்க்காவிற்கு கி.பி 1732 ல் எழுதிக்கொடுத்த தாமிரப்பட்டயம் தப்லே ஆலம் புகழ் மதம் கடந்தும் வியாபித்திருந்ததை நமக்கு காட்டுகிறது

2) இந்தியாவை கைப்பற்றிய கோரி முஹம்மது இந்துஸ்தானில் தன் ஆட்சி அதிகாரத்திற்கு துஆ செய்யச் சொல்ல, காஜா நாயகம் அவர்கள் " கவலைப்படாதீர் 700 வருடங்கள் இந்துஸ்தானில் ஆட்சி நடைபெறும் "

ஆமாம் . இஸ்லாமிய ஆட்சி இந்துஸ்தானில் 700 வருடங்கள் ஆட்சி செலுத்தியது. இந்த 700 வருடத்திற்குப் பிறகும் அந்த காஜாவின் ஆட்சி நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கிறது என்பதற்கு அடையாள அகண்ட பாரதமான இந்திய அரசாங்கமும் , பாக். அரசாங்கமும் காஜா நாயகம் கந்தூரிக்கு போர்வை விரிப்பு அனுப்பி கண்ணியப் படுத்துகிறார்கள்.

3) மைசூர் புலி என்றழைக்கப்படும் திப்பு சுல்தான் அவர்கள் ராக்கெட், பீரங்கிகளின் முன்னோடியாக இருந்தார். பிரெஞ்சுப்படையை எதிர்த்து போர் செய்து முதன் முதலில் இந்திய சுதந்திரத்திற்கு வழிவகுத்தவர் இவரே.

4) முஹம்மது பின் துக்ளக் ஆட்சிக்குப் பிறகு இந்தியாவில் நீதி நெறி தவறாது ஆட்சி செய்ய பைரோஸ் துக்ளக்கிற்கு 40 வருடம் நேர்மையான அரசாட்சிக்கு துஆ செய்தவர்கள் ஷைகு நஸீருத்தீன் மஹ்மூத் (ரஹ்) அவர்கள் ஆவார்.

5) நாகூர் ஷாகுல் ஹமீது நாயகம் அவர்கள் தஞ்சாவூர் வந்தார்கள். அப்போது நாய்க் வம்சத்தினர் அங்கே ஆட்சி செய்து கொண்டு இருந்தனர். அங்கே தீர்க்க முடியாத, நீண்டகால நோயோடு அதன் மன்னர் அச்சுதப்ப நாயக்கர் வாழ்ந்து வந்தார். மன்னரின் அமைச்சர்கள் நாகூர் நாயகத்தை அணுகி மாளிகைக்கு வந்து மன்னருக்கு உதவுமாறு வேண்டி நின்றனர்.

நாகூர் நாயகம் அவர்கள் அங்கே சென்று மன்னருக்கு சூனியம் செய்யப்பட்டு உள்ளதையும் ஒரு புறாவின் உடலிலே பல்வேறு முட்களை கொண்டு குத்தப்பட்டு நோவினை செய்யும் விதத்தில் சூனியம் செய்யப்பட்டுள்ளதையும் அறிந்து கொண்டார்கள்.

தன் மகனை அனுப்பி, அந்த புறாவை கொண்டு வரச்செய்து, ஓதி ஒவ்வொரு முள்ளாக அந்த புறா உடம்பில் இருந்து கழற்றி எடுத்தார்கள். அனைத்தும் நீங்கியவுடன் மன்னர் பரிபூரண சுகமடைந்தார்.

கண்ணெதிரே நடந்த அற்புதத்தை பார்த்து கொண்டிருந்த மகாராணி, நாகூர் நாயகத்திடம் தனக்கும் மன்னருக்கும் இடையே குழந்தை பாக்கியம் இல்லா குறையை சொல்லி தமக்கு உதவுமாறு காலில் விழுந்து கேட்டாள்.

நாகூர் ஷாகுல் ஹமீது பாதுஷா நாயகம் அவர்கள் அவ்வாறே துஆ (பிரார்த்தனை) செய்ய அவர்களுக்கு நல்ல ஒரு சந்ததி உண்டாயிற்று. நாகூர் நாயகம் அவர்களின் இப்பெரிய உதவிகளுக்கு கைமாறாக மன்னர் பல சொத்துக்களையும் பணங்களையும் கொடுத்தார்.

ஆனால் நாகூர் நாயகம் அவர்கள் அவற்றை வாங்கவில்லை. மாறாக, கடலோரத்தில் தனக்கு ஒரு துண்டு நிலம் தருமாறு மட்டும் கேட்டுக் கொண்டனர்.

அதன்படி, மன்னர் கடலோரத்தில் சுமார் 30 ஏக்கர் நிலத்தை “சுவர்க்க பூமி” என கூறி நாகூர் நாயகம் அவர்களிடம் கையளித்தார். அந்த இடத்தில்தான் தற்போதைய நாகூர் தர்கா மற்றும் கட்டிடங்கள் அமையப்பெற்றுள்ளன.

6) ஒரு முறை இந்தியாவை ஆண்ட மன்னர் ஔரங்கசீப் அவர்கள் சதக்கத்துல்லாஹ் அப்பா அவருக்கு எழுதிய கடிதத்தில் தம்முடைய பிரதிநிதியாக வங்காளத்தில் ஆட்சி செய்யத் தகுதியான ஒரு சீடரை அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொண்டார்.

மன்னரின் வேண்டுகோளை ஏற்று, தனது நண்பரான சீதக்காதி மரைக்காயரை அப்பதவிக்கு பரிந்துரை செய்தார். சீதக்காதியும் அப்பதவியில் நியமிக்கப்பட்டார். வங்காளம் சென்று பதவியிலிருந்த அவரோ அங்குள்ள தட்ப வெட்பநிலை ஒத்து வராததால், சில மாதங்களில் அங்கிருந்து திரும்பி விட்டார்.

சதக்கத்துல்லாஹ் அப்பா மீது மன்னர் ஔரங்கசீப் மன்னருக்கு நாளுக்கு நாள் அன்பு அதிகரித்ததைத் தொடர்ந்து, தலைநகரான தில்லி மாநகருக்கு வந்து அங்கேயே தங்கி இருக்க வேண்டும் என தூது அனுப்பினார்.

மன்னரின் வேண்டுகோளை ஏற்க மறுத்த சதக்கத்துல்லாஹ் அப்பா, 'இங்கு எளிய முறையில் எனது கடமைகளை செய்து வருகிறேன்' என்றும் 'நெடுந்தூரப் பயணத்தை ஏற்க முடியாமைக்கு வருந்துகிறேன்' என்றும் சொல்லு அனுப்பினாராம்.

மன்னர் ஔரங்கசீப்போ, தென்னகத்தில் எனது சார்பில் அரசாங்கப் பிரதிநிதியாக தாங்கள் இருக்க வேண்டும் எனக்கூறி, அதை செப்புப் பட்டயமாக எழுதி, அரச குடும்பத்தினர் மூலமாக அனுப்பி வைத்ததாக கூறப்படுகிறது.

'அரசாங்க வேலை எதுவும் எனக்கு வேண்டாம்' என்றாராம். உடனடியாக, மன்னரோ, உங்களுக்கு அந்தப் பதவியில் இருக்க பிடிக்கவில்லை யென்றால், உங்கள் மகனையாவது அந்தப் பதவிக்கு நியமிப்போமே' என்ற மன்னரின் வேண்டுகோளை தவிர்க்க விரும்பாமல்,

மன்னருக்கு சம்பளமில்லாத கௌரவப் பதவியாக இருக்க வேண்டும் என்றும், மற்றொன்று நீதித்துறை அலுவல்கள் எதிலும் எக்காரணத்தைக் கொண்டும் அரசு தலையிடக்கூடாது என்றும் இரு நிபந்தனைகளை விதித்தாராம்.

மன்னரும் நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு, அவரது ஒரே மகனான முஹம்மது லெப்பை ஆலிம்மை மதுரை, காயல்பட்டினம் உள்ளிட்ட இடங்களுக்கான அதிகாரியாக நியமித்ததாகவும், அவரும் மார்க்கத் தீர்ப்புகள் வழங்கும் தலைமை நீதிபதியாக திறம்பட பணியாற்றியதாக கூறப்படுகிறது.

சதக்கத்துல்லாஹ் அப்பா அவர்களின் அடக்க ஸ்தலத்தை மொகலாய மன்னர் ஔரங்கசீப் முயற்சியில் அழகிய மண்டபமாக கீழக்கரையில் காட்சியளிப்பதாகவும், இவரது உடலைத் தாங்கி வந்த பித்தளையால் செய்யப்பட்ட பிரேதப் பெட்டி, மொகலாயப் பேரரசர் ஔரங்கசீப் இவருக்காக பிரத்யேகமாக செய்து அனுப்பி வைத்ததாகவும், இது இவரது சமாதியின் மேல் ஔரங்கசீப் மன்னரின் நினைவாக வைக்கப்பட்டுள்ளது.

..... இப்படி நீளும் மிகப் பெரிய பட்டியல் இது. ஏதோ வலிமார்கள் இறை நேசர்களாக மட்டும் வாழ்ந்தார்கள். அவர்கள் வாழ்ந்த பூமிக்கு என்ன செய்தார்கள் ? என்று யாரும் இலேசாக எண்ணி விடக் கூடாது .

அவர்களின் பங்களிப்புகள் அரசாட்சிக்கும் உறுதுணையாக இருந்தார்கள் என்பதற்கான வரலாற்றில் இடம் பெறாத மறைந்து வாழும் வலிமார்கள் அரசாட்சிக்கு செய்த சேவைக் குறித்து நண்பர் **Vali Poakkan Parathesi** ஆய்வு செய்ய வேண்டுகோள் விடுத்தார்.

யோசிக்கிறேன் . இன்ஷா அல்லாஹ் நண்பர்களாகிய நீங்களும் உதவிகரமாக உங்கள் ஊரில் அடங்கப் பெற்றிருக்கும் வலிமார்களின் வாழ்வியல் குறித்தும் அவர்கள் வாழும் பூமிக்கு செய்த அர்ப்பணம் குறித்தும் ஆய்வுக்குரிய தரவுகள் தந்துதவ வேண்டும்.

இன்ஷா அல்லாஹ் தொடர்வோம்.

**https://m.facebook.com/groups/513631989685398/permalink/985627282485864/?mibextid=Nif5oz**

ர.ரா

( இத்தொடர்பதிவுகள் இத்துடன் நிறைவு பெறுகிறது )

ஆதார நூல்கள் :

1) அப்துற்- றஹீம் அவர்கள் எழுதிய வலிமார்கள் வரலாறு

( 1 - முதல் - 5 பாகம்)

6) Mail of Islam தளத்தின் பதிவுகள்

7) இல்முல்லதுன்னீ என்னும் மெய்ஞானபாக்கியம் பெற்ற இறைநேசர்கள் பற்றிய பதிவு தளம்

😎ஜீவராசிகளின் வலசை பற்றி வலைதளம்

9) **Sufi Hazrath Kahiri** பதிவு தளம்

10) **Sufi Chiste** பதிவு தளம்

11) தஸவ்வுப் ஸூஃபி குறித்து பல கிதாபுகள்

12) மற்றும் வலை தளம்

